# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம்-3**

ஓஷோ

தமிழில் :
சிங்கராயர்



Since 1976

**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 3 (Tamil)



Originally published in English under the title:
THE ALPHA AND THE OMEGA, VOLUME - 3



A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of Osho International meditation resort.



| | | |
|---|---|---|
| Translated by | : | **Singarayar** |
| Coordination by | : | **Swamini Dhyan Indu** |
| Publishing Editor | : | **S. Chockalingam** |
| First Edition | : | 2002 |
| Second Edition | : | August, 2004 |
| Third Edition | : | August, 2014 |
| Fourth Edition | : | 2019 |
| Pages | : | **312** |
| Price | : | **Rs. 300/-** |
| ISBN | : | 978-81-8345-249-6 |
| Printed a | : | Sree Durga Printers, Chennai |



Published by :
KAVITHA PUBLICATION
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# உள்ளடக்கம்

# அறிமுகம்

''மனதின் இருகணங்களுக்கு இடையில் எப்போதும் மனமற்ற ஒரு இடைவெளி உள்ளது. இரு எண்ணங் களுக்கிடையில் எண்ணமற்ற ஒரு இடைவேளை உள்ளது. இரு முகில்களுக்கிடையில் நீலவானத்தை நீங்கள் காணமுடியும். மனமற்ற நிலைதான் உங்கள் இயல்பு நிலை - அங்கு எண்ணமுமில்லை, எதுவுமில்லை... மிகப்பரந்த வெறுமையே உள்ளது, நீலவானின் தன்மையே உள்ளது; அதில் மிக மேலோட்டமாக மிதந்து கொண்டிருக்கிறதுது மனம். மேலும், பலருக்கும் இது நிகழ்ந்து வந்திருக்கிறது.''

- ஓஷோ
பதஞ்சலியோகம்: ஒரு விஞ்ஞான விளக்கம்
பாகம் - 3,

தோன்றி மறையும் கணத்தினில்
மனமுகில்களின் இடைவெளிகளில்
விண்ணின் கதவுகள் திறக்கின்றன.

விழிப்படைந்திருப்பவரின்
விண்மீன் தரிசனம்
கணநேரம்தான்
அவரதுஇருத்தலோ ஆகாயம்தான்.

தினசரி வாழ்வில் மறைந்திருக்கும்
காலமற்ற தன்மையை
லேசர் ஒளிக் கூர்மையுடன்
திறந்து காட்டுகிறார் ஓஷோ.
இப்பொழுதின் பரவசத்தை
நமக்கு அவர் காட்டுகிறார்.

பதஞ்சலியின் சூத்திரங்களை
மெய்யான பகவன்
ஒளியின் ஆபரணங்களென
துல்லியமாய் வெளிப்படுத்துகிறார்.

இந்த சூத்திரங்கள் -
தமக்கே உரிய பருவத்தில் மலரும்
அபூர்வ விதைகள்.
ஜீவனின் இருத்தலைத் தோலுரித்து
சாதாரணமானதை ஆசாதாரணமானதாக
மாற்றி அ மைப்பவை.

உங்கள் இதயபூமியில் இவ்விதைகள்
வேரூன்றித் தழைக்கட்டும்!

மா தியான சமுத்ரா

## 1. பிறவிச் சுழலிலிருந்து விடுபடல்

மேலும், உறக்கத்தின் போது கிடைக்கிற அறிவின் மீதும் தியானம் செய்யுங்கள்.

மேலும், உங்களைக் கவரும் எதன்மீதும் தியானம் செய்யுங்கள்.

இவ்வாறு, அளவில் நுட்பமானதில் இருந்து அளவு கடந்தது வரை அனைத்தையும் வென்றவராக ஆகிறார் யோகி.

மனிதன் தன் வாழ்வின் மூன்றில் ஒரு பகுதியை - அதாவது கிட்டத்தட்ட 20 ஆண்டுகளை - தூக்கத்திலேயே செலவழிக்கிறான். ஆனால் தூக்கத்தை யாரும் கண்டு கொள்வதில்லை. தொடர்ந்து அது புறக்கணிக்கப்பட்டே வருகிறது. ஒருவரும் அதைப்பற்றி சிந்திப்பதில்லை, ஒருவரும் அதன்மீது தியானிப்பதில்லை. ஏன் இப்படி ஆகியிருக்கிறது என்றால், உணர்வு மனத்தின் மீதே மனிதர் அளவுக்கு அதிகமான கவனம் செலுத்தி வருகிறார்.

மனத்துக்கு மூன்று பரிமாணங்கள் அல்லது நிலைகள் உள்ளன. சடப்பொருளுக்கு எப்படி மூன்று நிலைகள் உள்ளனவோ அப்படியே மனத்துக்கும் மூன்று நிலைகள் உள்ளன. அவற்றில் ஒரு நிலை மட்டுமே உணர்வு மனம். இன்னொரு நிலை உணர்வற்றது. இன்னுமொரு நிலை இருக்கிறது - அதுதான் அதி-உணர்வு (*Super - Conscious*) சடப்பொருளைப் போலவே மனத்துக்கும் இப்படி மூன்று நிலைகள், ஏனென்றால் அடிப்படையில் மனமும் பருப்பொருளால் ஆனதுதான். அல்லது அதையே நீங்கள் இப்படியும் சொல்ல முடியும்: அதாவது பருப்பொருளும் மனத்தால் ஆனதுதான். அது அப்படித்தான் இருந்தாக வேண்டும், ஏனென்றால் இருப்பது ஒன்றுதான்.

நுண்மையான - கண்ணுக்குத் தெரியாத - பொருளே மனம். பருண்மையான - கண்ணுக்குத் தெரிகிற - மனமே பொருள். ஆனால் சாமானிய மனிதர் உணர்வுமனம் என்னும் ஒரு நிலையில் மட்டுமே வாழ்கிறார். உறக்க நிலையோ உணர்வற்ற மனத்தைச் சேர்ந்தது; கனவு நிலையும் உணர்வற்ற மனத்துக்கே சொந்தமானது. நடப்பதும் நினைப்பதும் எப்படி உணர்வு மனத்தினுடையவையோ அப்படியே தியானம், பரவசம் என்பவை அதி -உணர்வு மனத்தினுடையவை. எனவே மனத்தின் இந்த நிலவரத்துக்குள் நாம் மெல்ல மெல்ல செல்ல வேண்டி உள்ளது.

மனத்தைப் பற்றி நினைவில் கொள்ள வேண்டிய மூதல் செய்தி, அது ஒரு பனிப்பாறையை ஒத்தது என்பதே. அதன் உச்சிபாகம் மட்டும் வெளியில் தெரியும். அதை நீங்கள் பார்க்க முடியும். ஆனால் அது மொத்தத்தில் பத்தில் ஒரு பாகம் மட்டுமே. பத்தில் 9 பாகம் நீருக்கடியில்

மூழ்கி உள்ளது. ஆழத்துக்குள் போகாதபோது சாதாரணமாக அதனை உங்களால் பார்க்க முடிவதில்லை. ஆனால் இவை இரண்டு நிலைகள் மட்டுமே. மூன்றாவது ஒரு நிலை இருக்கிறது: பனிப்பாறையின் ஒரு பகுதி ஆவியாகி மேகமாக வானத்தில் பரவி மிதந்து கொண்டிருப்பதைப் போன்றது அது. உணர்வற்ற மனத்தை கண்டுபிடிப்பதே கடினம்; மேகத்தை எட்டிப்பிடிப்பதோ ஏறக்குறைய முடியாத காரியம் - அதே பனிப்பாறையின் பகுதிதான், ஆனால் ஆவியாகி விட்டிருக்கிறது.

எனவேதான் தியானம் என்பது அவ்வளவு கடினமாக உள்ளது. சமாதியோ ஏறக்குறைய அசாத்தியமான செயலாக உள்ளது. உங்களுடைய ஆற்றல் மொத்தமும் அதற்கு தேவைப்படுகிறது. ஒருவரின் ஒட்டு மொத்த அர்ப்பணிப்பையும் அது அவசியமாகக் கோருகிறது. அப்போது மட்டுமே ஆவிபோன்ற நிலவரமாகிய அதி-உணர்வு மனத்துக்குள் செங்குத்தாக மேல்நோக்கி பயணம் செய்வது சாத்தியமாகும். உணர்வு மனம் இருக்கிறது. நான் பேசுவதை நீங்கள் கவனித்துக் கொண்டிருப்பது உணர்வு மனத்திலிருந்துதான். நான் கூறும் எதைப்பற்றியும் உங்களுக்குள் நீங்கள் ஒருவித உரையாடலை நடத்திக் கொண்டிருந்தால், உள்ளுக்குள் ஒருவித வியாக்கியானம் / அர்த்தம் ஓடிக்கொண்டிருந்தால், அதுதான் உணர்வுமனம்.

ஆனால் எதையும் நினைக்காமலும் நான் பேசுவதை உங்களால் கவனிக்க முடியும். நான் கூறும் எதையும் எவ்வகையிலும் மாற்றாமல், அதை சரி என்றோ தவறென்றோ தீர்ப்பிடாமல், ஆழ்ந்த அன்புடன் இதயத்திலிருந்து நேரடியாக உங்களால் கவனிக்க முடியும். எந்த விதமான மதிப்பீடும் செய்யாமல், மனம் கடந்து சென்று விட்டதுபோல், ஆழ்ந்த அன்புடன் வெறுமனே கவனிக்கிறீர்கள் - இங்கே இதயம் கவனிக்கிறது, களிப்பால் துள்ளுகிறது - இந்நிலையில் உணர்வற்ற மனம் கவனித்துக் கொண்டிருக்கிறது. அந்நிலையில் நான் எதை சொன்னாலும் அது உங்கள் வேர்கள் வரை ஆழமாக செல்லும்.

ஆனால் மூன்றாவது ஒரு வாய்ப்பும் இருக்கிறது. அதில் நீங்கள் அதி-உணர்வு நிலையிலிருந்து கவனிக்க முடியும். அந்நிலையில் இதயத்திலிருந்து அன்புடன் கவனிப்பது கூட ஒரு தடங்கலாக இருக்கிறது. மிக நுட்பமாகத்தான் - ஆனால் அன்பும் கூட ஒரு தடங்கல்தான். இந்த மூன்றாவது நிலையில் மனதில் ஒன்றுமிருப்பதில்லை; எந்த எண்ணமும் எந்த உணர்ச்சியும் இருப்பதில்லை. முற்ற முழுக்கவும் நீங்கள் ஒரு வெட்ட வெளியாக, வெறும் பாழாக ஆகி இருக்கிறீர்கள் ஆயின் அந்த வெற்றிடத்துக்குள் - வெறுமைக்குள், நான் கூறும் எந்த கருத்தும் - நான் இருக்கும் எந்த இருப்பும் அப்படியே சென்று சேர்கிறது. இந்நிலையில் நீங்கள் கவனித்துக் கொண்டிருப்பது அதி - உணர்வு மனத்திலிருந்து.

இவைதான் 3 நிலைகள். விழித்துக்கொண்டிருக்கும் நேரத்தில் நீங்கள் உணர்வு மனத்தில் வாழ்கிறீர்கள்: வேலை செய்கிறீர்கள், பேசுகிறீர்கள், சிந்திக்கிறீர்கள், பலவித செயல்களையும் செய்கிறீர்கள். நீங்கள் தூங்கும்போது உணர்வுமனம் செயல்படுவதில்லை; அது ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கிறது. இன்னொரு நிலையாக உணர்வற்ற மனம் இயங்கத் தொடங்குகிறது. இந்நிலையில் உங்களால் சிந்திக்க முடிவ தில்லை, ஆனால் கனவுகாண முடிகிறது. மேலும் ஓரிரவில் தொடர்ச்சி யாக 8 சுழற்சிகளாக நீங்கள் கனவு காண்கிறீர்கள். கொஞ்ச நேரத்துக்கு மட்டுமே நீங்கள் கனவு காண்பதில்லை, மீதி நேரம் முழுதும் தொடர்ச்சி யாக நீங்கள் கனவு கண்டு கொண்டேதான் இருக்கிறீர்கள்.

பதஞ்சலி கூறுகிறார்:

> **மேலும் உறக்கத்தின்போது கிடைக்கிற அறிவின்மீதும் தியானம் செய்யுங்கள்.**

தூக்கம் என்பது ஒருவிதமான ஒன்றுமின்மை என்பதுபோல்தான் வெறுமனே நீங்கள் தூங்கி விடுகிறீர்கள். அப்படி இல்லை அது. அதற்கும் அதற்கே உரிய இருப்பு இருக்கிறது. உறக்கம் என்பது விழிப்பின் எதிர் மறை மட்டுமல்ல. அவ்வளவுதான் அது என்றால் பின் அதில் தியானிப்ப தற்கு ஒன்றும் இராது. ஆனால் தூக்கம் இருள் போன்றதல்ல, ஒளி அற்றதல்ல. தூக்கத்துக்கும் அதற்கே உரிய உடன்பாட்டுத் தன்மை இருக்கிறது. விழித்திருக்கும் நேரத்தைப் போலவே நீங்கள் தூங்கும் நேரத்திலும் நீங்கள் செயலாக்கத்துடன் இருக்கிறீர்கள். தியானத்தின் வழியாக தூக்கத்தின் மர்மங்கள் உங்களுக்கு விளக்கமாகும்போது, விழித்திருப்பதற்கும் தூங்குவதற்கும் இடையில் எந்த வேறுபாடும் இல்லை என்பதைக் கண்டுகொள்வீர்கள். அவை இரண்டுமே தத்தம் நிலையில் செயல்பட்டுக் கொண்டே உள்ளன. உறக்கம் என்பது விழித் திருப்பதிலிருந்து வெறுமனே ஓய்வெடுத்தல் மட்டுமல்ல. அதுவும் வேறு விதமான ஒரு செயல்பாடுதான். அதனால்தான் கனவுகள் வருகின்றன.

கனவு என்பது மாபெரும் ஆற்றல்கொண்ட ஒரு செயல்பாடுதான்; உங்களின் சிந்தனைச் செயலை விட அதிக ஆற்றல் நிரம்பியது, அதிக அர்த்தம் நிரம்பியதும் ஆகும். ஏனென்றால் உங்கள் சிந்தனையை விடவும் உங்கள் ஜீவனின் அதிக ஆழமான பகுதியை சேர்ந்தது அது. பகல் முழுதும் செயல்பட்ட மனம் இரவில் நீங்கள் தூங்கப்போகும் நேரத்தில் களைத்திருக்கிறது. மனத்தின் மிகவும் சிறிய பகுதி அது. உணர்வற்ற மனத்துடன் ஒப்பிடும்போது பத்தில் ஒரு பாகம் மட்டுமே உடையது அது. உணர்வற்ற மனமோ பத்தில் 9 பாகம் பெரியதும் பரந்ததும்

பலம் கூடியதும் ஆகும். அதி - உணர்வு மனதுடன் அதை ஒப்பிடுவதற்கோ சாத்தியமே இல்லை. ஏனென்றால் அதி - உணர்வு மனம் அளவு கடந்தது, எல்லை அற்றது. உணர்வு கடந்த மனம் எல்லாம் வல்லது, எங்கும் நிறைந்தது, அனைத்தும் அறிந்தது. உணர்வு கடந்த நிலைதான் கடவுள் எனப்படுகிறது. உணர்வற்ற மனதுடன் ஒப்பிடும்போதே உணர்வு மனம் மிக சிறியதுதான். விரைவில் அது களைத்து விடுகிறது. மீண்டும் அதற்கு ஆற்றல் சேர அதற்கு ஓய்வு தேவைப்படுகிறது. எனவே உணர்வு மனம் அணைந்து விடுகிறது. உறக்கத்தில் வேறொரு மாபெரும் செயல்பாடு ஆரம்பமாகிறது; அதுதான் கனவு காணுதல்.

ஆனால் அது ஏன் புறக்கணிக்கப்பட்டே வந்திருக்கிறது? ஏனென்றால் உணர்வு நிலையுடன் தன்னை இணைத்து அடையாளம் காணவே மனித மனத்துக்கு பயிற்சிதரப்பட்டு வந்திருக்கிறது. எனவேதான் தூக்கத்தில் நீங்கள் இருப்பதில்லை என்று நீங்கள் நினைக்கிறீர்கள். அதனால்தான் உறக்கம் ஒரு குட்டி சாவு போலவே தோற்றமளிக்கிறது. தூங்கும்போது உங்களுக்குள் என்ன நடக்கிறது என்பதைப்பற்றி ஒருபோதும் நீங்கள் யோசிப்பதில்லை. ''அதன்மீது தியானியுங்கள், உங்கள் இருத்தலுக்குள்/ உயிருக்குள் இருக்கும் பல சங்கதிகள் வெளிப்படும்'' என்கிறார் பதஞ்சலி.

விழிப்புணர்வுடன் தூக்கத்துக்குள் இயங்குவதற்கு சிறிது காலம் ஆகும். ஏனென்றால் நீங்கள் கண் விழித்திருக்கும் நேரத்திலேயே நீங்கள் விழிப்புணர்வோடு இருப்பதில்லை. உண்மையை சொல்வதானால் விழித்திருக்கும் நேரத்தில்கூட நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பவரைப் போன்றே நடந்துகொள்கிறீர்கள். தூக்கத்தில் நடப்பவர் போலவே செயல்படுகிறீர்கள். நிஜமாகவே நீங்கள் போதிய விழிப்புணர்வுடன் இருப்பதில்லை. உங்கள் கண்கள் திறந்திருப்பதாலேயே நீங்கள் விழித்திருப்பதாக நினைத்துக் கொள்கிறீர்கள். உண்மையில் விழித்திருத்தல் என்றால் ஒவ்வொரு கணமும் நீங்கள் எதை செய்துகொண்டிருந்தாலும், அதை முழு கவனத்துடன் செய்து கொண்டிருக்கிறீர்கள், உங்களை சுற்றிலும் என்ன நடந்து கொண்டிருந்தாலும் அதை முழு கவனத்துடன் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள். உங்களுக்கு ஒரு குறிப்பு காட்ட நான் என் கையை உயர்த்தும் போதுகூட அதை முழு உணர்வுடன் நான் செய்து கொண்டிருக்கிறேன். அதை ஒரு யந்திரமனிதன்போல் யந்திரத்தனமாக செய்யவும் முடியும். அப்போது உங்கள் கையில் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் உணராமலே இருக்கலாம். உண்மையை சொன்னால், உங்கள் கையை அசைத்தது நீங்களே அல்ல, அதுவாகவே அது அசைந்துவிட்டது! அப்படியானால் இது உணர்வற்ற செய்கை. எனவேதான் உங்கள் சொந்த உறக்கத்துக்குள் நீங்கள் ஊடுருவுவதுகூட அவ்வளவு கடினமாக உள்ளது.

ஆனால் நீங்கள் முயற்சி செய்தால்... நீங்கள் செய்ய வேண்டிய முதல் முயற்சி: விழித்திருக்கும் நேரத்தில் இன்னும் அதிக விழிப்புணர்வுடன் இருங்கள். ஏனெனில் அங்கிருந்துதான் முயற்சியை தொடங்கியாக வேண்டி உள்ளது. தெருவில் நடக்கும்போது முழு கவனத்துடன் நடங்கள். ஏதோ மிகவும் முக்கியமான ஒரு வேலையை செய்துகொண்டிருப்பதுபோல் அதை செய்யுங்கள். இது மிகவும் முக்கியமானதாகும். ஒவ்வொரு அடியையும் முழு விழிப்புணர்வுடன் எடுத்து வையுங்கள். இதை உங்களால் செய்யமுடிந்தால், அதன்பிறகு மட்டுமே உறக்கத்துக்குள் உங்களால் விழிப்புணர்வுடன் நுழைய முடியும். தற்சமயம் உங்களிடம் மிகவும் மங்கலான விழிப்புணர்வே இருக்கிறது. உங்கள் உணர்வுமனம் அணைந்துவிடும் அக்கணமே அந்த மங்கலான விழிப்புணர்வும் ஒரு சிறு நீர்க்குமிழியைப்போல் மறைந்து விடுகிறது. அதில் சிறிதும் ஆற்றல் இருப்பதில்லை. மிகமிக மங்கலாக - ஒரு சிறு மினுக்கமாக மட்டுமே, வெறும் ஒரு 0 வோல்ட் ஆற்றல் நிகழ்வாக மட்டுமே அது இருக்கிறது. அதில் இன்னும் அதிக ஆற்றலை கொண்டுவந்து சேர்த்தாக வேண்டும் நீங்கள். எந்த அளவுக்கு அதிகமான ஆற்றல் என்றால், உணர்வுமனம் அணைந்ததும் விழிப்புணர்வு தானாகவே தொடர ஆரம்பிக்கிறது - விழிப்புணர்வுடன் நீங்கள் உறக்கத்தில் ஆழ்கிறீர்கள். இது நிகழ முடியும் - நடத்தல், உண்ணல், குடித்தல், குளித்தல் முதலான உங்களின் பிற நடவடிக்கைகளை விழிப்புணர்வுடன் நீங்கள் செய்தால், நாள்முழுவதும் நீங்கள் எதை செய்து கொண்டிருந்தாலும் அதெல்லாம், செய்யும் செயலில் முழு விழிப்புணர்வுடன் இருப்பதற்கான உங்களின் அகப் பயிற்சிக்கு ஒரு வாய்ப்பாகவே ஆகிறது. எனவே செயல்பாடு இரண்டாம் நோக்கம் ஆகிறது; அந்த செயல்பாட்டின் வழி பயிலும் விழிப்புணர்வே முதன்மை நோக்கமாக ஆகிறது. இரவானதும் எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்திவிட்டு நீங்கள் தூங்கப்போகும்போது அந்த விழிப்புணர்வு தூக்கத்திலும் தொடர்கிறது. நீங்கள் ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருக்கும் போது கூட விழிப்புணர்வு அதை கவனித்துக்கொண்டிருக்கிறது: ஆம் - உடல் உறக்கத்தில் ஆழ்ந்து கொண்டிருக்கிறது. பையப்பைய உடல் இளைப்பாறத் தொடங்குகிறது. உங்களுக்குள் நீங்கள் அப்படி சொல்லிக் கொள்வதால் அல்ல; நீங்கள் பேசாமல் கவனிக்கிறீர்கள். பையப்பைய எண்ணங்கள் மறைந்து கொண்டிருக்கின்றன. இடைவெளிகளை நீங்கள் காண்கிறீர்கள். போகப்போக உலகம் உங்களை விட்டு மிக மிக தொலைவில் உள்ளது. உங்கள் இருத்தலின் அடித்தளத்துக்குள் - உணர்வற்ற மனத் துக்குள் வீழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். விழிப்புணர்வுடன் தூக்கத்தில் ஆழ உங்களால் முடிந்தால் மட்டுமே இரவிலும் அந்த தொடர்ச்சி இருக்கும். ''உறக்கம் கொணரும் அறிவின்மீது தியானியுங்கள்'' என்று பதஞ்சலி கூறும்போது அதைத்தான் குறிப்பிடுகிறார்.

மேலும், அதிகமான அறிவைக் கொணரவும் தூக்கத்தால் முடியும். ஏனென்றால் அதுவே உங்களின் பொக்கிஷ அறையாக இருக்கிறது, அதுவே உங்களின் பலப்பல பிறவிகளின் சேமிப்புக்கிடங்காக இருக்கிறது. அங்கேதான் ஏராளமான செய்திகளை நீங்கள் சேமித்து வைத்திருக்கிறீர்கள். முதலில், நீங்கள் விழித்திருக்கும்போது - விழிப்பு நிலையில் நீங்கள் இருக்கும்போது விழிப்புணர்வுடன் இருக்க முயலுங்கள். பின் விழிப்புணர்வு தானாகவே அதிக-ஆற்றலுடையதாக ஆகிறது; அப்போது நீங்கள் என்ன செய்துகொண்டிருந்தாலும் பரவாயில்லை - நிஜமாகவே நீங்கள் நடந்து கொண்டிருந்தாலும் சரி, அல்லது ஒரு கனவில் நடந்து கொண்டிருந்தாலும் சரி (அதாவது நடந்து கொண்டிருப்பதாக கனவு கண்டு கொண்டிருந்தாலும் சரி) எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை. மேலும் விழிப்புணர்வுடன் நீங்கள் உறக்கத்துக்குள் ஆழும்போது இணைப்புகள் (கியர்கள்) எப்படி மாறுகின்றன என்பதை முதன்முறையாக நீங்கள் பார்ப்பீர்கள். விழிப்புத் தன்மை மறைந்து, மனம் அணைந்து, வேறொரு மண்டலம் செயல்படத் தொடங்குவதன் அந்த சொடக்கைக் கூட நீங்கள் உணர்வீர்கள். உயிர் / இருத்தல் செயல்படும் முறைகள் - அதற்கான இணைப்புகள் - மாறி இருக்கின்றன. இந்த இரு இணைப்புகளுக்கு இடையில் நடுநிலை இணைப்புக்கான (நியூட்ரல்) ஒரு சிறு இடைவெளி உள்ளது. ஏனென்றால் இணைப்பு மாறுகிற பொழுதெல்லாம் ஒரு நடுநிலை இணைப்பின் வாயிலாகத்தான் மாறியாக வேண்டி உள்ளது. பையப்பைய, இணைப்பு மாறுவதை மட்டுமல்ல, இரண்டுக்கிடையிலான இடை வெளியைப்பற்றியும் விழிப்புடன் இருப்பவராக நீங்கள் ஆவீர்கள்; அந்த இடைவெளியில் நீங்கள் உங்களின் அதி - உணர்வு மனத்தின் முதல் தரிசனத்தை காண்பீர்கள்.

உணர்வு மனமானது உணர்வற்ற மனமாக மாறும் போது ஒரு கணத்தைவிட குறைந்த அளவு நேரத்துக்கு அதி-உணர்வு நிலையை உங்களால் காண முடியும். ஆனால் இது பின்னால் வருவதுதான்; இங்கு ஒரு பேச்சுக்காக மட்டுமே குறிப்பிட்டேன். முதலில், உணர்வற்ற மனம்பற்றிய விழிப்புணர்வு உள்ளவராக நீங்கள் ஆவீர்கள்; அது உங்களின் வாழ்வில் மாபெரும் மாற்றத்தை கொண்டுவரும்.

உங்கள் கனவுகளை நீங்கள் கவனிக்க தொடங்கியதும் ஐந்து வகையான கனவுகள் வருவதை கண்டுபிடிப்பீர்கள். முதல் வகை கனவு வெறும் குப்பைதான். ஆனால் ஆயிரக்கணக்கான உளவியல் பகுப் பாய்வர்கள் முழுக்கவும் அந்த குப்பையைத்தான் கிளறிக்கொண்டிருக் கிறார்கள். இதுவோ அறவே பயனற்றது. நாள்முழுதும் வேலை செய்யும்போது நீங்கள் நிறைய குப்பைகளை சேர்த்துக் கொண்டதால் அது

ஏற்படுகிறது. உடலில் அழுக்கு படிவதால் உங்களுக்கு குளியல் தேவைப்படுகிறது, உங்களை சுத்தம் செய்து கொள்வது தேவைப்படுகிறது. அப்படியேதான் மனதில் அழுக்கு படிகிறது. மனத்தை குளிப்பாட்ட வழியில்லை.

எனவேதான் எல்லா அழுக்கையும் குப்பையையும் அகற்றிட மனம் ஒரு தானியங்கி உத்தியை வைத்திருக்கிறது. அதுதான் முதல் வகை கனவுகள். மனத்தில் சேர்ந்த குப்பைகளை மனம் அகற்றுவது தான் முதல் வகை கனவுகளாய் வெளிப்படுகிறதே தவிர வேறல்ல. மேலும் இதுவே கனவுகளின் மிகப்பெரும் பகுதி - ஏறக்குறைய 90% ஏறக்குறைய 90%. கனவுகள் மனத்தால் இப்படி தூக்கி எறியப்படும் வெறும் குப்பைகள் மட்டுமே. அவற்றின் மீது அதிக கவனம் செலுத்தா தீர்கள். மேலும், உங்களின் விழிப்புணர்வு வளர வளர எது குப்பை என்பதை உங்களால் கண்டுகொள்ள முடியும்.

இரண்டாவது வகை கனவு ஒருவித விருப்ப நிறைவேற்றமாகும். தேவைகள் - இயல்பான / இயற்கையான தேவைகள் பல உள்ளன. ஆனால் மத பூசாரிகளும் மத ஆச்சாரிகள் என்போரும் உங்கள் மனத்தை நஞ்சாக்கி விட்டார்கள். உங்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளக்கூட உங்களை அவர்கள் அனுமதிப்பதில்லை. அவற்றை அவர்கள் முற்றிலுமாக கண்டித்திருக்கிறார்கள். எனவே அதுபற்றிய பாவ/ சாப உணர்வு உங்களுக்குள் குடியேறி உள்ளது. எனவே உங்களின் பல தேவைகள் நிறைவேறாததால் நீங்கள் தவிக்கிறீர்கள். அந்த தாகங்கள் / தாபங்கள் நிறைவேற்றத்தை வேண்டுகின்றன. இந்த தவிப்புகளை நிறைவு செய்வதே இரண்டாம் வகை கனவே அன்றி வேறல்ல. மதத்தலைவர்களால் - விசத்தை பரப்புபவர்களால் உங்கள் இருத்தலுக்கு எவற்றை எல்லாம் நீங்கள் மறுத்திருக்கிறீர்களோ அவற்றை எல்லாம் ஏதாவது ஒரு வழியில் நிறைவுசெய்ய கனவுகளின் வழி மனம் முயற்சி செய்கிறது.

அப்படித்தான் அன்று ஒருநாள் ஒரு இளைஞர் என்னிடம் வந்தார். சிறந்த அறிவுத்திறன் - புரிதல் திறன் உடையவர். அவர் என்னிடம் கேட்டார், ''மிகவும் முக்கியமான ஒரு கேள்வியை உங்களிடம் கேட்பதற்காக நான் வந்திருக்கிறேன், ஏனென்றால் என் முழு வாழ்க்கையுமே அதைத்தான் பொறுத்திருக்கிறது; என் பெற்றோர் என்னை திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தி வருகிறார்கள். ஆனால் நான் அதில் எந்த அர்த்தத்தையும் காணவில்லை. எனவே நான் உங்களிடம் கேட்க விரும்புவது, திருமணம் அர்த்தம் நிறைந்ததா இல்லையா? மணவாழ்வில் நான் நுழைவதா கூடாதா?'' நான் அவரிடம் சொன்னேன், ''உனக்கு தாகம் எடுக்கும்போது, தண்ணீர் குடிப்பது அர்த்தம் நிறைந்ததா இல்லையா? நான்

தண்ணீர் அருந்துவதா கூடாதா என்று நீ கேட்கிறாயா? அர்த்தம் பற்றிய கேள்வியே அங்கே எழுவதில்லை. நீ தாகமாயிருக்கிறாயா இல்லையா என்பதுதான் கேள்வி. தண்ணீரில் எந்த அர்த்தமும் இல்லாதிருக்கலாம், தண்ணீரை குடிப்பதிலும் எந்த அர்த்தமும் இல்லாதிருக்கலாம்; ஆனால் அது தேவையற்ற செய்தி. தேவையான செய்தி என்னவென்றால் நீ தாகமாயிருக்கிறாயா இல்லையா என்பதுதான். மேலும் நீ எத்தனை தடவை குடித்தாலும்கூட திரும்ப திரும்ப உனக்கு தாகம் எடுக்கும் என்பதையும் நான் அறிவேன். இதற்கு மனம் சொல்லும், அப்படியானால் இதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இதில் என்ன நோக்கம் இருக்கிறது? எத்தனை தடவை குடித்தாலும் திரும்பத் திரும்ப தாகம் எடுத்துக்கொண்டு! செக்கு மாட்டு பிழைப்பாக தெரிகிறது, வேறு எந்த அர்த்தமும் இருப்பதாக தெரியவில்லை!

இப்படித்தான் உணர்வு மனம் உங்களின் முழு இருத்தலின் மீதும் ஆதிக்கம் செலுத்த முயன்று கொண்டு வந்துள்ளது. ஏனென்றால் அர்த்தம் என்பது உணர்வு மனத்தை சேர்ந்தது. உணர்வற்ற மனத்துக்கு எந்த அர்த்தமும் தெரியாது. அதற்கு பசி தெரியும், தாகம் தெரியும், மற்ற தேவைகள் தெரியும்; அர்த்தம் எதுவும் அது அறியாது. உண்மையை சொன்னால் வாழ்க்கைக்கு அர்த்தம் என்று எதுவும் இல்லை. அதை நீங்கள் கேட்டால் நீங்கள் தற்கொலையைத்தான் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். வாழ்க்கைக்கு அர்த்தம் ஒன்றும் இல்லை. அது அதன்பாட்டுக்கு இருக்கிறது. அதுவும், அர்த்தமில்லாமலே - அதற்கான அவசியம் இல்லாமலே - அது அவ்வளவு அழகாக உள்ளது. ஒரு மரம் இங்கு இருப்பதற்கு என்ன பொருள்? ஒவ்வொரு நாளும் காலையில் சூரியனும் மாலையில் சந்திரனும் உதிப்பதில் என்ன பொருள் இருக்கிறது? ஒரு மரம் பூத்து குலுங்கும்போது அதில் என்ன பொருள் இருக்கிறது? காலையில் பறவைகள் பாடும்போது - அதற்கு, ஓடை ஓடிக்கொண்டே இருப்பதற்கு, அலைகள் - பெருங்கடலின் பேரலைகள் - பாறைகள்மேல் திரும்ப திரும்ப வன்மையாக மோதிக் கொண்டிருப்பதற்கு என்ன பொருள் இருக்கிறது? இவற்றுக்கெல்லாம் என்ன பொருள்?

அர்த்தம் என்பது முழுமையுடையது அல்ல. முழுமையானது அர்த்தம் இல்லாமலே மிக அழகாக நிலவுகிறது. சொல்லப்போனால் அர்த்தம் இல்லாததால்தான் அவ்வளவு அழகாக இருக்கிறது. அர்த்தம் என்று ஏதாவது இருந்திருக்குமானால் உலகம் இவ்வளவு அழகாக இருக்க முடியாது. ஏனென்றால் அர்த்தத்துடன் மதிப்பீடு வருகிறது, அர்த்தத்துடன் தந்திரம் வருகிறது, அர்த்தத்துடன் பகுத்தறிதல் வருகிறது, அர்த்தத்துடன் பிரித்துப் பார்த்தல் வருகிறது - இது பொருளுடையது அது

பொருளற்றது, இது அதிக பொருளுடையது, அது குறைந்த பொருளுடையது என்ற பிரிவினை. முழுமையோ எந்த பாகுபாடுகளும் இன்றி நிலவுகிறது. ஒவ்வொன்றும் அபரிமித அழகுடன் இருப்பது அவற்றுக்கு எந்த அர்த்தமும் இருப்பதால் அல்ல, அவை இங்கு இருப்பதால் மட்டுமே. இதற்கு எந்த நோக்கமும் கிடையாது.

ஆகவே நான் அந்த இளைஞரிடம் சொன்னேன், ''அர்த்தத்தைப் பற்றி நீ கேட்பாயானால் நீ ஒரு தவறான கேள்வியை கேட்டுக்கொண்டிருக்கிறாய், அதனால் தவறான வழியிலேயே இட்டுச் செல்லப்படுவாய். இப்படித்தான் மத தலைவர்கள் மிகுந்த அதிகாரமுள்ளவர்களாக ஆகிஉள்ளார்கள். நீ தவறான கேள்விகளை கேட்டாய், அவர்கள் தவறான பதில்களை தந்தார்கள்.'' நான் அவரிடம் சொன்னேன், ''நீ பேசாமல் உன் சொந்த ஜீவனை கவனித்துப்பார். உன் நிறைவுக்கு உனக்கு ஒரு பெண் தேவைப்படுகிறாளா? உன் முழு இருத்தலும் அன்பை வேண்டி தவிக்கிறதா? ஏனென்றால் அன்பு - காதல் என்பதும் ஒரு பசி - தாகம் தான். ஒரு அழகான பெண் உன்னை தாண்டிப் போவதை நீ பார்க்கும்போது உனக்குள் திடீரென்று ஏதோ ஒன்று நிகழ்வதில்லையா? ஒரு அலை அடிப்பதில்லையா? கண்ணுக்கு தெரியாத ஏதோ ஒரு மாற்றம் உனக்குள் ஏற்படுவதில்லையா? அல்லது எதுவுமே ஏற்படுவதில்லையா? எந்த பெண்ணும் உன்னை கடந்து போகவில்லை என்பதுபோல், ஏற்கனவே போனதுபோலவே தொடர்ந்தும் போய்க் கொண்டிருக்கிறாயா? சாலையில் நீ போகிறாய், ஒரு அழகி உன்னை கடந்து செல்கிறாள்; உன்னில் எந்த மாற்றமும் இல்லாமல், அவள் வருவதற்கு முன் நீ சென்றது போலவே தொடர்ந்தும் மேற்செல்கிறாய்; எதுவும் உன்னில் நேரவில்லை, உன் ஜீவனில் எந்த அலையும் வந்து மோதவில்லை, ஒரு சிறு சலனம்கூட எழும்பவில்லை என்றால், திருமணத்துக்கு எந்த தேவையுமில்லை. ஆனால் அர்த்தத்தைப் பற்றி எல்லாம் கேட்காதே. ஏதாவது நேர்ந்திருந்தால், சற்று கூடுதல் வேகத்துடன் நீ நடக்க தொடங்கினால், அல்லது ஒரு ராகத்தை நீ முணுமுணுக்கத் தொடங்கினால், அல்லது அந்த அழகியை நீ நோட்டமிட தொடங்கினால், அல்லது அவளை பார்ப்பதை நீ தவிர்க்கத் தொடங்கினால்.... இப்படியாயினும் அப்படியாயினும் - பெண் போகும் அதே திசையிலேயே நீயும் போகத் தொடங்குகிறாயா அல்லது நேர் எதிர்த்திசையில் ஓடத் தொடங்குகிறாயா என்பது பற்றி எனக்கு கவலையில்லை, அது முக்கியமில்லை - ஏதாவது ஒன்று நிகழுமானால், உனக்கு தேவை இருக்கிறது, அந்நிலையில் அந்த தேவை பூர்த்தி செய்யப்பட வேண்டும். ஏனென்றால் ஒரு தேவை எழுவதே அது நிறைவு செய்யப்படுவதற்குத்தான். சாலையில் நீ நடந்து போகையில் ஒரு பெண் உன்னை கடந்து போகையில் உன்னில் எந்த மாற்றமும் ஏற்படாத நிலை

ஒரு நாள் உனக்கு ஏற்படலாம். அன்றைக்கு அதுவும் நல்லதுதான், ஆனால் இன்றைக்கு இதுவும் நல்லதுதான். எல்லாமே புனிதம்தான், தெய்வீகம்தான். காதல் வயப்பட ஒரு காலம் உள்ளது, அதைக் கடந்து செல்லவும் ஒரு காலம் உள்ளது. உறவு கொள்ளவும் உறவில் மகிழவும் ஒரு காலம் உள்ளது, தனித்து இருக்கவும் தனிமையின் இனிமையில் பரவசமடையவும் ஒரு காலம் உள்ளது. இதில் ஒவ்வொன்றும் அழகானவையே''.

ஆனால் தேவையைத்தான் பார்க்கவேண்டும், அர்த்தத்தை பார்க்கக்கூடாது. அர்த்தம் என்பது உணர்வு மனத்தை சார்ந்தது. தேவை என்பது உணர்வற்ற மனத்தை சார்ந்தது. இப்படித்தான் இரண்டாவது வகை கனவு இருப்புக்கு வருகிறது: உங்கள் தேவைகளை நீங்கள் நிறை வேற்றாமலே போகிறீர்கள். அப்போது மனம் அவற்றை கனவில் நிறைவேற்றுகிறது. நீங்கள் மணம்புரிந்து கொள்ளாமல் இருப்பதற்கு காரணம், நீங்கள் மாபெரும் புத்தகங்களை படித்திருக்கலாம், சிந்தனாவாதிகள் உங்கள் மனதை கெடுத்திருக்கலாம், இவை உங்கள் மனத்தை குறிப்பிட்ட பாணிகளில் வார்த்து விட்டுள்ளன. அதன்பின் நீங்கள் இருத்தலிடம் திறந்த தன்மையுடன் இருப்பதில்லை. அந்நிலையில் நீங்கள் உங்கள் தேவைகளை வெட்டிக் குறைக்க தொடங்குவீர்கள். அப்போது அந்த தேவைகள் குமிழியிட்டு வரும், கனவில் அவை மேலெழும். ஏனென்றால் உணர்வற்ற மனத்துக்கு எந்த தத்துவமும் தெரியாது. உணர்வற்ற மனத்துக்கு எந்த அர்த்தமோ நோக்கமோ கிடையாது. உணர்வற்ற மனத்துக்கு தெரிந்தது ஒன்றே ஒன்றுதான்: உங்கள் இருத்தல் நிறைவுள்ளதாவதற்கு என்னென்ன தேவை என்பது அதற்கு தெரியும்.

ஆகவே உணர்வற்ற மனம் தன் சொந்த கனவுகளை வலிந்து உருவாக்குகிறது. இதுதான் இரண்டாம் வகை கனவு. இதைப் புரிந்து கொள்வதும் இதன்மீது தியானிப்பதும் மிகவும் அர்த்தம் நிறைந்தது. ஏனென்றால் அவற்றின்மூலம் உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட செய்தியை உணர்த்த உணர்வற்ற மனம் முயன்று கொண்டிருக்கிறது: ''முட்டாளாக இருக்காதே! பின் அதற்காக துன்புறுவாய். உன் ஜீவனை பட்டினி போடாதே. கொலையாளியாக ஆகாதே. உன் தேவைகளை நிறைவு செய்யாமல் விடுவதன்மூலம் ஒரு படிப்படியான தற்கொலையை செய்து கொண்டிருக்காதே.''

நினைவில் கொள்ளுங்கள்: ஆசைகள் உணர்வு மனத்தினுடையவை; தேவைகள் உணர்வற்ற மனத்தினுடையவை. இவற்றுக்கிடையிலான வேறுபாடு மிகமிக அர்த்தம் நிறைந்தது, அதை புரிந்து கொள்வது மிகுந்த முக்கியத்துவம் நிறைந்தது .

ஆசைகள் உணர்வு மனத்தினுடையவை; உணர்வற்ற மனம் ஆசைகளை அறியாது. ஆசைகளைப் பற்றி உணர்வற்ற மனத்துக்கு அக்கறை இல்லை. ஆசை என்பது என்ன? ஒரு ஆசை என்பது உங்களின் சிந்தனையில் இருந்து, உங்களுக்கு சொல்லிக் கொடுக்கப்பட்ட வற்றிலிருந்து, பழக்கங்களுக்கு நீங்கள் கட்டுண்ட நிலையில் இருந்து வருகிறது. நாட்டுக்கு தலைவராவதற்கு நீங்கள் விரும்பலாம். உணர்வற்ற மனம் அதைப்பற்றி அலட்டிக் கொள்வதில்லை. நாட்டின் அதிபராக இருப்பதில் உணர்வற்ற மனத்துக்கு ஆர்வம் கிடையாது. ஒரு நிறைவடைந்த ஒருமையுள்ள உயிரியாக இருப்பது எப்படி என்பதில் மட்டுமே அதன் அக்கறை. ஆனால் உணர்வுமனம் கூறுகிறது. ''ஜனாதிபதியாக ஆகு, ஜனாதிபதி ஆவதற்காக உன் காதலியை தியாகம் செய்ய வேண்டி வந்தால் தியாகம் செய்; உன் உடலை பலிகொடுக்க வேண்டி வந்தால் பலிகொடு; ஒய்வை முழுமையாக புறக்கணிக்க வேண்டி வந்தால் புறக்கணி. முதலில் நாட்டுக்கு ஜனாதிபதி ஆகு'' என்கிறது. அல்லது அளவுக்கு மீறிய பொருள் செல்வத்தை குவி என்றால் அதுவும் உணர்வு மனத்தின் குரலே. உணர்வற்ற மனம் பொருட்செல்வத்தை அறியாது. உணர்வற்ற மனத்துக்கு இயற்கை வளம் மட்டுமே தெரியும். சமுதாயத்தால் தீண்டப்படாதிருப்பது அது. விலங்குகளை - பறவைகளை - அல்லது மரங்களைப் போன்றது அது. சமுதாயத்தாலோ அரசியல்வாதிகளாலோ உணர்வற்ற மனம் இஃனும் கறைபடுத்தப்படவில்லை. இன்னும் அது தூய்மையாகவே இருக்கிறது.

இரண்டாம் வகையான கனவுகளை கவனித்து அதன்மீது தியானியுங்கள். அது, உங்கள் தேவை இன்னதென்பதை உங்களுக்கு தெரியப்படுத்தும் - அந்த தேவைகளை மட்டும் நிறைவு செய்யுங்கள். ஆசைகளை பற்றி கவலைப்படாதீர்கள். மெய்யாகவே ஆனந்தமாக இருக்க நீங்கள் விரும்பினால், தேவைகளை நிறைவேற்றுங்கள், ஆசைகளை விட்டுவிடுங்கள். நீங்கள் அவலத்தில் இருக்க விரும்பினால் தேவைகளை நிறைவேற்றாதீர்கள், ஆசையின் வழியில் போங்கள்.

அப்படித்தான் நீங்கள் அவலம் நிரம்பியவர்களாக ஆகி இருக்கிறீர்கள். சிக்கல் எளியது - நீங்கள் அவலம் நிறைந்தவர்களாக இருக்கிறீர்களா ஆனந்தம் நிறைந்தவர்களாக இருக்கிறீர்களா என்ற சிக்கல் மிகவும் எளியது. தன் தேவைகளை கவனித்து அவற்றின் வழி நடக்கும் மனிதன் கடலை நோக்கிப் பாயும் ஆற்றைப் போன்றவன்... கிழக்காக பாய்வதா மேற்காகப் பாய்வதா என்பதை ஆறு கூறுவதில்லை. வழியை மட்டுமே தேடி செல்கிறது அது. கிழக்காயினும் மேற்காயினும் அதற்கு பொருட்டில்லை. கடலை நோக்கிப் பாயும் ஆறுக்கு ஆசைகள் கிடையாது. தன் தேவையை மட்டுமே அது அறியும். எனவேதான் விலங்குகள்

அவ்வளவு மகிழ்ச்சியாக காட்சியளிக்கின்றன - எந்த உடைமையும் சிறப்பும் இல்லாமலே அவ்வளவு மகிழ்ச்சியா? அதே சமயம் உங்களிடம் எத்தனையோ பொருள்கள் இருந்தும் இவ்வளவு அவலமா? தம் அழகில் - ஆனந்தத்தில் விலங்குகள்கூட உங்களை விஞ்சிவிடுகின்றன. என்ன நேரிட்டுக் கொண்டிருக்கிறது? என்ன காரணம்? உணர்வற்ற மனத்தை கட்டுப்படுத்தவும் திசை திருப்பவும் விலங்குகளுக்கு ஒரு உணர்வு மனம் இல்லை; பிளவுபடாமல் உள்ளன அவை.

இரண்டாம் வகை கனவு உங்களுக்கு வெளிப்படுத்தக் கூடியது நிறைய உண்டு. இரண்டாம் வகையுடன் நீங்கள் உங்கள் உணர்வுமனத்தை மாற்ற தொடங்குகிறீர்கள், உங்கள் நடத்தையை மாற்ற தொடங்குகிறீர்கள், உங்கள் வாழ்க்கை முறையையே மாற்ற தொடங்குகிறீர்கள். உங்கள் தேவைகளை கவனியுங்கள்; உணர்வற்ற மனம் எதை சொன்னாலும் ஏற்றுக்கொள்ளுங்கள்; உணர்வற்ற மனமே சரியானது என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். ஏனென்றால் யுகங்களின் ஞானத்தை தன்னில் கொண்டுள்ளது அது. கோடிக்கணக்கான பிறவிகளை நீங்கள் எடுத்திருக்கிறீர்கள். உணர்வு மனமோ இந்த பிறவியையே சேர்ந்தது. பள்ளிகளாலும் பல்கலைக்கழகங்களாலும் தற்செயலாக நீங்கள் பிறக்க நேரிட்ட ஒரு குடும்பத்தாலும் இந்த சமுதாயத்தாலும் அது பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறது;ஆனால் உணர்வற்ற மனமோ உங்களின் அனைத்து பிறப்புகளின் அனைத்து அனுபவங்களையும் தன்னுள் கொண்டுள்ளது. நீங்கள் ஒரு பாறையாக இருந்தபோது பெற்ற அனுபவம் அதனுள் இருக்கிறது. ஒரு மரமாக நீங்கள் இருந்தபோது அடைந்த அனுபவம் அதனுள் இருக்கிறது. விலங்குகளாக இருந்தபோது நீங்கள் அடைந்த அனுபவம் அதனுள் இருக்கிறது. கடந்தகாலம் முழுவதன் அனைத்து அனுபவங்களையும் அது தன்னுள் கொண்டுள்ளது. உணர்வற்ற மனம் அளவு கடந்த ஞானமுள்ளது, உணர்வு மனம் அளவுகடந்த ஞானசூனியம். அப்படித்தான் அது இருந்தாக வேண்டும். ஏனென்றால் உணர்வு மனம் இந்த பிறவியினுடையது மட்டும்தான்; மிக சிறியது; அனுபவம் இல்லாதது; மிகவும் சிறுபிள்ளைத் தனமானது. உணர்வற்ற மனமோ காலாகால ஞானம் பொதிந்தது. அதற்கு செவிகொடுங்கள்.

இன்று மேற்குலகின் உளவியல் பகுப்பாய்வு முழுவதும் இதை மட்டுமே செய்து கொண்டிருக்கிறது, வேறொன்றையும் அல்ல: அதாவது இரண்டாம் வகை கனவை கவனித்து அதற்கு ஏற்ப உங்கள் வாழ்க்கைப் பாணியை மாற்றித் தருகிறது. இவ்வித உளவியல் பகுப்பாய்வு பலருக்கும் உதவி இருக்கிறது. அதற்கும் வரம்புகள் உள்ளன. ஆனாலும் அது உதவிகரமாக உள்ளது.ஏனென்றால் இரண்டாம் வகை கனவை கவனிக்கும்

இந்த பகுதியானது, குறைந்த பட்சம் உங்கள் வாழ்வை ஆறுதல் கூடியதாக, இறுக்கம் குறைந்ததாக செய்கிறது.

அடுத்தது மூன்றாம் வகை கனவு. இந்த மூன்றாம் வகை கனவு அதி-உணர்விலிருந்து வரும் ஒரு செய்தித் தொடர்பு. இரண்டாம் வகை கனவு உணர்வற்ற மனத்திலிருந்து கிடைக்கும் தொடர்பு. மூன்றாம் வகை கனவு மிகவும் அரிதானது. ஏனெனில் உணர்வுகடந்த மனத்துடனான அனைத்து தொடர்பையும் நாம் இழந்து விட்டிருக்கிறோம். இருந்தாலும் அது வருகிறது. ஏனென்றால் அந்த உணர்வு கடந்த மனம் உங்களுடையது. அது ஒரு மேகமாக ஆகி வானத்துக்கு நகர்ந்திருக்கலாம், ஆவியாக போயிருக்கலாம், அது அதிக தொலைவுக்கு சென்றிருக்கலாம், ஆனால் அப்போதும் அது உங்களிலேயே வேர் கொண்டுள்ளது.

அதி-உணர்விலிருந்து தொடர்பு கிடைப்பது மிகவும் அபூர்வம். நீங்கள் மிகமிக கவனமுள்ளவர்களாக ஆன பிறகு மட்டுமே அதை நீங்கள் உணர தொடங்குவீர்கள். இல்லாவிட்டால் மனம் எடுத்தெறியும் குப்பை கனவுகளிலும் நிறைவேறாத - அமுக்கி வைக்கப்பட்ட விருப்பங்களை நிறைவேற்றுவது போல் மனம் கண்டுகொண்டே போகும் விருப்பம் நிறைவேற்ற கனவுகளிலும் அது கலந்து தொலைந்து போகும்; அதை நீங்கள் இழந்து போவீர்கள். ஆனால் நீங்கள் விழிப்புணர்வு உள்ளவர்களாக ஆகிற போது, அது, கற்றிலும் கிடைக்கும் மற்ற கற்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டு ஒளிவீசும் வைரம் போல் எடுப்பாக வெளிப்படுகிறது.

குறிப்பிட்ட கனவு அதி -உணர்வு மனத்திலிருந்து வருவதாக நீங்கள் உணர முடிகிறபோது - கண்டுகொள்கிறபோது, அதை கவனியுங்கள், அதன்மீது தியானியுங்கள், ஏனென்றால் அது உங்களின் வழிகாட்டியாக மாறும், உங்களின் குருவிடம் உங்களை இட்டுச் செல்லும், உங்களுக்கு பொருத்தமான வாழ்க்கை முறைக்கு உங்களை அது நடத்திச் செல்லும், சரியான ஒழுங்குமுறைக்கு உங்களை அது இட்டுச் செல்லும். அந்தக் கனவு உங்களின் ஆழத்தில் ஒரு வழித்துணையாக ஆகும். உணர்வு மனத்தைக் கொண்டு ஒரு ஆசானை கண்டுபிடிக்க உங்களால் முடியும், ஆனால் அவர் ஒரு ஆசிரியருக்கு மேல் இருக்கமாட்டார். உணர்வற்ற மனத்தைக் கொண்டு நீங்கள் ஒரு ஆசானை கண்டுபிடிக்க முடியும், ஆனால் அந்த ஆசான் ஒரு அன்புக்குரியவருக்கு மேல் இருக்க மாட்டார். - குறிப்பிட்ட ஒரு ஆளுமை உடையவரோடு நீங்கள் காதல் கொள்ள முடியும். ஆனால் அதி - உணர்வு மட்டுமே சரியான ஆசானிடம் உங்களை சேர்க்க முடியும். அப்போது அவர் ஒரு ஆசிரியராக இருப்பதில்லை, அவர் கருத்துக்களின்மேல் நீங்கள் பற்றுக்கொண்டு விடுவதில்லை. அல்லது அவர்மேல் நீங்கள் மையல்

கொண்டு விடுவதில்லை. அதற்கு மாறாக உங்கள் உணர்வு கடந்த மனமே உங்களுக்கு வழிகாட்டுகிறது; இந்த மனிதர் உங்களுக்கு பொருத்தமாக இருப்பார். நீங்கள் வளர்ச்சிபெற இந்த மனிதர் சரியான சூழலாக இருப்பார், இந்த மனிதர் உங்களுக்கான வளமான பூமியாக ஆகமுடியும் என உங்கள் உணர்வுகடந்த மனம் வழிகாட்டும்.

அடுத்தது நான்காவது வகை கனவு. இது முற்பிறவிகளிலிருந்து வருகிறது. இது அவ்வளவு அபூர்வம் என்று சொல்ல முடியாது - பல சமயங்களில் இது வருகிறது. ஆனால் உங்களுக்குள் எல்லாமே கலந்து ஒரே குழப்பமயமாக இருக்கிறது. எனவே எதையும் வேறுபிரித்தறிய உங்களால் முடிவதில்லை. வேறு பிரித்தறிவதற்கு வேண்டிய நீங்கள் அங்கு இருப்பதில்லை.

கிழக்கில் இந்த நான்காவது வகை கனவுகளின்மீது நாங்கள் மிகுந்த ஆராய்ச்சி செய்திருக்கிறோம். இந்த கனவுகளின் துணையுடன்தான் மறுபிறவி என்ற நிகழ்வை நாங்கள் தற்செயலாக கண்டுபிடித்தோம். இந்த கனவிலிருந்து உங்கள் முற்பிறவிகள்பற்றி சிறுக்சிறுக நீங்கள் அறிய வருகிறீர்கள். நீங்கள் பின்னோக்கி போகிறீர்கள், காலத்தால் பின்னோக்கி செல்கிறீர்கள். அப்போது உங்களுக்குள் பல மாறுதல்கள் ஏற்பட தொடங்குகின்றன. ஏனென்றால் உங்களின் முற்பிறப்பில் நீங்கள் யாராக இருந்தீர்கள் என்பதை ஒரு கனவின் வழியாகவாவது உங்களால் நினைவுகூற முடிந்தால் பல நடப்பு விசயங்கள் அர்த்தமற்றவை ஆகிவிடும்; பல புதிய விசயங்கள் அர்த்தமுள்ளவையாக ஆகும். உங்களின் மொத்த பாணியும் மாறும்; உங்களின் மொத்த பார்வையும் மாறும்.

எப்படி என்றால், ஒரு முற்பிறவியில் நீங்கள் அளவுக்கு அதிகமான செல்வத்தை குவித்தீர்கள்; வெளியில் நாட்டிலேயே மிகப்பெரும் செல்வராகவும் ஆனால் உள்ளுக்குள் மிகப்பெரும் பிச்சைக்காரனாகவும் செத்தீர்கள். இப்போது மறுபடி இந்த பிறவியிலும் நீங்கள் அதையேதான் செய்துகொண்டிருக்கிறீர்கள்.... திடீரென பார்வை முழுமையாக மாறுகிறது. நீங்கள் என்னவெல்லாம் செய்தீர்கள், அதெல்லாமே எப்படி ஒன்றுமில்லாமல் போயிற்று என்பதை நீங்கள் நினைவுகூற முடிந்தால், பல பிறவிகளையும் உங்களால் நினைவுக்கு கொண்டுவர முடிந்தால்- நினைத்துப்பார்க்க முடிந்தால், ஒரு பிறவியில் செய்ததையே பலபிறவி களிலும் நீங்கள் திரும்பத்திரும்ப செய்துகொண்டு வந்திருப்பதை உணர்வீர்கள். ஒரு தடைபட்ட இசைத்தட்டுபோல, ஒரு நச்சு வட்டம்போல நீங்கள் இருக்கிறீர்கள். திரும்பவும் அதையே தொடங்கி அதிலேயே முடிகிறீர்கள். உங்களின் ஒருசில பிறவிகளை உங்களால் நினைவுகூற

முடிந்தால், இதுவரை புத்தம் புதிதான ஒரே ஒரு செயலை கூட நீங்கள் செய்ததில்லை என்பதை கண்டு திடீர் அதிர்ச்சி அடைவீர்கள். திரும்ப திரும்ப சொத்து சேர்த்தீர்கள். அரசியலில் ஆதிக்க சக்தியாக ஆவதற்கு மீண்டும் மீண்டும் முயற்சி செய்தீர்கள். மிகப் பெரிய அறிவாளி ஆவதற்கு திரும்ப திரும்ப பாடுபட்டீர்கள், திரும்பத் திரும்ப காதலில் அகப்பட்டீர்கள் - திரும்பத்திரும்ப அது உங்களுக்கு ஒரே மாதிரியாக துயரத்தையே கொண்டு வந்தது. இந்த மாறாத சூழ்நிலைமையை கண்டபிறகும் எப்படி நீங்கள் மாறாமல் அப்படியே நீடிக்க முடியும்? அப்போது இந்த வாழ்க்கை முறை உடனடியாக அடிப்படை மாறுதல் அடைகிறது. இனியும் அதே தேய்ந்து போன பாதையில் உங்களால் தொடர்ந்துசெல்ல முடியாது.

எனவேதான் கீழை மக்கள் காலம்காலமாக ஒரு கேள்வியை திரும்பத்திரும்ப கேட்டு வந்திருக்கிறார்கள்: ''பிறப்பு - இறப்பு ஆகிய இந்த சக்கரத்திலிருந்து - இந்த சுழலில் இருந்து - விடுபடுவது எப்படி?'' நச்சு சுழலாகவே அது தோன்றுகிறது; ஒரே கதையே திரும்பத் திரும்ப நடைபெற்று வருவதாக தோன்றுகிறது. இதை நீங்கள் தெரிந்து கொள்ளாத வரை ஒவ்வொரு முறையும் நீங்கள் புதிய புதிய காரியங்களையே செய்து வருவதாக நினைக்கிறீர்கள்; அதனால் மிகுந்த மனக்கிளர்ச்சியும் அடைகிறீர்கள். ஆனால் ஒரே மாதிரியான இவ்வித செயல்களைத்தான் நீங்கள் திரும்பத் திரும்ப செய்துகொண்டு வந்திருப்பதை என்னால் பார்க்க முடிகிறது.

வாழ்வில் எதுவும் புதியது அல்ல. அது ஒரு வட்டமான பாதை; எப்போதும் போன தடத்திலேயே போய்க்கொண்டிருக்கிறது. கடந்த காலத்தை தொடர்ச்சியாக நீங்கள் மறந்துகொண்டே போவதால்தான் உங்களுக்கு மிகுந்த மனக்கிளர்ச்சி தோன்றுகிறது. ஒரு தடவை நீங்கள் நினைவுகூர்ந்துவிட்டால் மொத்த மனக்கிளர்ச்சியும் வழிந்துவிடுகிறது. அந்த நினைவுகூர்தலில் சந்நியாசம் சம்பவிக்கிறது.

சம்சார சுழற்சியின் தேய்ந்துபோன தடத்திலிருந்து வெளியேறு வதற்கான ஒரு முயற்சிதான் சந்நியாசம். சுழலிலிருந்து குதித்து வெளியேறுவதற்கான ஒரு முயற்சி அது. அதில், உங்களிடம் நீங்களே பின்வருமாறு சொல்லிக்கொள்கிறீர்கள் - ''போதுமடா சாமி! இந்த அறப்பழசான அறிவுகெட்ட தனத்தில் இனியும் நான் ஈடுபட்டு உழலப் போவதில்லை. அதிலிருந்து வெளியேறபோகிறேன்.''

சுழலிலிருந்து முற்றிலுமாக விடுபட்டுக் கொள்வதே சந்நியாசம். சமுதாயத்தில் இருந்தல்ல, பிறப்பு - இறப்பு ஆகிய உங்களின் சொந்த அகச் சுழற்சியிலிருந்து விடுபடுதல் - இதுதான் நான்காம் வகை கனவு.

அடுத்தது ஐந்தாம் வகை கனவு. இதுதான் கடைசிவகை. நான்காம் வகை கனவு உங்களின் கடந்த காலத்துக்குள் பின்னோக்கி போகிறது. ஐந்தாம் வகை கனவு உங்கள் எதிர்காலத்துக்குள் முன்னோக்கி போகிறது. இதுவோ அரிது, மிகவும் அரிது. எப்போதாவது ஒரு தடவைதான் இது நிகழ்கிறது. நீங்கள் மிகமிக இணக்கமானவராகவும் திறந்தவராகவும் நெகிழ்ச்சியானவராகவும் இருக்கும்போது கடந்த காலம் உங்களில் நிழலிடுகிறது, வருங்காலமும் உங்களில் நிழலிடுகிறது, பிரதிபலிக்கிறது. உங்கள் கனவுகளைப் பற்றி விழிப்புணர்வுள்ளவராக உங்களால் ஆக முடியுமானால் ஒரு நாள் நீங்கள் இந்த சாத்தியத்தைப் பற்றி விழிப்புணர்வுடையவராகவும் ஆவீர்கள்: அதாவது வருங்காலம் உங்களுக்குள் ஊடுருவுகிறது. திடீரென ஒரு கதவு திறக்கிறது- அவ்வளவுதான், வருங்காலம் உங்களுக்குள் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டுவிட்டது.

இவைதாம் ஐந்து வகையான கனவுகள். இரண்டாம் வகை கனவை மட்டுமே நவீன உளவியல் புரிந்துகொள்கிறது. முதல் வகை கனவை மட்டுமே ருசிய உளவியல் புரிந்து கொள்கிறது. மற்ற மூன்று வகைகள் ஏறக்குறைய அறியப்படாமலே இருக்கின்றன. ஆனால் யோகம் இவை அனைத்தையும் புரிந்துகொண்டிருக்கிறது.

தியானம் செய்வதன்மூலம், கனவுகளில் வரும் உங்களின் உள் இருத்தலைப் பற்றிய விழிப்புணர்வுள்ளவராக உங்களால் ஆகமுடியுமானால், இன்னும் அதிகமான காரியங்கள் நிகழும். முதலாவது; உங்கள் கனவுகளைப் பற்றி அதிகமதிக விழிப்புணர்வுள்ளவராக நீங்கள் ஆக ஆக, நீங்கள் விழித்திருக்கும் நேரத்தின் யதார்த்தம் பற்றி உங்களின் உறுதிப்பாடு அந்த அளவுக்கு படிப்படியாக குறைந்துகொண்டே வரும். எனவேதான் உலகம் ஒரு கனவு போன்றது என்கிறார்கள் இந்துக்கள். தற்போதோ இதற்கு நேர் எதிரானதே உண்மையாக இருக்கிறது. ஏனென்றால் இப்போது நீங்கள் விழித்திருக்கும் நேரத்தில் இருக்கும் உலகத்தின் எதார்த்தம் பற்றியே நீங்கள் அதிக உறுதிப்பாடு உடையவர்களாக இருக்கிறீர்கள் நீங்கள் கனவு காணும்போது அந்த கனவுகளும் மெய்யானவை என்றே அந்த நேரத்தில் நீங்கள் நினைக்கிறீர்கள். கனவு மெய்யானது அல்ல என்பதை, அந்த கனவை கண்டு கொண்டிருக்கும்போது எவரும் உணர்வதில்லை. கனவு காணும் போது அது சரியானதாகவே தோன்றுகிறது. முற்றிலும் நிசமானதாகவே தோன்றுகிறது. விழித்தபின், அது வெறும் கனவுதான் என்று நீங்கள் கூறலாம்தான். ஆனால் அது அல்ல விசயம். ஏனென்றால் இப்போது வேறொரு மனம் - உணர்வுமனம் - இயங்கிக்கொண்டிருக்கிறது. கனவு நிசமில்லை என்பதற்கு இந்த மனம் ஒரு நேரடி சாட்சியாக இருக்கவே

இல்லை. ஒரு வதந்தியாக மட்டுமே அதை இந்த மனம் கேள்விப் பட்டிருக்கிறது. காலையானவுடன் இந்த உணர்வு மனம் விழித்துக்கொண்டு, நடந்ததெல்லாம் வெறும் கனவு என்கிறது. அதற்கு இந்த மனம் ஒரு சாட்சியாக இருக்கவில்லை. பின் எப்படி இந்த மனம் எதையுமே சொல்லமுடியும்? அது ஒட்டுக் கேட்டிருக்கிறது, அவ்வளவுதான். இது எப்படிப்பட்டது என்றால், நீங்கள் தூங்கிக்கொண்டிருக்கிறீர்கள், இரண்டுபேர் பேசிக்கொண்டிருக்கிறார்கள், அவர்கள் ரொம்ப சத்தம்போட்டு பேசிக்கொண்டிருப்பதால் உங்கள் தூக்கத்தையும் மீறி உங்கள் காதில் அங்கொன்றும் இங்கொன்றுமாக சில வார்த்தைகள் வந்து விழுகின்றன; அதிலிருந்து ஒரு ஒப்பேற்றலான கருத்துப்பதிவு உங்கள் மனதில் ஏற்பட்டுவிடுகிறது - அவ்வளவுதான்.

இதுதான் நடக்கிறது: உணர்வற்ற மனம் கனவுகளை உருவாக்குகிறது; உள்ளே மிகுந்த செயல்பாடு நடந்துகொண்டிருக்கிறது, அப்போது தூங்கிக்கொண்டிருக்கும் உணர்வு மனம் அந்த சத்தத்தை மட்டும் கேட்டுவிட்டு காலையில் விழித்து ''எல்லாம் கற்பனை, வெறும் கனவு'' என்கிறது. ஆனால் கனவு கண்டு கொண்டிருக்கும்போதோ அது முற்றிலும் நிசம் என்றே நீங்கள் உணர்கிறீர்கள். அபத்தமான விசயங்கள்கூட நிசமானதாக தோன்றுகின்றன. அதர்க்கமான செய்திகள்கூட நிசமானதாக தோன்றுகின்றன. ஏனென்றால் உணர்வற்ற மனத்துக்கு தர்க்கம் தெரியாது. கனவில் ஒரு தெருவில் நீங்கள் நடந்துகொண்டிருக்கிறீர்கள், ஒரு குதிரை வருவதை பார்க்கிறீர்கள். திடீரென குதிரை குதிரையாக இல்லை, உங்கள் மனைவியாக மாறிவிடுகிறது. அப்போது உங்கள் மனதில், இது எப்படி நடக்க முடியும், அதெப்படி திடீரென குதிரை என் மனைவியாக மாறமுடியும் என்று கேள்வி எதுவும் தோன்றுவதில்லை. எந்த பிரச்சனையும் வருவதில்லை, எந்த சந்தேகமும் எழுவதில்லை. உணர்வற்ற மனத்துக்கு சந்தேகப்பட தெரியாது. இப்படிப்பட்ட நடக்க முடியாத - நம்பமுடியாத நிகழ்வைக் கூட அது நம்புகிறது. அதன் யதார்த்தத்தை நீங்களும் ஒத்துக் கொள்கிறீர்கள் - கனவில்.

கனவுகளைப்பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு ஏற்படும்போது இதற்கு நேர் எதிரானது நிகழ்கிறது - அவை உண்மையில் கனவுகளே, எதுவுமே நிசமில்லை, மனத்தின் விளையாட்டு மட்டுமே அது, உளவியல் நாடகமே அது என நீங்கள் உணர்கிறீர்கள். நீங்களே மேடை, நீங்களே பாத்திரங்கள், நீங்களே கதை வசன கர்த்தா, நீங்களே இயக்குநர், நீங்களே தயாரிப்பாளர், நீங்களேதான் பார்வையாளர். வேறுயாரும் இதில் பங்குபெறுவதில்லை. முற்றிலும் மனத்தின் படைப்பே இது. இதை உணர்ந்தவர்களாக நீங்கள் ஆகும்போது, நீங்கள் விழித்திருக்கும்போது

காட்சியளிக்கும் இந்த முழு உலகமும் கூட அதன் தன்மையில் மாற்றமடையும். அப்போது இங்கும் அதே நிலைமையைத்தான் நீங்கள் பார்ப்பீர்கள். மேடை பெரியது, ஆனால் கனவு அதே கனவு.

இந்த உலகை மாயை - போலித் தோற்றம் - கனவு போன்றது - மனத்தின் கற்பனை என்று இந்துக்கள் அழைக்கிறார்கள். அவர்கள் கூறுவதன் பொருள் என்ன? இவ்வுலகு நிசமானதல்ல என்பதுதான் அவர்கள் கூறுவதன் பொருளா? இல்லை, இது நிசமற்றது அல்ல. ஆனால் அதனுடன் உங்கள் மனம் சேரும்போது நீங்கள் உங்களுக்கே உரிய பொய்யுலகை - ஒரு யதார்த்தம் அற்ற உலகை - உருவாக்குகிறீர்கள். நாம் எல்லாரும் வாழ்வது ஒரே உலகத்தில் அல்ல. ஒவ்வொருவரும் தாமே புனைந்துகொண்ட தம் சொந்த உலகிலேயே வாழ்கிறார். (உலகத்தில்) எத்தனை மனங்கள் உள்ளனவோ அத்தனை உலகங்கள் உள்ளன. இந்த உலகங்கள் மாயை என இந்துக்கள் கூறும் போது, யதார்த்தமும் மனமும் கூடியதையே அவர்கள் மாயை என்கிறார்கள். யதார்த்தத்தை - மெய்மையை - நாம் அறிவதில்லை. யதார்த்தமும் மனமும் கூடிய கற்பனைத் தோற்றமே மாயை. ஒருவர் முழுமையான விழிப்புணர்வை பெற்றவராக - ஒரு புத்தராக - ஆகும்போது மனம் கழிந்த யதார்த்தத்தை அவர் அறிந்து கொள்கிறார். அதுவே மெய்மை - பிரமன் - அறுதி உண்மை. மனம் கலந்தால் எல்லாமே கனவாக ஆகிறது. ஏனெனில் மனமே கனவுகளை தயாரிப்பதற்காக சேர்க்கும் சரக்கு. மனம் கழிந்தால் கனவு என்ற ஒன்றே இருக்க முடியாது, எதுவுமே ஒரு கனவாக இருக்க முடியாது - யதார்த்தம் மட்டுமே தன் பளிங்குத் தூய்மையுடன் இருக்கிறது. மனம் ஒரு கண்ணாடி போன்றதே. அந்த கண்ணாடியில் உலகம் பிரதிபலிக்கிறது. அந்த பிரதிபலிப்பு நிசமானதாக இருக்க முடியாது. ஏனெனில் பிரதிபலிப்பு, பிரதிபலிப்பு கண்ணாடியை அகற்றிவிட்டால் பிரதிபலிப்பு மறைகிறது. இப்போது நிசத்தில் இருப்பதை நீங்கள் பார்க்க முடிகிறது.

ஒரு முழுநிலா இரவில் சலனமற்ற ஒரு ஏரி நீரில் நிலவு பிரதிபலிக்கிறது. அந்த நிலவைப் பிடிக்க நீங்கள் முயல்கிறீர்கள். இதையேதான் பல பிறவிகளாக ஒவ்வொருவரும் செய்துகொண்டிருக் கிறார்கள். ஏரியாகிய கண்ணாடியில் தெரியும் நிலவைப் பிடிக்க முயன்றுகொண்டிருக்கிறார்கள். இதுவரை நீங்கள் வெற்றி பெறவில்லை- இனியும் நீங்கள் வெற்றிபெற முடியாது. ஏனென்றால் அது இயலாத காரியம். ஏரியை முற்றிலும் மறந்துவிட்டு நேர் எதிர்த்திசையில் பார்க்க வேண்டியிருக்கிறது. அங்கே இருக்கிறது நிலா.

மனமாகிய ஏரியில் உலகம் மாயத் தோற்றமாக பிரதிபலிக்கிறது. கண்களை மூடிக்கொண்டு நீங்கள் கனவு கண்டாலும் சரி அல்லது திறந்த

கண்களுடன் கனவு கண்டாலும் சரி, அதனால் எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை - மனம் அங்கு இருந்தால் நிகழ்வதெல்லாம் கனவே. கனவுகளின் மீது நீங்கள் தியானிக்கும் போது உங்களுக்கு கிடைக்கும் முதல் புரிதல் இதுவே.

இரண்டாவது புரிதல், நீங்கள் ஒரு சாட்சி மட்டுமே என்பது. கனவு ஒருபுறம் நிகழ்கிறது, ஆனால் நீங்கள் அதன் பகுதியாக இருப்பதில்லை. உங்கள் மனதின் பகுதியாக நீங்கள் இருப்பதில்லை; அதை கடந்து நிற்கும் ஒன்றே நீங்கள். மனத்தில் நீங்கள் இருந்தாலும் நீங்கள் மனம் இல்லை. மனத்தினூடாக நீங்கள் பார்த்தாலும் நீங்கள் மனம் இல்லை. நீங்கள் மனத்தை பயன்படுத்துகிறீர்கள். ஆனால் அந்த மனம் அல்ல நீங்கள். இப்போது திடீரென நீங்கள் ஒரு சாட்சியாக இருக்கிறீர்கள். இனியும் நீங்கள் ஒரு மனமாக இருப்பதில்லை. இந்த சாட்சியாயிருக்கும் நிலையே இறுதியானது, அறுதியான ஞானநிலை. அதன்பின் நீங்கள் தூங்கிக்கொண்டு கனவு கண்டாலும் விழித்துக் கொண்டே கனவு கண்டாலும் ஒரே மாதிரியாக ஒரு சாட்சியாகவே நீங்கள் இருக்கிறீர்கள். இந்த உலகிலேயே நீங்கள் தொடர்ந்தும் இருக்கிறீர்கள், ஆனால் இனிமேல் உலகம் உங்களுக்குள் நுழைய முடியாது. பொருள்கள் / விசயங்கள் வெளியே உள்ளன, ஆனால் அவற்றில் மனம் இல்லை, அவையும் மனத்தில் இல்லை. சாட்சி வந்ததுமே திடீரென காட்சி எல்லாமே மாறுகிறது.

இதன் உத்தியை ஒருமுறை நீங்கள் அறிந்துவிட்டாலே பின் அது மிகமிக எளிதாகிவிடுகிறது. அதுவரை இது மிகமிக கடினமானதாக தோன்றுகிறது; ஏறக்குறைய கைகூடாத ஒன்றாகவே தோன்றுகிறது. அப்படியானால் கனவு காணும்போது விழித்திருப்பது எப்படி? அசாத்தியமானதாக தோன்றுகிறது, ஆனால் அப்படி இல்லை. ஒவ்வொரு இரவிலும் நீங்கள் தூங்கச் சென்று, தூக்கம் வரும்போது விழிப்புடன் இருக்க முயன்றபடி அதை கவனித்துக் கொண்டிருப்பீர்களேயானால், அதற்கு 3 முதல் 9 மாதங்கள் வரை பிடிக்கும். ஆனால் ஒன்று, விழிப்பாக இருக்க முயற்சிப்பதென்பது செயலூக்கமான பொருளில் அல்ல; அப்படி முயன்றால் உங்களால் தூங்கவே முடியாது. செயலூக்கமற்ற விழிப்புத் தன்மை: இறுக்கமில்லாத, இயல்பான, இளைப்பாறுதலான விழிப்பு. பார்த்தும் பாராதது போன்ற, அதிக தீவிரம் காட்டாத, அதிகம் அலட்டிக் கொள்ளாத, செயல் முனைப்பற்ற விழிப்புத்தன்மை - ஆறு ஓடும்போது கரையில் இருந்துகொண்டு அதை நீங்கள் வெறுமனே கவனித்துக் கொண்டிருப்பதுபோல்.

இதற்கு 3 முதல் 9 மாதங்கள் எடுக்கிறது. பின் ஒரு நாள் திடீரென்று உறக்கம் ஒரு கரிய திரைபோல உங்கள் மேல் கவிந்து கொண்டிருக்கிறது -

சூரியன் மறைந்ததும் இருள் கவிவதுபோல். அது உங்களை சுற்றிலும் எல்லாப் புறமிருந்தும் இறங்குகிறது. ஆனால் உள்ளே ஆழத்தில் ஒரு சுடர் தொடர்ந்தும் எரிந்துகொண்டே இருக்கிறது. நீங்கள் கவனித்தபடி; இருக்கிறீர்கள் - அமைதியாக, சலனமின்றி. அடுத்து, கனவு உலகம் விரிகிறது. பின் பல காட்சிகள் நிகழ்கின்றன. பல மன நாடகங்கள் நடக்கின்றன. நீங்கள் கவனித்துக் கொண்டே போகிறீர்கள். பையப்பைய வேறுபடுத்தி அறிவது கைகூடுகிறது - இப்போது என்ன வகையான கனவு என்பதை உங்களால் காண முடிகிறது. பின் திடீரென ஒருநாள், பகலில் கண்விழித்திருக்கும் நேரத்திலும் இதுவேதான் நடக்கிறது என்பதை நீங்கள் உணர்கிறீர்கள். இரண்டுக்கும் தன்மையில் எந்த வேறுபாடும் இல்லை. உலகம் முழுவதுமே ஒரு மாயத் தோற்றமாக ஆகிவிட்டது. ஆக உலகம் மாயை என்னும்போது, காண்பவர் / சாட்சி மட்டுமே நிசம்.

மேலும், உறக்கத்தின்போது கிடைக்கிற அறிவின்மீதும் தியானம் செய்யுங்கள் என்று கூறும்போது பதஞ்சலி குறிக்கும் பொருள் இதுதான். அந்த தியானம் உங்களை ஒரு ஞானமடைந்த மனிதராக ஆக்கும்.

**மேலும் உங்களைக் கவரும் எதன்மீதும் தியானம் செய்யுங்கள்.**

உங்கள் காதலியின் முகத்தை தியானம் செய்யுங்கள். மலர்கள் உங்களை கவர்ந்தால் ஒரு ரோஜாவின்மீது தியானம் செய்யுங்கள். நிலவின்மீது அல்லது உங்களைக் கவரும் எதன்மீதும் தியானம் செய்யுங்கள். உணவு உங்களுக்கு பிடித்தமானது என்றால் உணவின்மீது தியானம் செய்யுங்கள். "உங்களை கவரும் எதன்மீதும்" என்று பதஞ்சலி ஏன் கூறுகிறார்? ஏனென்றால் தியானம் என்பது வலிந்து மேற்கொண்ட ஒரு முயற்சியாக இருக்கக்கூடாது. வலுக்கட்டாயமான முறையில் அது செய்யப்பட்டால் எடுத்த எடுப்பிலேயே அதன் தோல்வி உறுதியாகி விடுகிறது. வெளியிலிருந்து திணிக்கப்படும் ஒன்று ஒருபோதும் உங்களின் சொந்த இயல்பாக ஆக முடியாது. எனவே தொடக்கத்திலேயே எது உங்களை கவருகிறது என்பதை கண்டுபிடியுங்கள். தேவையற்ற முரண்பாட்டை உண்டாக்கிக் கொள்ள தேவையில்லை. இதை நன்றாக புரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் மனதுக்கு பிடித்தமான பொருள்களை அதனிடம் நீங்கள் அளித்துவிட்டால் அவற்றின்மீது தன்னைப்போல தியானம் கைகூடி விடக்கூடிய ஒரு தன்மை மனதுக்கு இயல்பிலேயே இருக்கிறது.

ஒரு சிறு பள்ளியில் ஒரு குழந்தை கவனித்துக் கொண்டிருந்தது. மரங்களில் பறவைகள் அளவளாவிக் கொண்டிருக்கின்றன. அதை குழந்தை

கவனித்துக் கொண்டிருக்கிறது. அதில் உள்ளம் தோய்ந்து தன்னை மறந்த லயத்தில் இருக்கிறது. ஆசிரியரை அது மறந்துவிட்டது. வகுப்பை அது மறந்துவிட்டது. அங்கேயே அது இல்லை. ஒரே கவனமாய் இருக்கிறது. தியானம் அங்கே நிகழ்ந்திருக்கிறது. அப்போது ஆசிரியர் கூறுகிறார், ''என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ? தூங்கிக் கொண்டிருக்கிறாயா? ஒழுங்காக வகுப்பை கவனி!'' இப்போது குழந்தை முயற்சி எடுக்க வேண்டியிருக்கிறது. சிரமப்படுகிறது. அந்த பறவைகள் அதனிடம் அப்படி எதுவும் சொல்லவில்லை. ''இதோ பார், இங்கே நாங்கள் பாடிக்கொண்டிருக்கிறோம், கூர்ந்து கவனி!'' என்று கூறவில்லை. தானேஅது நிகழ்ந்தது. ஏனென்றால் குழந்தைக்கு அதன்மேல் ஆழ்ந்த ஈர்ப்பு - ஈடுபாடு இருந்தது. கரும்பலகையோ அசிங்கமாக தெரிகிறது, அந்த ஆசிரியர் கொடுமைக்காரராக தெரிகிறார். மொத்த செயல்பாடும் வெளியிலிருந்து திணிக்கப்படுகிறது. குழந்தை முயற்சி செய்யும். ஆனால் முயற்சியால் எவருக்கும் தியானம் கைகூடாது. திரும்பத் திரும்ப மனம் நழுவிவிடும். வகுப்புக்கு வெளியில் எத்தனையோ விசயங்கள் நடந்து கொண்டிருக்கின்றன: அதோ ஒரு நாய் குரைக்கத் தொடங்குகிறது. அல்லது ஒரு பிச்சைக்காரர் பாடிக்கொண்டு போகிறார், அல்லது ஒரு ஆள் சித்தார் வாசித்துக் கொண்டிருக்கிறான். வெளியே கோடிக்கணக்கான காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அது திரும்பத் திரும்ப அந்த கரும்பலகையிடம் - அந்த அசிங்கமான வகுப்பறையிடம் தன் கவனத்தை திருப்பிக் கொண்டுவர வேண்டி இருக்கிறது.

சிறைக்கூடங்களை போலவேதான் பள்ளிக்கூடங்களையும் நாம் கட்டி உள்ளோம். இந்தியாவில் சிறைக்கூடங்களும் பள்ளிக்கூடங்களும் ஒரே நிறத்தில்தான் - சிவப்பு நிறத்தில் - அமைக்கப்பட்டுள்ளன. வகுப்பறைகள் அசிங்கம் பிடித்தவையாகவே உள்ளன. கருத்தை கவரும் விதத்தில் அங்கு எதுவும் இருப்பதில்லை. பொம்மைகள் இல்லை, பாட்டு இல்லை, மரங்கள் இல்லை, பறவைகள் இல்லை, ஒன்றும் இல்லை. உங்கள் கவனத்தை வலுக்கட்டாயமாக திருப்புவதற்கே வகுப்பறை உள்ளது. கவனத்தை குவிப்பது எப்படி என்பதையே அங்கு நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டி இருக்கிறது.

ஆயின் ஒருமுகப்படுத்தலுக்கும் தியானத்துக்கும் இடையில் எந்த ஒற்றுமையும் இல்லை. அவற்றுக்கிடையிலான வேறுபாடு: ஒருமுகப் படுத்தல் என்பது வெளியில் இருந்து திணிக்கப்படும் விசயம். மன ஒருமை / தியானம் என்பதோ இயல்பான - தானே நிகழ்கிற - தன்னிலிருந்தே எழுகிற விசயம் ஆகும்.

பதஞ்சலி கூறுகிறார்,

> **மேலும், உங்களை கவரும் எதன்மீதும் தியானம் செய்யுங்கள்.**

உடனே உங்களின் ஜீவன் முழுவதும் தன்னிச்சையாக பாய்ந்தோட தொடங்குகிறது. உங்கள் காதலியின் முகத்தை பாருங்கள்; அவள் கண்களின் மேல் தியானியுங்கள்.

சாதாரண மத போதகர்கள், ''என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? இதுதான் தியானமா?'' என்பார்கள். நீங்கள் தியானம் செய்யும்போது உங்கள் காதலியை நினைப்பது தகாது என்று அவர்கள் போதிப்பார்கள். கவனத்தை சிதறடிப்பதாகும் அது என்று அவர்கள் நினைக்கிறார்கள். புரிந்துகொள்ள வேண்டிய ஒரு நுட்பமான விசயம் இது. அதாவது கவனத்தை சிதறடிக்கக் கூடியது என இயற்கையில் எதுவும் இல்லை. இயற்கை அல்லாத முயற்சிகளை நீங்கள் மேற்கொண்டால் பின் அவையே கவனத்தை சிதறடிப்பவையாக ஆகின்றன. நீங்களே உருவாக்குபவைதாம் அவை. உங்கள் மனைவியின்/கணவரின்/குழந்தையின் முகத்தை கவனித்துக் கொண்டிருக்க உங்கள் உயிரும் விரும்பும்போது மதபோதகரோ ''இவை மாயக் கவர்ச்சிகள், கவனத்தை சிதறடிப்பவை, நீ கோயிலுக்கு போ, சிலுவையின் மீது தியானம் செய்'' என்கிறார். நீங்களும் சிலுவையின்மீது தியானிக்கிறீர்கள். ஆனால் திரும்பத்திரும்ப உங்கள் காதலியின் முகமே நினைவுக்கு வருகிறது. இப்போது உங்கள் காதலியின் முகம் ஒரு கவனச் சிதறல் ஆகிறது. உண்மையிலோ உங்கள் கவனத்தை அது சிதறடிக்கவில்லை. சிலுவையின்மீது தியானம் செய்வதில் சிறப்புக்குரியது ஒன்றுமில்லை. நீங்கள் சரியான மடையர் என்பதைத்தான் அது காட்டுகிறது. கோயிலுக்குப் போய் சிலுவையை குறித்து தியானிப்பதற்கு என்ன இருக்கிறது? உங்களை அது கவருமானால் பின் அது சரிதான். ஆனால் அதன் மீதுதான் தியானிக்க வேண்டும் என்று என்ன கட்டாயம் இருக்கிறது? அந்த அளவுக்கு ஒரு சிலுவையில் எந்த சிறப்புத்தன்மையும் கிடையாது.

உண்மையைச் சொன்னால் எங்கெல்லாம் தியானம் நிகழுகிறதோ அங்கெல்லாம்தான் சிறப்புத்தன்மை இருக்கிறது. அந்த சிறப்புத் தன்மையை கொண்டு வருவது தியானம்தான்; அது அந்த பொருள்களில் இல்லை, உங்களில்தான் இருக்கிறது. ஒன்றை குறித்து நீங்கள் தியானிக்கும்போது உங்கள் உள்ளுயிரை அதற்கு கொடுக்கிறீர்கள் நீங்கள். உடனே அது புனிதமானதாக - தெய்வீகமானதாக ஆகிறது. தெய்வீகம் பொருள்களில் இல்லை. தியானமே அவற்றை தெய்வீகமானதாக ஆக்குகிறது. ஒரு கல்லின்மீது நீங்கள் தியானிக்க முடியும் - உடனே அந்த கல் கடவுளாக

ஆகிறது. நீங்கள் தியானம் செய்கிற அந்த கல்லை விட எந்த புத்தரும் அழகானவர் அல்ல என தோன்றுகிறது. தியானம் என்பது என்ன? அந்த கல்லை உங்கள் விழிப்புணர்வால் நீராட்டுவதுதான். அது அந்த கல்லை சூழ்ந்து கொள்கிறது, அதன் உள்ளிறங்குகிறது. ஒரு ஆழமான பந்தம் ஏற்படுகிறது. எந்த அளவுக்கு என்றால் உங்களுக்கும் அந்த கல்லுக்கும் இடையில் ஒரு பாசம் உண்டாகிவிடுகிறது. இடைவெளி மறைகிறது. நீங்கள் இணைக்கப்படுகிறீர்கள். உண்மையைச் சொல்வதானால், காண்பவர் யார், காணப்படுபவர் யார் என்பதே இப்போது உங்களுக்கு தெரிவதில்லை. காண்பவரே காணப்படுபவருமாகிறார், காணப்படுபவரே காண்பவரு மாகிறார். கல் யார், தியானி யார் என்பதை இப்போது நீங்கள் பிரித்து அறிவதில்லை. ஆற்றல்கள் திடீரென சந்தித்துக் கூடுகின்றன. அந்த இடம்தான் கோயில். தேவை இல்லாத மனச்சிதறல்களை உருவாக்காதீர்கள், பிறகு அதனால் நீங்கள்தான் சீரழிவீர்கள்.

இங்கே ஒருவர் இருந்தார். அவர் பல ஆண்டுகளாக ஒரு குறிப்பிட்ட மந்திரத்தை ஓதிவந்தார். திரும்பத்திரும்ப கவனம் சிதறிவிடுகிறது என்றார் அவர். ''கவனத்தை சிதறடிப்பது எது?'' என நான் கேட்டேன். அவரது மனைவி இறந்துவிட்டாள். அவளை அவர் மிகவும் நேசித்தார். எனக்கும் அந்த பெண்ணை தெரியும். உண்மையாகவே அழகான ஒரு பெண் அவள். அவர் மறுமணம் செய்து கொள்ளவில்லை. உண்மையாகவே அவளை அவர் நேசித்தார். வேறு எந்த ஒரு பெண்ணும் ஒருபோதும் அவரை கவரவில்லை. இப்போது அவள் இறந்துவிட்டாள் - அந்த வெற்றிடம் இருந்தது. அந்த தனிமையை அவர் உணர்கிறார். அந்த தனிமையை மறக்க ஏதோ ஒரு சாமியாரை போய் பார்த்து, ''என் மனைவியைப் பற்றிய நினைவிலிருந்து விடுபடுவது எப்படி?'' என்று கேட்கிறார். அவரும் ஏதோ ஒரு மந்திரத்தை தந்தார். இப்போது கிட்டதட்ட 3 ஆண்டுகளாக அவர் அந்த மந்திரத்தை செபித்து வருகிறார். ஆனால் அவர் அந்த மந்திரத்தை யந்திரம் போல் செபித்துக் கொண்டிருக்கும் போதே திடீர் திடீரென மனைவி திரும்பி வருகிறாள்; அந்த முகம் காட்சியளிக்கிறது. மனைவியை அவரால் மறக்க முடியவில்லை. மந்திரத்துக்கு சக்தி போதவில்லை என்பது தெரிந்து விட்டது. எனவேதான் அவர் இங்கே வந்தார். மிகவும் பரிதாபமான நிலையில் இருந்தார். அவர் சொன்னார். ''மூன்று ஆண்டுகள் தாண்டிவிட்டன, இப்பவும் அவளது நினைவு என்னை ஓயாமல் பிடித்து வாட்டுகிறது. அதிலிருந்து விடுபடவே என்னால் முடியாது போல் தோன்றுகிறது. இந்த மந்திரம்கூட உதவவில்லை. ஆனால் மூன்று ஆண்டுகளாக விசுவாசத்தோடும் நம்பிக்கையோடும் அதை நான் செபித்து வந்திருக்கிறேன்.'' நான் சொன்னேன், ''நீ ஒரு முட்டாள். இந்த மந்திரத்தை செபிக்க தேவையில்லை. உன் மனைவியின் பெயரை செபி. அதையே ஒரு

மந்திரமாக்கிக் கொள். அவளது புகைப்படத்தை உன் அருகில் வைத்துக்கொள். அந்த படத்தையே பார். அதையே ஒரு இறைஉரு ஆகக் கொள்.'' அவர் சொன்னார், ''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? என் தியானத்தை குலைப்பவளே அவள்தான்.'' அதற்கு நான் சொன்னேன், ''அவளையே உன் தியானப் பொருளாக ஆக்கு; ஏன் மோதலை உருவாக்குகிறாய்?''

தியானத்தை குலைக்கும் பொருளையே தியானத்துக்குரிய பொருளாக ஆக்கிவிட முடியும். உள்ளூர ஆழத்தில் அதன்மீது ஏதோ கவர்ச்சி - ஏதோ ஒத்திசைவு இருப்பதால்தான் அது கவர்ந்திழுக்கிறது. எனவேதான் மந்திரம் வேலை செய்யாமல், பலிக்காமல் போய்விட்டது. ஏனென்றால் மந்திரம் வெறுமனே வெளியிலிருந்து திணிக்கப்படுகிறது. யாரோ ஒருவர் ஒரு வார்த்தையை கூறுகிறார், நீங்கள் அதை உரு போடுகிறீர்கள். அந்த வார்த்தையின்மேல் உங்களுக்கு எந்த பிடிப்பும் இல்லை. இதற்குமுன் உங்களுக்குள் அது ஒருபோதும் இருந்ததில்லை. உங்களுக்குள் அதன் வேர்கள் இல்லை. மனைவியோ மிகவும் ஆழமாக போயிருக்கிறாள். எந்த ஒரு மந்திரத்தைவிடவும் காதல் ஆழமானது. எனவே உன் நேரத்தை ஏன் வீணாக்குகிறாய்? ''முயன்று பார்க்கிறேன்'' என்றார் அவர். அதன்பின் ஒரு சில நாட்கள் கழித்து அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதினார்: ''இது அபாரம்! இப்போது நான் மிகவும் அமைதியாகவும் மிகவும் சமாதானமாகவும் இருக்கிறேன். மேலும் உண்மையிலேயே என் மனைவி மிகவும் அழகானவள். அவள் என் தியானத்தை குலைத்துக் கொண்டிருக்கிறாள் என்று கூற எந்த காரணமும் இல்லை.''

இதை நினைவில் இருத்துங்கள் - ஏனென்றால் இதேபோன்ற பல காரியங்களை நீங்கள் செய்து கொண்டிருக்கலாம். ஏதாவது ஒன்று உங்களின் கவனத்தை சிதறடிப்பதாக உங்களுக்கு தோன்றும் போதெல்லாம், நீங்கள் அதை நோக்கி இயல்பாக கவரப்படுகிறீர்கள் என்பதைத்தான் அது காட்டுகிறதே தவிர வேறொன்றுமில்லை. எனவே ஏன் எதிர்ப்பை உருவாக்குகிறீர்கள்? அதே திசையிலேயே செல்லுங்கள். அதையே உங்களின் தியானத்துக்கான பொருளாக ஆக்குங்கள். இயல்பாக இருங்கள். அடக்காதீர்கள். முரண்பாட்டை உருவாக்காதீர்கள் அடைந்து கொள்வீர்கள்.

முரண்பாட்டின் வழியாக ஒருவரும் ஒருபோதும் அடைந்ததில்லை. முரண்பாடு ஒரு பிளவுபட்ட ஆளுமையையே உருவாக்கும். இயல்பான கவர்ச்சியை நோக்கியே செல்லுங்கள். அப்போது நீங்கள் ஒன்றாக இருக்கிறீர்கள், அப்போது நீங்கள் முழுமையாக இருக்கிறீர்கள், அப்போது

நீங்கள் இசைவாக இருக்கிறீர்கள், அப்போது நீங்கள் ஒரு பொருளாய் இருக்கிறீர்கள்; தனக்கு எதிராக தானே பிளவுண்ட வீடாக இருப்பதில்லை. நீங்கள் ஒரே முழுமையாய் இயங்கும்போது உங்கள் நடையில் ஒரு நாடகம் இருக்கிறது. அப்போது தெய்வீகம் இல்லாத பொருள் இல்லை.

நடந்த ஒரு நிகழ்ச்சியை கேள்விப்பட்டால் நீங்கள் வியப்படைவீர்கள். நாகார்ச்சுனர் என்ற மாபெரும் புத்த துறவி ஒரு சிற்றூரில் தங்கிக்கொண்டிருந்தார். ஒருவன் வந்தான்... ஒரு மனிதன் அவர் மேல் மிகுந்த ஈடுபாடு கொண்டுவிட்டான். ஆனால் அந்த ஆள் சொன்னான், ''உங்கள் வாழ்க்கை முறை, ஒரு பரதேசியின் உடையில் ஒரு மகாராஜாபோல் நீங்கள் வலம் வரும் கோலம் என்னை மிகவும் கவர்கிறது. நானும் ஒரு துறவியாக விரும்புகிறேன். ஆனால் ஒரு சிக்கல். என்னிடம் ஒரு பசு இருக்கிறது. அதை நான் மிகவும் நேசிக்கிறேன். அது ஒரு அழகான பசு. அதை விட்டுவர என்னால் முடியாது''. சாதாரண ஒரு பசு....அவனுக்கு மனைவி இல்லை, குழந்தைகள் இல்லை. அவன் திருமணமே செய்து கொள்ளவில்லை. ஆனால் அந்த பசுவை அவன் நேசிக்கிறான். மேலும் இதை சொல்லும்போது அவனுக்கே ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. அவன் சொன்னான், ''உங்களால் இதை புரிந்துகொள்ள முடியும் என்பதை நான் அறிவேன். எனவேதான் இதை உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஆனால் என் சிக்கலே இதுதான்: இந்த பசுவின் மீது நான் கொண்டுள்ள பாசம் சொல்லி முடியாதது. அதை வளர்த்தவனே நான்தான். அதுவும் என்னுடன் மிகவும் நன்றாக ஒட்டிக்கொண்டுவிட்டது; அதுவும் என்னை தேடுகிறது. இதற்கு என்ன செய்வது'' நாகார்ச்சுனர் சொன்னார்,'' எங்கும் போக தேவையில்லை. ஒன்றிடம் ஒருவர் ஆழமான நேசம் கொண்டுவிட்டால் பின் அவர் அதைவிட்டு வேறெங்கும் ஓட தேவையே இல்லை. இந்த நேசத்தையே உன் தியானமாக ஆக்கு. இந்த பசுவின் மீதே தியானி.''

எந்த விதமான மோதலையும் உருவாக்காதீர். அன்பும் தியானமும் மோதிக்கொண்டால் தோற்கப் போவது தியானமே என்பதை நினைவில் கொள்ளுங்கள். அன்பே வெல்லும். ஏனென்றால் அவ்வளவு அருமையானது அன்பு. அன்பின் சிறகுகளை கொண்டுதான் தியானம் உச்சத்தை அடையமுடியும். எனவே அன்பை ஒரு வாகனமாக பயன்படுத்துங்கள்.

. இதைத்தான் பதஞ்சலி குறிப்பிடுகிறார்:

> **மேலும், உங்களை கவரும் எதன்மீதும் தியானம் செய்யுங்கள்.**

அது எதுவாக இருந்தாலும் சரி, எந்த பாகுபாட்டையும் நான் செய்வதில்லை. மேலும் ஒரே பொருளைப் பிடித்து தொற்றிக் கொண்டிருக்கவும் தேவையில்லை. ஏனென்றால் பொருள்கள் மாறலாம்: இன்று காலையில் உங்களுக்கு உங்கள் குழந்தைமீது அன்பு இருப்பதாக நீங்கள் உணரலாம்; நாளைக்கே அப்படி நீங்கள் உணராமல் போகலாம். அந்நிலையில் எந்த முரண்பாட்டையும் உருவாக்காதீர்கள். எப்போதும், உங்கள் அன்பு எங்கே பாய்கிறதோ அவ்விடத்தை கண்டுபிடியுங்கள்; உங்கள் அன்பின்மீது சவாரி செய்யுங்கள். இன்று அது ஒரு மலரா யிருக்கலாம்; நாளை அது ஒரு குழந்தையாக இருக்கலாம்; நாளை மறுநாள் அது நிலவாக இருக்கலாம் - அதனால் எந்த கெடுதலுமில்லை. எல்லா பொருள்களும் அழகானவையே. எதன் மீதெல்லாம் உங்கள் ஈடுபாடு இயல்பாக பாய்கிறதோ அதனோடு சேர்ந்து கொள்ளுங்கள்; அதன்மீது தியானியுங்கள். ஒரே முழுமையாக, முரணில்லாமல் இருக்க வேண்டும் என்பது மட்டுமே முக்கியம். பிளவுபடாத உங்களின் இருத்தலில்தான் தியானம் மலர்கிறது.

**இவ்வாறு, அளவில் நுட்பமானதில் இருந்து அளவு கடந்தது வரை அனைத்திலும் ஆசானாக ஆகிறார் யோகி.**

அளவில் மிகச்சிறியதில் இருந்து மிகப்பெரியது வரை, அனைத்துக்கும் ஆசானாக ஆகிறார் அவர். அளவு கடந்த ஆற்றலுக்கு தியானமே வழி. உணர்வுகடந்த மனத்துக்கு தியானமே வாயில்.

இப்போது உணர்வு மனத்தில் இருக்கிறீர்கள் நீங்கள். உணர்வற்ற மனத்தின் ஆழங்களுக்குள் செல்லுங்கள். அது, உங்கள் இருத்தலின் அடித்தளங்களுக்குள் போவதாகும். தூக்கத்துக்குள் - கனவுக்குள் நீங்கள் ஊடுருவ முடியுமளவுக்கு, அதிகமதிக விழிப்புணர்வை சேர்த்துக் கொள்ளுங்கள். நீங்கள் விழித்திருக்கும்போது கூடுதல் விழிப்புணர்வுடன் இருப்பது என்பதில் தொடங்குங்கள் அது, நீங்கள் உணர்வற்ற மனத்தை ஊடுருவ உங்களுக்கு உதவும். பின், உணர்வற்ற மனத்துக்குள் கூடுதல் விழிப்புணர்வுடன் இருக்க பழகுங்கள். அது உணர்வுகடந்த மனத்தை ஊடுருவ உங்களுக்கு உதவும். இதற்கு ஆற்றல் தேவைப்படும். தற்போது உங்களிடம் இருக்கும் ஆற்றல் ஒரு சிறு மினுக்கத்தின் அளவுதான் - அது போதாது. விழிப்புணர்வின் வழியே அதிக ஆற்றலை உருவாக்குங்கள்.

நீரை அல்லது பனிக்கட்டியை நீங்கள் வெப்பப்படுத்துவது போன்றதே இது. பனிக்கட்டியை சூடாக்கினால் அது உருகுகிறது. குறிப்பிட்ட வெப்பநிலையில் அது நீராக ஆகிறது. பின் அது ஆவியாக வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் அதை நீங்கள் மேற்கொண்டும் சூடாக்க வேண்டி உள்ளது. அப்படியானால் தொடர்ந்து சூடேற்றுங்கள் -

குறிப்பிட்ட வெப்பநிலை வரை, 100 பாகை வரை. அப்போது திடீரென அது ஒரு நிலைமாற்றம் அடைந்து ஆவியாகிறது. அளவு, பண்பாக மாறுகிறது. அளவுமாற்றம், தன்மைமாற்றம் பெறுகிறது. குறிப்பிட்ட பாகைக்குக்கீழ் அது பனிக்கட்டியாக இருக்கிறது. அந்த பாகைக்கு மேல் அது நீராக ஆகிறது. மறுபடியும், குறிப்பிட்ட பாகைக்குக்கீழ் அது நீராக இருக்கிறது. அந்த பாகைக்கு மேல் அது ஆவியாகிறது - நீராவியாகிறது. பனிக்கட்டியாக இருக்கும்போது ஏறக்குறைய அது ஒரு சவம்போலவும் மூடுண்டதாகவும் இருக்கிறது. சில்லிட்டும், உயிரோட்டத்துக்கு தேவையான கதகதப்பு இல்லாமலும் இருக்கிறது. நீராக இருக்கும்போது அது அதிகம் பாய்ந்தோடுவதாக, அதிக உயிரோட்டமுள்ளதாக, திறந்த தன்மையுடன் இருக்கிறது. உருகியும் வெதுவெதுப்பாகவும் இருக்கிறது. ஆனாலும் நீர் கீழ்நோக்கியே போகிறது. அது ஆவியானதுமோ அதன் பரிமாணம் / நிலை மாறுகிறது. இனி அது கிடைமட்டத்தில் இயங்குவதில்லை; செங்குத்தாக இயங்குகிறது, மேல்நோக்கியே போகிறது.

முதலில், விழித்திருக்கும் நேரங்களில் அதிகமதிக கவனமுள்ளவராக ஆகுங்கள். அது உங்களை குறிப்பிட்ட அளவு வெப்ப நிலைக்குக் கொண்டு வரும். உண்மையாகவே அது குறிப்பிட்ட அளவு உள் சூடுதான்; உங்கள் உடலின் குறிப்பிட்ட அளவு வெப்ப நிலைதான். உணர்வற்ற மனத்துக்குள் நீங்கள் இயங்க உங்களுக்கு அது உதவும். பின், உணர்வற்ற மனத்துக்கு அதிகமதிக உணர்வுள்ளவராக ஆகுங்கள். இதற்கு இன்னும் கூடுதல் முயற்சி தேவைப்படும்; இன்னும் கூடுதல் ஆற்றல் உருவாக்கப்படும். பின்பு திடீரென ஒருநாள் நீங்கள் மேல்நோக்கி இயங்கிக்கொண்டிருப்பதை காண்பீர்கள். நீங்கள் எடை குறைந்தவராக ஆகியிருக்கிறீர்கள். புவிஈர்ப்பு விசை இப்போது உங்களை பாதிப்பதில்லை. உணர்வு கடந்தவராக நீங்கள் ஆகிக்கொண்டிருக்கிறீர்கள்.

அதி-உணர்வு அனைத்து ஆற்றல்களையும் பெற்றுள்ளது. அது எல்லாம் வல்லது, எல்லாம் அறிந்தது, எங்கும் நிறைந்தது, உணர்வு கடந்த மனம் எல்லா இடத்திலும் நிறைந்து உள்ளது. உணர்வுகடந்த மனதுக்கு, இயலக்கூடிய எல்லா ஆற்றலும் உள்ளது. உணர்வு கடந்த மனம் எல்லாவற்றையும் காண்கிறது - முற்ற முழுவதும் தெள்ளத் தெளிவான பார்வையாக அது ஆகியிருக்கிறது.

அதைத்தான் பதஞ்சலி கூறுகிறார்:

> **இவ்வாறு, அளவில் நுட்பமானதில் இருந்து அள்வு கடந்தது வரை அனைத்தையும் வென்றவராக ஆகிறார் யோகி.**

○

## 2. அகங்காரத்தின் கவர்ச்சி

*முதல் கேள்வி:*

*இறுக்கமில்லாமல் இயல்பாக இருப்பதற்கும் / விழிப்புணர்வுடன் இருப்பதற்கும் இடையில் / ஒரு முரண்பாட்டை உணர்கிறேன் நான்.*

ஒரு முரண்பாடும் இல்லை. ஆனால் அப்படி ஒரு முரண்பாட்டை நீங்கள் உண்டாக்க முடியும். முரண்பாடு நிலவாத இடத்தில் முரண்பாட்டை உருவாக்குகிறது மனம். ஏனென்றால் முரண்பாடு இல்லாமல் மனத்தால் இருக்க முடியாது.

இறுக்கமின்றி இயல்பாக இருப்பதுவே தானாக ஒரு விழிப்புணர்வை உங்களுக்குக் கொண்டுவரும்; விழிப்புணர்வுக்காக எவ்வித முயற்சியையும் நீங்கள் மேற்கொள்ளத் தேவையில்லாமலே ஒரு நிழல்போல அது பின் தொடரும். இளக்கமாக இயற்கையாக நீங்கள் இருந்தாலே போதும், அது வரும்; எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை. ஏனென்றால் இணக்கமாகவும் இயல்பாகவும் இருப்பதுவே தானாகவே விழிப்புணர்வுடன் இருப்பதாகவும் மலர்ந்துவிடுகிறது. அல்லது நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தாலே தானாக இறுக்கமில்லாமல் இயல்பாக இருப்பவராகவும் நீங்கள் ஆகிவிடுகிறீர்கள். அவை இரண்டும் ஒன்றாகவே நிகழ்கின்றன. ஆனால் அவை இரண்டுக்கும் ஒரே நேரத்தில் நீங்கள் முயற்சி செய்தால் அப்போது நீங்கள் முரண்பாட்டை உருவாக்குவீர்கள். ஒரே நேரத்தில் இரண்டுக்கும் முயற்சி செய்யத் தேவையில்லை.

இறுக்கமில்லாமலும் இயல்பாகவும் இருங்கள் என்று நான் கூறும்போது அதன் பொருள் என்ன? அதன் பொருள்: எவ்விதமான முயற்சியையும் மேற்கொள்ளாதீர்கள் என்பதே. நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்களோ அந்த நிலையிலேயே இருங்கள். நீங்கள் இப்போது விழிப்புணர்வில்லாமல் இருந்தால் பின் விழிப்புணர்வில்லாமலே இருங்கள். ஏனெனில் உங்களின் இறுக்கமற்ற இயல்பான நிலையில் நீங்கள் அப்படித் தான் இருக்கிறீர்கள். ஆயின் விழிப்புணர்வற்ற நிலையிலேயே இருங்கள். நீங்கள் முயற்சி ஏதும் செய்தால் பின் எப்படி நீங்கள் இறுக்கமில்லாமலும் இயல்பாகவும் இருக்க முடியும்? பேசாமல் இளைப்பாறுங்கள். உங்கள் நிலவரம் எதுவாக இருந்தாலும் அதை அப்படியே ஒப்புக்கொள்ளுங்கள். உங்களின் அந்த ஒப்புதலையும் ஒப்புக்கொள்ளுங்கள். அதிலிருந்து அசையாதீர்கள். நிலைமைகள் படிமானம் ஆவதற்கு கொஞ்ச காலம் எடுக்கும். இந்த குறுகிய இடைக்காலத்தில் நீங்கள் விழிப்புடனில்லாமல் இருக்கலாம். ஏனென்றால்

நிலைமைகள் இப்போதுதான் தெளிந்து கொண்டிருக்கின்றன. நிலைமைகள் படிந்ததும் போக்கு இயல்பானதும்; திடீரென நீங்கள் வியப்படைவீர்கள்; எதிர்பாரா விதத்தில் திடீரென ஒருநாள் நீங்கள் விழிப்பாயிருப்பதை கண்டுகொள்வீர்கள் - இதற்காக எந்த முயற்சியையும் மேற்கொள்ளத் தேவையில்லை.

அல்லது விழிப்புணர்விலிருந்து நீங்கள் செயல்படத் தொடங்கினால் இளக்கமாகவும் இயல்பாகவும் இருப்பதைப் பற்றியே நினைக்காதீர்கள். (இரண்டு முறைகளும் வெவ்வேறானவை, எதிரெதிர் முனைகளில் இருந்து அவை தொடங்குகின்றன) விழிப்புடன் இருப்பதற்கான உங்கள் முயற்சிகளின் மூலமாகவே தானே அது நிகழும்படி செய்யுங்கள். இதற்கு அதிக காலம் எடுக்கும்.. அன்று விழிப்புணர்வு இயல்பானதாக ஆகிறது, எந்த முயற்சியும் தேவைப்படுவதில்லை. எவ்வித முயற்சியும் தேவைப்படாத அந்த கட்டம் வராத வரைக்கும் விழிப்புணர்வு அடையப்பெறுவதில்லை. மேற்கொண்ட எல்லா முயற்சிகளையும் மறந்துவிட்டு, சுத்த விழிப்புணர்வுடன் இருக்க உங்களால் முடியும்போது மட்டுமே அதை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். அந்நிலையில் அதன் கூடவே, நீங்கள் இறுக்கமின்றி இயல்பாக இருப்பதையும் காண்பீர்கள். அவை ஒன்றுசேர்ந்தே வருகின்றன; எப்போதுமே அவை ஒன்றாகவே நிகழ்கின்றன. ஒரே நிகழ்வின் இரு அம்சங்களே அவை. ஆனால் அவை இரண்டுக்காகவும் ஒரே நேரத்தில் நீங்கள் செயல்பட முடியாது.

ஒருவர் ஒரு மலைமேல் ஏறுவதைப் போன்றதே இது. மலைமேல் ஏற பல பாதைகள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் உச்சியையே சென்று சேர்கின்றன; அவை எல்லாமே சிகரத்திலேயே போய் முடிகின்றன. அதற்காக ஒரே நேரத்தில் இரண்டு பாதைகளில் நடைபோட உங்களால் முடியுமா? அதற்கு முயற்சி செய்தால் உங்களுக்கு பைத்தியம்தான் பிடிக்கும்; ஒருபோதும் உச்சியை அடையமாட்டீர்கள். இரண்டு வழிகளும் ஒரே சிகரத்துக்கே இட்டுச் செல்கின்றன என்பதை நன்கு தெரிந்து வைத்திருந்தாலும்கூட அந்த இரண்டு வழிகளிலும் ஒரே நேரத்தில் எப்படி நீங்கள் போக முடியும்? மாறாக ஒருவர் ஒரு பாதையில் மட்டுமே நடந்தாக வேண்டும். முடிவில் அவர் மலைமுடியை அடைந்ததும், எல்லாப் பாதைகளும் அங்குதான் வந்து முடிந்திருப்பதை அவர் காண்பார். நடப்பதற்கு எப்போதும் ஒரு பாதையை மட்டுமே தேர்ந்தெடுங்கள். சிகரத்தை நீங்கள் அடைந்ததும் எல்லாப் பாதைகளும் அதே இடத்துக்கே வந்து சேர்ந்திருக்கும்.

விழிப்புணர்வுடன் இருப்பதென்பது வேறுவிதமான ஒரு நிகழ்முறையாகும். புத்தர் அதைப் பின்பற்றினார். அதை அவர் 'தன்னை

நினைவுகூர்தல்' அல்லது 'சரியான கவனமுடைமை' என்று குறிப்பிட்டார். இந்த யுகத்தில் ஜார்ஜ் குருட்ஜீப் என்னும் இன்னொரு புத்தர் அதை கடைப்பிடித்தார். அவரும் அதை 'தன்னை நினைவுகூர்தல்' என்றே அழைத்தார். கிருஷ்ணமூர்த்தி என்னும் இன்னொரு புத்தர், விழிப்புணர்வை பற்றியும் கண்காணிப்பு தன்மையைப்பற்றியும் பேசிக்கொண்டே இருக்கிறார். இது ஒரு பாதை. திலோப்பா இன்னொரு பாதையைச் சேர்ந்தவர். இறுக்கமில்லாமலும் இயல்பாகவும் இருக்கும் பாதை அது. விழிப்புணர்வைப் பற்றியே அலட்டிக் கொள்ளாத பாதை அது. எப்படி நீங்கள் இருக்கிறீர்களோ அப்படியே இருப்பது, எந்த விதமான முன் னேற்றத்துக்கும் எந்த விதமான முயற்சியையும் மேற்கொள்வதில்லை என்னும் பாதை அது. நான் உங்களுக்கு சொல்கிறேன்: புத்தர், குருட்ஜீப், கிருஷ்ணமூர்த்தி ஆகியோரின் நிலைபாட்டைவிட திலோப்பாவின் நிலைபாடே உயர்ந்தது. ஏனென்றால் அவர் எந்த முரண்பாட்டையும் உருவாக்குவதில்லை. 'எப்படி நீங்கள் இருக்கிறீர்களோ அப்படியே இருங்கள்' என்று மட்டுமே கூறுகிறார் அவர். ஆன்மீக முன்னேற்றத்துக்கான முயற்சி கூட வேண்டாம்... ஏனென்றால் அதுவும் அகங்காரத்தின் பகுதிதான். முன்னேற முயற்சிசெய்வது யார்? விழிப்போடு இருக்க முயன்று கொண்டிருப்பது யார்? ஞான நிலையை அடைய போராடிக் கொண்டிருப்பது யார்? உங்களுக்குள் குடிகொண்டிருக்கும் அது யார்? அதே பழைய அகங்காரம்தானே? ஒரு நாட்டின் குடியரசராகவோ, முதலமைச்ச ராகவோ ஆவதற்கு முயன்றுகொண்டிருந்த அதே ஆணவம்தான் இப்போது புத்த நிலையை அடைய முயன்று கொண்டிருக்கிறது.

புத்தரே ஞானநிலை பேற்றை 'கடைசி தீக்கனவு' என்றுதான் அழைத்தார். ஞானநிலைபேறுதான் கடைசி தீக்கனவு, ஏனென்றால் அதுவும் ஒரு கனவுதான். மேலும் அது ஒரு சாதாரண கனவு அல்ல, ஒரு தீக்கனவு. ஏனென்றால் அதனால் நீங்கள் துன்புறுகிறீர்கள். திலோப்பாவின் நிலைபாடே அறுதியான நிலைபாடு. அதை உங்களால் புரிந்துகொள்ள முடிந்தால் பின் எவ்விதமான முயற்சிகளும் தேவையில்லை. நீங்கள் பாட்டுக்கு இளைப்பாறுகிறீர்கள்; மற்ற எல்லாமே தானாக பின் தொடர்கிறது. ஒருவர் 'எதுவும் செய்யாமல் சும்மா இருந்தாலே - அமைதியாக அமர்ந்திருந்தாலே போதுமானது; வசந்தம் வந்ததும் புல் தானாகவே வளர்கிறது.

**இரண்டாவது கேள்வி:**

**முற்காலத்தில் இருந்த யோகப் பள்ளிகள் பலவும் பெரும்பாலும் ஒடுக்குமுறையையே கற்பித்தன என்றும்**

**ஒரு சிலர் அந்த முறையில் அடைந்தும் இருக்கிறார்கள் என்றும் ஒரு கருத்து நிலவுகிறது. அப்படியானால் இன்றும்கூட குறிப்பிட்ட விதமான மனிதருக்கு அந்த ஒடுக்குமுறை உத்தியைக் கொண்டே கற்பிக்கலாம் என்பதற்கு வாய்ப்புள்ளதா?**

வாய்ப்பே இல்லை! இரண்டு விசயம்: ஒன்று: உண்மையை உணர்ந்தவர் எவரும் ஒருபோதும் ஒடுக்குமுறையை கற்பித்ததில்லை.

இரண்டு: எவரும் ஒருபோதும் அந்த முறையில் அடைந்ததும் இல்லை.

ஆனால் எல்லா இடத்திலும் செல்லாக் காசுகள் புழங்கவே செய்கின்றன. இயல்பாக இருப்பதற்கான வழி மிகவும் எளிமையானது. ஆனால் உங்களுக்கோ அது மிகவும் கடினமானதாகத் தோன்றுகிறது. ஏனென்றால் போராடுவதற்கும் போட்டி போடுவதற்கும் வெற்றி கொள்வதற்கும் கடினமான ஒன்றையே அகங்காரம் நாடுகிறது. தீராத போட்டிச் சூழலிலேயே அகங்காரம் பிழைத்திருக்கிறது. ஒரு செயல் முற்றிலும் எளிமையானதாக இருக்குமேயானால் அங்கே அகங்காரம் தொய்ந்து விழுந்து விடுகிறது. செய்வதற்கு எதுவும் இல்லாததால் அமைதியாகவும் மவுனமாகவும் நீங்கள் அமர்ந்து இருந்தால், நிலைமைகள் தம்போக்கில் இருக்கவும் இயங்கவும் விட்டுவிட்டால், உங்கள் தரப்பில் இருந்து எந்த நடவடிக்கைக்கும் தேவை இல்லாவிட்டால், அங்கு அகங்காரம் எப்படி இருக்கும்? அதற்கான வாய்ப்பே இல்லை.

இறுக்கமில்லாமலும் இயல்பாகவும் இருக்கும்போது, உடனடியாகவும், முழுமையாகவும் அகங்காரம் வீழ்ந்து விடுகிறது - மறைந்து விடுகிறது. ஏனென்றால், அகங்காரத்துக்கு இடைவிடாத செயல்பாடு தேவை. அகங்காரம் ஒரு சைக்கிளைப் போன்றது. சைக்கிள் ஓட வேண்டுமானால் அதை நீங்கள் நிறுத்தாமல் ஓட்டியாக வேண்டும். ஓட்டுவதை நீங்கள் நிறுத்திவிட்டால், ஏற்கனவே கொடுத்த விசையின் காரணமாக மேலும் சில அடி தூரம் நீங்கள் போகலாம், ஆனால் அதன்பின் அது விழுந்தே தீரும். சைக்கிளும் அதை ஓட்டுபவரும் சேர்ந்தே விழுந்து விடுவர். விடாமல் ஓட்டுவது சைக்கிள் விழாமல் ஓட தேவைப்படுகிறது. மிகவும் மெதுவாக ஓட்டினாலும் நீங்கள் கீழே விழவே செய்வீர்கள். குறிப்பிட்ட விசையுள்ள ஆற்றலை அதற்கு தொடர்ச்சியாக வழங்குவது தேவைப்படுகிறது.

அகங்காரமும் சைக்கிள் ஓட்டுவதைப் போன்றதுதான். அகங்காரம் நிலவ வேண்டுமானால் அதற்கு உங்கள் ஆற்றலை இடைவிடாமல் நீங்கள்

வழங்கிக்கொண்டே இருக்கவேண்டியிருக்கிறது. எப்போதும் ஏதாவது ஒரு சவாலை ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஏதாவது ஒரு செயல்பாட்டை கையில் எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. எதையாவது சாதித்துக்காட்ட வேண்டியிருக்கிறது: எவரெஸ்ட்டை செயித்தாக வேண்டும், நிலவை பிடித்தாக வேண்டும் - எப்போதும் எதையாவது எதிர்காலத்தில் சாதித்தாக வேண்டும்; விடாமல் ஓட்டிக் கொண்டிருக்க வேண்டும். அதன் மூலம்தான் அகங்காரம் நிலவுகிறது. செயல்பாட்டில்தான் அகங்காரம் உயிர்பிழைக்கிறது...செயல்படாத நிலையில், சைக்கிள் அப்படியே விழுந்து விடுகிறது, சைக்கிள் ஓட்டுபவரும் விழுந்து விடுகிறார். உடனடியாக மொத்த இயக்கமும் நின்று போகிறது; அதனோடு சேர்ந்து அகங்காரமும் காணாமல் போகிறது.

எனவேதான், அகங்காரத்துக்கு எளிமையான வேலைகள் கடினமாகத் தோன்றுகின்றன, கடினமான வேலைகள் எளிமையாகத் தோன்றுகின்றன. பாதை மிகமிகச் சிரமமானது என்று உங்களிடம் நான் சொன்னால் உடனே நீங்கள் என்னையும் நான் சொன்னதையும் அப்படியே மறந்துவிடுவீர்கள்; நான் சொன்னது காதிலேயே விழாததுபோல் பேசாமல் என்னிடமிருந்து விலகி விடுவீர்கள்; அபத்தமாக எதையாவது பேசி உங்களுக்கு கொஞ்சம் சிரமத்தை உண்டாக்கும் எவரிடமாவது நீங்கள் போய்விடுவீர்கள். எனவேதான் இதற்குள் ஒடுக்குமுறை வருகிறது. ஏனென்றால் உலகிலேயே மிகவும் கடினமான காரியம் அடக்கிவைப்பதுதான் - ஏறக்குறைய நடக்கவே நடக்காத காரியம். ஒருபோதும் அது வெற்றி பெறுவதில்லை, எப்போதும் தோல்வியிலேயே முடிகிறது அது.

உங்கள் இருத்தலின் ஒரு பகுதியைக் கொண்டு அதன் இன்னொரு பகுதியை எப்படி உங்களால் ஒடுக்க முடியும்? உங்கள் இடதுகையைக் கொண்டு உங்கள் வலது கையை தோற்கடித்து வெற்றிபெற முயல்வதைப் போன்றதுதான் இது. நீங்கள் நடிக்க முடியும். கொஞ்ச கால முயற்சிக்குப் பின்பு, வலது ஆதிக்கத்தில் இருக்கிறது - இடது ஒடுக்கப்பட்டுவிட்டது என்று உங்களை நீங்களே ஏமாற்றிக்கொள்ள முடியும். ஆனால் உண்மையிலேயே அது ஒடுக்கப்பட்டோ வெல்லப்பட்டோ விட்டதாக நீங்கள் கருதுகிறீர்களா? உங்கள் உயிரின் ஒரு பகுதியைக் கொண்டு அதன் இன்னொரு பகுதியை எப்படி நீங்கள் தோற்கடிக்க முடியும்? சரியான பித்தலாட்டமே இது. காமத்தை நீங்கள் ஒடுக்கினால் உங்கள் பிரம்மச்சரியம் ஒரு ஏமாற்று, ஒரு பாசாங்கு. இது, வலது கை பம்மி காத்திருப்பதைப் போன்றதே. நீங்கள் ஏமாற்றிக்கொள்ள உங்களுக்கு அது உதவுகிறது. ஆயின் எந்த கணத்திலும் எல்லாவற்றையும் மீண்டும் குலைத்துவிட அதனால் முடியும் - குலைக்கவும் செய்கிறது. நீங்கள் தோற்கடித்ததை

திரும்பத் திரும்ப நீங்கள் தோற்கடித்தாக வேண்டியிருக்கிறது. ஏனென்றால் ஒருபோதும் அது ஒரு நிசமான வெற்றியாக இருப்பதில்லை. கடைசியில், வாழ்க்கை முழுவதும் நீங்கள் போராடிக்கொண்டே வந்திருப்பதையும், ஆனால் ஒன்றையுமே சாதிக்கவில்லை என்பதையும் காண்கிறீர்கள். உண்மையில் தோற்கப்போவது நீங்கள் மட்டும்தான், வேறு யாருமல்ல. உங்கள் முழு வாழ்க்கையும் ஒரு தோல்வியாகி விட்டது.

உண்மையை உணர்ந்த குரு எவரும் - ஞானநிலை அடைந்த குரு எவரும் - ஒருபோதும் ஒடுக்குமுறையை கற்பித்ததில்லை. ஆனால் அவர்கள் போதித்தது, உண்மையை உணராத மக்களுக்கு ஒடுக்குமுறை போல காட்சியளிக்க முடியும். இதை தெளிவாக விளக்கிவிடுகிறேன் - இதன் வேறுபாடு மிகவும் நுட்பமானது: காட்டாக, புத்தர், மகாவீரர் இருவருமே உண்ணாநோன்பை உபதேசித்திருக்கிறார்கள்; இருவருமே பிரமச்சரியத்தை - கற்பை - போதித்திருக்கிறார்கள். ஆனால் ஒடுக்குமுறையை அவர்கள் கற்பித்திருக்கிறார்களா? இல்லை. அதை அவர்கள் கற்பித்ததும் கிடையாது, அவர்களால் அதை கற்பிக்கவும் முடியாது.

'உண்ணாநோன்பு மேற்கொள்' என்று புத்தர் பேசும் போது அவர் என்ன சொல்கிறார்? 'உன் பசியை அடக்கு' என்றா? இல்லை. 'உன் பசியை கவனி' என்றே அவர் சொல்கிறார். 'எனக்கு பசிக்கிறது' என்றே உடல் சொல்லும்; நீங்கள் உங்கள் உடலுக்குள் இருந்தபடி அதை வெறுமனே கவனிக்கிறீர்கள். உடலுக்கு உணவளிப்பதற்கோ அல்லது பசியை ஒடுக்குவதற்கோ எந்த முயற்சியும் செய்வதில்லை. பசியை வெறுமனே கவனிக்கிறீர்கள். உங்கள் தரப்பிலிருந்து எந்த நடவடிக்கையும் தேவையில்லை. ஒடுக்குவதும் ஒரு நடவடிக்கைதான். பசியை நீங்கள் அடக்கும்போது என்ன ஆகும்? அதை உங்களால் கவனிக்க முடியாமல் போகும்; அதை நீங்கள் தவிர்த்து விடுகிறீர்கள் - உண்மையில் நீங்கள் விரும்பும் ஒரே விசயமும் அதுவேதான்.

பசியை ஒடுக்க முனையும் ஒருவர், ஒவ்வோர் ஆண்டும் சமணர்கள் செய்வதுபோல உண்ணாநோன்பு மேற்கொள்ளும் ஒருவர் - அவர்கள் என்ன செய்வார்கள்? பசியை உணர முடியாதபடி மனத்தின் கவனத்தை வேறு எங்காவது திருப்பிவிட அவர்கள் முயல்வார்கள். அதற்காக மந்திரங்களை ஓதுவார்கள். அல்லது கோயிலுக்குப் போய் சூத்திரங்களை செபிப்பார்கள். அல்லது தம் மதத்தலைவரிடம் போய் அவருடைய உரையை கவனிப்பார்கள். அதன்மூலம் மனம் அதில் மும்முரமாகி விடுகிறது. எனவே பசியின்மீது அவர்கள் கவனம் செலுத்த தேவையில்லாமல் போகிறது. ஆனால் அதுவோ அப்படியேதான் இருக்கிறது. இதுதான் ஒடுக்குமுறை என்பது. எதார்த்தத்தில் இருக்கிற

ஒன்றை நீங்கள் பார்ப்பது இல்லை. அது அங்கே இல்லை என்பதுபோல் நடிக்கிறீர்கள் - இதுதான் ஒடுக்குமுறையின் பொருள். எனவே உங்கள் மனம் ஏதாவது ஒன்றுக்குள் ஆழமாகப் புகுந்துகொண்டால் பசி உங்களை ஊடுருவ முடியாது; தன்மேல் உங்கள் கவனத்தைத் திருப்ப அதனால் முடியாது. விடாமல் கதவை தட்டிக்கொண்டே இருக்கும் பசி. ஆனால் ஒரு மந்திரத்தை சத்தம் போட்டு ஓதிக்கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். அதனால் அந்த சத்தம் உங்களுக்கு கேட்பதில்லை. உங்கள் இருத்தலின் எதார்த்தத்தில் இருந்து உங்கள் மனதின் கவனத்தை திசைதிருப்புவது தான் ஒடுக்குமுறை வேலை செய்யும் விதம்.

கற்புடன் வாழ்வதாக நீங்கள் உறுதி எடுத்திருக்கிறீர்கள். அல்லது பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பதாக உறுதி எடுத்திருக்கிறீர்கள். அந்நிலையில் அழகிய பெண் ஒருத்தி உங்களை கடந்து செல்லுகிறாள். உங்களுக்குள் பாலுணர்வு ஆசை எழுகிறது. இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்? ராம் - ராம் - ராம் என்று உச்சரிக்கத் தொடங்குவீர்கள். இதன்மூலம் நீங்கள் தவிர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் கண்களுக்கு ஒரு திரைபோட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அந்த பெண் அங்கே இல்லை என்பதுபோல் பாசாங்கு செய்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அவள் அங்கேதான் இருக்கிறாள். அதனால்தான் நீங்களும் அவ்வளவு சத்தம்போட்டு ராமநாமத்தை செபித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

இந்தியாவில் மக்கள் காலையில் குளிப்பது வழக்கம். எங்கள் ஊரில் மிக அழகான ஒரு ஏரி, ஒரு ஆறு உண்டு. மக்கள் தம் காலைக் குளியலை முடிப்பதற்கு அங்கு போகிறார்கள். அங்குதான் என் இளம்பருவத்தில் முதன்முறையாக ஒடுக்குமுறையின் தந்திரத்தை நான் உணரமுடிந்தது. ஆறு, சில்லென்று இருக்கிறது - குறிப்பாக குளிர்காலத்தில். மக்கள் குளிக்கப் போகிறார்கள்... கோடை காலத்திலும் அவர்கள் குளிப்பதை நான் கவனித்தேன். அப்போது அவர்கள் ராமா, அரிகிருஷ்ணா என்றெல்லாம் செபிக்க மாட்டார்கள். ஆனால் குளிர்காலத்தில் ஆறு மிகவும் குளிர்ச்சியாக இருப்பதால் குளிரை மறப்பதற்காக சத்தமாக செபிக்கிறார்கள். ஒரு முழுக்குப் போட்டு எழுகிறார்கள். அவர்களின் மனம் மந்திரத்தை முணுமுணுப்பதில் மும்முரமாக இருக்கிறது. காலை நேரம் எந்த அளவுக்கு அதிகக் குளிராக இருக்கிறதோ அந்த அளவுக்கு, கடவுள் பேரை உச்சரிப்பதும் அதிகமாக இருக்கிறது.

என் குழந்தைப் பருவத்தில் அந்த மக்களை கவனித்த போதுதான் அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்ற விவரம் முதன்முறையாக எனக்கு தெரிய வந்தது. கோடை காலத்திலும் அதே

ஆட்கள் குளியல்போடுவதை நான் பார்க்கிறேன். அப்போது அவர்களுக்கு ராமன், அரிகிருஷ்ணன் அல்லது வேறு எவர்மீதும் அக்கறை ஏற்படுவது இல்லை. ஆனால் குளிர்காலத்தில் திடீரென்று அவர்கள் எல்லாரும் மதஉணர்வு உள்ளவர்களாக ஆகிவிடுகிறார்களா? இல்லை. ஒரு எதார்த்தத்தை தவிர்த்துக் கொள்வது எப்படி என்னும் சூழ்ச்சியை அவர்கள் கற்றுக்கொண்டு விட்டார்கள். ஆனால் அந்த எதார்த்தம் அங்கேயேதான் தட்டிக்கொண்டும் உதைத்துக்கொண்டும் உயிரோடு இருக்கிறது.

மனதை வேறு எங்காவது திசை திருப்பிவிடுவது: இரவு நேரத்தில் இருட்டில், ஆளில்லாத ஒரு தெருவின் வழியாக போகும் மக்களை கவனித்திருக்கிறீர்களா? அவர்கள் ஒரு பாட்டுப் பாடவோ விசிலடிக்கவோ ஒரு ராகத்தை முணுமுணுக்கவோ தொடங்கி விடுகிறார்கள். என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் அவர்கள்? - அதே சூழ்ச்சிதான். ராகம் போடுவதன் மூலம் இருட்டை அவர்கள் மறக்கிறார்கள். ஒரு பாட்டை சத்தம் போட்டுப் பாடி தம் குரலை தாமே கேட்பதன்மூலம் தாங்கள் தனியாக இல்லை என்னும் உணர்வைப் பெறுகிறார்கள். அவர்கள் தனியாக இல்லை என்னும் உணர்வை குரலோசை தருகிறது. தம் சொந்தக் குரலால் சூழப்பட்டதுமே அவர்களைப் பொறுத்தவரை இருட்டு மறைந்து விடுகிறது. அப்படியில்லாமல் இரவில் ஆள் அரவமற்ற ஒரு தெருவில் அமைதியாக அவர்கள் நடந்து போவார்களேயானால் அவர்களின் சொந்த காலடிச் சத்தமே, யாரோ ஒருவர் பின்தொடர்கிறார்கள் என்ற அச்சத்தை உருவாக்குகிறது.

இப்படிப்பட்ட ஏமாற்று வேலைகளை மகாவீரரும் புத்தரும் கற்பிக்க முடியாது. உண்ணா நோன்பைப்பற்றி அவர்கள் பேசுகிறார்கள். ஆனால் அவர்களின் நோன்பு பண்புரீதியாக முற்றிலும் வேறுவிதமானது. இரண்டுவித நோன்பினரும் பார்ப்பதற்கு ஒரே விதமாகத்தான் இருப்பார்கள். ஆனால் அவர்களின் உள் ஆழத்தில் வேறுபாடு இருக்கிறது. தன் உள் ஆழத்தில் மகாவீரரையோ, புத்தரையோ பின்பற்றி நோன்பு இருக்கிறவர் மனத்தால் எந்த செயல்பாட்டிலும் ஈடுபட மாட்டார். அவர் கவனிப்பார். மொத்த கவனத்தையும் பசியின்மீதே செலுத்துவார். அப்போது மிகமிக அழகான ஒரு நிகழ்வு அங்கே எழுகிறது. பசியை நீங்கள் கவனித்தால் அது மறைகிறது. உணவேதும் இல்லாமலே அது மறைகிறது. ஏன்? பசியின்மீது கவனம் செலுத்தும்போது என்ன நடக்கிறது?

காமஆசை எழும்போது ஒருவர் வெறுமனே மொத்த கவனத்தையும் அதன்மீது செலுத்துகிறார். தீர்ப்பிடுவதில்லை. இது நல்லது என்றோ கெட்டது என்றோ கூறுவதில்லை. இது கொடியது என்பதில்லை.

சாத்தானிடமிருந்து வரும் ஒரு தூண்டுதல் இது என்பதில்லை. எந்த விதமான மதிப்பீட்டையும் செய்வதில்லை - ஏனென்றால் எல்லா மதிப்பீடுகளும் மனத்தை சேர்ந்தனவே. சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருப்பதோ மனத்தை சேர்ந்ததல்ல. நல்லது - கெட்டது என்ற பாகுபாடுகள் எல்லாம் மனத்தினுடையவையே. சாட்சிநிலையோ பாகுபடாத முழுமை நிலையாகும். அது நல்லதுமல்ல கெட்டதுமல்ல - அது இருக்கிறது, அவ்வளவே. பசிமீதோ காம ஆசை மீதோ ஒருவர் கவனம் - முழு கவனம் - செலுத்தும்போது, அந்த முழு கவனமே எப்பேர்ப்பட்ட ஆற்றலாகிறது என்றால் அது ஒரு நெருப்பாக ஆகிறது - பசியை அப்படியே பொசுக்கி விடுகிறது அது. காம ஆசையை அப்படியே எரித்து விடுகிறது அது. என்ன நிகழ்கிறது? இதில் செயல்படும் உத்தி யாது?

பசியை நீங்கள் உணர்கிறீர்கள். உண்மையில் ஒருபோதும் நீங்கள் பசியாக இருந்ததில்லை; உடலே பசியாக இருந்திருக்கிறது. நீங்கள் ஒருபோதும் பசியாக இருந்ததில்லை. ஆனால் உடம்புடன் உங்களை இணைத்துக் காண்கிறீர்கள் நீங்கள். ''உடலே நான்'' என்கிறீர்கள். எனவேதான் உங்களுக்கு பசிப்பதாக நீங்கள் உணர்கிறீர்கள். பசியின்மீது நீங்கள் கவனம் செலுத்தும்போது, ஓர் இடைவெளி உருவாக்கப்படுகிறது. இணைப்பு அறுந்துபோகிறது. அதன்பின் அந்த இணைப்பு அங்கே இருப்பதில்லை. அதன்பின் நீங்கள் உடல்அல்ல. உடல் பசியாயிருக்கிறது. நீங்கள் அதை கவனிப்பவராக இருக்கிறீர்கள். இந்நிலையில் திடீரென ஓர் ஆனந்தமான சுதந்திர உணர்வு - ''நான் உடல் அல்ல, எந்த காலத்திலும் நான் இந்த உடல் அல்ல, உடலுக்கே பசிக்கிறது, எனக்கல்ல'' என்னும் உணர்வு உங்களில் எழுகிறது. பாலம் உடைக்கப்பட்டு விட்டது - நீங்கள் தனித்து இருக்கிறீர்கள்.

உடலுக்கு காம ஆசை இருக்கிறது. ஏனெனில் காமத்திலிருந்தே உடல் வந்திருக்கிறது. காமத்தின்மீது உடலுக்கு நாட்டம் இருக்கிறது. ஏனெனில் உடலில் ஒவ்வொரு அணுவும் காமத்தால் ஆனது. உங்கள் தாயும் தந்தையும் ஓர் ஆழமான காமச் செயல்பாட்டில்தான் உங்கள் உடம்பை உருவாக்கி இருக்கிறார்கள். உங்கள் உடலின் தொடக்க அணுக்கள் ஆழமான காம வேட்கையிலிருந்தே வெளிவந்தன. அந்த பண்பை அவை தம்முள் கொண்டுள்ளன. மேலும் அந்த அணுக்கள் தம்மைத் தாமே பன்மடங்காக பெருக்கிக் கொண்டுள்ளன. இப்படித்தான் உங்கள் முழுஉடம்பும் உருவாக்கப்பட்டுள்ளது. உங்கள் முழு உடலுமே காம வேட்கைதான். ஆசை எழுகிறது. உடலுக்கு அது இயற்கையே. அதில் எந்த தவறும் இல்லை. உடலே காம வேட்கையைத் தவிர வேறல்ல.

பிரம்மச்சரியத்தை உடல் கடைப்பிடிக்க வாய்ப்பில்லை. பாலுணர்வு உடம்பின் இயல்பு. காமத்தன்மையே உடம்புக்கு இயல்பானது. உங்களுக்கோ பிரம்மச்சரியம் மட்டுமே இயல்பானது; காமம் இயல்பற்றது. முற்றிலும் இயல்பற்றது. எனவேதான் மணமாகாத நிலையை பிரம்மச்சரியம் என்கிறோம் நாம். பிரம்மச்சரியத்துக்கான ஆங்கிலச் சொல்லான செலிபசி (மணமாகாத நிலை) என்பது அவ்வளவு சிறப்பான சொல் அல்ல. அது மிகவும் சாதாரணமானது; ஆழமற்றது. பிரம்மச்சரியம் என்பதன் பொருள் ஆழம் அதில் இல்லை. பிரம்மம் என்னும் வேர்ச்சொல்லில் இருந்தே பிரம்மச்சரியம் என்னும் சொல் வந்தது. நீங்களே பிரம்மம் - ஆதிமூலம் - கடவுள் என்பதை அறியவே நீங்கள் வந்திருக்கி றீர்கள், அந்த நிலையை அடையவே நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்பதுதான் பிரம்மச்சரியம் என்பதன் பொருள் ஆகும்.

தான் கடவுள்தான் என்னும் உண்மையை ஒருவர் உணரத் தொடங்கும்போதுதான் மெய்யான கற்பு விளங்கும். ஏனெனில் அந்நிலையில் எந்த சிக்கலும் இல்லை. மேலும் என்ன நிகழ்கிறது என்றால், என்ன அற்புதம் என்றால்.... நீங்கள் தனித்தவரானதும், பாலம் தகர்க்கப்பட்டதும், உடலுடன் உங்களை நீங்கள் ஒருமைப்படுத்திக் கொள்வதில்லை. ''இந்த உடல்தான் நான்'' என்று நீங்கள் சொல்வதில்லை. ''இந்த உடலில் நான் இருக்கிறேன், ஆனால் இந்த உடல் நான் அல்ல; நான் இந்த வீட்டில் வசிக்கிறேன், ஆனால் இந்த வீடு நான் அல்ல; இந்த ஆடைகளுக்குள் நான் இருக்கிறேன், ஆனால் இந்த ஆடைகள் நானல்ல'' என்றே சொல்கிறீர்கள். இந்த நிலையை நீங்கள் அடைந்து கொள்ளும் காலத்தில் - ஏன் அடைந்து கொள்வது என்று கூறுகிறேன் என்றால், கருத்துரீதியாக இதை நீங்கள் ஏற்கனவே அறிந்தே இருக்கிறீர்கள். அதனால் பயனில்லை. இன்னும் அதை நீங்கள் உணர்ந்திருக்கவில்லை - அடைந்திருக்கவில்லை. பசி அல்லது காமம் அல்லது எதன் மீதும் ஆழமாக கவனம் செலுத்தும்போதே அதை நீங்கள் உணர்கிறீர்கள் - உடனே உடலுக்கும் உடலெடுத்த ஆன்மாவுக்கும் இடையிலான பிணைப்பு திடீரென அறுகிறது. அதில் இடைவெளி விழும்போது நீங்கள் ஒரு சாட்சியாக ஆகியிருக்கிறீர்கள்: இனி உங்கள் ஒத்துழைப்பின் மூலமாகவே உடல் வாழ்கிறது.

உங்கள் ஒத்துழைப்பு இல்லாமல் உடலால் வாழ முடியாது. உடல் இறந்ததும் நடப்பது அதுதான்: உடல் முழுக்க முழுக்க அதே உடல்தான்; உங்கள் ஒத்துழைப்பு மட்டும்தான் அங்கே இல்லை. வீட்டைவிட்டு நீங்கள் வெளியேறி விட்டிருக்கிறீர்கள் - எனவேதான் உடல் இறந்துவிட்டது. மற்றபடி ஒருவரும் ஒருபோதும் இறப்பதில்லை. அதே உடல்தான் - ஆனால்

உங்களின் ஆற்றலைச் சார்ந்தே அது இருந்தது. உடலுக்கு ஆற்றலை தொடர்ச்சியாக நீங்கள் ஊட்டிவர வேண்டி இருந்தது. உங்கள் ஒத்துழைப்புடனேயே அது நிலவுகிறது. அதற்கென்று சொந்த இருப்பு கிடையாது. உங்கள் மூலமாகத்தான் அது ஒன்றுகூடி இருக்கிறது. இல்லாவிட்டால் அது கழண்டு விழுந்துவிடும். அதன் மையமாகவும் அதை ஒருமைப்படுத்தும் காரணியாகவும் நீங்களே இருக்கிறீர்கள்.

ஒருவருக்கு பசிக்கிறபோது, அதை அவர் கவனித்தால், ஒத்துழைப்பு விட்டுப் போகிறது - ஒருவித தற்காலிக சாவுதான் அது. உடலை நீங்கள் தாங்கிக் கொண்டில்லை. உடலை நீங்கள் ஆதரிக்காதபோது உடலால் எப்படி பசியை உணர முடியும்? ஏனென்றால் உடல்தானாக எதையும் உணர முடியாது. உணர்ச்சி என்பது உயிரினுடையது. உடலில் பசி இருக்கலாம், ஆனால் அதை உணர உடலால் முடியாது, அதற்கான உணர்கருவிகள் அதனிடம் இல்லை.

இப்போது, இந்த பத்தாண்டுகளுக்குள்தான், மூளை அறுவை மருத்துவர்கள் மிகப் புதிரான - குறிப்பிடத்தக்க நிகழ்வொன்றை அறிய வந்திருக்கிறார்கள். அதாவது, எல்லாவற்றையுமே உணர்கிற மூளை, தன் சொந்த நரம்பு மண்டலத்தை உணர்வதில்லை. மூளை அறுவை மருத்துவரின் மேசைமேல் முழு விழிப்புடன் நீங்கள் படுத்துக் கிடக்கும்போதே உங்கள் தலையை திறந்து உங்கள் மூளைத் திசுக்களை மருத்துவர் அறுக்க முடியும் - உங்களுக்கு அதுபற்றிய எந்த உணர்ச்சியும் இருக்காது. மயக்கமருந்து தர தேவையே இல்லை. தலையில் அவர் ஒரு திறப்பைப் போட முடியும், உங்கள் தலைக்குள் அவர் துளைத்துச் செல்ல முடியும். அப்படி துளை போடுவதை மண்டை ஓட்டில் மட்டுமே நீங்கள் உணர்வீர்கள். ஆனால் உள்ளுக்குள் அவர் போனதுமே அறவே எந்த உணர்வும் இருப்பதில்லை. உங்கள் மூளை முழுவதையும் அவர் வெட்டி எடுத்துவிட்டாலும் அதை நீங்கள் அறியமாட்டீர்கள், இத்தனைக்கும் முழு விழிப்புடனேயே இருப்பீர்கள்.

மேற்குலகில் வாழும் பலரும் தம் உடலிலிருந்துபல பகுதிகள் வெட்டி எடுக்கப்பட்ட நிலையிலேயே நடமாடிக் கொண்டிருக்கிறார்கள் - ஆனால் அது அவர்களுக்கு தெரிவதில்லை. தம் மூளைகளில் சில இடங்களில் மின்முனைகள் பொருத்தப்பட்ட நிலையில் பலர் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் - ஆனால் அதை அவர்கள் உணர்வதில்லை; உணரவும் முடியாது....உங்கள் தலைக்குள் ஒரு கல்லைப் போட்டு வைக்க முடியும்; அது அங்கே இருப்பதை ஒருபோதும் நீங்கள் உணரமாட்டீர்கள் ஏனென்றால் மூளைக்கு எந்த உணர்ச்சியும் கிடையாது. அப்படியானால் எங்கிருந்து உணர்ச்சி வருகிறது?

உடம்பிலேயே மிகவும் நுட்பமான பகுதி - மிகுந்த நுண்உணர்வுள்ள பகுதி மூளை; ஆனால் அதற்கே உணர்வு இல்லை. உணர்வு உங்கள் உயிரிலிருந்து வருகிறது. உடம்பு அதை எடுத்துக் கொள்கிறது. உடம்புக்கு என்று எந்த உணர்ச்சியும் கிடையாது. ஒருமுறை பசியை நீங்கள் கவனித்தாலே - அந்த கவனிப்பு உண்மையானதாக, முழுமையானதாக இருந்தால், அதை நீங்கள் தவிர்க்கவில்லை என்றால் - பசி மறைந்து விடுகிறது.

ஒரு மகாவீரரோ, புத்தரோ மேற்கொள்ளும் நோன்பு, சமணர்களோ, பவுத்தர்களோ கடைப்பிடிக்கும் நோன்பிலிருந்து முற்றிலும் வேறுவிதமானது. மகாவீரரின் பிரம்மச்சரியம் சமண முனிவர்களின் பிரமச்சரியத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. மகாவீரர் அதை தவிர்ப்பதில்லை; வெறுமனே கவனிக்கவே செய்கிறார். கவனிக்கையில் அது மறைகிறது. கண்காணிக்கையில் அது அங்கு இருப்பதில்லை. தவிர்த்தாலோ அது உங்களைப் பின்தொடர்கிறது. உண்மையைச் சொன்னால் உங்களை அது தொடர்வது மட்டுமல்ல, துரத்தவும் செய்கிறது. ஒடுக்கத்தை கற்பிக்கும் யோகம் என்று எதுவும் இல்லை - இருக்கவும் முடியாது; ஆனால் ஒடுக்கத்தைக் கற்பிக்கும் யோகிகள் இருக்கிறார்கள். அவர்கள் வெறும் ஆசிரியர்கள். தம் உள்ளார்ந்த இருப்பை இன்னும் உணராதவர்கள் அவர்கள். எனவே ஒடுக்குமுறை மூலம் புத்த தன்மையை அடைய முடிந்த ஒரே ஒரு நபர்கூட இருந்தது கிடையாது - இருக்கவும் முடியாது. அப்படி நடக்க வாய்ப்பே இல்லை. ஒடுக்குமுறை மூலமல்ல, விழிப்புணர்வின் மூலமே ஒருவர் அடைகிறார்.

**மூன்றாவது கேள்வி:**

**தியானத்தின்போது கவனம் சிதறுவதற்கே, உடல் வலிதான் பெரிதும் காரணமாகிறது. அப்படியிருக்க, வலி ஏற்படும்போது அதையே தியானித்தல் என்பதைக் குறித்து தாங்கள் பேசுவீர்களா?**

அதைப்பற்றித்தான் நான் பேசிக்கொண்டிருக்கிறேன். வலியை நீங்கள் உணர்ந்தால் அதையே கவனியுங்கள், வேறு எதையும் செய்யாதீர்கள். கவனம் என்பது ஒரு மாபெரும் வாள் - எல்லாவற்றையுமே அது அறுத்தெறிகிறது. நீங்கள் பேசாமல் வலியின்மேல் கவனம் செலுத்துங்கள்.

எடுத்துக்காட்டாக, தியானத்தின் கடைசிக் கட்டத்தில் ஆடாமல் அசையாமல் நீங்கள் உட்கார்ந்திருக்கிறீர்கள். அப்போது உடலில் பல பிரச்சனைகளை நீங்கள் உணர்கிறீர்கள் - கால் விறுத்துப்போவதாக,

கையிலே ஏதோ அரிப்பதாக, உடம்பில் எறும்புகள் ஊர்வதுபோல எல்லாம் நீங்கள் உணர்கிறீர்கள். பல தடவைகள் அவ்விடத்தை நீங்கள் பார்க்கி றீர்கள் - எறும்புகள் ஏதும் அங்கே இருப்பதில்லை. ஊரல் ஏற்படுவது உள்ளே; வெளியே அல்ல. இந்நிலையில் நீங்கள் என்ன செய்ய வேண்டும்? கால் மரத்துப்போவதாக உணர்கிறீர்களே - அதை கவனி யுங்கள். உங்கள் முழு கவனத்தையும் அதற்குக் கொடுங்கள், போதும். அரிப்பதாக உணர்கிறீர்கள் - உடனே சொறியாதீர்கள். அது பயன்படாது. உங்கள் கவனத்தை மட்டும் செலுத்துங்கள். கண்களை திறப்பதுகூட வேண்டாம். உள்ளுக்குள் இருந்தே கவனம் செலுத்தினால் போதும். வெறுமனே கவனியுங்கள். காத்திருங்கள். நொடிகளில் அரிப்பு மறைந்து விடுகிறது. என்ன ஆனாலும் - வலியையே நீங்கள் உணர்ந்தாலும், வயிற்றுக்குள்ளோ, தலைக்குள்ளோ கடுமையாக வலிப்பதாக நீங்கள் உணர்ந்தாலும் இது சாத்தியமே, ஏனென்றால் தியானத்தின்போது மொத்த உடலும் மாறுகிறது தன் வேதி அமைப்பை மாற்றுகிறது. புதிய விசயங்கள் நிகழ தொடங்குகின்றன. உடல் ஒரு பெரும் குழப்பத்தில் இருக்கிறது. சில நேரங்களில் வயிறு' கலக்கப்படலாம். ஏனெனில் அங்கேதான் உங்களின் பல உள்ளக் கிளர்ச்சிகளை நீங்கள் அமுக்கிவைத்திருக்கி றீர்கள். அவையெல்லாம் கிளறப்படுகின்றன. சில நேரங்களில் உங்களுக்கு வாந்தி வருவதுபோல் - குமட்டுவதுபோல் உணர்வீர்கள். சில நேரங்களில் தலைக்குள் கடுமையான வலியை நீங்கள் உணர்வீர்கள். தியானமானது உங்கள் மூளையின் உள்கட்டமைப்பை மாற்றிக்கொண்டிருக்கிறது. தியானத்தின் ஊடாக கடந்து செல்லும் போது நிசமாகவே நீங்கள் ஒரு பெருங்குழப்பமாகவே இருக்கிறீர்கள். விரைவிலேயே அவை படிந்துவிடும். ஆனால் அந்த நேரத்துக்கு எல்லாமே குலைக்கப்படும்.

அப்படியானால் நீங்கள் என்ன செய்ய முடியும்? தலைக்குள் ஏற்படும் வலியை வெறுமனே பாருங்கள்; அதையே கவனியுங்கள். கவனிப்பாளராக இருங்கள். நீங்கள் செயல்படுபவர் என்பதையே மறந்து விடுங்கள். பையப்பைய எல்லாமே தணிகிறது - மிகவும் அழகாகவும் மிகவும் அருமையாகவும். எந்த அளவுக்கென்றால், நீங்களே அதை அறியாத வரை உங்களாலேயே நம்ப முடியாது. மேலும் தலையிலிருந்து வலி மறைவது மட்டுமல்ல ஏனென்றால் வலியை உருவாக்கிக் கொண்டிருந்த ஆற்றலானது, அதை கவனிக்கும்போது.... வலி/ துன்பம் மறைவதுடன், அதே ஆற்றல் இன்பமாக மாறுகிறது. ஆற்றல் ஒன்றுதான்.

ஒரே ஆற்றலின் இரண்டு பரிமாணங்களே இன்பமும் துன்பமும்.. மேலும் தொடர்ந்தும் அமைதியாகவே அமர்ந்திருக்கவும் கவனத்தை திசை திருப்புபவற்றின்மேல் கவனம் செலுத்தவும் உங்களால் முடியுமானால்

எல்லா திசை திருப்புதல்களும் மறைந்துவிடுகின்றன. அப்படி எல்லா கவனச்சிதறல்களும் மறையும்போது, முழு உடம்புமே மறைந்து போயிருப்பதை திடீரென நீங்கள் அறிய வருவீர்கள்.

உண்மையில் என்ன நடந்து கொண்டிருந்தது? இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் ஏன் நடந்தன? மேலும், நீங்கள் தியானிக்காத போது இவையெல்லாம் நடப்பதில்லை. நாள் முழுவதும் ஓரிடத்தில் நீங்கள் இருக்கிறீர்கள், அப்போது கை அரிப்பதே இல்லை. தலை வலிப்பதே இல்லை, வயிறு குழப்பமில்லாமல் இருக்கிறது. கால்கள் நன்றாக உள்ளன. எல்லாமே சரியாக இருக்கிறது. அப்படியானால் உண்மையில் நடந்தது என்ன? தியானத்தில் மட்டும் ஏன் இந்த நிகழ்ச்சிகள் திடீரென தொடங்குகின்றன?

நீண்ட காலமாக உடம்பே எசமானாக இருந்து வந்துள்ளது. தியானத்தின்போது உடம்பை அதன் ஆதிக்கத்திலிருந்து நீங்கள் தூக்கி எறிந்து கொண்டு இருக்கிறீர்கள். அரியணையிலிருந்து அதை இறக்கப்பார்க்கிறீர்கள். இறங்க மாட்டேன் என்கிறது அது. தொடர்ந்தும் எசமானனாகவே இருக்க எல்லா வழியிலும் முயல்கிறது. தியானம் கலைந்து போகும்படி உங்கள் கவனத்தை திசைதிருப்ப பல சிக்கல்களையும் அது உருவாக்கும். உங்களை நிலைகுலையச் செய்து மீண்டும்தானே அரியணை ஏறிக்கொள்கிறது உடல். இதுவரைக்கும் உடலே ஆண்டையாக இருந்து வருகிறது, நீங்கள் அதன் அடிமையாகவே இருந்து வருகிறீர்கள். தியானத்தின் வாயிலாக மொத்த நிலைமையையும் நீங்கள் தலைகீழாகப் புரட்டிக்கொண்டு இருக்கிறீர்கள். ஒரு மாபெரும் புரட்சியாக இருக்கிறது அது. மேலும், தன் அதிகாரம் பறிபோவதை எந்த அரசியல்வாதிதான் விரும்புவான்? உடல், அரசியலில் ஈடுபடுகிறது - நடந்து கொண்டிருப்பது அதுதான். கற்பனையான வலியை - அரிப்பை - ஊரலை உண்டாக்குவதன் மூலமாக உங்கள் கவனத்தை சிதறடிக்க உடல் முயல்கிறது. மேலும் இது இயல்புதான். ஏனெனில் உடலும் நீண்ட காலமாக ஆட்சி செய்து வந்திருக்கிறது. பல பிறவிகளாக அதுவே பேரரசனாக விளங்கிவந் திருக்கிறது. நீங்களோ எனில் அடிமையாகவே இருந்து வந்திருக்கிறீர்கள். இப்போது நீங்கள் எல்லாவற்றையும் நிலைமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களின் அரியணைக்கு மீண்டும் நீங்கள் உரிமை கோருகிறீர்கள். இந்நிலையில் உங்களுக்கு தொல்லைதர என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதையெல்லாம் உடல் செய்ய முயலுவது என்பது இயற்கையானதே. இதற்கு நீங்கள் ஆட்பட்டுவிட்டால், வழியை நீங்கள் தவற விடுகிறீர்கள். சாதாரணமாக இப்படிப்பட்ட நிலைமையை மக்கள் கட்டுப்படுத்தவே பார்ப்பார்கள். உடனே ஒரு மந்திரத்தை செபிக்க தொடங்கிவிடுவார்கள்; உடலை கவனிக்க மாட்டார்கள்.

நான் உங்களுக்கு எந்தவிதமான ஒடுக்குமுறையையும் கற்பித்துக் கொண்டிருக்கவில்லை. விழிப்புணர்வை மட்டுமே போதிக்கிறேன். கண்காணிப்புடன் மட்டும் இருங்கள்; கவனமாக மட்டும் இருங்கள்: எல்லா விதமான வலிகளும், அரிப்புகளும் ஊரல்களும், மறைந்ததுமே, உடல் தனக்குரிய சரியான இடமாகிய அடிமையின் இடத்தில்போய் அமர்ந்ததுமே, உங்களால் கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு அளவு கடந்த ஆனந்தம் திடீரென உங்களில் ஊற்றெடுக்கிறது - உங்களால் வெளிப்படுத்த முடியாத அளவுக்கு - அளவுகடந்த கொண்டாட்டம் திடீரென உயிரில் பொங்கித் ததும்புகிறது. புரிதல் கடந்த ஒரு சமாதானத் தால் - இவ்வுலகு சாராத ஒரு பரவசத்தால் நீங்கள் நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறீர்கள்.

**நான்காவது கேள்வி:**

**காதலைப்பற்றி நேற்று நீங்கள் பேசும்போது, முயன்று நாம் நிறைவேற்றிக் கொள்ள வேண்டிய ஒரு அடிப்படைத் தேவை அது என்று சொன்னீர்கள். திரும்பத் திரும்ப அவலத்தையே கொணர்கிறது அது என்றும் நீங்கள் சொன்னீர்கள். காதலை நிறைவேற்றுவதற்கான நம் முயற்சிகள் ஒவ்வொரு தடவையும் அவலத்திலேயே முடியுமானால் பின் எப்படி ஒருவர் அர்த்தமுள்ள வாழ்க்கை வாழ முடியும்?**

உங்கள் எல்லா முயற்சிகளும் எப்போதும் அவலத்திலேயே முடிகின்றன. காதலை நோக்கிய முயற்சிகள் மட்டுமல்ல, உங்களின் அனைத்து முயற்சிகளுமே தவறாமல் அவலத்திலேயே முடிகின்றன. ஏனென்றால், எல்லா விதமான முயற்சிகளும் அகங்காரத்திலிருந்தே எழுகின்றன. எனவே எந்த முயற்சியும் வெற்றிதரப் போவதில்லை. ஏனென்றால் முயற்சி செய்பவரே தான் எல்லா அவலத்துக்கும் காரண கர்த்தா ஆவார். காதலிக்கும் ஆளாக இல்லாமல் காதலிக்க உங்களால் முடியுமானால் பின் அங்கு அவலம் இருக்காது.

இது மிகமிகக் கடினமாகவே தோன்றுகிறது. காதலிக்கும் ஆளாக இல்லாமல் காதலிப்பது எப்படி? காதல் அல்ல, காதலிப்பவரே துன்பத்துக்கு காரணம். நரகமாக முடியக்கூடிய காரியங்களை காதலன் செய்யத் தொடங்குகிறான். எல்லா காதலர்களும் தோற்றே போகிறார்கள். இதற்கு விதிவிலக்கான ஒருவரையும் நான் காணவில்லை. ஆனால் காதல் ஒருபோதும் தோற்பதில்லை. எனவே, நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். உங்கள் காதலின்போது நீங்கள் அங்கு இருக்கக் கூடாது. காதல் இருக்க வேண்டும்; ஆனால் அதில் எவ்வித அகங்காரமும் இருக்கக்கூடாது. நீங்கள்

நடக்க வேண்டும்; ஆனால் அப்போது நடப்பவர் அங்கு இருக்கக் கூடாது. நீங்கள் சாப்பிட வேண்டும்; ஆனால் அப்போது சாப்பிடுபவர் அங்கு இருக்கக்கூடாது. என்ன தேவையோ, அதை நீங்கள் செய்யவேண்டும்; ஆனால் செயல்படுபவர் அங்கு இருக்கக்கூடாது.

மொத்த ஒழுங்குமுறையும் இதுதான் - சமயத்தின் ஒரே ஒழுங்குமுறையும் இதுதான். சமயத் தன்மையுள்ள மனிதர் என்பவர் ஏதாவது ஒரு மதத்தைச் சேர்ந்தவர் அல்லர். உண்மையைச் சொன்னால் சமயத் தன்மையுள்ள ஒருவர் ஒருபோதும் எந்த மதத்தைச் சேர்ந்தவராகவும் இருக்கமாட்டார். செயல்படுபவரை உதிர்த்துவிட்டு இயல்பாக வாழும் - வெறுமனே இருக்கும் மனிதரே சமயத் தன்மையுள்ள மனிதர்.

அப்போது காதல் வேறுவிதமான ஒரு தன்மையுடன் இருக்கிறது. உடைமை மனப்பான்மை அதில் இருக்காது. பொறாமை இருக்காது. கொடுக்க மட்டுமே செய்யும் அது. பேரம் பேசாது அது அதற்கு நீங்கள் விலை வைப்பதில்லை. அது ஒரு சரக்கு அல்ல. உங்கள் இருத்தலின் பொங்கி வழிதல் அது; அதை பங்கிக் கொள்கிறீர்கள். உண்மையில் காதல் இருந்து காதலிப்பவர் இல்லாத அந்த நிலையில், ஒருவரை நீங்கள் நேசிக்கிறீர்கள் இன்னொருவரை நேசிப்பது இல்லை என்பது இல்லை. நீங்கள் காதலாகவே இருக்கிறீர்கள் - அவ்வளவே. யாருடன் - எதனுடன் என்னும் கேள்விக்கே அங்கு இடமில்லை.

இது, நீங்கள் சுவாசிப்பதைப் போன்றதே. யாருடன் நீங்கள் சுவாசிக்கிறீர்கள்? நீங்கள்'சுவாசிக்கிறீர்கள் - அவ்வளவே. உங்களுடன் யார் இருந்தாலும் அதனால் எந்த மாற்றமும் இல்லை. அதுபோலவேதான் யாருடன் நீங்கள் காதல் கொள்கிறீர்கள் என்பதும் முக்கியமற்றதாக ஆகிறது. உங்களுடன் யார் இருந்தாலும் அல்லது யாரும் இல்லாமல் போனாலும், நீங்கள் காதலாகவே இருக்கிறீர்கள். யாருமில்லாத ஓர் அறையில் நீங்கள் இருந்து கொண்டிருக்கலாம். ஆனால் உங்களிலிருந்து அன்பு பொங்கிப் பரவிக் கொண்டே இருக்கிறது. இங்கு காதல் என்பது ஒரு நடவடிக்கை அல்ல, உங்கள் இருப்பே அதுதான். அதை நீங்கள் தொடங்கவும் நிறுத்தவும் முடியாது - ஏனெனில் அதுவே நீங்கள்; இதுவே புதிர்.

நீங்கள் இல்லாமல் போகும்போது மட்டுமே அன்பே நீங்களாக இருக்கிறீர்கள். நீங்கள் இல்லாத போது மட்டுமே அன்பு இருக்கிறது. இறுதியில் காதலை முற்றிலும் நீங்கள் மறந்து விடுகிறீர்கள். ஏனென்றால் அதனை நினைப்பதற்கு அப்போது அங்கு யாரும் இருப்பதில்லை. அப்போது காதல் என்பது ஒரு மலர் மலர்வதைப் போன்றே - கதிரவன் உதிப்பதைப் போன்றே - இரவு நேர வானத்தை விண்மீன்கள் நிறைப்பதைப்

போன்றே இருக்கிறது; அதுவாகவே நிகழ்கிறது. ஒரு பாறையை நீங்கள் தொட்டால்கூட அதை நீங்கள் அன்பாகவே தொடுகிறீர்கள். அதுவே உங்களின் இருத்தலாக ஆகி இருக்கிறது.

இதுதான் யேசு சொன்னதன் பொருள். ''உங்கள் எதிரிகளை நேசியுங்கள்'' என்றார் அவர். எதிரிகளை நேசிப்பது பற்றியதல்ல இது அன்பாகவே மாறிவிடுவதைப் பற்றியதே இது. அந்நிலையில், வேறு எதையும் நீங்கள் செய்ய முடியாது. பகைவரே வந்தாலும் கூட அவரை நீங்கள் நேசிக்கத்தான் முடியும், வேறு ஒன்றும் செய்ய முடியாது. வெறுப்பானது எந்த அளவுக்கு மடத்தனமானது என்றால் அகங்காரத்துடன் மட்டுமே அது இருக்க முடியும். வெறுப்பு மடத்தனமானது. ஏனென்றால் அதனால் மற்றவருக்கு நீங்கள் கேடு விளைவித்துக் கொண்டிருக்கிறீர்கள். மேலும் மற்றவருக்கு செய்வதைவிட அதிகமாய் உங்களுக்கே நீங்கள் கேடுவிளைத்துக் கொள்கிறீர்கள். அது ஏன் மடத்தனமானது என்றால் மற்றவருக்கு நீங்கள் செய்யும் எல்லா கெடுதலும் உங்களுக்கே திரும்பி வரும் - பலமடங்காக திரும்பி வரும். அதன் பாரத்தில் நீங்கள் நசுங்கிப் போவீர்கள். முற்றிலும் முட்டாள்தனமானது அது; மடத்தனமானது. எல்லா பாவங்களுமே முட்டாள்தனமும் மடத்தனமுமாகவே இருக்கின்றன.

எனவேதான் கிழக்கை சேர்ந்தவர்களாகிய நமக்கு பாவம் என்பது ஒன்றே ஒன்றுதான் - அதுதான் அறியாமை. மற்ற எல்லாம் அதன் உடன் விளைவு மட்டுமே. அன்பைப்பற்றி நான் பேசும்போது அன்பர் இல்லாமல் இருக்கும் அன்பைப்பற்றியே பேசுகிறேன். மேலும் உங்களின் அன்பு உங்களுக்கு அவலத்தையே கொண்டு வருமானால் அது அன்பே அல்ல என்பதை உறுதியாக தெரிந்து கொள்ளுங்கள். அவலத்தைக் கொண்டுவருவது உங்களின் அகங்காரம்தான். எல்லாவற்றையும் - நீங்கள் தொடும் யாவற்றையுமே ஆணவம் நஞ்சாக்கி விடுகிறது. இது, மைதாஸ் என்ற அரசனைப் போன்றதே. அவன் தொட்டதெல்லாம் பொன்னாக மாறியது. அகங்காரமும் மைதாஸைப் போன்றதே - அது தொடுவதெல்லாம் நஞ்சாக மாறுகிறது. மேலும் இதனால் அந்த மைதாஸுக்கு எவ்வளவு சிக்கல்களும் துன்பங்களும் ஏற்பட்டன என்பதை நீங்கள் அறிவீர்கள். மேலும் எல்லாப் பொருள்களும் தங்கமாக மாறிக் கொண்டிருந்தும்கூட அவன் அவலத்திலேயே இருந்தான். இந்த பூமியில் இருந்த வேறு எந்த ஒரு மனிதனும் இருந்த அதே அவலத்திலேயே அவனும் இருந்தான். தான் நேசித்த தன் மகளை அவன் தொட்டான், அவள் தங்கமாக மாறிவிட்டாள். தன் மனைவியை தொட்டான், அவள் பொற்சிலை ஆகிவிட்டாள். உணவைத் தொடுவான், அது தங்கமாகிவிடும். அவனால் எதையும் குடிக்க முடியவில்லை, உண்ண முடியவில்லை; அவனால் உறங்கமுடியவில்லை,

காதலிக்க முடியவில்லை; அவனால் எதையுமே செய்ய முடியவில்லை. அவன் உறவினர்கள் எல்லாரும் ஓடி ஒளிந்தார்கள். அவனது ஊழியர்கள் எல்லாரும் தொலைவிலேயே நின்று கொண்டார்கள். ஏனென்றால் அவர்கள் அவன் அருகே வந்து தற்செயலாக அவன் அவர்களைத் தொட்டுவிட்டால் அவர்களும் தங்கமாகி விடுவார்கள். மைதாஸ் மன்னனுக்கு முழுப் பைத்தியம் தான் பிடித்திருக்க வேண்டும்.

ஆனால் உங்கள் நிலைமை என்ன? நீங்கள் தொடுவதெல்லாம் நஞ்சாக மாறிவிடுகிறது. எல்லாமே பொன்னாக மாறும்போதே அது நரகமாகி விட்டது. உங்கள் கதை என்ன? நீங்கள் தொடும் பொருள்கள் எல்லாமே நஞ்சாக மாறுகின்றன. துன்பத்திலேயே நீங்கள் வாழுகிறீர்கள். ஆனால் அதற்கான காரணத்தை நீங்கள் கண்டுபிடித்தாக வேண்டும். அந்த காரணம் உங்களுக்கு உள்ளேதான் இருக்கிறது; கருத்தா, அகம், ''நான்'' என்ற எண்ணம் தான் அது. ஆனால் அதனூடாக நீங்கள் கடந்து சென்றே ஆக வேண்டி இருக்கும். என் அனுபவத்திலிருந்து நீங்கள் கற்றுக்கொள்ள முடியாது.

நீர் சூடாக உள்ளதா குளிர்ச்சியாக உள்ளதா என்பது, நீங்களே அதை குடித்துப்பார்த்தால் மட்டுமே உங்களுக்கு தெரியும் என்று ஸென் மக்கள் சொல்வார்கள். அதுபோலவே அகங்காரமானது எல்லாவற்றையும் நஞ்சாக்கி விடுகிறது என்னும் என் உரையும் பெரிதாக உதவாது; நீங்களே கவனித்தாக வேண்டும், கண்காணிப்பாக இருந்தாக வேண்டும். உங்கள் சொந்த அகங்காரம் உங்களுக்கு என்ன செய்து கொண்டிருக்கிறது என்பதை நீங்களே உணரவும் புரிந்துகொள்ளவும் வேண்டும்.

ஆனால் அகங்காரம் மிகவும் தந்திரம் வாய்ந்தது. எப்போதுமே அது.... நீங்கள் அல்லலபடும் போதெல்லாம், அதற்கு காரணம் வேறு யாரோதான் என்றே எப்போதும் அது கூறுகிறது. இந்த சூழ்ச்சியின் மூலமே அகங்காரம் தன்னை காப்பாற்றிக் கொள்கிறது. நீங்கள் துன்பத்தில் இருந்தால் அதற்கு காரணம் நான்தான் என்று ஒருபோதும் நீங்கள் நினைப்பதில்லை - எப்போதுமே அதற்கு காரணம் வேறு ஒருவர்தான் என்றே நினைக்கிறீர்கள். கணவன் துன்பத்தில் உழலக் காரணம், மனைவி அதை உருவாக்குவதுதான். மனைவி துன்பத்தில் இருக்கக் காரணம், கணவன் அதை உருவாக்குவதுதான். பழியை - பொறுப்பை எப்போதும் அகங்காரம் அடுத்தவரின்மேல் சுமத்திவிடுகிறது. தந்தை துன்பத்தில் இருப்பதற்கு மகன்தான் காரணம்.

குழந்தைகள் இருப்பதால்தான் தமக்கு துன்பம் என்று கூறும் மனிதர்களையும் நான் பார்த்திருக்கிறேன். தமக்கு குழந்தைகள்

இல்லாததுதான் தம் துயரத்தின் காரணம் என்பவர்களையும் நான் பார்த்திருக்கிறேன். காதலிப்பவர்கள் துன்பத்தில் உழல்வதை நான் காண்கிறேன் - அவர்களின் உறவே அவர்களுக்கு மிகுந்த தொல்லையையும் குழப்பத்தையும் மன வருத்தத்தையும் விளைவிக்கிறது. காதலிக்காதவர்களும் துன்பத்தில் உழல்வதை நான் காண்கிறேன். ஏனென்றால் காதலிக்காததால் இவர்கள் துன்பப்படுகிறார்கள். துன்பத்தில்தான் இருப்பது என்பதில் நீங்கள் எல்லாரும் ஒரே தீர்மானமாக இருப்பதாக தோன்றுகிறது. எந்த ஒரு நிலையிலும் நீங்கள் துன்பத்தை உருவாக்கி விடுகிறீர்கள், ஆனால் ஒருபோதும் உங்களுக்குள் நீங்கள் பார்ப்பதில்லை. துன்பத்தைப் படைக்கும் ஏதோ ஒன்று உங்களுக்குள் இருந்தாக வேண்டும் - அதுதான், ''நான்'' என நீங்கள் நினைக்கும் உங்களின் அகம், உங்களைப் பற்றிய உங்களின் கருத்து. தன்னைப் பற்றிய தன் கருத்தானது எந்த அளவுக்கு தற்பெருமையானதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு தனக்கு ஏற்படும் துன்பத்தின் அளவும் பெரிதாக இருக்கும்.

குழந்தைகள் அதிகமாக துன்புறுவதில்லை. காரணம், அவர்களின் அகங்கள் இன்னமும் முழுவளர்ச்சி அடையவில்லை. எனவேதான் குழந்தைப் பருவத்தில் வாழ்க்கை சொர்க்கம் போன்று இருந்தது என பிறகு தம் வாழ்நாள் முழுவதும் மக்கள் நினைத்துக் கொண்டே இருக்கிறார்கள். இதற்கான ஒரே எளிய காரணம்: அகங்காரம் வளர்ச்சிபெற அவகாசம் தேவைப்படுகிறது என்பதுதான். குழந்தைகளில் ஆணவம் அதிக அளவில் இருப்பதில்லை. உங்களின் கடந்த காலத்தை நினைவுகூற நீங்கள் பின்னோக்கி முயன்றால் ஒரு கட்டம் வந்ததும் ஒரு தடை ஏற்படுவதை உணர்வீர்கள் 4 அல்லது 3 வயதுடன் நினைவு திடீரென அறுந்து விடுகிறது. இது ஏன்?

இதன் ரகசியத்தை உளப் பகுப்பாய்வாளர்கள் ஆராய்ந்து இருக்கிறார்கள். இப்போது அவர்கள் ஒரு முடிவை எட்டி இருக்கிறார்கள். அந்த பருவத்தில் அகங்காரம் இல்லை, எனவேதான் நினைவுகூற அங்கு யாரும் இல்லை என்று அவர்கள் கூறுகிறார்கள். நினைவுகளை சேகரிப்பதற்கு அங்கு யாரும் இருந்ததில்லை. நிகழ்ச்சிகள் நடந்தன; அனுபவங்கள் ஏற்பட்டன. ஏனென்றால் 3 வயது வரைக்கும் குழந்தை ஒரு எழுதாத காகிதமாக இருப்பதில்லை. கோடிக்கணக்கான நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. அதிலும் ஒரு குழந்தைக்குதான் ஒரு வயதான மனிதரை காட்டிலும் அதிக நிகழ்ச்சிகள் நடக்கின்றன. ஏனென்றால் குழந்தை அதிக ஆர்வம் உள்ளதாக இருக்கிறது. ஒவ்வொரு சிறிய செய்தியும் அதற்கு ஒரு பெரிய செய்தியாக இருக்கிறது. அந்த மூன்று ஆண்டுகளில் கோடிக் கணக்கான நிகழ்வுகள் நிகழ்ந்திருக்கின்றன. ஆனாலும், அகங்காரம் அங்கு

இல்லாததால் எந்த தடயமும் வெளிப்படுவதில்லை. குழந்தையை வசியம் செய்தால் அதனால் நினைவு கூற முடியும்; அந்த தடையை கடந்தும் பின்னோக்கிப் பார்க்க அதனால் முடியும்.

பல சோதனைகளில் மன வசியத்துக்கு உள்ளாக்கப்பட்டவர்கள் தாம் பிறந்த பின் நடந்த செய்திகளை மட்டுமல்ல, பிறப்பதற்கு முன் நடந்த செய்திகளையும் நினைவுகூர்ந்து இருக்கிறார்கள். தாயின் கருப்பையில் தாம் இருந்தபோது நடந்த நிகழ்ச்சிகளும் அவர்களின் நினைவுக்கு வந்திருக்கின்றன. தாய்க்கு உடல் நலமில்லை. அல்லது கடுமையான வயிற்றுவலி ஏற்பட்டது. அதனால் குழந்தை துன்புற்றது. அல்லது தாயின் கருப்பையில் குழந்தை 7-8 மாத குழந்தையாக வளர்ந்திருந்தபோது தாய்கொண்ட உடல் உறவை குழந்தை நினைவு கூறுகிறது. ஏனெனில் தாயானவள் உடல் உறவு கொள்ளும்போது உள்ளே குழந்தை மூச்சுத் திணறுகிறது.

எனவேதான் கிழக்கில் அது முற்றிலுமாக தடை செய்யப் பட்டிருக்கிறது. தாய் கர்ப்பமாக இருக்கும்போது உடலுறவு கொள்ளக் கூடாது. எவ்விதமான பாலியல் நடவடிக்கையும் குழந்தைக்கு ஆபத்தானது. ஏனெனில் குழந்தை தன் மூச்சுக்கு தாயையே சார்ந்துள்ளது. குழந்தைக்கு வேண்டிய உயிர்க்காற்றை தாய்தான் வழங்குகிறாள். இந்நிலையில் தாயானவள் பாலியல் நடவடிக்கையில் ஈடுபடும்போது அவள் மூச்சுவிடும் ஒழுங்கு தடைபடுகிறது. சீரான சுவாச கதி என்பது அங்கே இருப்பதில்லை. எனவே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பது தெரியாமலேயே குழந்தை மூச்சுத் திணறுகிறது. உடலுறவு கொள்ளும்போது அதிக ஆக்சிஜனை தாயே எடுத்துக் கொள்கிறாள் - இப்போது இவை அறிவியல் ரீதியான உண்மைகளாக உள்ளன - அப்படி அதிக ஆக்சிஜனை தாயே எடுத்துக் கொள்ளும்போது குழந்தையால் ஆக்சிஜனைப் பெற முடிவதில்லை - சில நேரங்களில் அது இறந்துபோகவும் வாய்ப்பு உள்ளது. குழந்தை இறந்துவிடலாம். இவற்றையெல்லாம் குழந்தை நினைவு கூர்கிறது. நீங்களும் இவற்றையெல்லாம் நினைவுகூர்வீர்கள். அவை அங்குதான் இருக்கின்றன. ஆனால் அப்போது ஆணவம் இல்லாததால் அவை உங்கள்மீது ஒரு பாரமாக ஆகவில்லை.

ஞானியானவர் நிகழ்வுகளை இந்த முறையில்தான் நினைவு கூர்கிறார். நினைவுகூர்வதற்கான மையம் அவரிடம் இல்லை. நினைவுகளை அவர் சேகரித்திருக்கிறார். ஆனால் அது ஒரு சுமையாக இல்லை. அவர் விரும்பினால் நினைவுக்குள் அவர் பார்த்து ஒரு செய்தியை அதிலிருந்து கண்டெடுக்க அவரால் முடியும். ஆனால் அது அவருக்கு ஒரு சுமையாக

இருப்பதில்லை. நினைவுகள் தாமாகவே அவரிடம் வருவதில்லை. அவரால் கட்டுப்படுத்த முடியும், கண்டுகொள்ள முடியும்; ஆனால் பொதுவாக அவர் ஓர் வெட்டவெளி போலவே இருக்கிறார். எதுவும் அதுவாக அவரிடம் வருவதில்லை.

நான் கூறுவதற்கு அல்ல, உங்களின் சொந்த அனுபவத்துக்கே நீங்கள் கட்டுப்படுவீர்கள். உங்களுடைய துன்பத்தை கவனியுங்கள். அதன் காரணத்தை கண்டுபிடிக்க எப்போதும் முயலுங்கள். அப்போது அந்த காரணம் உங்களுக்கு உள்ளேயே இருப்பதை நீங்கள் காண்பீர்கள். காரணம் உள்ளுக்குள்தான் இருக்கிறது என்பதை ஒருமுறை நீங்கள் கண்டதுமே, மாறுதல் கட்டம் முதிர்ச்சியடைந்து விட்டிருக்கிறது என்று பொருள். இப்போது உங்களால் திருந்த முடியும், மாறமுடியும். நீங்கள் தயாராக இருக்கிறீர்கள். பொறுப்பை - பழியை மற்றவர்கள்மேல் சுமத்திக் கொண்டே போகிறவரை எந்த மாற்றத்துக்கும் வாய்ப்பில்லை. நீங்கள் உருவாக்கி இருக்கிற எல்லா அவலத்துக்கும் நீங்கள்தான் பொறுப்பு - நீங்களே உங்களுக்கு நரகமாக இருக்கிறீர்கள் என்பதை ஒருதடவை நீங்கள் உணர்ந்ததுமே, ஒவ்வொரு கணமும் ஒரு மாபெரும் திருப்பம் நிகழ்கிறது. உடனடியாக நீங்களே உங்களின் சொர்க்கமாக - பரலோகமாக ஆகிறீர்கள்.

எனவேதான், உறவுக்குள் செல்லுங்கள், உலகுக்குள் செல்லுங்கள், அனுபவத்துக்குள் செல்லுங்கள். முதிர்ச்சி பெற்றவராக - பக்குவ மடைந்தவராக - கனிந்தவராக ஆகுங்கள் என உங்களுக்கு நான் சொல்கிறேன். அதன்பிறகு மட்டுமே நான் சொல்லும் எதுவும் உங்களுக்கு பொருளுடையதாக இருக்கும். அது வரைக்கும் வார்த்தை அளவில் அதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்; வாழ்க்கை அளவில் அதை நீங்கள் தவறவே விடுவீர்கள்.

**ஐந்தாவது கேள்வி:**

**உங்களை ஓர் அன்பர் என்னும் முறையில் என்னால் உணர முடியுமென்று தோன்றவில்லை. எனக்கு நீங்கள் சரியானவர் என்று மட்டுமே உணர முடிகிறது. இப்படித் தோன்றுவதற்கு ஆண்களைப் பற்றி எனக்குள் இருக்கும் காரணமில்லாத பயங்கள்தான் காரணமா? ஒருவர் உங்களுடன் அடுத்த கட்ட உறவு கொள்வதற்கு முதல் கட்டமாக உங்களை அவர் நேசித்தாக வேண்டுமா?**

என்னை நீ புரிந்து கொள்ளவே இல்லை. நீ என்னை நேசிப்பவளாக இருக்க தேவையில்லை. நான் உன் நேசனாக இருக்கவும் தேவையில்லை. ஆனால் உன் சிரமம் எனக்கு புரிகிறது. ஒரு காதலராக இல்லாமலேயே

காதல் நிலவ முடியும் என்பதை உன்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. எனக்கு காதலியாக இல்லாமலே என்னை நீ காதலிக்க முடியும். அதுதான் மிகவும் உயர்ந்த வகையான அன்பு. மிகவும் பரிசுத்தமான அன்பு.

இதை விளங்கிக்கொள்வது தேவை. ஏனெனில் குருவுக்கும் சீடருக்கும் இடையிலான உறவு இவ்வுலகை சார்ந்ததல்ல. அவர் உங்கள் தந்தையோ, தாயோ அல்ல. உங்கள் கணவரோ, மனைவியோ அல்ல. உங்கள் குழந்தையும் அல்ல. உலகில் நிலவும் எல்லா உறவுகளும் ஓர் ஆசானுக்கும் சீடருக்கும் இடையில் பொருந்தாது. ஒரு விதத்தில் அவர் இந்த எல்லாமும்தான். ஒரு விதத்தில் அவர் இவற்றில் எதுவுமில்லை. ஒரு விதத்தில் அவர் ஒரு தந்தை போன்றவர் எனலாம். ஒரு விதத்தில் அவர் உங்களுக்கு ஒரு குழந்தைபோலதோன்றலாம். ஒரு விதத்தில் அவர் உங்களுக்கு ஒரு தந்தை போலாகலாம் என்று நான் சொல்லும்போது அவர் உங்களைவிட வயதானவராக இல்லாமல் போகலாம். வயதால் மிகவும் இளையவராக இருக்கலாம். ஆனாலும் ஒரு விதத்தில் அவர் உங்களுக்கு தந்தை போன்றவரே. ஏனென்றால் அவர் தருகிறார், நீங்கள் பெறுகிறீர்கள். மேலும் அவர் ஒரு மலை உச்சியில் வாழ்கிறார், நீங்களோ பள்ளத்தாக்கில் வாழ்கிறீர்கள் என்பதால், காலத்தால் உங்களைவிட முதியவராக அவர் இல்லாதிருக்கலாம், ஆனால் காலம் கடந்த நிலையில் உங்களைவிட அவர் அளவுகடந்த மூத்தவராக இருக்கிறார். மேலும் ஒருவிதத்தில் உங்களுக்கு அவர் ஒரு குழந்தை போலவே இருப்பார். ஏனெனில், திரும்பவும் அவர் ஒரு குழந்தையாக ஆகியிருக்கிறார். இந்த உறவு மிகவும் சிக்கலானது; மிகவும் புதிரானது. அவர் உங்களுக்கு கணவராக முடியாது, ஏனெனில் அவர் உங்களை உடைமைகொள்ள முடியாது, நீங்கள் அவரை உடைமை கொள்ளவும் முடியாது. ஆனால் ஒரு விதத்தில் அவர் ஒரு கணவர்போலவே இருக்கிறார். அவர் உங்களை உடைமை கொள்ளாமலே நீங்கள் அவரிடம் ஆட்படுகிறீர்கள். அவர் தரப்பிலிருந்து எந்த முயற்சியும் இல்லாமலேயே அவர் மீதான உங்களின் மனோபாவம் ஒரு காதலியுடையது போன்றதாக ஆகவே செய்கிறது. ஏனென்றால் ஒரு குருவுக்கும் சீடருக்குமிடையிலான உறவு எப்படிப்பட்டதாக இருக்கிறது என்றால், கண்டிப்பாக சீடர் பெண் தன்மை உள்ளவராக இருக்கவேண்டி இருக்கிறது. ஏனென்றால் அவர் பெறுபவராக இருக்கிறார். எனவே அவர் திறந்த தன்மையுடன் இருந்தாக வேண்டி உள்ளது. உண்மையை சொன்னால் குருவால் அவர் கருப்பமுற வேண்டி உள்ளது. அதன்பிறகு மட்டுமே மறுபிறப்பு வாய்க்கும்.

ஒருவிதத்தில் ஆசான் ஒரு மனைவிபோலவே இருக்கிறார். ஏனெனில் மிகுந்த மென்மையுடன் இருக்கிறார் அவர். அவர்

வாழ்விலிருந்து எல்லா முனைப்புகளும் மறைந்துவிட்டுள்ளன. மேலும் மேலும் மேலும் அதிகமதிகம் உருண்டு திரண்டவராக அவர் ஆகியிருக்கிறார். தன் உடலிலும் உயிரிலும் கூட அவர் அதிக பெண் தன்மை வாய்ந்தவராக இருக்கிறார். எனவேதான் பார்வைக்கு புத்தர் அதிக பெண்மை தன்மையுடன் தோன்றுகிறார்.

இதற்காக மட்டுமேதான் புத்தரை நீட்சே விமர்சித்தார்: அவர் பெண் தன்மையுள்ள ஓர் ஆண் என்றார். இந்தியாவின் பெண் தன்மையை முழுவதும் அவர்தான் உருவாக்கினார் என்றார் நீட்சே. ஏனெனில் நீட்சேயைப் பொறுத்தவரை ஆணே ஆற்றலுள்ள அம்சம். பெண் என்றால் பலவீனம். ஒரு விதத்தில் அவர் சொன்னது சரிதான். புத்தர் பெண்மை யானவர்தான். ஆனால் அவர் பலவீனமானவர் அல்லர். அல்லது பலவீனத்துக்கு அதற்கே உரிய ஒரு பலம் இருக்கிறது. அந்த பலம் வேறு எந்த பலத்துக்கும் இருக்க முடியாது. குழந்தை பலவீனமானதுதான் - ஆனால் ஒரு குழந்தையின் பலம் ஒரு கிழவனுக்கு இருக்க முடியாது.

பாறை மிகவும் வலுவானதுதான். ஒப்பிட்டால் ஒரு பூ மிகவும் வலுவற்றதுதான். ஆனால் பாறையானது ஒரு காலத்திலும் பெறமுடியாத ஒரு ஆற்றலை பூ பெற்றிருக்கிறது. நிச்சயமாக பூ பலவீனமானதுதான். காலையில் அது வருகிறது, மாலையில் மறைந்து விடுகிறது. மிகவும் நிலையற்றது அது, மிகவும் தற்காலிகமானது அது, மிகவும் குறுகிய வாழ்வே கொண்டது அது. ஆனால் வேறு ஒரு பரிமாணத்தை - வேறு ஒரு பண்பைக் கொண்ட ஆற்றலை மலர் பெற்றுள்ளது. ஏனெனில் அது மிகுந்த உயிர்த்தன்மையோடு உள்ளது. உண்மையில் மிகுந்த உக்கிரமாக அது உயிர் வாழ்வதால்தான் மிகவும் சீக்கிரமாக அது போய் விடுகிறது. ஒரு பூவின் வாழ்வின் தீவிரமே மாலையில் அது தீர்ந்துபோக காரணமாக உள்ளது. பாறை இருந்து கொண்டே இருக்கும். ஏனென்றால் முற்றிலும் சுரத்தில்லாத ஒரு வாழ்க்கை வாழுகிறது அது. அதன் வாழ்க்கை தீவிரமாக இல்லை - மிகவும் மந்தமாக, சோம்பலாக, தூங்கி வழிவதாக உள்ளது. பாறை உறங்குகிறது, பூவோ உயிர் வாழ்கிறது.

ஒரு விதத்தில் ஆசான் பலவீனமானவர்தான். ஏனெனில் பலவீனமே அவருடைய பலம். ஒரு விதத்தில் அவர் பெண்தான். ஏனெனில் ஆக்கிரமிப்புத் தன்மை அனைத்தும் போய்விட்டுள்ளது. வன்முறை அனைத்தும் மறைந்துவிட்டுள்ளது. ஒரு தந்தையைப் போல் இருப்பதைவிட அதிகமும் ஒரு தாயைப் போலவே இருக்கிறார் அவர். விசயம் மிகவும் சிக்கலானது. ஒருவரும் அன்பராக இருக்கத் தேவையில்லை, மாறாக ஒவ்வொருவரும் அன்பாக இருப்பது தேவை.

**உங்களை ஓர் அன்பர் என்னும் முறையில் என்னால் உணர முடியுமென்று தோன்றவில்லை. எனக்கு நீங்கள் சரியானவர் என்று மட்டுமே உணர முடிகிறது.**

எவ்வளவு ஒட்டாத தன்மை! சரியானவர் மட்டுமே தானா? சரியானவர் - அவ்வளவே என்பது போதாது. உனக்கு நான் சரியானவன் என்பதற்கும் மேலாக உனக்கு நான் இல்லாவிட்டால் எதுவுமே நடக்கப் போவதில்லை. சரியானவர் - அவ்வளவே என்பது ரொம்பவும் கணக்கு பார்ப்பதாக உள்ளது. சரியானவர் - அவ்வளவே என்பது தேவையான அளவைவிட குறைந்த அளவே. சரியானவர் மட்டுமே என்றால் உன்னை நான் வெளிஎல்லையில் மட்டுமே சந்திக்கிறேன், மையத்தில் அல்ல என்று தான் பொருள். மேலும் 'எனக்கு நீங்கள் சரியானவர் என்று மட்டுமே உணரமுடிகிறது' என்று நீ கூறும்போது, இந்த உறவு இதயத்தினுடையதாக இருக்க முடியாது; வெறும் மனத்தினுடையதே அது - மனமோ கணக்குப் பார்ப்பது, விவரமானது, சூழ்ச்சியானது, தற்காத்துக் கொள்வது, ஏனோதானோ ஆனது; ஆபத்தான இதய உறவுக்குள் இறங்காதது, எந்த நிமிடத்திலும் தப்பி 'சரியானவர் - மட்டுமே' என்பதன் பொருள். சரியானவர் மட்டுமே என்னும் நிலைபாட்டில் எந்த சாரமும் இல்லை, ஈரமும் இல்லை.

எனவே இந்த நிலையைத் தாண்டி வளர உன்னால் முடியாவிட்டால் பின் என்னைவிட்டு நீ விலகிவிடுவதே நல்லது. ஏனெனில் இந்த நிலையில் எதுவும் நிகழாது. உன்னிடம் போதிய ஆற்றல் இல்லை. மேலும் நீ என்னை நோக்கி விரைந்து வந்து கொண்டிருக்காவிட்டால் என்னாலும் உன்னை நோக்கி வர முடியாது. அதற்கு வாய்ப்பில்லை. நீயே வந்தாக வேண்டும். சீடருக்கும் குருவுக்கும் இடையிலான உறவானது முன்கூட்டி திட்டமிடப்பட்ட ஓர் உறவல்ல. இந்த குருவே உங்களின் சொந்த குருவாக ஆகிறபோதுதான் - இவர் ஒருவர்தான் குரு என்பதல்ல, குருக்கள் பலர் இருக்கிறார்கள், ஆனால் அதுவல்ல முக்கியம் - ஒரு சீடருக்கு ஒரு குரு மட்டுமே ஒரே குருவாக ஆகிற போது; கடந்தகாலம், வருங்காலம் ஆகிய முழுவரலாறும் இந்த மனிதர் முன்னிலையில் வெளிறிப் போகிறபோது; மற்ற எல்லாமே மங்கி மறைந்து இந்த மனிதர் மட்டுமே உங்கள் உள்ளத்தில் தங்கி நிலைக்கிற போது மட்டுமே ஏதாவது நடக்க வாய்ப்புள்ளது.

இதனாலேயே பல சிக்கல்கள் எழுகின்றன. புத்தர்மேல் ஒருவர் மையல் கொள்கிறார். உடனே அவர் புத்தரே ஒரே ஞானவான் என்கிறார். பின்னும் அவர், 'யேசுவும் ஞானிதான், கிருஷ்ணரும் ஞானிதான், ஆனால் புத்தரின் அளவுக்கு கிடையாது' என்கிறார். அந்நிலையில் யேசுவும்

கிருஷ்ணனும் ஒரு ஓரத்தில் எறியப்படுகிறார்கள்; மையத்திலோ - கோயிலின் இதய பீடத்திலோ / இதய கோயிலின் பீடத்திலோ - புத்தர் மட்டுமே இருக்கிறார். சீடரைப் பொறுத்தவரை இது முற்றிலும் சரியானதே. இன்னும் ஒருவர் யேசுவிடம் மையல் கொள்கிறார், ஆயின் அவரின் மையத்தில் யேசு வருகிறார்; புத்தர் - மகாவீரர் - முகம்மது எல்லாரும் ஓரத்தில் நிறுத்தப்படுகிறார்கள். குரு கதிரவன் போலாகி நீங்கள் புவி போல் - ஒரு கோள்போல் அவரைச் சுற்றிச்சுற்றி வரும்போதுதான் அவர் உங்களின் மையம் ஆகிறார்; உங்களின் வாழ்வின் மையமாக ஆகிறார். அதன்பிறகு மட்டுமே ஏதாவது நடக்க வாய்ப்புள்ளது, அதற்கு முன் அல்ல.

'சரியானவர்மட்டுமே' என்பது சரியே அல்ல. சரியானவர் - அவ்வளவே என்றால் பெரிதும் தவறானவர் என்றே பொருள்படும். சரியானவர் மட்டுமே என்னும் இந்த பொறியிலிருந்து வெளியேற முயல். நிறைந்து வழிபவளாய் என்னிடம் நீ வந்தால் மட்டுமே என்னை நீ கண்டுகொள்வாய். என்னை நோக்கி நீ ஓட்டமாக ஓடிவந்தால் மட்டுமே, உன்னால் முடியும். அளவு விரைவாக ஓடிவந்தால் மட்டுமே என்னை நீ கண்டு பிடிப்பாய். ''சரியானவர் தான்'' என்று நீ சொல்வது வெறும் ஒப்புக்கு சொல்வது போல் இருக்கிறது. ஒன்று, இதிலிருந்து வெளியே வா, அல்லது என்னிடமிருந்து வெளியே போ. ஒரு வேளை வேறு எங்காவது வேறு எவரிடமாவது நீ மையல் கொள்ள முடியலாம். எனவே எந்த குருவிடம் நீ மையல் கொள்கிறாய் என்பது கேள்வியே அல்ல. அது முக்கியம் இல்லை. நீ காதல் வயப்பட வேண்டும் என்பதே முக்கியம். எங்கு அது நிகழுமோ அங்குபோ. சரியானவர்தான் என்னும் அளவில்தான் நம்உறவு என்றால், பின் உனக்கான குரு நான் அல்ல; நீயும் எனக்கான சிஷ்யை அல்ல.

**இப்படி தோன்றுவதற்கு ஆண்களைப் பற்றி எனக்குள் இருக்கும் காரணமில்லாத பயங்கள்தான் காரணமா?**

இல்லை. ஆண்களைப் பற்றி உனக்குள் இருக்கும் காரணமில்லாத பயங்கள் காரணமில்லை. நீதான் காரணம். உன் ஆணவம்தான் காரணம். மேலும் ஆண்களைப் பற்றி உனக்குள் இருக்கும் அச்சங்களுக்கும் கூட உன் ஆணவம்தான் காரணம். அச்சங்களும் அகங்காரத்திலிருந்துதான் எழுகின்றன. எந்த ஒரு ஆணிடமும் ஒரு பெண்ணால் சரணடைய முடியவில்லை என்றால் அதற்கு காரணம் ஆண்கள் அங்கு இல்லை என்பதோ குறைவு என்பதோ அல்ல; அந்த பெண் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை என்பதால் மட்டும்தான். ஏனென்றால் முழு வளர்ச்சிபெற்ற ஒருவரால் மட்டுமே சரணடைய முடியும். ஏனென்றால் முழு வளர்ச்சிபெற்ற ஒருவருக்கு மட்டுமே, சரணடையுமளவுக்கு துணிச்சல்

இருக்க முடியும். இந்தப் பெண் குழந்தைத்தனமானவளாக - வளர்ச்சி அடையாத நிலையிலேயே இருக்கிறாள். அப்படியானால் ஒவ்வொரு ஆணுடனும் அவளுக்கு சிக்கல்தான் வரும்.

காதலில் சரணடைய உங்களால் முடியாவிட்டால், சரணாகதியே உங்களுக்கு மிகவும் கடினமானதாகும். குரு முன்னும் ஒரு சரணாகதி நிகழும். இதுவோ எந்த ஒரு ஆணோ பெண்ணோ கேட்க முடியக்கூடிய சரணாகதியை விடவும் எவ்வளவோ மிகப் பெரிய சரணாகதியாகும். ஏனெனில் ஒரு ஆண், காமத்துக்காக மட்டுமே உங்களுடன் உறவு கொள்கிறான் என்றால் உங்கள் உடலின் சரணாகதியை மட்டுமே அவன் கேட்கிறான். உங்களை அவன் காதலிக்கவும் செய்தால் உங்கள் மனத்தின் சரணாகதியையும் அவன் கேட்கிறான். ஆனால் ஒரு குரு உங்களையே கேட்கிறார் - உடல், மனம், உயிர் ஆகிய உங்களின் மொத்த இருப்பையும் அவர் கேட்கிறார்; அதற்கு குறைவான எதுவும் ஏற்கப்படுவதில்லை.

மூன்று சாத்தியப்பாடுகள் உள்ளன. ஒரு குருவின் அருகில் நீங்கள் வரும் போதெல்லாம் அவருடன் அறிவுரீதியாக - தலையின்வழியாக உறவு கொள்வதுதான் முதல் சாத்தியப்பாடு. இது ஒன்றும் பெரிதல்ல. அவருடைய கருத்துக்களை நீங்கள் விரும்புலாம். ஆனால் அதன் பொருள், அவரை நீங்கள் விரும்புகிறீர்கள் என்று ஆகாது. அவரது கருத்துக்களை - அவரது நிலைபாடுகளை விரும்புவதென்பது அவரை விரும்புவதாக ஆகாது. அவரது கருத்துக்களை மட்டும் பிரித்து எடுத்துக் கொள்ள உங்களால் முடியும். குருவுடன் எவ்வித உறவு கொள்ளவும் தேவை இருப்பதில்லை. கேள்வியாளருக்கு நிகழ்வது இதுதான். அவரது உறவு அறிவுரீதியானது. எனவேதான் 'அது சரிதான் - அவ்வளவுதான்' என்ற அளவிலேயே அது இருக்கிறது.

இன்னொரு சாத்தியப்பாடு இருக்கிறது: இதயபூர்வமாக நீங்கள் காதல்வயப்படுகிறீர்கள். இந்நிலையில் அவர் என்ன கூறுகிறார் என்பது முக்கியம் அல்ல. அவர்தான் முக்கியம். என்னுடன் நீங்கள் அறிவுரீதியான உறவு கொண்டால் கூடிய விரைவில் என்னை விட்டு நீங்கள் போய்விட வேண்டி இருக்கும். ஏனெனில் என் கருத்தை நானே மறுத்தபடியே போய்க் கொண்டிருப்பேன். ஒரு கருத்து உங்களுக்கு ஏற்புடையதாக இருக்கும். இன்னொரு கருத்து பொருந்தாமல் போகலாம். ஒரு கருத்தை நீங்கள் விரும்புவீர்கள்; இன்னொரு கருத்தை விரும்பமாட்டீர்கள் - நானோ தொடர்ந்து முரண்பட்டுக் கொண்டே போவேன். மேலும் ஒரு குறிப்பிட்ட காரணத்துக்காகவேதான் நான் முன்னுக்குப் பின் முரணாக பேசுகிறேன். அதாவது அறிவுரீதியாக என்னுடன் உடன்படுபவர்களை அல்ல,

அன்பினால் என்னை சூழ்ந்திருப்பவர்களை மட்டுமே நான் விரும்புகிறேன். எனவே அறிவை மட்டும் தேடி என்னிடம் வருவோரை கழித்துக் கட்டவே தொடர்ந்து முரண்பாடாகவே நான் பேசிக் கொண்டிருக்க வேண்டி உள்ளது.

இது'ஒரு வடிகட்டுதல் - மிக நுட்பமான வடிகட்டுதல் முறை ஆகும். ''அகன்று போங்கள்'' என்று ஒருபோதும் உங்களிடம் நான் கூறுவதில்லை. நீங்களாகவே போய்விடுகிறீர்கள். இந்த மனிதர் முரண்பாடாகப் பேசுகிறார், அதனால்தான் விலகிவிட்டோம் என்று உங்களுக்கும் நிறைவாக இருக்கும். இதயபூர்வமாக என்னுடன் உறவு கொள்வோர் மட்டுமே முரண்பாடுகளைப் பற்றி கவலைப்பட மாட்டார்கள். நான் சொல்வதைப் பற்றி அவர்களுக்கு கவலை இருக்காது. அவர்கள் நேரடியாக என்னையே பார்ப்பார்கள். அவர்கள் என்னை அறிவார்கள். எனவே என்னாலும் அவர்களை ஏமாற்ற முடியாது. அவர்கள் என்னை நேரடியாக அறிவார்கள்; நான் கூறுவதன் வாயிலாக அல்ல. பேச்சு அவர்களுக்கு அவ்வளவு முக்கியமாக இருப்பதில்லை.

இந்த வேறுபாட்டைப் பாருங்கள்: என் கருத்துகளால் கவரப்பட்டவர் கருத்துக்களின் வாயிலாகவே என்னுடன் உறவு கொண்டுள்ளார். என் மேல் அன்பு செலுத்துகிறவரோ என் கருத்துகளுடனும் உறவு கொண்டிருக்கலாம். ஆனால் என் மூலமாகவே அவற்றுடன் உறவு கொண்டிருக்கிறார். இது ஒரு பெரிய வேறுபாடாகும்.

அடுத்து மூன்றாவது வகையான ஒரு உறவும் இருக்கிறது. இரண்டாவது வகையான உறவு நிகழ்ந்த பிறகு மட்டுமே இது வாய்க்கும். மெய்யாகவே நீங்கள் அன்பாயிருந்தால், அது மிகவும் இயல்பானதாக மாறி அப்படியே மறைந்து விடுகிறது; அது அங்கு இருப்பதையே நீங்கள் உணர மாட்டீர்கள் என்பதே நான் கூறுவதன் பொருள். நீங்கள் மூச்சுவிடுவது பற்றிய உணர்வு உங்களிடம் இருக்கிறதா? மாறுபாடு ஏதாவது ஏற்படுமானால் - ஆம், நீங்கள் விரைந்து ஓடி அதனால் சுவாசமும் வேகமாக நடந்து, சுவாசிப்பது உங்களுக்கு கடினமாக ஆகும்போது - அதை நீங்கள் உணர்வீர்கள். ஆனால் நீங்கள் உங்கள் இருக்கையில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும்போது, எல்லாமே சீராக இருக்கும்போது, உங்கள் சுவாசம்பற்றிய உணர்வு உங்களுக்கு வருகிறதா? இல்லை. அதற்கு எந்த தேவையுமில்லை. தலைவலி வந்தால் மட்டுமே தலை இருக்கிற உணர்வு உங்களுக்கு வருகிறது. ஏதோ கோளாறாகி விட்டது. தலை முற்றிலும் நலமாக இருக்கையில் நீங்கள் தலையற்றவராகவே இருக்கிறீர்கள். இதுதான் முழுநலம் என்பதன் இலக்கணம். உண்மையிலேயே உடல் நலத்துடன் இருக்கிற போது அது இருப்பது உங்களுக்கு தெரிவதில்லை - ஏதோ,

அப்படி ஒன்று இல்லாத மாதிரி. உடலற்றவர்போல் நீங்கள் ஆகிறீர்கள். உண்மை அன்பின் இலக்கணமும் இதுதான். அன்பே அறுதி நலம், உச்ச நலம். ஏனென்றால் அன்பே ஒருவரை முழுமை ஆக்குகிறது. ஒரு குருவை நீங்கள் நேசிக்கும்போது, மெதுமெதுவாக, அன்பை முழுமையாக நீங்கள் மறக்கிறீர்கள். மூச்சு விடுவது போல் அவ்வளவு இயல்பானதாக ஆகிவிடுகிறது அது.

அப்போது, மூன்றாவது வகை உறவு நடைமுறைக்கு வருகிறது - இதுவோ தலைசார்ந்ததும் அல்ல, இதயம்சார்ந்ததும் அல்ல; மாறாக உயிரையே சார்ந்தது. இதயமும் தலையும் இரண்டு அடுக்குகள் மட்டுமே. அவற்றின் அடியில் மறைந்திருப்பது உங்கள் உயிர் என்னும் மையம். ஆத்மா, ஆவி, தான் என நீங்கள் விரும்பும் எப்படி வேண்டுமானாலும் அதை அழைக்கலாம். ஏனெனில் அந்த இடத்தில் எவ்விதமான சொல் பேதங்களுக்கும் எந்த பொருளுமில்லை. அதை நீங்கள் அனாத்மா, தானற்றது என்றும் அழைக்க முடியும் - அதுவும் பொருந்தும். தலை தொடக்கம்தான். அங்கேயே நின்று விடாதீர்கள். இதயமே வாசல். அங்கேயும் கூடாரமிட்டு தங்கிவிடாதீர்கள். அதையும் கடந்து செல்லுங்கள். உயிரிலிருந்து உயிருக்கு - அப்போது மெய்யாகவே சீடரும், குருவும் இருவர் அல்லர். உடலால் இருவராக அவர்கள் இருக்கிறார்கள்; ஆனால் ஒரே விழிப் புணர்வே ஒரு கரையில் இருந்து மறுகரைக்கு பாய்ந்து கொண்டிருக்கிறது.

ஆறாவது கேள்வி:

**பள்ளிப் பருவத்துக் குழந்தை சன்னல் வழியாக வேடிக்கை பார்க்கும்போது அது தியான நிலையில் இருக்கிறதென்று சொன்னீர்கள். அந்த பருவத்தில் நான் அப்படி செய்தபோது நான் பகல்கனவு கண்டதாகவும் தியானத்துக்கும் அதற்கும் வெகுதூரம் என்றுமே எப்போதும் நான் எண்ணி வந்துள்ளேன். அப்படியானால் அந்தநேரங்களில் எல்லாம் தியானம் என்று தெரியாமலேயே நான் தியானத்தில் இருந்திருக்கிறேனா?**

ஆம். குழந்தை தியான நிலையில்தான் இருக்கிறது. ஆனால் இந்த தியானம் அறியாமையில் நிகழ்வது. அது போய்விடவே வேண்டி யிருக்கும். நீங்களாக முயன்று அடையாத எதுவும் உங்களிடம் தொடர்ந்து தங்கியிருக்க முடியாது. நீங்களே ஈட்டியவை மட்டுமே உங்களுடையதாக ஆகிறது. குழந்தை தியானத்தில் இருப்பது அதன் அறியாமையினால்தான். கவனத்தை சிதறடிக்க அதனிடம் பலவித எண்ண ஓட்டங்கள் இல்லை. குழந்தை தியானத்தில் இருப்பது எதனால் என்றால், இயல்பாக மனம்

எதிலெல்லாம் இன்பத்தைக் காண்கிறதோ அதிலெல்லாம் மனம் செல்ல அது அனுமதிக்கிறது.

உண்மையில் குழந்தை இன்னும் சமூகத்தின் ஒரு பகுதியாக ஆகவில்லை. குழந்தை இன்னும் பழங்குடி நிலையிலேயே, விலங்கு போலவே இருக்கிறது. ஆனாலும் விதை வளர்ந்து கொண்டிருக்கிறது. கூடிய விரைவில் அவன் சமூதாயத்துக்குள் வந்துவிடுவான். அதன் பின் தியானம் முழுமையாக பறிபோய்விடும். குழந்தைப் பருவத்தின் அப்பாவித்தனம் இழக்கப்பட்டுவிடும். ஆதாமையும் ஏவாளையும் போலவே குழந்தையும் ஈடன் தோட்டத்தில் இருக்கிறது. அவர்கள் வீழ்ச்சி அடையவே வேண்டியிருக்கும். அவர்கள் பாவமிழைக்கவே வேண்டியிருக்கும். உலகத்துக்குள் அவர்கள் தூக்கி எறியப்படவே வேண்டியிருக்கும். ஏனென்றால் உலக அனுபவத்திலிருந்து மட்டுமே பக்குவப்பட்ட ஒரு தியானம் எழுகிறது - இதுவோ இழக்கப்பட முடியாதது ஆகும்.

ஆக இரண்டு விதமான அப்பாவித்தனங்கள் உள்ளன. ஒன்றின் காரணம் அறியாமை. மற்றதின் காரணம் விழிப்புணர்வு. புத்தரும் குழந்தையை ஒத்தவரே. அப்படியே எல்லா குழந்தைகளும் புத்தரை ஒத்தனவே. ஆனால் மிகப்பெரிய ஒரு வேறுபாடு இருக்கிறது. எல்லா குழந்தைகளும் உலகில் தங்களை இழந்துவிடுவார்கள். அவர்களுக்கு அனுபவம் தேவை. உலகுக்குள் அவர்கள் தூக்கி வீசப்படுவது தேவை. ஆனால் தம் அனுபவத்தின் வழியாக மீண்டும் அவர்கள் தியானத் தன்மையை, அப்பாவித்தனத்தை, குழந்தைமையை அடைந்துகொண்டால் பின் யாரும் அவர்களை தூக்கி எறிய முடியாது. இந்த தடவை சொந்த அனுபவத்திலிருந்து அதை அவர்கள் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். இனிமேல் அது நிலவுவது அறியாமையினால் அல்ல; அவர்களின் அனுபவத்தினாலேயே அது இருக்கிறது. இப்போது அது அவர்களின் சொந்த கருவூலம்.

எல்லாமே சரிவர நடந்து வருமானால் பின் உங்கள் வாழ்வின் இறுதிப் பகுதியில் நீங்கள் மீண்டும் குழந்தைகளாக ஆவீர்கள். ஆயின் இதுவே எல்லா சமயங்களின் குறிக்கோளுமாகும். மேலும் மறுபிறவி என்பதன் பொருளும் இதுதான். கிறித்தவ சமயம் கூறும் உயிர்த்தெழுதல் - மீட்பு என்பதன் பொருளும் இதுவே. உயிர்ப்பு என்பது உடல் சார்ந்ததல்ல; அது ஆன்மா சார்ந்தது. மறுபடியும் ஒருவர் குழந்தைபோல் ஆகிறார் - மறுபடியும் ஒருவர் தூயராக ஆகிறார். ஆனால் இந்த தூய்மையானது அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. அனுபவத்தில் வேர் கொண்டது. மறுபடியும் ஒரு குழந்தையாக ஆகாமல் நீங்கள் இறந்துவிட்டால் உங்கள் வாழ்வை நீங்கள் வீணாக வாழ்ந்திருக்கிறீர்கள்.

பயனற்ற வாழ்வு வாழ்ந்துவிட்டீர்கள். கிடைத்த வாய்ப்பை அடியோடு பாழ்படுத்தி விட்டீர்கள். அப்படியானால் நீங்கள் திரும்பவும் வரவேண்டி இருக்கும் - முழுமையானது உங்களை திரும்பத்திரும்ப தூக்கி எறிந்தபடியே இருக்கும்.

மறுபிறவிக் கோட்பாடு முழுவதுமே இதுதான்: நீங்களாக அதை கற்றுக்கொள்ளாதவரை உங்களிடம் முழுமை திருப்தி அடைவதில்லை. உங்கள் சொந்த முயற்சியில் நீங்கள் ஒரு குழந்தையாக ஆகாவிட்டால் - உங்கள் உடலால் அல்ல, உங்கள் உள்ளத்தால் நீங்கள் ஒரு குழந்தையாக ஆகாவிட்டால் - திரும்பத் திரும்பத் திரும்ப நீங்கள் திருப்பி அனுப்பப்படவே வேண்டி இருக்கும்.

வாழ்க்கையே ஒரு படிப்புதான்; ஒரு ஒழுக்கம்தான். எனவே நீங்கள் மட்டுமல்ல, ஒவ்வொரு குழந்தையும் தியானத்திலேயே இருந்திருக்கிறது. பின்பு அதை இழந்து விடுகிறது. ஆனால் ஒரு குழந்தை அதை இழப்பது சூழலினால் அல்ல, உள்ளார்ந்த இன்றியமையாமையினால். அந்த அப்பாவித்தனத்தை கட்டாயம் அது இழந்தே ஆக வேண்டி உள்ளது. ஏனெனில் அது ஆழமானது அல்ல. கவனச் சிதறல்களை அதனால் கடந்து நிற்க முடியாது. அது மேலோட்டமாயுள்ளது.

நீங்களே நினைத்துப் பாருங்கள் - ஒரு குழந்தை அப்பாவியாக இருக்கிறது - ஆனால் அதன் அப்பாவித்தனம் மேலோட்டமானதாக இருக்கிறது. அதில் ஆழம் இருப்பதில்லை. அதன் உணர்ச்சிகள் எல்லாமே மேலோட்டமாக இருக்கிறது: ஒரு நிமிடம் விரும்புகிறது, மறுநிமிடமே வெறுக்கிறது. ஒரு நிமிடம் கோபிக்கிறது, மறு நிமிடம் மன்னித்து விடுகிறது - முழுமையாக மறந்து விடுகிறது. மிக மேலோட்டமான - வேர்பிடிக்காத ஒரு வாழ்வை அது வாழ்கிறது. அதனிடம் ஆழமில்லை. அனுபவத்தின் வழியாகவே ஆழம் வருகிறது.

ஒரு புத்தரிடம் ஆழமிருக்கிறது - அதுவோ ஆழம்காண முடியாத ஆழம். வெளிப்பார்வைக்கு அவரும் ஒரு குழந்தைபோலவே இருக்கிறார். ஆனால் அவரின் இருப்பின் அடியாழத்தில் அவர் ஒரு குழந்தையைப் போலவே இல்லை. பல பிறப்புகளின் அனுபவங்கள் அனைத்தும் அவரை பக்குவப்படுத்தி உள்ளன. எதுவும் அவரை கலைத்துவிட முடியாது. எதுவும் அவரது நிர்மல தன்மையை ஒழித்துவிட முடியாது - எதுவும் என்றால் எதுவுமேதான். இப்போது அவரது நிர்மலத்தன்மை எவ்வளவு ஆழமாக வேர்கொண்டிருக்கிறது என்றால், புயல்கள் வரலாம் - உண்மையில் அவற்றை அவர் வரவேற்கவே செய்கிறார் - ஆனால் மரம் சாய்வதில்லை. புயலின் வருகையை அது ரசிக்கும். தன்னை வேரோடு சாய்க்க புயல் நடத்தும் போராட்டத்தையும் அது ரசிக்கும். புயல் ஓய்ந்தபின்

அதனால் மரத்தின் பலம் குறைந்திருக்காது. மாறாக முன்னிலும் அதன்பலம் கூடித்தான் இருக்கும்.

இதுதான் வேறுபாடு - குழந்தையின் அப்பாவித்தன்மை இயற்கையின் வரம் / கொடை. உங்களின் சொந்த முயற்சிகளால் நீங்கள் அடைந்துகொள்ளும் நிர்மலத் தன்மையோ இயற்கையின் கொடை அல்ல, உங்கள் சொந்த முயற்சியின் பலன் அது. மேலும் நீங்களாக ஈட்டும் எதுவும்தான் உங்களுடையதாகும். என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். இருத்தலில் திருட்டுக்கு இடமில்லை; எந்த கொள்ளைக்கும் களவுக்கும் வாய்ப்பில்லை. மேலும் வேறு யாரிடமிருந்தும் அதை நீங்கள் இரவல் பெறவும் முடியாது.

**ஏழாவது கேள்வி:**

**கனவுகளைப் பற்றி பல கேள்விகள் கேட்கப்பட்டுள்ளன. ஒருவர் கேட்டுள்ளார்: தரிசனங்களும் கனவுகள் தாமா? தூக்கத்திலும் கனவிலும் கண்காணிப்புடன் இருப்பது எப்படி? சில நேரங்களில் என் கனவுகளில் நீங்கள் வருவதாக உணர்கிறேன். அப்படிப்பட்ட கனவுகளை நான் எப்படி எடுத்துக் கொள்வது?**

ஆம், தரிசனங்களும் / காட்சிகளும் கனவுகள்தான்; ஆனால் இந்த உலகைச் சேர்ந்தவை அல்ல. வேறு உலகைச் சேர்ந்தவை அவை. சில நேரங்களில் உங்களுக்கு காட்சிகள் கிட்டுகின்றன. நீங்கள் தியானித்தால் அவை மென் மேலும் வரும். அப்போதைக்கு தொடர்ந்த வழக்கமான நிகழ்ச்சிகளாக அவை ஆகிவிடும்.

ஆக, ஒருவர் கேட்டிருக்கிறார்:

**தரிசனங்களும் கனவுகள்தாமா?**

ஆம். ஆனால் அவை இந்த உலகைச் சேர்ந்த கனவுகள் அல்ல, வேறு உலகைச் சேர்ந்த கனவுகள். அவை பொருள்களுடன் தொடர்புடையதல்ல, மாறாக உங்களின் உள்நிலைமைகளுடன் தொடர்புடையவை அவை. இருந்தாலும் அந்த நிலையிலும் அவை கனவுகளே. எனவே அவற்றைத் தொற்றிக் கொண்டிராதீர்கள். அவற்றையும் கடந்து மேற்சென்றாக வேண்டும். உங்கள் காட்சியில் ஒரு புத்தரை நீங்கள் கண்டால் அந்த புத்தரும் ஒரு கனவுதான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்கள் தேடலின் வழியில் வரும் அழகான - ஆன்மீகமான - மிகமிக உதவிகரமான ஒரு கனவுதான் அது. இருந்தாலும் அதை தொற்றிக் கொண்டிராதீர்கள்.

வழியில் ஒரு புத்தரை நீங்கள் சந்தித்தால் உடனடியாக அவரை கொன்று விடுங்கள் என்று நூற்றாண்டுகளாக ஸென் ஆசான்கள் சொல்லி வந்திருக்கிறார்கள். ஒரு கணம்கூட தாமதிக்காதீர்கள். நீங்கள் அவரை கொல்லாவிட்டால் அவர் உங்களை கொன்றுவிடுவார் என்றார்கள். அவர்கள் சொல்வது சரிதான்.

காட்சிகள் அழகானவையே. ஆனால் அவற்றில் நீங்கள் அளவுக் கதிகமாக திளைக்கத் தொடங்கிவிட்டால் அவை ஆபத்தானவையாக ஆகமுடியும். அந்நிலையில் மறுபடியும் ஏதோ ஓர் அனுபவத்துடன்-நீங்கள் கட்டுண்டு விடுகிறீர்கள். ஆனால் புத்தரை நீங்கள் பார்த்தால் அது நிச்மாகவே அழகாகவே இருக்கிறது. யதார்த்தத்தைவிட அதிக யதார்த்தமாகவே அது தோன்றுகிறது; மிகுந்த அருளுடையதாகவும் தோன்றுகிறது - அந்த காட்சியை வெறுமனே காண்பதாலேயே உள்ளுக்குள் மிகுந்த அமைதியையும் சமாதானத்தையும் நீங்கள் உணர்கிறீர்கள். தன் குழலில் ஒரு பாட்டை இசைத்தபடி காட்சியளிக்கும் கண்ணனைக் கண்டால் யார்தான் தொற்றிக்கொள்ள விரும்பமாட்டார்? எவருக்கும் அதை பிடித்து வைத்துக்கொள்ளவே பிடிக்கும். இந்த காட்சியானது மீண்டும் மீண்டும் தோன்ற வேண்டும் என்றே எவரும் விரும்புவார். அந்நிலையில் புத்தர் உங்களை கொன்றுவிடுகிறார்.

இந்த அளவுகோலை நினைவில் கொள்ளுங்கள், அதாவது காணப்படுவதை எல்லாம் கனவாகவே மதித்தாக வேண்டும். காண்பவர் மட்டுமே மெய். காணப்படுவது எல்லாமே கனவே - நல்ல கனவு, கெட்டகனவு, மதம் சார்ந்த கனவு, மதம் சாராத கனவு, காமக்கனவு, கடவுள்கனவு எதுவாயினும் அவற்றுக்கிடையில் எந்த வேறுபாடும் இல்லை. கனவுகளில் காம கழிசடைக் கனவுகளும் உள்ளன, ஆன்மீக கழிசடைக் கனவுகளும் உள்ளன. ஆனால் இரண்டுமே கழிசடைகள்தான். எல்லாவற்றையுமே கைவிட்டாக வேண்டும். அனைத்து அனுபவமும் கனவுதான். அனுபவிப்பவர் மட்டுமே நனவு. மேலும், பார்க்க ஒன்றுமற்ற - கேட்க ஒன்றுமற்ற - முகர ஒன்றுமற்ற - தொட ஒன்றுமற்ற ஓரிடத்துக்கு, வெறும் வெட்டவெளியும் நீங்களும் மட்டுமே இருக்கும் இடத்துக்கு, நீங்கள் வந்தாக வேண்டும். பார்ப்பவர் மட்டுமே அங்கு மிச்சமிருக்கிறார். பார்வையாளர்கள் அனைவரும் போய்விட்டார்கள். விருந்தாளிகள் யாவரும் போய்விட்டார்கள், வீட்டுக்காரர் மட்டுமே தனியாக இருக்கிறார். இந்த கணம் வரும்போது மட்டுமே மெய்யான நிகழ்வு நிகழ்கிறது. அதற்கு முன் நிகழும் எல்லாமே கனவுதான்.

இரண்டாவது கேள்வி ஒன்றும் கேட்கப்பட்டுள்ளது. அதாவது:

## தூக்கத்திலும் கனவிலும் கண்காணிப்புடன் இருப்பது எப்படி?

விழிப்புடனிருக்க முயலும் போதெல்லாம் தன்னால் தூங்க முடிவதில்லை என்கிறார், கேள்வி கேட்டுள்ள மனிதர். அதாவது தூக்கம் வந்து கொண்டிருக்கும்போது, தான் விழிப்பாக இருந்தாக வேண்டும் என்பது திடீரென அவர் நினைவுக்கு வருமானால் அவரது தூக்கம் தடைபடுகிறது, அதன்பின் அவரால் தூங்க முடிவதில்லை, தூங்குவது கடினமாக இருக்கிறது என்கிறார்.

விழிப்புணர்வுடன் தூங்குவது என்பதை எடுத்த எடுப்பில் செயல்படுத்திவிட முடியாது. முதலில், விழித்திருக்கும்போது அதை நீங்கள் செயல்படுத்த வேண்டியுள்ளது. தூங்கும்போது அதற்கு நீங்கள் முயற்சி எடுக்காதீர்கள். முயற்சிசெய்தால் உங்கள் தூக்கம் தடைபடும் என்பதுடன் உங்கள் நாள் (பகல்) முழுக்க நாசமாகிவிடும். சோர்வாக, சோம்பலாக, தூக்க கலக்கமாகவே உணர்வீர்கள். அதை செய்யாதீர்கள்.

ஒரு வரிசைமுறை உள்ளது என்பதையும் கட்டம் கட்டமாகவே ஒருவர் செயல்பட வேண்டியுள்ளது என்பதையும் எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். விழித்திருக்கும்போது உணர்வுடன் இருப்பதுதான் முதல் கட்டம். அந்த கட்டத்தில் தூக்கத்தைப் பற்றியே நினைக்காதீர்கள். முதலில் பகலில் விழித்திருக்கும்போது உணர்வுடன் இருங்கள். விழிப்புணர்வின் ஆற்றலை போதிய அளவு சேகரித்துக் கொண்டபின் மட்டுமே இரண்டாவது கட்ட நடவடிக்கையை மேற்கொள்ள முடியும். அந்நிலையில் மெய்யாகவே எவ்வித சிரமமும் இருக்காது. பகல் நெடுகவும் நீங்கள் சேகரித்துக் கொண்ட ஆற்றலே உள்ளுக்குள் விழிப்புணர்வாக தங்கி இருக்கும். எந்த முயற்சியும் தேவைப்படாது. முயற்சி தேவைப்பட்டால் தூக்கம் தடைபடும். ஏனெனில் முயற்சி என்பது தூக்கத்துக்கு எதிரானது.

உலகம் முழுவதும் இதுதான் நடக்கிறது: கோடிக்கணக்கான மக்கள் தூக்கம் வராமல் துன்புறுகிறார்கள். அப்படிப்பட்ட 100 பேர்களில் 99 பேர் தூங்குவதற்கு ஏதாவது முயற்சி செய்வதாலேயே தூக்கம் வராமல் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். முயற்சி செய்வது தூக்கத்துக்கு எதிரானது. தூங்குவதற்கு பல வழிகளில் அவர்கள் முயலுகிறார்கள். அந்த முயற்சியே தூக்கத்துக்கு தடையாக அமைகிறது. முயற்சியானது உங்களை விழிப்பானவராக ஆக்குகிறது. முயற்சி உங்களை இறுக்கமானவராக ஆக்குகிறது. ஆனால் தூக்கமோ ஒரு முயற்சியற்ற நிகழ்வாகும். தானாக நீங்கள் தூங்கிவிடுகிறீர்கள். அதற்காக எதையும் செய்வது தேவையில்லை. செய்தால் தூக்கம் வாய்க்காமல் போகும். பேசாமல் தலையணையில்

தலைசாய்க்கிறீர்கள், வேறு எதையும் செய்வதில்லை; தூக்கம் வரட்டும் என்று காத்திருப்பது கூட இல்லை. ஏனென்றால் தூக்கத்துக்காக நீங்கள் காத்துக்கொண்டிருந்தால் - காத்துக்கொண்டிருத்தல் என்ற ஒரு வேலையை செய்து கொண்டிருப்பவர் ஆகிறீர்கள். (எனவே) அமைதியாக படுக்கையில் படுங்கள், விளக்கை அணையுங்கள், கண்ணை மூடுங்கள்; தூக்கம் வருகிறது. நீங்கள் அதை கொண்டுவர முடியாது. அதுவாகவே வருகிறது. அது ஒரு செயல் அல்ல.

மேலும், தூக்கத்தின் தன்மையைப் புரிந்துகொள்வது வேறு பல விசயங்களையும் புரிந்துகொள்ள உதவும். சமாதியும் அதைப் போன்றதே. எனவேதான் தூக்கத்துக்கும் சமாதிக்கும் பொதுவான ஒரு தன்மை உண்டு என பின்னர் பதஞ்சலி கூறுவார். அந்த பொதுத்தன்மை இதுதான்: தூக்கம் - சட்டாரி - சமாதி எல்லாமே தாமே வருவன. அதைக் கொண்டுவர எதையும் நீங்கள் செய்வதற்கில்லை. செய்ய முயன்றால் தவறவிடுவீர்கள். தவறவிட நீங்கள் விரும்பவில்லை என்றால் சும்மா இருங்கள், அதுவே வரும்.

எனவே தூங்க போகும்போது விழிப்பாயிருக்க எந்த முயற்சியும் மேற்கொள்ள வேண்டாம். தூக்கத்தை நீங்கள் கெடுத்து விடுவீர்கள்; விழிப்புணர்வையும் அடைய மாட்டீர்கள். பகலில் முயன்றுபாருங்கள். பகலில் நீங்கள் அதிகமதிக கவனமாயிருக்கும்போது, அந்த கவனத் தன்மையின் ஓட்டமே தன் சொந்த விசையால் தூக்கத்துக்குள்ளும் ஊடுருவுகிறது; நீங்கள் தூங்கிவிடுகிறீர்கள். இருந்தாலும் உங்களுக்குள்ளிருந்து ஒரு மையம் கவனித்துக் கொண்டிருப்பதை உணர்கிறீர்கள். உள்ளுக்குள் (தொடக்கத்தில் மங்கலாகவே என்ற போதிலும்) ஒரு சுடர் ஒளிர்ந்து கொண்டிருப்பதை உணர்கிறீர்கள். விழிப்புடனிருக்க உங்களால் முடிகிறது. ஆனால் இதை தூக்கத்தில் செய்ய தொடங்காதீர்கள், விழித்துக்கொண்டிருக்கும்போது செய்யத் தொடங்குங்கள்; நீங்கள் தூங்கும்போது அதுவே நிகழும்.

**கடைசி கேள்வி:**

**பலரும் தம் கனவுகளில் சில நேரங்களில் நீங்கள் வருவதாக உணர்கிறார்கள். இப்படிப்பட்ட கனவுகளைப் பற்றி என்ன நினைப்பது?**

அவை ஒரே தரமானவை அல்ல. அவரவரைப் பொறுத்தது அது. சிலநேரங்களில் அது. குப்பை என நான் குறிப்பிட்ட முதல் வித கனவாகவே இருக்கலாம். ஏனெனில் நான் பேசும்போது மிக உன்னிப்பாக நீங்கள் கவனிக்கிறீர்கள், அது உங்கள் மனதில் ஒரு பதிவை ஏற்படுத்திவிடுகிறது.

பின் அது சுமையாக மாறமுடியும். சில நேரங்களில் மனம் அதை வெளியிட்டாக வேண்டி இருக்கும். இதுவோ வெறும் குப்பைதான்.

ஆனால் அது இரண்டாம் விதமாகவும் இருக்கமுடியும். நான் உங்களுக்கு இன்னும் அதிக நெருக்கமாக இருக்க நீங்கள் விரும்பலாம். ஆனால் நானோ ஏராளமான தடுப்புகளை உருவாக்கி வைத்திருக்கிறேன். எனவே அந்த அளவுக்கு நெருங்கிவர நீங்கள் அனுமதிக்கப்படுவதில்லை. காலையில் என்னை நீங்கள் பார்க்க முடிகிறது, அதுவும் தள்ளி இருந்துதான். மாலையில் நீங்கள் வர முடியும் - அதிலும் சிக்கல் உண்டு. எனவே அதை நீங்கள் அடக்கிக் கொள்ள வேண்டி இருக்கிறது. அந்த ஒடுக்குதல் இரண்டாம் வகை கனவுக்கு காரணமாக முடியும். நான் உங்களிடத்தில் வந்திருப்பதாக நீங்கள் கனவு காணலாம். அல்லது நீங்கள் என்னிடத்துக்கு வந்து என்னுடன் பேசிக்கொண்டிருப்பதாக கனவு காணலாம்.

மூன்றாவது விதமாகவும் அது இருக்க முடியும்: உணர்வற்ற மனத்தின் ஒரு தொடர்பு ஆக அது இருக்கலாம். அப்படி இருந்தால் பின் அது அர்த்தமுடையதே. என்னிடமிருந்து தப்பிக்க நீங்கள் முயன்று கொண்டிருப்பதையே அது காட்டுகிறது. இன்னும் நெருங்கி வாருங்கள் உணர்வற்ற மனம் கூறுவதெல்லாம், ''தப்பிக்க முயலாதே, விளிம்பிலேயே நின்றுகொண்டிராதே, கிட்டே வா'' என்பதைத்தான்.

நான்காவது விதமாகவும் அது இருக்க முடியும்: உங்களின் முற்பிறவிகளில் இருந்து அது வந்திருக்க முடியும். ஏனெனில் உங்களில் பலர் ஏற்கனவே என்னுடன் வாழ்ந்திருக்கிறீர்கள். அது கடந்த காலத்தின் ஒரு பகுதியாகலாம். கடந்த கால தடத்தில் உங்கள் மனம் இயங்கிக்கொண்டிருக்கலாம்.

ஐந்தாவது விதமாகவும் அது இருக்க முடியும்: வருங்காலத்தில் அமையக்கூடிய ஒரு வாய்ப்பாக அது இருக்கலாம். எல்லா விதங்களுக்கும் வாய்ப்புள்ளது. இவை ஐந்து விதமான கனவுகள். அது ஒரு காட்சியாக இருக்க முடியும் - இதுவும் ஒருவித கனவுதான். இதைப்பற்றி நான் பேசவில்லை. ஏனென்றால் இதன் தன்மை வேறு. விழித்திருக்கும் நேரத்து வாழ்க்கையின் தன்மையை கொண்டது அது. அதுவும் ஒரு கனவுதான். விழித்திருக்கும்போது நடைபெறும் வாழ்வுமே ஒரு நீண்ட கனவுதான். ஆனால் காட்சி என்பது விழித்திருக்கும் நேரத்து வாழ்வின் தன்மையை கொண்டுள்ளது. சில நேரங்களில் உங்களிடம் நான் வருகிறேன். ஆனால் அது அபூர்வம். ஏனெனில் இதை நீங்கள் ஈட்டியாக வேண்டி உள்ளது. நூறு முறை என்னை நீங்கள் கண்டால் அவற்றில் 99 முறைகள் இந்த ஐந்துவித கனவுகளில் ஒன்றாகவே இருக்கும். ஆனால் நூறாவது தடவை உங்களிடம் நான் வரும்போது, அது நீங்கள் ஈட்டியதாக இருக்கும். அப்போது அது ஒரு தரிசனமாகும்.

ஆனால் மெல்ல மெல்ல மெய் நிலவரத்தை நீங்கள் அறிந்தவராக ஆகவேண்டி வரும். மெய்நிலவரத்தை மதிப்பிடுவது எவ்வாறு என்ப தற்கான அளவு கோல்களை தற்போது உங்களுக்கு நான் தரமுடியாது. அவற்றை நீங்களே சுவைத்தாக வேண்டும்.

எனவே முதலில், பகலில் விழித்திருக்கும்போதே விழிப்புணர்வுடன் இருக்க பயிலுங்கள். மென்மேலும் கூடுதலான விழிப்புணர்வாற்றலை திரட்டுங்கள். அதை ஒரு பொங்கிப் பாயும் பெருவெள்ளமாக ஆக்குங்கள். அந்நிலையில், நீங்கள் தூங்கியதும் - உங்கள் உடல் தூங்கியதும் - உங்கள் மனம் தூங்கியதும், அந்த ஆற்றலானது - விழிப்புணர்வு வெள்ளமானது உங்கள் தூக்கத்திலும் மிகுந்த விசையுடன் தொடர்கிறது. அப்போது உங்களால் பாகுபடுத்திப் பார்க்க முடியும். அப்படி கனவுகளில் பாகுபடுத்திப் பார்க்க முடிகிறவராக ஒருவர் ஆகிற போது அது ஒரு மாபெரும் சாதனைதான்.

அதன்பின் பையப்பைய குப்பை உதிர்ந்துவிடுகிறது. முதல்வகை கனவு மறைகிறது. ஏனெனில் விழிப்புணர்வுள்ள மனிதர் பகலில் மிக முழுமையாக வாழ்ந்தால் குப்பைகளை அவர் சேகரிப்பதில்லை. குப்பை என்பது நிறைவேறாத அனுபவங்கள்தான். நீங்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். உணவு மிகவும் சுவையாக இருக்கிறது. ஆனால் அதை மிகுதியாக உட்கொள்ள உங்களால் முடிவதில்லை - ஏனென்றால் விருந்தாளியாக வந்திருக்கிறீர்கள் - பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? இந்நிலையில் நிறைவேறாத அனுபவம் ஒரு குப்பையாக ஆகிவிடுகிறது இப்போது இரவில் (கனவில்) மறுபடியும் உண்பீர்கள் அந்த அனுபவத்தை நீங்கள் நிறைவு செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் மனம் அதை தொடர்ந்து கொண்டே இருக்கும்.

எதுவும் நிறைவுபெறாமல் இருப்பதை மனம் விரும்புவதில்லை. செய்வதை முழுமையாக செய் என்பதே மனத்தின் கொள்கை. எதுவும் முடிவு பெறாமல் இருப்பதை அது விரும்புவதில்லை. உங்களின் பல் ஒன்று விழுந்து விட்டால் நாக்கானது ஓயாமல் அந்த இடத்துக்குப் போய் துளாவுகிறது. காரணம், ஏதோ ஒன்று பூர்த்தியாகாமல் இருக்கிறது. இப்போது மனம் தொடர்ச்சியாக... அபத்தம்தான், ஏனென்றால் நாக்கால் தொடுவதன் மூலம் எதுவும் நடந்துவிட போவதில்லை. ஆனால் மனம் மறுபடி மறுபடி... முன்பு அந்த பல் இருந்தபோது நாக்கு ஒருபோதும் அப்படி செய்ததில்லை. இப்போது ஏதோ ஒரு குறை இருக்கிறது....

குரங்குகள்கூட - நீங்கள் ஒரு வட்டத்தை பாதி வரைந்து சாக்கட்டியை அங்கே வைத்துவிட்டால் மீதியை அவை வரைந்து முடித்துவிடும்; ஏனெனில் குரங்குகளின் மனங்களும் உங்கள் மனங்களைப் போலவேதான்

உள்ளன என்று உளவியலார் கூறுகிறார்கள். குரங்குகள்கூட! அவற்றால் கூட ஒரு வட்டம் பாதியில் நிற்பதை பொறுத்துக் கொள்ள முடிவதில்லை; உடனடியாக அதை ஒரு முழுவட்டமாக்கி விடுகின்றன.

விசயங்களை முற்றுப்பெற செய்யவே மனம் எப்போதும் முயன்றபடி இருக்கிறது... நீங்கள் விழிப்புணர்வுள்ளவராக ஆனதும் முதல்வகை கனவு மறைகிறது. வாழ்வை மிக முழுமையாக நீங்கள் வாழ்வதால் (முதல்வகை) கனவுக்கான தேவை இருப்பதில்லை. அடுத்து, நீங்கள் ஆசைகளோடு வாழ்வதில்லை ஆகையால் இரண்டாம் வகை கனவும் படிப்படியாக மறைகிறது. விழிப்புணர்வுள்ள மனிதர் தேவைகளில் வாழ்கிறார், ஆசைகளில் வாழ்வதில்லை, எனவே எந்த ஆசையையும் நிறைவேற்ற வேண்டிய தேவை அங்கு இல்லை. அப்படி எதுவும் அவரிடம் இல்லை. எனவே தன் கனவில் ஒருபோதும் அவர் ஒருநாட்டுக்கு தலைவராக வருவதில்லை. அவருக்கு ஆசைகள் கிடையாது, பெரிய திட்டங்கள் எதுவும் கிடையாது. மிக சாதாரணமாக அவர் வாழ்கிறார். வாழ்வின் இயல்பான போக்கே போதுமானது. உணவு உண்கிறோம், அதில் நிறைவு கொள்கிறோம்; நீர் அருந்துகிறோம், அதில் நிறைவு கொள்கிறோம்; நல்ல தூக்கம் கொள்கிறோம், அதுவே போதுமானது. அதற்குமேல் கேட்பதில்லை.

இந்நிலையில் மூன்றாவது வகை கனவு மறைகிறது. முதலிரு வகைகளும் மறைந்ததும், உணர்வுமனமும் உணர்வற்ற மனமும் மிக நெருங்கி வந்துவிடுகின்றன. எனவே எதையும் கனவுமூலம் தெரிவிப்பது தேவையில்லாமல் போகிறது. உண்மையில் நீங்கள் நன்றாக விழித்துக் கொண்டிருக்கும்போதே உணர்வற்ற மனம் தகவல்தரத் தொடங்கி விடுகிறது. அதன்பின் வேலை எளிதாக ஆகிறது, தொடர்பு துல்லியமாக ஆகிறது. அதன்பின் நான்காவது வகை கனவு மறைகிறது. உங்களுக்கு அமைந்த வாழ்க்கையில் நீங்கள் முழு இணக்கமாக - விழிப்பாக - முற்றிலும் மன நிறைவாக இருக்கும்போது கடந்தகாலம் முழுமையாக உதிர்கிறது. கடந்த காலத்துக்குள் போவதற்கு தேவை இருப்பதில்லை. நிகழ்காலத்தில் நீங்கள் வாழ்கிறீர்கள். இறந்தகாலம் மறைகிறது. பின் ஐந்தாம் வகை கனவும் மறைகிறது. அந்தந்த கணத்தில் மிக முழுமையாக - மிக விழிப்பாக - முற்றிலும் விழிப்பாக நீங்கள் வாழ்கிறீர்கள். எனவே அதன்பின் உங்களுக்கு வருங்காலமும் இருப்பதில்லை.

ஆக ஐந்து விதமான கனவுகளும் மறையும்போது, யதார்த்தமற்ற தன்மை - மாயை - மறைந்துவிடுகிறது. அப்போதுதான் முதல் முறையாக யதார்த்தத்தை - மெய்ம்மையை - இறைமையை உணரும் நிலை உங்களுக்கு கைகூடும்.

○

# 3. வெளிப்பரப்பிலிருந்து மையத்துக்கு

மனதின் செயல்பாடு கட்டுக்குள் இருக்கும்போது மனம் தூய பளிங்குபோல் ஆகிறது. காண்பவரையும் காட்சியையும் காணப்படுவதையும் உருத்திரிக்காமல் சமமாகப் பிரதிபலிக்கிறது.

சவிதர்க்க சமாதியில் யோகி மெய்யறிவை - சொற்களை அடிப்படையாகக் கொண்ட அறிவுக்கும் பகுத்துப் பார்ப்பதை / புலன்காட்சிகளை அடிப்படையாகக் கொண்ட அறிவுக்கும் இடையிலான வேறுபாட்டை - இன்னமும் பிரித்தறியமாட்டாதவராகவே இருக்கிறார். இந்த கட்டத்தில் அவையெல்லாம் கலந்து குழம்பிய நிலையிலேயே அவர் மனம் இருக்கிறது.

மனம் என்றால் என்ன? மனம் என்பது ஒரு பொருள் அல்ல. அது ஒரு நிகழ்வு. பொருளுக்கு பொருள் தன்மை உண்டு. நிகழ்ச்சியோ ஒரு நடப்புதான். கல்போன்றது பொருள். அலை போன்றது நிகழ்ச்சி. அது இருக்கிறது; ஆனால் பொருள் தன்மையுடையதாய் அது இல்லை. காற்றுக்கும் கடலுக்கும் இடையிலான ஒரு நிகழ்ச்சியாக, ஒரு செயல்போக்காக, ஒரு நடப்பாக மட்டுமே அது இருக்கிறது.

இதுவே புரிந்துகொள்ள வேண்டிய முதல் செய்தி. அதாவது மனம் ஒரு நிகழ்முறை. அது ஓர் அலையை அல்லது நதியை ஒத்தது. ஆனால் அதனுள் பொருள்தன்மை எதுவும் இல்லை. பொருள்தன்மை அதில் இருக்குமானால் பின் அதை நாம் மறையச் செய்ய முடியாது. பொருள் தன்மை அதற்கு கிடையாது என்றால் ஒரு சிறு தடயத்தையும்கூட விட்டுச் செல்லாமல் அது மறைந்துபோக முடியும். கடலில் ஒரு அலை சென்று மடியும்போது மீதமாவது என்ன? ஒன்றுமில்லையே. ஒரு தடயம்கூட மிஞ்சுவதில்லை. எனவேதான் வானில் பறக்கும் ஒரு பறவையைப் போன்றது மனம் என்று சொல்லியிருக்கிறார்கள் ஞானிகள். எந்த காலடித் தடமும் விட்டுச் செல்லப்படுவதில்லை - ஒரு சிறு தடயம்கூட. பறவை பறக்கும்போது எந்த பதிவையும் பாத சுவடுகளையும் அது விட்டுச் செல்வதில்லை.

மனம் என்பது ஒரு நிகழ்முறை மட்டுமே. உண்மையில் மனம் என்று ஒன்று நிலவுவதில்லை; எண்ணங்கள் மட்டுமே நிலவுகின்றன. எண்ணங்கள் மிக விரைவாக செல்லும்போது அந்த தொடர்ச்சியில் ஏதோ ஒன்று நிலவிக் கொண்டிருப்பதாக நீங்கள் எண்ணவும் உணரவும் செய்கிறீர்கள். ஒரு எண்ணம் வருகிறது, பின் இன்னொரு எண்ணம் வருகிறது, பின் இன்னொன்று - இதுவே தொடர்கிறது. இடைவெளி மிகவும் குறைவாக உள்ளது. எனவே ஒரு எண்ணத்துக்கும் அடுத்ததுக்கும் இடையிலுள்ள வெளியை உங்களால் பார்க்க முடிவதில்லை. எனவே இரண்டு எண்ணங்கள் ஒன்றிணைந்ததாக ஆகின்றன - ஒரு தொடர்ச்சியாக ஆகின்றன. அந்த தொடர்ச்சியைக் கொண்டே மனம் என்று ஒன்று

இருக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். பொருள் இல்லை மின்னணுக்களே உள்ளன என்பது போலவே, மனம் இல்லை எண்ணங்களே உள்ளன. எண்ணமே மனதின் மின்னணு. இது ஒரு கும்பலைப் போன்றதே... ஒருவகையில் கும்பல் என ஒன்று உள்ளது. இன்னொரு வகையில் அப்படி ஒன்று இல்லை- தனிமனிதர்கள் மட்டுமே இருக்கிறார்கள். ஆனால் தனிமனிதர்கள் பலர் சேர்ந்து அவர்கள் எல்லாம் ஒன்று என்ற உணர்வை தருகிறார்கள். நாடு என்று ஒன்று இருக்கிறதும்தான், இல்லையும்தான். இருப்பது தனிமனிதர்கள் மட்டுமே. தனிமனிதர்களே ஒரு நாட்டின், ஒரு சமுதாயத்தின், ஒரு கும்பலின் மின் அணுக்கள்.

எண்ணங்கள் நிலவுகின்றன, மனம் நிலவுவதில்லை. மனம் என்பது ஒரு தோற்றம்தான். மேலும் மனத்தை நீங்கள் ஊடுருவிப் பார்த்தால் அது மறைகிறது. அங்கு எண்ணங்கள் மட்டுமே உள்ளன. ஆனால் மனம் இல்லாமல் போய் தனித்தனியாக எண்ணங்கள் மட்டுமே உள்ளன என்னும்போதே பல விசயங்கள் உடனடியாக தெளிவாகின்றன: முதல் விசயம்: எண்ணங்கள் மேகங்கள் போன்றவை. அவை வரும் - போகும், நீங்களோ வானம் போன்றவர் என்பதை உடனடியாகவே நீங்கள் அறிய வருகிறீர்கள். மனம் என்பது இல்லை என்றானதுமே அதன்பின் எண்ணங்களுக்கு நீங்கள் ஆட்படுவதில்லை என்னும் பார்வை உடனடியாக வந்து விடுகிறது. வானத்தில் மேகங்கள் கடந்து செல்வதைப் போலவும் மரங்களினூடாக காற்று கடந்து செல்வதைப் போலவும் உங்கள் வழியாக எண்ணங்கள் கடந்து போகின்றன. உங்களின் ஊடாக எண்ணங்கள் கடந்து சென்று கொண்டிருக்கின்றன. மேலும் நீங்கள் ஒரு மாபெரும் வெறுமையாக இருப்பதால்தான் உங்களின் வழியாக அவை கடந்து செல்லவும் முடிகிறது; எந்த தடையும் தடங்கலும் இல்லை. அவற்றை தடுத்து நிறுத்த எந்த மதில் சுவர்களும் இல்லை.

எல்லைச் சுவர் அமைந்த ஒரு விஷயம் அல்ல நீங்கள். உங்கள் வானம் எல்லையற்று பரந்து விரிந்தது. எண்ணங்கள் வந்து போகின்றன. எனவே எண்ணங்கள் வந்து போவன, அதை கவனிப்பதுவே - சாட்சியே நான் என்று நீங்கள் உணரத் தொடங்கியதுமே மனம் அடங்கிவிடுகிறது.

மனத்தை நாமாக கட்டுப்படுத்த முடியாது. முதலாவதாக மனமே இல்லை என்னும் போது அதை நீங்கள் எப்படி கட்டுப்படுத்த முடியும்? இரண்டாவதாக அந்த மனத்தை கட்டுப்படுத்தப் போவது யார்? ஏனென்றால் மனத்துக்கு வெளியே யாரும் இல்லையே. யாரும் இல்லை என்று நான் கூறும்போது மனத்துக்கு வெளியே யாரும் இல்லை என்கிறேன் - ஒரு வெறுமைதான் இருக்கிறது. அப்படியானால் மனத்தை கட்டுப்படுத்தப் போவது யார்? மனத்தை யாராவது கட்டுப்படுத்திக் கொண்டிருந்தால், பின்

அது மனத்தின் ஒரு பகுதியாக மட்டுமே இருக்கும். மனத்தின் ஒரு பகுதி, மனத்தின் இன்னொரு பகுதியை கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறது. அதுதான் அகங்காரம் என்பது.

இந்த முறையில் மனத்தை அடக்க முடியாது. ஏனெனில் மனம் என்னும் ஒன்று கிடையாது, அதை அடக்கவும் யாரும் கிடையாது. உள் வெறுமையைப் பார்க்க முடியும், கட்டுப்படுத்த முடியாது. அதனால் காண முடியும், ஆனால் கட்டுப்படுத்த முடியாது. ஆனால் அந்த பார்வையே, அந்த காட்சியே கட்டுப்பாடாகும்; அந்த அவதானமே, சாட்சித் தன்மையே கட்டுப்பாடாக ஆகிறது. ஏனெனில் அந்நிலையில் மனம் மறைந்து விடுகிறது. ஒரு இருட்டு நேரத்தில் யாரோ உங்களை பின்தொடர்ந்து வருவதாக நினைத்து பயந்து ஓட்டமாக ஓடிக்கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்; ஆனால் அந்த யாரோ ஒருவர் வேறு யாருமல்ல, உங்களின் நிழல்தான் என்பதைப் போன்றதே இது. மேலும் நீங்கள் ஓட ஓட நிழல் உங்களை பின் தொடர்வதும் தொடர்கிறது. எவ்வளவு விரைவாக நீங்கள் ஓடினாலும் அதனால் எந்த வேறுபாடும் தெரிவதில்லை - நிழல் கூடவே வருகிறது. நீங்கள் திரும்பிப் பார்க்கும் போதெல்லாம் அது அங்கே இருக்கிறது. அதனிடமிருந்து தப்பிக்கும் வழி இதுவல்ல. அதை அடக்கும் வழியும் இதுவல்ல. நிழலை நீங்கள் உற்று நோக்கியாக வேண்டும். ஓடாமல் நின்று நிழலுக்குள் ஊடுருவிப் பாருங்கள், நிழல் மறைந்து விடுகிறது. ஏனெனில் நிழல் என்று ஒன்று இல்லை. ஒளியின் இன்மையே அது. மனம் என்பதும் உங்கள் இருப்பின் இன்மையே தவிர வேறல்ல. அமைதியாக அமர்ந்து மனத்துக்குள் ஆழ்ந்து நீங்கள் பார்க்கும்போது மனம் அப்படியே மறைந்து விடுகிறது. எண்ணங்கள் இருக்கும் - அவற்றுக்கு இருத்தல் உண்டு. ஆனால் மனம் அங்கு இருக்காது.

மனம் மறைந்தபின் உங்களுக்கு இன்னொரு பார்வைத் தெளிவுக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. உங்கள் எண்ணங்கள் உங்களுடையவையே அல்ல என்பதை அப்போது உங்களால் காண முடியும். அவை வருகின்றன தாம். சில நேரங்களில் கொஞ்ச நேரத்துக்கு உங்களிடம் அவை தங்கியும் இருக்கின்றனதாம். ஆனால் அதன்பின் அவை போய்விடுகின்றன. நீங்கள் அவற்றுக்கு ஒரு தங்கிடமாக இருக்கலாம், ஆனால் அவற்றின் பிறப்பிடம் நீங்கள் அல்ல. உங்களிடமிருந்து அவை தோன்றவில்லை. ஒரே ஒரு எண்ணம் கூட உங்களுக்குள் இருந்து உதித்ததில்லை என்பதை எப்போதாவது நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஒரே ஒரு எண்ணம் கூட உங்கள் உயிரில் இருந்து வந்ததில்லை. எப்போதும் அவை வெளியிலிருந்தே வருகின்றன. உங்களுக்கு சொந்தமானவை அல்ல அவை. வீடு விலாசமில்லாமல் இடைவழியில் மிதக்கின்றன அவை. சில நேரங்களில்

அவை உங்களிடம் வந்து தங்குகின்றன, அவ்வளவுதான். ஒரு மலை உச்சியில் ஒரு மேகம் வந்து தங்குகிறது. பின் அதுபாட்டுக்குப் போய்விடுகிறது. நீங்கள் எதுவும் செய்ய தேவையில்லை. சும்மா கவனித்தாலே, கட்டுப்பாடு வந்துவிடும்.

கட்டுப்பாடு என்ற சொல் சரியான சொல் அல்ல. முதலில் சொற்களே சரியானவையாக இருக்க முடியாது. சொற்கள் மனத்தினுடையவை; எண்ணங்களின் உலகைச் சேர்ந்தவை. சொற்கள் மிகமிக ஆழ்ந்து செல்பவையாக இருக்க முடியாது. அவை ஆழமற்றவை. கட்டுப்பாடு என்ற சொல் சரியானது அல்ல. ஏனெனில் கட்டுப்படுத்துபவர் என்று யாருமில்லை; கட்டுப்படுத்தப்படவும் எதுவுமில்லை. ஆனால் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி நிகழும்போது அப்போதைக்கு அதை புரிந்துகொள்ள அச்சொல் உதவுகிறது. நீங்கள் ஆழ்ந்து நோக்கும்போது மனம் அடங்கிவிடுகிறது. திடீரென நீங்கள் தலைவராக ஆகியிருக்கிறீர்கள். எண்ணங்கள் இருக்கின்றன; ஆனால் இப்போது அவை உங்களை ஆதிக்கம் செய்வதில்லை; இனி அவற்றால் உங்களை எதுவும் செய்துவிடவும் முடியாது. சும்மா வந்து போகின்றன அவை. ஒரு தாமரை மீது மழை பெய்தது போலவே நீங்களும் அவற்றால் எந்த பாதிப்புக்கும் ஆளாகாமல் இருக்கிறீர்கள். தாமரை இதழ்களின் மேல் நீர்த்துளிகள் பட்டதுமே அவை உருண்டோடி விடுகின்றன. தாமரையை அவை தொடுவதுகூட இல்லை. தாமரை பாதிப்புறாமலே இருக்கிறது.

எனவேதான் கிழக்கில் தாமரையானது மிகுந்த முக்கியத்துவம் கொண்டதாக - மிகுந்த குறியீட்டுத் தன்மை கொண்டதாக ஆகியுள்ளது. கிழக்கிலிருந்து வந்துள்ள மகத்தான குறியீடு தாமரை தான். கிழக்கத்திய விழிப்புணர்வின் மொத்த அர்த்தத்தையும் அது ஏந்தியுள்ளது. ''தாமரைபோல் இரு - போதும், பாதிப்புறாமல் இருந்தால் கட்டுப்பாடாக இருக்கிறாய், பாதிப்புறாமல் இருந்தால் நீயே தலைவனாயிருக்கிறாய்'' என்கிறது அது.

பதஞ்சலியின் சூத்திரங்களுக்குள் நான் புகமுடிவதற்கு முன் மனத்தைப் பற்றி மேலும் சில விவரங்கள். ஒரு நிலைபாட்டிலிருந்து பார்த்தால் மனம் அலைகளைப் போன்றுள்ளது - ஒரு அலைக்கழிவாக இருக்கிறது. கடல் அமைதியாக - அசையாமல் - அலையாமல் குலையாமல் இருக்கையில் அங்கு அலைகள் இருப்பதில்லை. அலை இயக்கத்தாலோ கடும் காற்றாலோ கடல் அலைக்கழிக்கப்படும்போது, மிகப்பெரும் அலைகள் எழுந்து மொத்த நீர்ப்பரப்பும் பெருங்குழப்பமாகவே ஆகும்போது, மனமானது, ஒரு நிலைபாட்டில் இருந்து பார்த்தால்... இவ்வ

எல்லாம் உருவகங்களே - வார்த்தைகளால் விளக்கிவிட முடியாத - அகத்திலுள்ள குறிப்பிட்ட நிலவரத்தை நீங்கள் புரிந்து கொள்ள உதவுவதற்கே இவை. இந்த உருவகங்கள் கவிதைத்தன்மை கொண்டவை. அவற்றை புரிந்துகொள்ள கரிசனத்துடன் நீங்கள் முயன்றால் ஒரு புரிதல் நிலையை நீங்கள் அடையப் பெறுவீர்கள். ஆனால் அவற்றை தர்க்க ரீதியில் புரிந்துகொள்ள நீங்கள் முயன்றால் நோக்கத்தை தவறவிடுவீர்கள். இவை எல்லாம் உருவகங்களே.

உணர்வின் அலைக்கழிவே மனம். அலைகளின் பெருங்குழப்பமே கடலாக இருப்பதைப் போன்றது இது. அயலான ஏதோ ஒன்று - காற்று - உள்ளே புகுந்து விட்டது. வெளியிலிருந்து ஏதோ ஒன்று கடலுக்கு நேரிட்டிருக்கிறது (காற்று), அல்லது உணர்வுக்கு நேரிட்டிருக்கிறது (எண்ணங்கள்). அதனால்தான் பெருங்குழப்பம். ஆனால் எப்போதும் வெளிப்பரப்பில்தான் பெரும்குழப்பம் நிலவுகிறது. எப்போதும் மேல்பரப்பில்தான் அலைகள் உள்ளன, உள் ஆழத்தில் அலைகள் இருப்பதில்லை; இருக்கமுடியாது. ஏனென்றால் ஆழத்துக்குள் காற்று நுழைய முடியாது. எனவே எல்லாமே வெளிப்பரப்பில் மட்டும்தான். உள்ளுக்குள் நீங்கள் போய்விட்டால் கட்டுப்பாடு வந்துவிடுகிறது. மேல்பரப்பிலிருந்து உள்நோக்கி நீங்கள் போனால் மையத்துக்கு வருகிறீர்கள்; இப்பவும் மேல்பரப்பு அலைக்கழியலாம். என்றாலும் - திடீரென நீங்கள் பாதிப்படையாதவர் ஆகிறீர்கள்.

மையம் கொள்வதே - மையத்தை நோக்கி இயங்குவதே - அங்கு வேர்பிடிப்பதே - அங்கேயே நிலைபெறுவதே மொத்த யோகமும் அன்றி வேறல்ல. மேலும் அங்கிருந்து பார்க்கும் போது மொத்த பார்வையும் மாறுகிறது. இப்பவும் வெளியில் அலைகள் இருக்கலாம், ஆனால் உங்களை அவை எட்டுவதில்லை. மேலும் இப்போது அவை உங்களைச் சேர்ந்தவையும் அல்ல, வெளிப்பரப்பில் ஒரு அந்நிய பொருளின் மோதுதலால் ஏற்படுவதே அது என்பதை இப்போது உங்களால் பார்க்க முடிகிறது. மேலும் மையத்திலிருந்து பார்க்கும்போது மோதலும் படிப்படியாக மறைகிறது. நீங்களும் மெல்லமெல்ல இளைப்பாறுகிறீர்கள். கடும்காற்று உள்ளதுதான், அந்நிலையில் அலைகள் எழும்தான் என்பதை போகப்போக நீங்கள் ஏற்றுக்கொள்கிறீர்கள்; அதற்காக கவலைப்படுவ தில்லை. மேலும் நீங்கள் கவலைப்படாத போது அவைகளும் கூட ரசிக்கத் தக்கவையாக ஆகிவிட முடியும். அவற்றின்மேல் எந்த தவறும் இல்லை. நீங்களும் வெளிப்பரப்பிலேயே இருப்பதால்தான் சிக்கல் எழுகிறது. மேல்பரப்பில் ஒரு சிறு படகில் நீங்கள் இருக்கிறீர்கள். சூறாவளி வீசுகிறது. அலைகள் பொங்குகின்றன. முழுக்கடலும் மூர்க்கம் கொண்டதாகிறது.

இந்நிலையில் நீங்கள் கவலைப்படவே செய்வீர்கள். மரண பீதிக்குள்ளா கிறீர்கள். அபாய நிலையில் இருக்கிறீர்கள் நீங்கள் எந்த கணத்திலும் அலைகள் உங்கள் சிறு படகை தூக்கி எறிந்துவிட முடியும். எந்த கணத்திலும் இறப்பு நேர முடியும். உங்கள் சிறுபடகை வைத்துக்கொண்டு உங்களால் என்ன செய்ய முடியும்? எப்படி உங்களால் கட்டுப்படுத்த முடியும்? அலைகளுடன் நீங்கள் சண்டைபிடிக்க ஆரம்பித்தால் நீங்கள் தான் தோற்றுப்போவீர்கள். சண்டைபிடித்து உதவாது. அலைகளை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. உண்மையாகவே அலைகளை நீங்கள் ஏற்றுக்கொண்டு அவற்றின் போக்கில் உங்கள் படகை விட்டு விடுவீர்சளேயானால் - அது எவ்வளவு சிறிய படகானாலும் - அலைகளுக்கு எதிராக திரும்பாமல் உடன்பட்டு இயங்குவீர்களே யானால், அதன்பின் எந்த கெடுதலும் நேராது.

''இளக்கமாகவும் இயற்கையாகவும் இரு'' என திலோபா கூறுவதன் பொருள் இதுவே. அலைகள் உள்ளன - அவற்றை அப்படியே நீங்கள் அனுமதிக்கிறீர்கள். அவற்றுக்கு எதிராக அல்லாமல் அவற்றோடு சேர்ந்து இயங்க உங்களை நீங்கள் விட்டுவிடுகிறீர்கள் - அவ்வளவுதான். அவற்றின் பகுதியாக நீங்கள் ஆகிவிடுகிறீர்கள். அந்நிலையில் மாபெரும் களிப்பு ஏற்படுகிறது. அலை சவாரி என்ற விளையாட்டின் மொத்த நுட்பமும் இதுதான்: அலையோடு சேர்ந்து இணங்கி செல்கிறீர்கள்; அதற்கு எதிராக செல்வதில்லை - எந்த அளவுக்கெனில் நீங்களும் அலையும் வேறு வேறல்ல என்னுமளவுக்கு அதனுடன் ஒன்றாகி விடுகிறீர்கள். அலைசவாரி ஒரு மாபெரும் தியானமாக ஆகமுடியும். உள்ளத்தின் கணநேர தரிசனங்களை அது உங்களுக்கு தரமுடியும்; ஏனெனில் அது ஒரு சண்டையாக இல்லை, சரணாகதியாக இருக்கிறது. ஒரு தடவை இதை நீங்கள் அறிந்துகொண்டால் அலைகளைக்கூட ரசிக்க முடியும். ஆனால் அதை நீங்கள் அறிந்தகொள்ள மொத்த நிகழ்வையும் மையத்திலிருந்து நோக்கினால் மட்டுமே முடியும்.

இது எதைப் போன்றதென்றால், நீங்கள் பயணம் செய்கிறீர்கள். அப்போது மழை மேகங்கள் திரள்கின்றன. மின்னல் விடாமல் மின்னுகிறது. நீங்களும் உங்கள் பயண வழியை தொலைத்துவிட்டிருக்கிறீர்கள். பாதையை மறந்த நிலையில் வீட்டை நோக்கி விரைந்து கொண்டிருக் கிறீர்கள். வெளிப்பரப்பில் நடந்து கொண்டிருப்பது இதுதான்: ஒரு பயணி வழிதவறி விட்டார். ஒரே மேகமூட்டம் - இடிமின்னல்.... விரைவில் பலத்த மழைவர போகிறது. வீட்டை வீடு தரும் பாதுகாப்பை தேடிக் கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். திடீரென வீட்டை அடைந்து விடுகிறீர்கள். இப்போது வீட்டினுள் உங்களால் அமர முடியும். மழையை எதிர்நோக்கி இருக்க முடியும். மழையை ரசிக்கவும் உங்களால் முடியும். இப்போது

மின்னல் ஒரு தனி அழகு பெற்றதாகிறது. வெளியில் - காட்டில் நீங்கள் வழிதவறி திரிந்தபோது அது அப்படி இருக்கவில்லை. ஆனால் இப்போது வீட்டினுள் இளைப்பாறும் நிலையில், மொத்த நிகழ்வும் மகத்தான அழகுடையதாக இருக்கிறது. இப்போது மழை வருமானால் அதை நீங்கள் மகிழ்வுடன் அனுபவிக்கிறீர்கள். இப்போது மின்னல் வரும்போது அதை நீங்கள் ரசிக்கிறீர்கள். மேகங்களில் இடி முழங்குகிறது, அதை நீங்கள் ரசிக்கிறீர்கள். ஏனெனில் இப்போது நீங்கள் பாதுகாப்பாக வீட்டினுள் இருக்கிறீர்கள். மையத்தை நீங்கள் அடைந்ததுமே, வெளிப்பரப்பில் என்ன நடந்தாலும் அவற்றை நீங்கள் ரசிக்க ஆரம்பிக்கிறீர்கள். எனவே வெளிப்பரப்பில் சண்டை பிடிப்பதல்ல, உள் மையத்துக்கு நழுவிக் கொள்வதே மொத்த செய்முறையும் ஆகும். அப்போது அங்கு ஒரு கட்டுப்பாடு வருகிறது; இதுவோ திணிக்கப்பட்டதல்ல, நீங்கள் மையம் கொண்டதும் தானாக நிகழ்வது.

தன் உணர்வில் மையம் கொள்வதுவே மனம் அடங்குதலும் ஆகும். எனவே மனத்தை கட்டுப்படுத்த முயல வேண்டாம். வார்த்தைகள் உங்களுக்கு தவறாக வழிகாட்டிவிட முடியும் என்பது யாராலும் கட்டுப்படுத்துவது முடியாது. மீறி அடக்கப் பார்ப்பவர்களுக்கு பைத்தியம் தான் பிடிக்கும்; அவர்கள் மூளை குழம்பித் தான் போவார்கள். ஏனென்றால் மனத்தை அடக்க முயலுவது என்பது, மனத்தின் ஒரு பகுதி மனத்தின் இன்னொரு பகுதியை அடக்க முயல்வதே தவிர வேறல்ல.

கட்டுப்படுத்த முயன்று கொண்டிருக்கும் நீங்கள் யார்? நீங்களும் ஒரு அலைதான் - ஒருவேளை ஒரு ஆன்மீக அலையாக இருக்கலாம்; அந்த அலைதான் கட்டுப்படுத்த முயலுகிறது. அதுபோலவே ஆன்மீகமற்ற அலைகளும் உள்ளன. காம அலை, கோப அலை, பொறாமை அலை, தனிஉடைமை மனப்பான்மை அலை, வெறுப்பு அலை என ஆன்மீகமற்ற அலைகள் கோடிக்கணக்கில் உள்ளன. அடுத்து தியானம், அன்பு, கருணை போன்ற ஆன்மீக அலைகள் உள்ளன. ஆனால் இவை எல்லாம் வெளிப் புறத்தின் மேல்பரப்பில் உள்ளவை. மேலும் அந்த மேல்பரப்பில் ஆன்மீகத்துக்கும் ஆன்மீகமற்றதுக்கும் எவ்வித வேறுபாடு இருப்ப தில்லை.

சமயம் என்றால் மையத்தில் இருப்பது. மையத்தின் மூலமாக நிகழும் பார்வையில் இருப்பது. உங்கள் வீட்டுக்குள் இருந்தபடி உங்களின் சொந்த மேல்பரப்பை நீங்கள் பார்க்கிறீர்கள். எல்லாமே மாறித் தெரிகிறது. ஏனெனில் உங்கள் பார்வை புதிதாக இருக்கிறது. திடீரென நீங்கள் அடங்கி யிருக்கிறீர்கள். உண்மையில் எந்த அளவுக்கு நீங்கள் அடங்கினவராக

இருக்கிறீர்கள் என்றால், மேல்பரப்பை அடக்காமலே விட்டுவிட உங்களால் இப்போது முடிகிறது. நுட்பமான செய்தி இது. எந்த அளவுக்கு கட்டுப்பாடாக நீங்கள் இருக்கிறீர்கள் என்றால் - மூலத்தில் ஒடுங்கி இருக்கிறீர்கள் என்றால் - மேல்பரப்பைப்பற்றி துளியும் அலட்டிக் கொள்ளாமல் இருக்கிறீர்கள்... உண்மையைச் சொன்னால் அலைகளையும் அலை எழுச்சிகளையும் புயல்களையும் நீங்கள் விரும்புவீர்கள். அவை அழகானவையாக உள்ளன, ஆற்றல் அளிப்பவையாக உள்ளன. அது ஒரு பலம் - அதைப் பற்றி கவலைப்பட ஒன்றுமில்லை. நோஞ்சான்களே எண்ணங்களைக் குறித்து அலட்டிக்கொள்கிறார்கள். பலமற்றவர்கள் மட்டுமே மனத்தை குறித்து பயப்படுகிறார்கள். பலசாலிகள் முழுமையை அப்படியே உள்வாங்கிக் கொள்கிறார்கள். அதன்மூலம் அவர்கள் அதிக செழுமையை அடைகிறார்கள். வலுவானவர்கள் எதையுமே அப்படியே மறுத்து விடுவதில்லை. பலவீனத்தில் இருந்தே மறுப்பு எழுகிறது. உங்களுக்கு பயம். பலசாலிகளோ வாழ்க்கை வழங்கும் எல்லாவற்றையும் உள் வாங்கிக் கொள்ளவே விரும்புவார்கள். அது ஆன்மீகமோ லௌகீகமோ - ஒழுங்கோ ஒழுங்கீனமோ - கடவுளோ சாத்தானோ - எதுவானாலும் பரவாயில்லை; அவை எல்லாவற்றையுமே ஏற்றுக் கொள்கிறார் பலசாலி; அதன் மூலம் செழுமை அடைகிறார். சாதாரண மதவாதிகளுக்கு இருக்க முடியாத, முற்றிலும் மாறுபட்ட ஓர் ஆழத்தை அவர் அடைந்திருக்கிறார். சாதாரண மதவாதிகளோ மேலோட்ட மானவர்கள்; வளமற்றவர்கள்.

மதப்பற்றுமிக்க சாமானியர்கள் கோயிலுக்கும் மசூதிக்கும் சர்ச்சுக்கும் போவதை கவனியுங்கள். எப்போதுமே அவர்கள் மிகமிக ஆழ மில்லாதவர்களாய் இருக்கிறார்கள், அறிவற்றவர்களாய் இருக்கிறார்கள் என்பதை நீங்கள் காண்பீர்கள். ஏனென்றால் தம் சில பகுதிகளை அவர்கள் மறுத்து இருக்கிறார்கள், முடமாகியிருக்கிறார்கள்; ஒரு வித பக்கவாதத்தால் பீடிக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள்.

மனத்தின்மேல் எந்த பிழையும் இல்லை. எண்ணங்களால் எந்த தவறும் இல்லை. தவறேதும் இருந்தால் அது, வெளிப்பரப்பிலேயே தங்கி இருப்பதுவே ஆகும். ஏனெனில் அந்நிலையில் முழுமையை நீங்கள் அறிவதில்லை. பகுதியினாலும் பகுதிப் பார்வையினாலும் தேவை யில்லாமல் துன்புறுகிறீர்கள். முழுமைப் பார்வை தேவை - அதுவோ மையத்திலிருந்து மட்டுமே இயலும். ஏனெனில் மையத்திலிருந்தே எல்லா திசைகளிலும் எல்லா பரிமாணங்களிலும் நீங்கள் சுற்றி பார்க்க முடியும் - உங்கள் சீவனின் வெளிவட்டப்பரப்பு முழுவதையும் பார்வையிட முடியும். அதுவோ பரந்து விரிந்தது. உண்மையில் இயற்கையின் வெளியைப் போன்றதே அது. ஒருதடவை மையம் கொண்டதுமே மெதுமெதுவே

நீங்கள் மென்மேலும் பரந்தவராகவும் விரிந்தவராகவும் ஆகிறீர்கள். முடிவிலோ நீங்கள் ஒரு கடவுளாகவே ஆகிறீர்கள், அதற்குக் குறைவாக அல்ல.

இன்னொரு நிலைபாட்டிலிருந்து பார்த்தால் மனம் என்பது ஒரு பயணியின் ஆடைகளில் படியும் அழுக்கு போன்றதே. கோடிக்கணக்கான பிறவிகளாக இடைவிடாமல் நீங்கள் பயணம் செய்துகொண்டே வந்திருக்கிறீர்கள் - ஆனால் இடையில் ஒரு தடவைகூட குளியல் போட்டதில்லை. அழுக்கு ஏராளமாக சேர்ந்திருப்பது இயல்பே. அதில் எந்த தவறும் இல்லை. அப்படித்தான் நேரும் - அடை அடையாக அழுக்கு திரண்டுள்ளது. அந்த அழுக்குகளையே உங்களின் சொந்த உடல் தோற்றமாக நினைக்கிறீர்கள் நீங்கள். அவற்றுடன் உங்களை ரொம்பவுமே ஒருமைப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். மிக நீண்ட காலமாகவே அந்த அழுக்குகளுடன் நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள் என்பதால் அவையே உங்களின் சொந்த தோல்போல் தோன்றுகிறது. அவற்றை உங்களுடையவையாக நீங்கள் காண்கிறீர்கள்.

மனம் என்பது இறந்த காலம், நினைவுத்திறன், குப்பைகுவியல். ஒவ்வொருவரிலும் அது சேரவே செய்கிறது. பயணம் என்றால் தூசுபடியவே செய்யும். ஆனால் அந்த அழுக்குதான் நான் என அடையாளப்படுத்திக் கொள்வது தேவையில்லாதது. ஏனெனில் இந்த அழுக்குதான் நான் என கொண்டால் பின் உங்களுக்கு தொல்லைதான். ஏனென்றால் நீங்கள் புழுதி அல்ல; நீங்கள் உணர்வு. ''புழுதி புழுதியோடே'' என்கிறார் உமர்கய்யாம். ஒரு மனிதர் இறந்ததும் என்ன நடக்கிறது? மண் மண்ணோடு சேர்ந்து மண்ணாகி விடுகிறது. நீங்கள் வெறும் மண்தான் என்றால் பின் எல்லாமே மண்ணாகவே மாறும். எதுவும் மிஞ்சப் போவதில்லை. ஆனால் வெறும் மண் தானா நீங்கள்? புழுதிகளின் திரட்சிதானா நீங்கள்? அல்லது இந்த புழுதியையே சாராத - இந்த மண்ணையே சாராது உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்றா நீங்கள்? ஆம், உங்களின் உணர்வு நிலையே நீங்கள். உங்களின் அறியும் தன்மையே நீங்கள். அறியும் தன்மையே உங்கள் ஜீவன். உணர்வு நிலையே உங்களின் உயிர். அந்த அறிவை சூழ்ந்து திரளும் அழுக்கே உங்கள் மனம். இந்த அழுக்கை ஒழிக்க இரண்டு வழிகள் உள்ளன. உடைகளை வெளுப்பதும் உடலை குளிப்பாட்டுவதும் ஆகிய சாதாரண மத வழி ஒன்று. ஆனால் இந்த வழி பெரிதாக உதவ முடியாது. உங்கள் உடைகளை நீங்கள் எவ்வளவு சுத்தம் செய்தாலும் மீட்டெடுக்க முடியாத அளவுக்கு அவை மிகவும் அழுக்கடைந்துள்ளன. அவற்றை உங்களால் வெளுக்க முடியாது. மாறாக நீங்கள் என்ன செய்தாலும் அதனால் எல்லாம் அவை மேலும் அதிக அழுக்காகவே ஆகலாம்.

ஒருதடவை இப்படி நடந்தது: முல்லா நசுருதீன் என்னிடம் வந்தார். அவர் ஒரு குடிகாரர். சாப்பிடும்போதும் தேநீர் அருந்தும்போதும் அவர் கைகள் நடுங்கின. எல்லாமே அவர் ஆடைகளில் சிந்தியது. எனவே அவர் உடைகள் அனைத்திலும் தேநீர் கறை, வெற்றிலைக் கறை என கண்ட கண்ட கறைகள் எல்லாம் படிந்திருந்தது. எனவே நான் நசுருதீனிடம், ''ஏன் ஒரு வேதியரிடம்போய் இதற்கு ஏதாவது செய்யக்கூடாது? இந்தக் கறைகளை போக்கக்கூடிய வேதிக் கரைசல்கள் உள்ளனவே'' என்றேன்.

அதன்படி அவரும் சென்றார். ஏழு நாட்கள் கழித்து திரும்ப வந்தார். அவர் உடைகள் முன்னிலும் மோசமான நிலையில் இருந்தன! ''என்ன ஆயிற்று? வேதியரிடம் நீர் போகவில்லையா?'' என்று கேட்டேன். அவர் சொன்னார், ''போனேன்; அந்த வேதிக் கரைசலும் அருமையாகத்தான் வேலை செய்தது! தேநீர்க் கறை, வெற்றிலைக்கறை எல்லாமே போய்விட்டது. இப்போது எனக்கு வேறொரு கரைசல் தேவைப்படுகிறது - ஏனென்றால் அந்த வேதிக் கரைசல் தன் சொந்தக் கறைகளை ஏற்படுத்திவிட்டுப் போய்விட்டது'' என்றார்!

அழுக்கை வெளுப்பதற்கான சோப்புகளையும், பிற வேதி பொருள்களையுமே மதவாதிகள் உங்களுக்கு வழங்குகிறார்கள். ஆனால் அந்த கரைசல்கள் தம் சொந்த வேதிக் கறைகளை உங்கள் மேல் விட்டு விட்டு போய்விடுகின்றன. எனவே தான் ஒழுக்கமற்ற ஒருவர் ஒழுக்கமானவராக மாற முடிந்தாலும் கறைபடிந்தவராகவே இருக்கிறார். இப்போது ஒழுக்கமென்னும் ஒரு அழுக்கு படிந்தவராக அவர் இருக்கிறார். சில நேரங்களில் நிலைமை முன்னை விடவுமே மோசமாக இருக்கிறது.

ஒழுக்கமற்ற மனிதர் பல வழிகளில் அப்பாவியாக இருக்கிறார்; அதிக ஆணவம் இல்லாதவராக இருக்கிறார். ஒழுக்கவாதியிடமோ எல்லாவித ஒழுக்கக்கேடும் அவருடைய மனத்துள்ளே இருக்கிறது; மேலும் புதிதாகவும் அவர் சேர்த்துக் கொண்டிருக்கிறார்; ஒழுக்கவாத - தூய்மைவாத - அகங்கார மனோபாவங்கள் இவை. அவர் தன்னை உயர்ந்தவராக உணர்கிறார். தான் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்றும் மற்ற ஒவ்வொருவருமே நரகத்தில் விழ சபிக்கப்பட்டவர்கள் என்றும் அவர் கருதுகிறார். அவர் மட்டுமே சொர்க்கத்துக்கு போய்க் கொண்டிருக்கிறாராம். ஆனால் உள்ளுக்குள் எல்லா ஒழுக்கக்கேடும் இருக்கிறது. ஏனெனில் வெளியிலிருந்து மனத்தை கட்டுப்படுத்துவது என்பது முடியாத காரியம். அதற்கு எந்த வாய்ப்பும் கிடையாது. அந்த வழியில் அது ஒருபோதும் நடக்காது. ஒரே ஒரு கட்டுப்பாடே உள்ளது. அதுதான் மையத்திலிருந்து பார்க்கிற பார்வையாகும்.

கோடிக்கணக்கான பயணங்களின் போக்கில் சேர்ந்த மாசு போன்றதே மனம். மெய்யான சமய நிலைபாடு - வழக்கத்துக்கு மாறான தீவிர சமய நிலைபாடு - என்பது ஆடைகளையே களைந்து விடுவதுதான். அவற்றை சலவைசெய்ய மெனக்கிட வேண்டாம். அவற்றை வெளுக்க முடியாது. பாம்பு தன் பழைய சட்டையை உரித்துவிட்டு திரும்பிக் கூட பார்க்காமல் போய்விடுவதுபோல போய்விடுங்கள். சரியாக இதுவேதான் யோகம் என்பதும்; உங்கள் ஆளுமையில் இருந்து விடுபடுவது எவ்வாறு என்பதே யோகம். அந்த ஆளுமைகள் வெறும் ஆடைகள்தான்.

ஆளுமை (பெர்சனாலிட்டி) என்ற இந்த சொல் வந்த விதம் மிகவும் சுவையானது. கிரேக்க வேர்ச்சொல்லான பெர்சனா என்பதிலிருந்து அது வந்துள்ளது. பெர்சனா என்பது பண்டை கிரேக்க நாடகத்தில் தம் முகத்தை மறைக்க நடிகர்கள் அணிந்த முகமூடியாகும். அந்த முகமூடியே பெர்சனா எனப்பட்டது. அதிலிருந்தே பெர்சனாலிட்டி என்ற சொல் வந்துள்ளது. ஆளுமை என்பது உங்கள் முகமல்ல, முகமூடி தான். ஆளுமை என்பது மற்றவர்களுக்கு காட்டுவதற்கான ஒருபொய் முகம்தான். மேலும் பலப்பல பிறவிகளின் வழியாகவும் அனுபவங்களின் வழியாகவும் நீங்கள் பலப்பல ஆளுமைகளை, ஆடைகளை தயாரித்திருக்கிறீர்கள். அவை அனைத் திலுமே அழுக்கு மண்டிஉள்ளது. அளவுக்குமேல் அவற்றை நீங்கள் பயன்படுத்திவிட்டீர்கள். மேலும் அவற்றின் காரண மாக உங்கள் அசல் முகம் முற்றிலுமாக தொலைந்துவிட்டது.

உங்கள் அசல் முகம் எது என்பது உங்களுக்கே தெரிவதில்லை. மற்றவர்களை நீங்கள் ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்; உங்கள் சொந்த ஏய்ப்புகளுக்கு நீங்களும் பலியாகிக் கொண்டிருக்கிறீர்கள். ஆளுமைகள் எல்லாவற்றையும் கைவிடுங்கள், இயல்பாக இருங்கள், போதும். அப்போது மையத்தை நோக்கி உங்களால் பாய முடியும். மேலும் மையத்திலிருந்து நீங்கள் பார்க்கத் தொடங்கும்போது மனம் என்பது இருப்பதில்லை. தொடக்கத்தில் எண்ணங்கள் தொடரும். ஆனால் உங்கள் ஒத்துழைப்பு இல்லாததால் படிப்படியாக அவை குறைந்துகொண்டே போகும். உங்கள் ஒத்துழைப்பு முற்றிலும் அற்றுப் போனதும், அவற்றுடன் நீங்கள் அறவே ஒத்துழைக்காமல் விட்டதும், உங்களிடம் வருவதை அவை நிறுத்திக் கொள்ளும். அவை அறவே இல்லாமல் போய்விட்டன என்பதில்லை. அங்குதான் அவை உள்ளன. ஆனால் உங்களிடம் அவை வருவதில்லை.

அழைத்தால் மட்டும் வரும் விருந்தாளிகளைப் போலவே எண்ணங் கள் வருகின்றன. அழையா விருந்தாளிகளாக ஒருபோதும் அவை வருவதில்லை - இதை நினைவில் இருத்துங்கள். ''இந்த எண்ணத்தை நான்

எதிர்பார்க்கவே இல்லை'' என சில நேரங்களில் நீங்கள் நினைக்கலாம். ஆனால் நீங்கள் நினைப்பது முற்றிலும் தவறு. ஏதோ ஒரு வழியில் ஏதோ ஒரு நேரத்தில் அதை நீங்கள் எதிர்நோக்கி இருக்கவே வேண்டும் - பிறகு அதை நீங்கள் முற்றிலுமாக மறந்துபோயிருக்கலாம். அழைக்கப்படாமல் எண்ணங்கள் ஒருபோதும் வருவதில்லை. முதலில் நீங்களே அவற்றை வரவேற்கிறீர்கள். அதன்பிறகு மட்டுமே அவை வருகின்றன. நீங்கள் அழைக்காத போதும் சிலநேரங்களில் பழக்கதோசத்தால் - நீங்கள் ஒரு பழைய நண்பர் என்பதால் - அவை உங்கள் கதவை தட்டலாம். ஆனால் அப்போதும் நீங்கள் ஒத்துழைக்காமல் இருந்துவிட்டால் மெல்ல மெல்ல உங்களை அவை மறந்துவிடுகின்றன. உங்களிடம் வருவதை நிறுத்திவிடுகின்றன. மேலும் எண்ணங்கள் உங்களிடம் வருவதை தாமாகவே நிறுத்திக்கொள்கிறபோது அதுவே கட்டுப்பாடாகிறது. எண்ணங்களை நீங்கள் அடக்குவதில்லை. உங்கள் இருத்தலின் உள் பிரகாரத்தை நீங்கள் அடைந்து கொள்கிறீர்கள் - அவ்வளவே. அந்நிலையில் எண்ணங்கள் தாமே அடங்குகின்றன.

இன்னுமொரு நிலைபாட்டிலிருந்து பார்த்தால், மனம் என்பது கடந்த காலம் - நினைவுப் பெட்டகம் - அனுபவங்கள் அனைத்தின் சேகரம். ஒரு விதத்தில், நீங்கள் செய்தவை அனைத்தும் - நீங்கள் நினைத்தவை அனைத்தும் - நீங்கள் விரும்பியவை அனைத்தும் - நீங்கள் கனவு கண்டவை அனைத்தும் - எல்லாம் சேர்ந்தே மனம். உங்களின் கடந்தகாலம் முழுவதும், உங்கள் நினைவுகள் முழுவதும்தான் மனம். நினைவே மனம். ஆகவே நினைவிலிருந்து நீங்கள் விடுபடாதவரை மனத்தை உங்களால் கட்டுப்படுத்த முடியாது.

நினைவிலிருந்து விடுபடுவது எப்படி? எப்போது பார்த்தாலும் உங்களை அது பின்தொடர்ந்தபடியே இருக்கிறது. உண்மையை சொன்னால் நீங்கள் தான் அது. பின் அதிலிருந்து எப்படி விடுபடுவது? உங்கள் நினைவுகளை - எண்ணப்பதிவுகளை தவிர நீங்கள் என்பது வேறு யார்? ''நீங்கள் யார்?'' என்று நான் கேட்டால் நீங்கள் உங்கள் பெயரை சொல்லுகிறீர்கள். அது உங்கள் நினைவு பதிவு; கொஞ்ச காலத்துக்கு முன் உங்கள் பெற்றோர் உங்களுக்கு இட்ட பெயரே அது. ''நீங்கள் யார்?'' என்று நான் கேட்கிறேன். அதற்கு நீங்கள் உங்கள் குடும்பத்தைப் பற்றி - உங்கள் அப்பா, அம்மா பற்றி சொல்கிறீர்கள். அதுவோ ஒரு நினைவு. ''நீங்கள் யார்?'' என்று நான் கேட்டால் நீங்கள் உங்கள் படிப்பு பற்றியும் பட்டங்கள் பற்றியும் கூறுகிறீர்கள். உங்களை ஒரு எம்.ஏ., என்கிறீர்கள், அல்லது பிஎச்.டி., என்கிறீர்கள். அல்லது நீங்கள் ஒரு டாக்டர், எஞ்சினியர் என்கிறீர்கள். இதெல்லாம் நினைப்பு.

''நீங்கள் யார்?''என்று நான் கேட்கும்போது உண்மையாகவே நீங்கள் உள்ளே நோக்கினால் ''தெரியவில்லை'' என்பதே உங்களின் ஒரேபதிலாக இருக்க முடியும். அதைத்தவிர வேறு எதை நீங்கள் சொன்னாலும் அது நீங்கள் அல்ல, உங்களின் நினைப்புதான். ''எனக்கு தெரியாது'' என்பது மட்டுமே உண்மையான - உறுதியான பதிலாக இருக்க முடியும் ஏனென்றால் தன்னை அறிதலே அறுதியானது. நான் யார் என்னும் கேள்விக்கு பதில்கூற என்னால் முடியும். ஆனால் நான் பதில்கூற மாட்டேன். ''நீங்கள் யார்'' என்னும் கேள்விக்கு பதில்கூற உங்களால் முடியாது, ஆனாலும் பதில்கூற முந்துகிறீர்கள் நீங்கள்.

அறிந்திருக்கிற எவருமே இது குறித்து மவுனமே சாதிக்கிறார். ஏனெனில் நினைவு முழுவதையும் துறந்துவிட்டால், மொழியை முழுவதுமாக துறந்துவிட்டால், பின் நான் யார் என்பதற்கு பதில் கூறவே முடியாது. உங்களுக்குள் நான் பார்க்க முடியும், உங்களுக்கு ஒரு குறிப்பு தரமுடியும், என் முழு ஜீவனோடும் உங்களுடன் இருக்க முடியும் —இதுவே என் பதில். ஆனால் இந்த பதிலை சொற்களில் தரமுடியாது. ஏனெனில் சொற்களில் வெளியிடுவது எதுவாயினும், அது, நினைவின் - மனதின் - ஒரு பகுதியாகவே இருக்கும்; உணர்விலிருந்து வருவதாக இருக்காது.

நினைவிலிருந்து விடுபடுதல் எவ்வாறு? அவற்றை கவனியுங்கள் அவற்றுக்கு சாட்சியாக இருங்கள். மேலும், ''இது எனக்கு நேர்ந்துள்ளது, ஆனால் அது நான் அல்ல'' என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். கண்டிப்பாக ஒரு குறிப்பிட்ட குடும்பத்தில்தான் நீங்கள் பிறந்தீர்கள். ஆனால் அது நீங்கள் அல்ல. உங்களுக்கு நேரிட்டது அது. உங்களுக்கு வெளியில் நடந்த ஒரு நிகழ்ச்சிதான் அது. யாரோ உங்களுக்கு ஒரு பெயர் சூட்டியுள்ளார்கள் என்பது உண்மைதான். அதற்கு ஒரு பயன்பாடு உள்ளது. ஆனால் அந்த பெயரே நீங்கள் அல்ல. உங்களுக்கு ஒரு உருவம் இருப்பதும் உண்மைதான். ஆனால் அந்த உருவமே அல்ல நீங்கள். உருவம் என்பது நீங்கள் வசிக்க கிடைத் துள்ள வீடு மட்டுமே. உருவம் என்பது நீங்கள் தங்கியிருக்க கிடைத்த உடம்பு மட்டுமே. மேலும் அந்த உடல் உங்கள் பெற்றோரால் உங்க ளுக்கு வந்தது. அது ஒரு பரிசு. அதுவே நீங்கள் அல்ல.

விழிப்பாயிருங்கள், பகுத்துப்பாருங்கள்: இதையே கிழக்கில் விவேகம் - பாகுபடுத்தி அறிதல் என்கிறார்கள். தொடர்ந்து பகுத்துப் பாருங்கள். பகுத்துக்கொண்டே போங்கள் — நீங்கள் அல்லாத எல்லா வற்றையும் களைந்துவிட்ட ஒரு கட்டம் வருகிறது. அந்த நிலையில் திடீ ரென நீங்கள் முதல் முதலாக உங்களை சந்திக்கிறீர்கள். உங்கள் சொந்த

இருப்பையே நீங்கள் எதிர்கொள்கிறீர்கள். நீங்கள் அல்லாத எல்லா அடையாளங்களையும் - குடும்பம், உடல், மனம் ஆகிய அனைத்தையும் - வெட்டிக் கழித்துக்கொண்டே செல்லுங்கள். நீங்களாக இல்லாத எல்லாவற்றையும் எடுத்தெறிந்துவிட்ட அந்த வெறுமையில் திடீரென உங்கள் ஜீவன் வெளிப்படுகிறது. முதல் தடவையாக உங்களையே நீங்கள் சந்திக்கிறீர்கள். அந்த சந்திப்பே மன அடக்கமாக கட்டுப்பாடாக ஆகிறது.

''கட்டுப்பாடு''என்னும் சொல் உண்மையாகவே அசிங்கமானது. அதை பயன்படுத்துவதில் எனக்கு உடன்பாடில்லை. ஆனால் வேறு ஒன்றும் என்னால் செய்ய முடியாது. ஏனெனில் பதஞ்சலி அதையே பயன்படுத்தியுள்ளார். அந்த சொல்லிலேயே, ஒருவர் இன்னொருவரை கட்டுப்படுத்திக் கொண்டிருப்பது போன்று தோன்றுகிறது. பதஞ்சலியே இதை அறிவார். (அதனால்தான்) கட்டுப்பாடோ, கட்டுப்படுத்துபவரோ இல்லாதபோது மட்டுமே மெய்யான சமாதியை நீங்கள் அடைகிறீர்கள் என்று பின்னால் அவரே கூறுவார். இப்போது நாம் சூத்திரங்களுக்குள் போகலாம்.

**மனதின் செயல்பாடு கட்டுக்குள் இருக்கும்போது மனம் தூய பளிங்குபோல் ஆகிறது. காண்பவரையும் காட்சியையும் காணப்படுவதையும் உருத்திரிக்காமல் சமமாக பிரதிபலிக்கிறது.**

மனதின் செயல்பாடு கட்டுக்குள் இருக்கும்போது... ''கட்டுக்குள் இருக்கும்போது'' என்பதற்கு நான் காணும்பொருள் இப்போது உங்களுக்கு விளங்கியிருக்கும்: மையத்தில் நீங்கள் இருக்கிறீர்கள், அங்கிருந்துகொண்டு மனத்தை நீங்கள் பார்க்கிறீர்கள் என்று அதற்கு பொருள். வீட்டுக்குள்; நீங்கள் இருந்துகொண்டு மழை மேகங்களையும் இடிமின்னல்களையும் மழையையும் பார்க்கிறீர்கள் என்று அதற்கு பொருள். உங்கள் ஆடைகள் அனைத்தையும் - கறைபடிந்த ஆடைகள், அழுக்கடைந்த ஆடைகள் அனைத்தையும் - நீங்கள் களைந்துவிட்டீர்கள்; ஏனெனில் உண்மையில் அவை உங்கள் ஆடைகளே அல்ல, அழுக்கின் அடுக்குகளே, எனவே அவற்றை உங்களால் வெளுக்க முடியாது என்பதைக் காண்கிறீர்கள்; அவற்றை நீங்கள் தூர வீசி எறிந்துவிட்டீர்கள், உங்கள் சீவனில் நீங்கள் முழு அம்மணமாய் நிர்வாணமாய் இருக்கிறீர்கள் என்று அதற்கு பொருள். அல்லது எவற்றை எல்லாம் உங்களோடு ஒருமித்து நீங்கள் என காண்கிறீர்களோ அவற்றை எல்லாம் உங்களிடமிருந்து அகற்றிவிட்டீர்கள்; இப்போது நீங்கள் யார் என்பதை நீங்கள் கூறுவதில்லை. உங்கள் உருவம், பெயர், குடும்பம், உடல், மனம் எல்லாமே நீக்கப்பட்டு விட்டன,

நீக்கப்பட முடியாதது எதுவோ அதுமட்டும் மீதம் இருக்கிறது என்று அதற்குப் பொருள்.

இதுவே உபநிடதங்களின் முறை. இந்த முறையை அவை **''நேதி - நேதி''** என்கின்றன. ''நான் இதுவல்ல - அதுவுமல்ல'' என்கின்றன. இப்படியே தொடர்ந்து அவை போய்க்கொண்டே இருக்கின்றன.... ஒருகணம் வருகிறது, அப்போது சாட்சி மட்டுமே மீதமாகியிருக்கிறது. சாட்சியையோ மறுத்துவிட முடியாது. அதுவே உங்கள் இருத்தலின் கடைசி அடுக்கு; உங்கள் இருத்தலின் மையம். அதை உங்களால் மறுக்க முடியாது. ஏனெனில் அதை மறுப்பவர் யார்? இப்போது இரண்டு இருப்பதில்லை; இருப்பது ஒன்றே. அந்நிலையில் கட்டுப்பாடு இருக்கிறது. அந்நிலையில் மனதின் செயல்பாடு கட்டுக்குள் இருக்கிறது.

எனவே ஒரு குழந்தையை அதன் பெற்றோர்கள் ஒரு மூலையில் முடக்கி ''பேசாமல் உட்கார்'' என்பதைப் போன்றதல்ல இது. அக்குழந்தை அடங்கி இருப்பதுபோல் தோன்றும். ஆனால் அது அடங்குவதில்லை. அடங்கி இருப்பதுபோல் அது காட்சியளிக்கிறது. ஆனால் அது அமைதி இன்றியே இருக்கிறது. கட்டாயத்தின் பேரில் கட்டுப்பட்டு தெரிகிறது அது. ஆனால் அதன் உள்ளேயோ பெரும் அமளியே நிலவுகிறது.

ஒரு சிறு குழந்தையை அதன் தாய் ஓரிடத்தில் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தாள். அதுவோ அங்குமிங்கும் அலைந்து திரிந்து கொண்டிருந்தது. மூன்று தடவைகள் அதனிடம் அவள் 'பேசாமல் உட்கார்' என கூறினாள். பின் நான்காவது தடவை - அதுவே கடைசி தடவையாக - ''இப்போது பேசமால் உட்காரப் போகிறாயா, இல்லை அடி வேண்டுமா'' என்கிறாள் தாய். அம்மா எப்போது உண்மையாகவே கூறுகிறாள் என்பதை குழந்தைகள் புரிந்து கொள்கின்றன. அப்படியே அது புரிந்து கொண்டது - உட்கார்ந்துவிட்டது. ஆனால் ''வெளிப்பார்வைக்குத் தான் நான் பேசாமல் உட்கார்ந்திருக்கிறேன். ஆனால் உள்ளுக்குள் இன்னமும் நான் ஓடியாடிக்கொண்டுதான் இருக்கிறேன்'' என்று அவளிடம் கூறியது அக்குழந்தை.

வெளிப்பார்வைக்கு அமைதியாக இருக்குமாறு உங்கள் மனத்தை உங்களால் கட்டுப்படுத்த முடியும். ஆனால் உள்ளுக்குள் தொடர்ந்தும் அது ஓடிக்கொண்டே இருக்கும். உண்மையில் முன்பைவிட இன்னும் அதிக வேகமாகவே ஓடும் அது. ஏனென்றால் மனமானது கட்டுப்பாட்டை எதிர்க்கிறது. ''எவருமே கட்டுப்பாட்டை எதிர்க்கவே செய்கிறார்கள். எனவே இதுவல்ல முறை. இந்த முறையில் உங்களை நீங்கள் சாகடித்துக் கொள்ள முடியும்; ஆனால் நித்திய வாழ்வை அடைந்துகொள்ள முடியாது.

ஒருவித ஊனப்படுத்தலே இது. புத்தர் அமைதியாக அமர்ந்திருக்கிற போது அவர் உள்ளுக்குள் எந்த ஓட்டமும் - சலனமும் இருப்பதில்லை. உண்மையைச் சொன்னால் உள்ளுக்குள் அவர் அமைதியாகவே ஆகி இருக்கிறார்; அந்த அமைதியே அவரது வெளிப்புறத்திலும் பாய்ந்து பரவுகிறதே அன்றி, நேர்மாறாக அல்ல.

வெளிப்பக்கத்தில் பேசாமல் இருக்குமாறு உங்களுக்கு நீங்களே நெருக்குதல் கொடுக்க முயல்கிறீர்கள். வெளிப்பக்கத்தை பேசவிடாமல் செய்தால் உள்பக்கமும் அமைதியாகிவிடும் என்று நினைக்கிறீர்கள் நீங்கள். அப்படியானால் அமைதியின் இயல்உங்களுக்கு சுத்தமாக தெரியவில்லை. உள்ளுக்குள் நீங்கள் அமைதியாக இருந்தால் வெளியிலும் அது பொங்கி பெருகும். உள்பக்கத்தை அப்படியே பின்பற்றுகிறது வெளிப்பக்கம். உள்மையத்தை வெளிப்பரப்பு பின்பற்றுகிறது. இதற்கு மாறாக வெளிப்பரப்பை உள்மையம் பின்பற்றுமாறு செய்வது முடியாத ஒன்றாகும் - நடக்க முடியாத செயல் அது. எனவே ஆன்மீக தேடல் முழுவதுமே, எப்போதும் உள்ளிருந்து வெளி நோக்கியதாகவே இருக்கிறது; எதிர்திசையில் அல்ல என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்.

**மனதின் செயல்பாடு கட்டுக்குள் இருக்கும்போது மனம் தூய பளிங்குபோல் ஆகிறது.**

முழு அமைதி நிலவும்போது, உள்ளுக்குள் நீங்கள் வேர்கொண்டும் மையம் கொண்டும் இருக்கிறபோது நிகழ்வது எதுவாயினும் அதை அப்படியே கவனியுங்கள். பறவைகள் பாடிக்கொண்டிருக்கின்றன, அந்த இசை கேட்கும். சாலையில் போக்குவரத்து நடக்கிறது, அந்த ஓசை கேட்கும். அதுபோலவே சொற்கள், எண்ணங்கள், உள்பேச்சு ஆகிய – உங்கள் மனதில் நடக்கும் – உள் போக்குவரத்தும் தெரியும். ஆனாலும் நீங்கள் அமைதியாக அமர்ந்திருக்கிறீர்கள் – எதையும் செய்வதில்லை. ஒரு நுட்பமான ஈடுபாடற்ற தன்மையில் இருக்கிறீர்கள். அக்கறையற்றவர் போலவே நீங்கள் காணப்படுகிறீர்கள். எந்த வகையிலும் அலட்டிக் கொள்வதில்லை. எண்ணங்கள் வந்தாலும் வராவிட்டாலும் இரண்டுமே உங்களுக்கு ஒன்றுதான். சார்பாகவோ, எதிராகவோ எவ்வித ஈடுபாட்டையும் நீங்கள் காட்டுவதில்லை. பேசாமல் உட்கார்ந்திருக்கிறீர்கள். மனத்தின் போக்குவரத்து நடைபெறுகிறது. விருப்பு வெறுப்பின்றி அமர்ந்திருக்க உங்களால் முடிந்தால்.... கடினம்தான், காலம் எடுக்கும் - ஆனால் ஒரு தடவை அதன் லாவகம் உங்களுக்கு பிடிபட்டதுமே... இது ஒரு உத்தி அல்ல, லாவகம்தான். உத்தியை என்றால் கற்பிக்க முடியும். லாவகத்தை கற்பிக்க முடியாது. பேசாமல் உட்கார்ந்து அதை உணர வேண்டியதே. என்றாவது ஒருநாள் நீங்கள் அமைதியாக இருக்கும்போது ஒரு சரியான வேளையில்

திடீரென அது நிகழ்ந்தது எப்படி என்பதை, விருப்புவெறுப்பற்றவராவது எப்படி என்பதை, நீங்கள் அறிவீர்கள். போக்குவரத்து நடைபெறும்போது ஒரே ஒரு கணத்துக்காவது அதில் நீங்கள் ஈடுபடாமல் இருந்தீர்கள். திடீரென உங்களுக்கும் உங்கள் மனத்துக்கும் இடையிலான வெளி மிக விரிந்ததாக இருந்தது. மனம் உலகின் மறுகோடியில் இருந்தது. அந்த தொலைவே, அக்கணத்தில் நீங்கள் உங்களின் உள்மையத்தில் இருந்தீர்கள் என்பதை காட்டுகிறது. ஒருமுறை அந்த லாவகம் உங்களுக்கு பிடிபட்டு விட்டால் பின் எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் எளிதாக உங்களின் உள்மையத்துக்கு நழுவிக்கொள்ள உங்களால் முடியும். உள்ளே வீழ்கிறீர்கள். உடனடியாக ஒரு ஈடுபாடின்மை, ஒரு மாபெரும் பற்றற்ற தன்மை உங்களை சூழ்கிறத. அந்த ஈடுபாடின்மையின்போது மனத்தால் நீங்கள் தீண்டப்படாமல் இருக்கிறீர்கள். நீங்களே எசமானராகி இருக்கிறீர்கள்.

ஆர்வம் காட்டாதிருப்பதே எசமானராவதற்கான வழி. அப்போது மனம் கட்டுக்குள் இருக்கிறது. என்ன நிகழ்கிறது அப்போது? உள்மையத்தில் நீங்கள் இருக்கையில் மனதின் குழப்பம் மறைகிறது. வெளிப்பரப்பில் நீங்கள் இருந்ததால்தான் குழப்பம் நீடித்தது. உண்மையில் மனத்தால் எந்த குழப்பமும் இல்லை; மனத்துடன் சேர்ந்து நீங்களும் வெளிப்பரப்பில் இருப்பதுதான் குழப்பம். நீங்கள் உள்ளே போனதுமே மனத்தின் குழப்பம் மெல்ல மெல்ல தெளிவதை காண்கிறீர்கள். விசயங்கள் படிமானமாகிக் கொண்டிருக்கின்றன. நிலைமைகள் நேராகிக் கொண்டிருக்கின்றன. ஒரு குறிபபிட்ட ஒழுங்கு எழுகிறது.

**மனம் தூய பளிங்குபோல் ஆகிறது.**

குறுக்கீடு, குழப்பம், குறுக்குமறுக்காய் ஓடும் எண்ண அலைகள் அனைத்தும் அடங்குகின்றன. வெளிப்பரப்பிலேயே நீங்கள் இருப்பதால்தான் மொத்த குழப்பமும் விளைகிறது என்னும் இதை புரிந்து கொள்வது கடினமானதே. வெளிப்பரப்பில் இருந்தபடியே உங்கள் அறிவைக்கொண்டு குழப்பத்தை அடக்க நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள்.

ஒரு சிறு கதையை பல தடவைகள் நான் சொல்லி வந்திருக்கிறேன். ஒரு சாலையில் புத்தர் போய்க்கொண்டிருந்தார். அப்போது நடுப்பகல். மிகுந்த வெப்பமாக இருந்தது. புத்தருக்கு தாகம் ஏற்பட்டது. எனவே அவர் தன் சீடர் ஆனந்தரிடம் சொல்கிறார், "நாம் வந்த வழியே திரும்பிப்போம். இரண்டு மூன்று கல் தொலைவுக்கு முன்புதான் ஒரு சிறு ஓடையை நாம் கடந்தோம். அதிலிருந்து எனக்கு கொஞ்சம் நீர் மொண்டு வாரும்"

என்கிறார். சொல்லிவிட்டு புத்தர் ஒரு மரத்தடியில் ஓய்வெடுக்கிறார். ஆனந்தர் ஓடையை நோக்கி நடக்கிறார். ஆனால் ஓடையை அவர் நெருங்கும்போது பார்த்து சில மாட்டு வண்டிகள் ஓடையில் இறங்கி கடந்து சென்றன. எனவே நீர் எடுப்பது சிக்கலாகிறது. ஓடை மிகவும் ஆழம் குறைந்த சிறிய ஓடை. மாட்டு வண்டிகள் அதை கடந்து சென்றதால் அது கலங்கி விட்டிருந்தது. அதனடியில் படிந்திருந்த குப்பை அனைத்தும் மேலே வந்துவிட்டன. சருகுகள், செத்தைகள் முதலான எல்லாவிதமான குப்பையும் அதில் இருந்தது. நீர் குடிக்கத்தக்கதாயில்லை. நீங்கள் நடந்து கொள்வது போலத்தான் ஆனந்தரும் நடந்துகொண்டார் — ஓடைக்குள் இறங்கி நீர் மீண்டும் தூய்மையாவதற்காக குப்பைகளை படியவைக்க முயன்றார். இந்த முயற்சியில் அதை அவர் மேலும் கலக்கிவிட்டுவிட்டார். இப்போது என்ன செய்வது? அவர் திரும்பி வ்ந்தார். ''நீரானது குடிக்கும் நிலையில் இல்லை, நாம் போகும் வழியில் ஒரு ஆறு இருப்பதை அறிவேன், அங்கு போய் நீர் மொண்டு வருகிறேன்'' என்றார். ஆனால் அதற்கு புத்தர் இணங்கவில்லை. ''திரும்பவும் போம், எனக்கு அந்த ஓடையின் நீர்தான் வேண்டும்'' என்றார். புத்தர் வற்புறுத்தும்போது ஆனந்தரால் என்ன செய்யமுடியும்? விருப்பம் இல்லாமலே மறுபடியும் போனார். திடீரென்று அதிலுள்ள படிப்பினை அவருக்கு புரிந்தது. ஏனெனில் ஓடையை அவர் அடையும்போது பாதி குப்பை மீண்டும் படிந்து விட்டிருந்தது. யாரும் அதை படியச் செய்ய முயலாமலேயே, தானாகவே அது படிந்துவிட்டிருந்தது. விசயத்தை அவர் விளங்கிக் கொண்டார்.

பின் ஒரு மரத்தடியில் அமர்ந்து ஓடை ஓடுவதை கவனித்தபடி இருந்தார். ஏனெனில் பாதி குப்பை இன்னும் படியாமல் இருந்தது. சில சருகு செத்தைகள்; இன்னமும் மிதந்து கொண்டிருந்தன. அவர் காத்திருந்தார் காத்துக்கொண்டும், பார்த்துக்கொண்டும் இருந்தார்; வேறு ஒன்றும் செய்யவில்லை. விரைவில் நீர் தெள்ளத் தெளிவாகியது. குப்பைகள் நீரோட்டத்தில் போய்விட்டன. தூசுதும்புகள் படுகையில் படிந்துவிட்டன. அவர் நடனமாடியபடியே ஓடிவந்தார். புத்தரின் பாதங்களில் விழுந்து சொன்னார், ''கண்டு கொண்டேன்! இதையேதான் என் வாழ்நாள் முழுவதும் என் மனதுக்கு நான் செய்து வந்திருக்கிறேன். இனி, ஒரு மரத்தடியில் பேசாமல் உட்கார்ந்து மன ஓடை ஓடுவதை கவனிப்பேன். தானே தெளியும் வரை காத்திருப்பேன். இனி ஓடைக்குள் நான் குதித்து நிலைமைகளை படியவைக்க முயலமாட்டேன்... ஒரு ஒழுங்கை கொண்டுவர முனையமாட்டேன்'' என்றார்.

மனத்தை ஒழுங்குபடுத்த ஒருவராலும் முடியாது. ஒழுங்குபடுத்த முயலும் அந்த முயற்சி ஒழுங்கீனத்தைத்தான் உருவாக்குகிறது.

கவனித்துக்கொண்டும், காத்துக்கொண்டும் இருக்க உங்களால் முடிந்தால், பற்றற்று பார்த்துக்கொண்டிருக்க உங்களால் முடிந்தால், நிலைமைகள் தாமே ஒழுங்காகி வருகின்றன. நிலைமைகள் நீண்ட காலத்துக்கு படியாமல் தொடரமுடியாது என்று ஒரு விதி உள்ளது. இந்த நியதியை நீங்கள் நினைவில் கொள்ளவேண்டும். நிலைமைகள் நீண்ட நெடும்காலத்துக்கு தெளியாமலேயே நீடித்திருக்க முடியாது என்பது மிக அடிப்படையான விதிகளில் ஒன்றாகும். ஏனென்றால் தெளிவடையாத நிலை என்பது இயற்கையானது அல்ல, இயற்கைக்கு மாறனாது அது. நிலைமைகள் படிமானமான நிலையே இயல்பானதாகும். நிலைமைகள் படியாத நிலை இயல்பானது அல்ல. எனவே இயற்கையற்றது குறிப்பிட்ட காலத்துக்கு நிலவ முடியும்; ஆனால் என்றென்றைக்குமாக நீடிக்க முடியாது. உங்கள் அவசரத்தாலோ, உங்கள் ஆத்திரத்தாலோ நீங்கள் வேண்டுமானால் நிலைமைகளை மோசமாக்கிவிட கூடும்.

ஜப்பானில் உள்ள ஸென் மடங்களில் பைத்தியங்களுக்கு வைத்தியம் செய்ய ஒரு குறிப்பிட்ட முறையை வைத்திருக்கிறார்கள். மேற்கினர் இதற்கு இன்னும் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. இன்னும் அவர்கள் இருட்டில் துளாவிக் கொண்டிருக்கிறார்கள். மிக சாதாரண கிறுக்கர்களுக்குக் கூட அவர்களால் உதவ முடியாதிருப்பதுபோல் தெரிகிறது. இதில் உளப்பகுப்பாய்வு இயலை படிக்க 3 ஆண்டுகள், 5 ஆண்டுகள், 7 ஆண்டுகள் ஆகிறது. அதன் பிறகும்கூட அதனால் பெரிதாக எந்த பயனும் விளைவதில்லை. இமயமலை முழுவதையும் குடைந்தாலும் அதிலிருந்து ஒரு சுண்டெலியைக்கூட உங்களால் கண்டெடுக்க முடிவதில்லை. எனவே மிகப்பெரும் செல்வர்கள் மட்டுமே அதை ஒரு ஆடம்பரமாக பயன்படுத்த முடிகிறது. உளவியல் பகுப்பாய்வு ஒரு ஆடம்பரம்தான். மக்கள் அதைக் குறித்து பீற்றிக்கொள்கிறார்கள். மிகப்பெரிய ஒரு உளவியல் அறிவரால் தாம் உளப்பகுப்பாய்வு செய்யப்பட்டிருப்பதாகவும், ஐந்து ஆண்டுகளாக தொடர்ந்து தாம் உளப்பகுப்பாய்வுக்கு உட்படுத்தப்பட்டதாகவும் பெருமை பேசுகிறார்கள் – ஏதோ அது ஒரு சாதனைபோல. ஆனால் அதிலிருந்து விளைவது ஒன்றுமில்லை. ஒரு உளவியல் மருத்துவரிடமிருந்து இன்னொருவருக்கு என மாறிக்கொண்டிருக்கிறார்கள் மக்கள்.

ஜப்பானில் மிக எளிய ஒரு முறையை கையாள்கிறார்கள். யாருக்காவது பைத்தியம் பிடித்தால் அவரை மடத்துக்கு கொண்டு போகிறார்கள். மடத்திலிருந்து தனித்ததாக ஒரு ஓரத்தில் ஒரு சிறு குடில் வைத்திருக்கிறார்கள். பைத்தியர் அங்கு விடப்படுகிறார். யாரும் அவரிடம் அதிக ஈடுபாடு காட்டுவதில்லை. பைத்தியத்திடம் ஒருபோதும் அதிக ஈடுபாடு காட்டாதீர்கள். ஏனெனில் அந்த அதற்கு ஊட்டமாகிறது- ஒரு

பைத்தியர் முழு உலகின் கவனத்தையும் கவர விரும்புகிறார். அதனால் தான் அவர் பைத்தியமாக இருக்கிறார். முதற்கண் பிறர் கவனத்தை கவர்ந்திழுப்பதில் அவர் பைத்தியமாக இருக்கிறார். இதுவே அவர் பைத்தியம் ஆவதற்கு காரணமாகி விடுகிறது.

எனவே எவரும் அதிகம் பொருட்படுத்துவதில்லை... தேவைகளை நிறைவேற்றுகிறார்கள், ஆனால் ஈடுபாடு காட்டுவதில்லை. அவருக்கு உணவு தருகிறார்கள். பிற வசதிகளை செய்து தருகிறார்கள். ஆனால் யாரும் அவரிடம் பேச்சு கொடுப்பதில்லை. உணவும் பிறவும் கொண்டுவந்து தருபவர்கள்கூட அவருடன் பேசமாட்டார்கள்; அவருடன் பேச அனுமதிக்கப்படுவதில்லை. ஏனெனில் பைத்தியர்கள் பேச்சையே விரும்புவார்கள். உண்மையில் அளவுக்கு அதிகமான பேச்சுதான் அவர்களை இந்த நிலைக்கு கொண்டு வந்திருக்கிறது.

உளவியல் பகுப்புமுறைக்கு நேர் எதிரானது இந்த முறை. உளவியல் மருத்துவர் பேசிக்கொண்டே இருக்கிறார். தன் நோயாளியையும் மணிக்கணக்கில் பேச அனுமதிக்கிறார். பைத்தியர்கள் இதை வெகுவாக விரும்பும். தன்னை ஒருவர் உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருக்கிறார் என்றால் - குஷிதான்!

ஸென் மடத்தில் ஒருவரும் பைத்தியத்துடன் பேசமாட்டார். ஒருவரும் எவ்வித கவனத்தையும் - குறிப்பான கவனத்தையும் - காட்ட மாட்டார். ஒரு நுட்பமான ஈடுபாடின்மை. அவர்களின் தேவைகளை நிறைவு செய்கிறார்கள்-அவ்வளவுதான். மூன்று வாரங்களுக்கு அவருடன் யாரும் பேசுவதில்லை. மேலும், யாரும் பேசுவதில்லை ஆதலால் தன்னுடனேயே அவர் பேசிக்கொள்ள முடியும். அவரும் இளைப்பாறுகிறார். தன் படுக்கையில் உட்கார்ந்துகொண்டோ, படுத்துக் கொண்டோ இருக்கிறார். ஒன்றும் செய்வதில்லை. உண்மையில் எந்த பண்டுவமும் செய்யப்படுவதில்லை. ஆனால் மூன்று வாரங்களுக்குள் முற்றிலும் அவர் சீரடைகிறார்.

இப்போது இதில் மேலை உளவியல் ஆய்வர்கள் ஆர்வம் காட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். ஏனென்றால் இது நடக்கமுடியாத காரியம் - பைத்தியத்தை அதன்போக்கில் விட்டுவிடுவதா? ஆனால் இதுவே பவுத்த கண்ணோட்டம்; யோகிகளின் கண்ணோட்டமும் ஆகும்: அப்படியே விட்டு விடுவது. ஏனெனில் எந்த ஒன்றையும் அதன் போக்கில் நீங்கள் விட்டு விட்டால், நீண்ட காலத்துக்கு தீர்வாகாமலே அது தொடரமுடியாது. நீங்கள் அதை விடாவிட்டால் நீண்ட காலத்துக்கு அது தீர்வாகாமலே இருக்க முடியும். ஏனெனில் மீண்டும் மீண்டும் தொடர்ச்சியாக நீங்கள் அதை கிளறிவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள்.

இயற்கையானது குழப்பத்தை விரும்புவதில்லை. ஒழுங்கையே விரும்புகிறது. ஒழுங்குக்கே இயற்கை முழு ஆதரவாக இருக்கிறது. எனவே குழம்பிய நிலை என்பது தற்காலிக நிலையாக மட்டுமே நிலவமுடியும். இதை நீங்கள் புரிந்துகொண்டால் பின் மனத்தை ஒன்றும் செய்யாதீர்கள். இந்த பைத்திய மனத்தை அதனிடமே விட்டு விடுங்கள். நீங்கள் பேசாமல் கவனியுங்கள். எந்த ஈடுபாடும் காட்டா தீர்கள். கவனித்து வருவதற்கும் ஈடுபாடு காட்டுவதற்கும் ஒரு வேறுபாடு உள்ளது என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஈடுபாடு காட்டினால் அதில் உங்களுக்கு அக்கறை ஏற்பட்டுவிடும். சும்மா கவனித்தால் அக்கறையில்லாமல் இருக்கிறீர்கள்.

ஈடுபாடு காட்டாமையை புத்தர் உபேட்சை என்கிறார். முற்ற முழுக்க தலையிடாமை. பேசாமல் கரையில் அமர்ந்துகொள்வது. அருகில் ஆறு ஓடுகிறது, நிலைமைகள் தாமே தெளிவாகின்றன, அழுக்குகள் படுகைக்கு போய்விடுகின்றன, சருகுகள் அடித்துச் செல்லப்பட்டு விடுகின்றன, திடீரென நீரோட்டம் பளிங்குத் தெளிவாக இருக்கிறது.

இதைத்தான் பதஞ்சலி கூறுகிறார்:

> **மனதின் செயல்பாடு கட்டுக்குள் இருக்கும்போது மனம் தூய பளிங்குபோல் ஆகிறது....**

அப்படி மனம் தூய பளிங்குபோல் ஆகும்போது மூன்று பொருள்கள் அதில் பிரதிபலிக்கப்படுகின்றன.

> **....காண்பவரையும் காட்சியையும் காணப்படுவதையும் உருத்திரிக்காமல் சமமாக பிரதிபலிக்கிறது.**

... அதாவது பொருள், கர்த்தா, இரண்டுக்கும் இடையிலான உறவு.

மனம் தெள்ளத் தெளிவாக இருக்கிறபோது, ஒரு ஒழுங்காக ஆகியிருக்கிறபோது, ஒரு குழப்பமாக இல்லாமலிருக்கிறபோது, நிலைமைகள் படிமானமாகி இருக்கிறபோது, மூன்று விசயங்கள் அதில் பிரதிபலிக்கப்படுகின்றன. அது ஒரு கண்ணாடியாக ஆகிறது; முப் பட்டைக் கண்ணாடியாக ஆகிறது. புறஉலகை - பொருள்களின் உலகை அது பிரதிபலிக்கிறது; அக உலகத்தை - உள்ளுணர்வு உலகத்தை அது பிரதிபலிக்கிறது; இரண்டுக்கும் இடையிலான உறவை - காட்சியை யும் அது பிரதிபலிக்கிறது.... அதுவும் உருத்திரிக்காமல் பிரதிபலிக்கிறது.

மனதுக்குள் நீங்கள் தேவையின்றி தலையிட்டு உழப்புவது காரணமாகத்தான் உருத்திரி தோன்றுகிறது. உருத்திரிபு என்றால் என்ன? கண்களைப் போன்ற ஒரு எளிய கருவியே மனம். கண்களின் மூலமாக

பார்க்கிறீர்கள் - உலகம் பிரதிபலிக்கப்படுகிறது. ஆனால் கண்களுக்கு ஒரே ஒரு பரிமாணம்தான் உண்டு. புறஉலகை மட்டுமே அவற்றால் பிரதிபலிக்க முடியும். உங்களை அவற்றால் பிரதிபலிக்க முடியாது. மனமோ முப்பரிமாணம் உள்ள - மிக ஆழமான ஒரு நிகழ்வு. அனைத்தையும் அது பிரதிபலிக்கிறது - அதுவும் எவ்வித உருக்கோட்டமும் இல்லாமல். சாதாரணமாக அது திரித்தே காட்டுகிறது. ஒரு பொருளை நீங்கள் பார்க்கும்போதெல்லாம் மனதிலிருந்து விடுபட்டவராக நீங்கள் இல்லை என்றால் அந்த பொருள் கோணலாகவே காட்டப்படும்; வேறு ஒரு பொருளை நீங்கள் காண்கிறீர்கள். உங்கள் காட்சியை – கருத்துக்களை அதனுடன் நீங்கள் கலந்துவிடுவீர்கள். காட்சித் தூய்மையோடு அதை நீங்கள் காணமாட்டீர்கள். கருத்துகளோடு சேர்த்து காண்பீர்கள். இந்நிலையில் அந்த காட்சி, உங்கள் கருத்துகள் அதன்மேல் ஏறிய நிலையிலேயே காட்சியளிக்கும்.

ஒரு ஆப்பிரிக்க பழங்குடியில் நீங்கள் பிறந்திருந்தால் மெலிந்த உதடுகள் அழகானவை அல்ல என்று நீங்கள் கருதுவீர்கள். பருத்த... பல ஆப்பிரிக்க குலத்தினர் தம் உதடுகளை மென்மேலும் தடிமனாக்கிக் கொண்டே போகிறார்கள். உதடுகளை அதிகமதிக தடிப்பாக ஆக்குவதற் கான எல்லா வழிமுறைகளையும் அவர்கள் - குறிப்பாக, பெண்கள் - கையாளுகிறார்கள். ஏனென்றால் தடித்த உதடுகளே அழகானவை என்பதே அவர்களின் கருத்து. தம் இனத்தின் வரலாறு நெடுகவும் இதை அவர்கள் காப்பாற்றிக்கொண்டு வந்திருக்கிறார்கள். மெலிந்த உதடுகள் அமைந்த பெண் அங்கு அது குறித்து தாழ்வுணர்ச்சி கொள்கிறாள்.

இங்கு இந்தியாவில் மெல்லிய உதடுகளையே விரும்புகிறார்கள். கொஞ்சம் தடிமனாக அவை இருந்தாலே அது அழகல்ல என நினைக் கிறார்கள். இந்த கருத்துகள் மனதுக்குள் இறங்குகின்றன. மிகவும் ஆழமாக வேரூன்றியவையாக ஆகிவிடுகின்றன. இவை உங்கள் பார்வையை உருத்திரிக்கின்றன. மெலிந்த உதடுகளோ, தடித்த உதடு களோ அழகானவையும் அல்ல அசிங்கமானவையும் அல்ல. அழகு - அழ கின்மை என்பது உண்மையில் உருத்திரிபுகளே; உங்களின் கருத்துகளே அவை. அவற்றை யதார்த்தத்துடன் நீங்கள் கலந்து விடுகிறீர்கள்.

தங்கத்தை அறவே மதிக்காத இனக்குழுக்கள் இருந்துள்ளன. தங்கத்துக்கு அவர்கள் மதிப்பே வழங்காதபோது அதன்மேல் அவர்கள் பேராசை கொள்வதென்பதும் இல்லை. இன்றோ உலகம் முழுவதும் தங்கத்தின்மேல் பேராசை கொண்டுள்ளது. ஒரு கருத்துதான், ஆனால் தங்கம் விலைமதிப்பு கூடியதாகி இருக்கிறது.

பொருள்களின் உலகில், யதார்த்த உலகில் எதுவுமே அதிக மதிப்புடையதும் அல்ல, குறைந்த மதிப்புடையதும் அல்ல. மதிப்பீட்டைக் கொண்டுவருவது மனம் - நீங்கள். எதுவும் அழகுமல்ல, அசிங்கமும் அல்ல. பொருள்கள், அவை இருக்கும் நிலையிலேயே இருக்கின்றன. தம் சொந்த தன்மையில் அவை நிலவுகின்றன. ஆனால் மேல்பரப்பில் நீங்கள் இருக்கும்போது, கருத்துகளுடன் நீங்கள் கலந்துவிடும்போது, ''இதுவே அழகுபற்றிய என் கருத்தாகும், இதுவே உண்மைபற்றிய என் கருத்தாகும்'' என்று சொல்ல ஆரம்பிக்கிறீர்கள் நீங்கள்; அதன்பின் எல்லாமே உருத்திரிக்கப்பட்டுப் போகிறது.

நீங்கள் உள்ளே மையத்துக்கு போய் மனம் வெளியே தனியாக விடப்படும்போது, மையத்திலிருந்துகொண்டு மனத்தை நீங்கள் கவனிக்கும் போது, அதனுடன் உங்களை நீங்கள் ஒருமைப்படுத்திக் கொள்வதில்லை. மெல்ல, மெல்ல எல்லா கருத்துகளும் மறைகின்றன. மனம் பளிங்குத் தெளிவாக ஆகிறது. அந்நிலையில் கண்ணாடியில் — மனமென்னும் முப்பட்டைக் கண்ணாடியில் - பொருள், கருத்தா, காட்சி ஆகிய மூன்றும் / காண்பவர் - காட்சி - காணப்படுவது ஆகிய மூன்றும் சேர்ந்த முழுமை பிரதிபலிக்கிறது.

**சவிதர்க்க சமாதியில் யோகி, மெய்யறிவை —சொற்களை அடிப்படையாகக் கொண்ட அறிவுக்கும், பகுத்துப் பார்ப்பதை /புலன் உணர்வுகளை அடிப்படையாகக் கொண்ட அறிவுக்குமிடையிலான வேறுபாட்டை — இன்னும் பிரித்தறிய மாட்டாதவராகவே இருக்கிறார். இந்த கட்டத்தில் அவையெல்லாம் கலந்து குழம்பிய நிலையிலேயே அவர் மனம் இருக்கிறது.**

சமாதிகள் இரண்டு விதம். ஒன்றை பதஞ்சலி **சவிதர்க்கம்** என்று அழைக்கிறார். மற்றதை **நிர்விகல்பம்** அல்லது **நிர்விதர்க்கம்** என்று அழைக்கிறார். இவை இரண்டு நிலைகள். முதலில் ஒருவர் சவிதர்க்க சமாதி நிலையை அடைகிறார். இங்கு தர்க்கமனம் இன்னமும் செயல் பட்டுக் கொண்டிருக்கிறது. சமாதிதான், இருந்தாலும் அது பகுத்தறிவுக் கண்ணோட்டத்தை அடிப்படையாக கொண்டுள்ளது. இன்னமும் பகுத்தறிவு இயங்கிக் கொண்டிருக்கிறது. இப்பவும் நீங்கள் பாகு பாடுகள் செய்து கொண்டிருக்கிறீர்கள். இது மிகவும் உயர்ந்த நிலை சமாதி அல்ல. முதல் அடிவைப்பு மட்டுமே. ஆனால் அதுவே மிகமிக கடினமானதேதான். ஏனெனில் இதற்கே, மையத்தை நோக்கி கொஞ்சம் போவது தேவைப்படும்.

காட்டாக: நீங்கள் இப்போது இருக்குமிடத்தில் வெளிப்பரப்பு உள்ளது. நான் இப்போது இருக்குமிடத்தில் உள்மையம் உள்ளது. இரண்டுக்கும் இடையில் - நட்டநடுவில் - சவிதர்க்க சமாதி உள்ளது. வெளிப்பரப்பரப்பிலிருந்து நீங்கள் கிளம்பிவந்துவீட்டீர்கள், ஆனால் உள் மையத்தை இன்னும் நீங்கள் அடைந்திருக்கவில்லை என்பதே இதன் பொருள். வெளிப்பரப்பிலிருந்து நீங்கள் விலகி விட்டீர்கள். இருந்தாலும் மையம் இன்னமும் தொலைவிலேயே உள்ளது. இரண்டுக்கும் இடையிலேயே நீங்கள் இருக்கிறீர்கள். இன்னமும் பழசு ஓரளவுக்கு செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. புதியதும் ஓரளவுக்கு உள்நுழைந்திருக்கிறது. இடைவழியில் நீங்கள் இருக்கிறீர்கள். ஆயின் இந்த இடைவழி உணர்வு நிலையின் தன்மை என்னவாக இருக்கும்?

**சவிதர்க்க சமாதியில் யோகி மெய்யறிவை... இன்னும் பிரித்தறிய மாட்டாதவராகவே இருக்கிறார்....**

எது மெய் என்பதை இன்னமும் பிரித்தறிய மாட்டாதவராகவே அவர் இருப்பார். ஏனென்றால் மையத்திலிருந்து கொண்டு மட்டுமே மெய் என்பதை அறிய முடியும். அதை அறிந்துகொள்வதற்கு வேறு வழி இல்லை. வேறுவழியில் மெய்யறிவை அவர் அறிய முடியாது. மெய்மையில் கொஞ்சம் கசிந்து கிடைக்கிறது. ஏனென்றால் அவர் வெளிப்பரப்பிலிருந்து கிளம்பியிருக்கிறார், மையத்தை நெருங்கியிருக்கிறார், இன்னும் மையம் கொள்ளவில்லை. இருந்தாலும் அதற்கு அருகில் வந்துவிட்டார். உள்மையத்தின் ஓரளவு சாரம் அவருள் இறங்குகிறது - சில காட்சிகள், மையத்தின் சில தரிசன கீற்றுகள். ஆனால் பழைய மனம் இன்னமும் அங்கு இருக்கிறது; முழுவதுமாக போய் விடவில்லை. ஒரு விடுபாடு ஏற்பட்டுள்ளது. ஆனாலும் பழைய மனம் தொடர்ந்து இயங்கியபடிதான் உள்ளது. மெய்யறிவை இன்னமும் பிரித்துணர மாட்டாதவராகவே இருக்கிறார் யோகி....

மனம் துளியும் உருத்திரிக்காத போது கிடைக்கும் அறிவே மெய்யறிவு. ஒரு விதத்தில், மனம் முழுவதுமாக மறைந்ததும் கிடைக்கும் அறிவே மெய்யறிவு. அப்போது அது ஊடுருவிப் பார்க்கக்கூடியதாக ஆகிவிடுகிறது. எனவே அது இருக்கிறதா? இல்லையா? என்ற வேறுபாடே தெரிவதில்லை. அந்த நடுநிலையில் யோகியானவர் மிக ஆழமான ஒரு குழப்பத்தில் இருக்கிறார்: மெய்மையினால் கொஞ்சம் குழப்பம் உண்டாகிறது. கடந்த காலத்தில் சொற்களில் இருந்தும் மதநூல்களில் இருந்தும் போதகர்களிடமிருந்தும் அவர் சேகரித்துள்ள செய்திகளிலிருந்து கொஞ்சம் குழப்பம் உண்டாகிறது. எது சரி - எது தவறு

என்பது பற்றிய அவரது சொந்த ஆராய்ச்சிகளில் இருந்து கொஞ்சம் குழப்பம் விளைகிறது. மேலும் அவரது கண்கள் - காதுகள் - மூக்கு முதலான புலன்கள் வழங்கும் உணர்வுகளில் இருந்து கொஞ்சம் குழப்பம் உண்டாகிறது. இவை எல்லாமே சேர்ந்த ஒரு ஆழமான குழப்பமாக இருக்கிறார் யோகி.

இந்த நிலையில் சித்தன் பித்தராகிவிட முடியும். இந்தநிலையில் அவரை கவனித்துக்கொள்ள யாருமில்லை என்றால் யோகிக்கு பித்து பிடித்துவிட முடியும். ஏனெனில் மிகப்பல பரிமாணங்கள் ஒன்று கலக்கின்றன; மிகப்பெரிய ஒரு குழப்பம் - பெருங்குழப்பம் அங்கு நிலவுகிறது... எப்பேர்ப்பட்ட பெருங்குழப்பம் என்றால் , வெளிப்பரப்பில் அவர் இருந்த காலத்தில் எல்லாம் ஏற்பட்டதை விடவும் பெரிய குழப்பம். ஏனென்றால் புதிதாக ஒரு நிலை உருவாகி இருக்கிறது.

இப்போது மையத்திலிருந்து சில தரிசன கீற்றுகள் அவரை நோக்கி வந்துகொண்டிருக்கின்றன. சாத்திரங்களிலிருந்து தான் சேகரித்துள்ள அறிவிலிருந்துதான் அவை வந்து கொண்டிருக்கின்றனவா என்பதை அவரால் அறிய முடியாது. சில நேரங்களில் திடீரென அவர் **அகம் பிரம்மாஸ்மி** அதாவது நானே கடவுள் என உணர்கிறார். இந்நிலையில், தான் படித்திருக்கும் உபநிடதத்திலிருந்தே இந்த உணர்வு வருகிறதா? அல்லது தான் தானே அதை அவர் பகுத்துக் கண்டாரா என்பதை அறிய – பிரித்துணர மாட்டாதவராக அவர் இருக்கிறார். ''முழுமையின் பகுதி நான், கடவுளே முழுமை, எனவே நானும் கடவுள்தான்'' என்பது பகுத்தறிவு ரீதியான முடிவு. அது தர்க்கரீதியாக கிடைத்த ஒரு முடிவா அல்லது புலன் உணர்வுகளிலிருந்து அது வந்து கொண்டிருக்கிறதா....

ஏனெனில் சில நேரங்களில் நீங்கள் மிக அமைதியாக இருக்கும்போது, புலன்வாயில்கள் தெளிவாக இருக்கும்போது, நீங்கள் கடவுள்தான் என்னும் உணர்வு தோன்றுகிறது. இசையை ரசிக்கும்போது, திடீரென ஒரு மானுட பிறவியாக இல்லாது போகிறீர்கள் நீங்கள். உங்கள் காதுகள் திறந்திருந்தால், இசை ஞானம் உங்களுக்கு இருந்தால், திடீரென ஒரு மாறுபட்ட தளத்துக்கு நீங்கள் எழுப்பப்படுகிறீர்கள். நீங்கள் விரும்பும் ஒரு பெண்ணுடன் காதல் செய்து கொண்டிருக்கும்போது கலவியின் உச்சத்தில் திடீரென நீங்கள் ஒரு கடவுளாக ஆகியிருப்பதாக உணர்கிறீர்கள். புலன் உணர்வுகள் மூலம் இது நிகழமுடியும். பகுத்தறிவின் மூலமும் இது நிகழமுடியும். உபநிடத அறிவிலிருந்து அது வந்து கொண்டிருக்கலாம். நீங்கள் வாசித்திருக்கும் மதநூல்களிலிருந்து அது வந்து கொண்டிருக்கலாம். அல்லது உள் மையத்திலிருந்தே கூட வந்து கொண்டிருக்கலாம். ஆகவே எங்கிருந்து அது வந்து கொண்டிருக்கிறது

என்பதை இடைவழியில் இருக்கிற மனிதர் அறிவதில்லை. எல்லா புறத்திலிருந்தும் கோடிக்கணக்கான நிகழ்வுகள் - புதுமையானவை, அறியப்படாதவை, அறியப்பட்டவை என பலவும் - நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இந்நிலையில் ஒருவர் சரியான குழப்பத்தில் இருக்க முடியும்.

எனவேதான் பலரும் சேர்ந்து செயல்படும் விதமான பள்ளிகள் தேவைப்படுகின்றன. ஏனெனில் நிகழ்பவை மேற்படி மூன்று விதங்கள் மட்டுமல்ல. வெளிப்பரப்புக்கும் உள்மையத்துக்கும் இடையில் இப்படி பலதரப்பட்ட நிலைமைகள் இருக்கின்றன. பல நிலைகளில் இருக்கும் பலரும் சேர்ந்து இயங்கும் இடத்தையே பள்ளி என்பது குறிக்கிறது. அது ஒரு பள்ளியே தான்; முதல் படிவ மக்கள் அங்கே இருக்கிறார்கள். இரண்டாம் படிவ மக்கள் அங்கே இருக்கிறார்கள். மூன்றாம் படிவ மக்கள் அங்கே இருக்கிறார்கள். தொடக்கப்பள்ளி, நடுநிலைப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, பின் பல்கலைக்கழகம். மழலையர் வகுப்பு முதல் பல்கலைவரை சேர்ந்திருக்கும் இடமே செம்மையான பள்ளி ஆகும். அதன் இறுதியில்/ மையத்தில் இருக்கும் ஒருவர் பள்ளியின் நடுநாயகமாக ஆகிறார்.

மேலும், பலர் இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்களும் உதவியாக இருக்க முடியும்... உங்களை விட பின்னால் இருக்கும் ஒருவருக்கு நீங்கள் உதவமுடியும். உயர்நிலை பள்ளியில் பயிலும் ஒருவர் தொடக்கப்பள்ளிக்கு வந்து கற்பிக்க முடியும். தொடக்கப் பள்ளியில் படிக்கும் ஒரு சிறுவன் மழலையர் வகுப்புக்கு போய் உதவ முடியும். ஒரு பள்ளி என்றால் வெளிப்பரப்பிலிருந்து உள்மையத்தை நோக்கி செல்வது. அதில் பல கட்டங்கள் - படிநிலைகள் உள்ளன. ஒரு பள்ளி என்றால், அங்கு எல்லாவிதமான மனிதர்களும் ஒரு ஆழமான ஒத்திசைவில் ஒரே குடும்பமாக சேர்ந்திருக்கிறார்கள். முதல் முதலில் இருந்து கட்ட கடைசிவரை, தொடக்கத்திலிருந்து இறுதிவரை, அகரத்திலிருந்து னகரம் வரை பலதரப்பட்டவர்களும் சேர்ந்திருக்கிறார்கள். இந்த முறையில் மிகுந்த உதவிகிடைக்க இயலுகிறது. ஏனெனில் உங்களுக்குப் பின்னால் இருக்கும் ஒருவருக்கு உங்களால் உதவமுடிகிறது. அவரிடம் நீங்கள் இப்படி சொல்ல முடிகிறது: 'கவலைப்படாதே. போய்க்கொண்டே இரு. இந்த நிலைமை தோன்றுகிறது. பின் தானே தணிந்து விடுகிறது. அளவுக்குமீறி அதில் நாட்டம் செலுத்தாதே. ஈடுபட்டுக்கொள்ளாமல் இரு. அது வந்து போய்விடும்.' இப்படியே உங்களுக்கு கைகொடுத்து உதவ உங்களுக்கு முன்னால் யாராவது அங்கு இருப்பார். அத்துடன் சிகரத்திலிருந்து பள்ளத்தாக்கு வரை எல்லா கட்டங்களையும் ஊடுருவிக் காணக்கூடிய - எல்லா வாய்ப்புகளையும் குறித்த முழுப்பார்வை பெற்றிருக்க முடியக்கூடிய ஒரு குருவும் தேவைப்படுகிறார்.

— —

இல்லாமல் போனால் சவிதர்க்கசமாதி என்னும் இந்த நிலையில் பலரும் பித்தர்களாகி விடுகிறார்கள். அல்லது மிகவும் பயந்து நடுங்கி உள்மையத்திலிருந்து விலகி ஓடிவிடுகிறார்கள். மீண்டும் வெளிப்பரப்பைப் பிடித்துக்கொண்டு தொங்கத் தொடங்குகிறார்கள். ஏனெனில் அங்காவது குறைந்தது ஒருவித ஒழுங்கு நிலவுகிறது; குறைந்தது, அறியப்படாத ஒன்று அங்கு நுழைவதில்லை; புதுமுகங்கள் யாரும் உங்கள் கதவை தட்டுவதில்லை.

ஆனால் சவிதர்க்க சமாதியை அடைந்துவிட்ட ஒருவர் வெளிப் பரப்புக்கு திரும்பிப் போனால் அதனால் எந்த தீர்வும் கிடைக்காது. திரும்பவும் பழைய ஆளாக ஒருபோதும் அவர் ஆகமுடியாது. இனி வெளிப்பரப்பை சேர்ந்தவராக அவர் இருக்கவே முடியாது. எனவே அது பெரியதாக பயன்படாது. இனி ஒருபோதும் வெளிப்பரப்பின் பகுதியாக அவர் இருக்கப்போவதில்லை. எனவே அவர் அங்கு மேலதிக குழப்பத் துடனேயே இருப்பார். ஏனென்றால் ஒன்றை நீங்கள் தெரிந்த பின் அது உங்களுக்கு தெரியாது என்று உங்களுக்கு நீங்களே எப்படி எடுத்துக் கொள்ள முடியும்? ஒரு தடவை உங்களுக்கு தெரிந்துவிட்டால் தெரிந்து விட்டதுதான். நீங்கள் தவிர்க்க முடியும். உங்கள் கண்களை மூடிக் கொள்ள முடியும். ஆனாலும் அது அங்கேயேதான் இருக்கிறது. உங்கள் வாழ்க்கை முழுவதும் உங்களை அது விடப்போவதில்லை.

பள்ளி இல்லாமல் போனால் ஆசான் இல்லாமல் போனால் மிகவும் சிக்கலான ஒரு நோயாளியாகிப் போவீர்கள் நீங்கள். இந்த உலகத்துக்கு நீங்கள் சொந்தமாக முடியாது. சந்தையும் உங்களுக்கு ஒரு பொருட்டாகபடுவதில்லை. உலகத்தை கடந்து அப்பால் செல்லவும் உங்களுக்கு பயமாக இருக்கிறது.

> **சவிதர்க்க சமாதியில் யோகி மெய்யறிவை - சொற்களை அடிப்படையாகக் கொண்ட அறிவுக்கும் பகுத்துப் பார்ப்பதை / புலன் உணர்வுகளை அடிப்படையாகக் கொண்ட அறிவுக்கும் இடையிலான வேறுபாட்டை - இன்னமும் பிரித்தறிய மாட்டாதவராகவே இருக்கிறார். இந்த கட்டத்தில் அவை எல்லாம் கலந்து குழம்பிய நிலையிலேயே அவர் மனம் இருக்கிறது.**

நிர்விதர்க்க சமாதி என்றால் உள்மையத்தை அடைதலாகும்; அங்கு-தர்க்கம் மறைகிறது, சாத்திரங்கள் இனி தேவைஇல்லை, புலன் உணர்வுகள் உங்களை ஏமாற்ற முடியாது. உள்மையத்தில் நீங்கள் இருக்கும்போது திடீரென எல்லாமே தானே விளங்கும் உண்மையாக

இருக்கிறது. ''தானே விளங்கும் உண்மை'' என்ற இந்த சொல்லை புரிந்து கொள்ளவேண்டும்; வெளிப்பரப்பிலும் உண்மைகள் உள்ளன. ஆனால் அவை ஒருபோதும் சுயவெளிச்சம் உடையவையாக இருப்பதில்லை. அவற்றுக்கு ஏதாவது சான்று தேவைப்படுகிறது; ஏதாவது விளக்கம் தேவைப்படுகிறது. ஒன்றை நீங்கள் சொன்னால் அதை நீங்கள் உங்களுக்கும் பிறருக்கும் நிருபித்துக் காட்ட வேண்டி இருக்கும். உள்மையத்திலோ கடவுள் தானே விளங்குபவராக உள்ளார். அதற்கு எந்த சாட்சியமும் உங்களுக்கு தேவைப்படுவதில்லை. உங்கள் கண்கள் திறந்திருந்து, சூரிய உதயத்தை பார்க்க உங்களால் முடியும் போது அதற்கு வேறு என்ன சாட்சியம் வேண்டி இருக்கிறது? ஆனால் ஒரு குருடருக்கோ சான்று தேவைப்படுகிறது. நீங்கள் காதலாயிருக்கும்போது அதற்கு என்ன சான்று தேவைப்படுகிறது? அது இருக்கிறது என்பது உங்களுக்கே தெரியும். தானே தெரிவதாக இருக்கிறது அது. மற்றவர்கள் வேண்டுமானால் சாட்சியத்தை கோரலாம். அவர்களுக்கும் உங்களால் என்ன சாட்சியத்தை வழங்க முடியும்? உள்மையத்தில் இருப்பவர் தானே சாட்சியாகிறார். எந்த (நேரடி) சான்றையும் அவர் தருவதில்லை. அவர் அறிகிற எதுவும் தானே விளங்குவதாய் இருக்கிறது; அப்படித்தான் இருக்கவும் முடியும். பகுத்தறிதலின் ஒரு முடிவாக அதை அவர் அடைந்திருக்கவில்லை. ஒரு தர்க்கரீதி முடிவல்ல அது. அவரது முடிவு கருத்துரீதியாக மேற்கொண்ட முடிவு அல்ல. உண்மையே அதுவாகத்தான் இருக்கிறது. அவர் அறிந்தவராயிருக்கிறார்.

எனவேதான் உபநிடதங்களில் சான்றுகள் தரப்பட்டில்லை. பதஞ்சலியில் சான்றுகள் ஏதும் இல்லை. பதஞ்சலி விளக்கம் மட்டுமே தருகிறார், சான்றுகள் தருவதில்லை. இதுதான் வேறுபாடு: ஒருவர் அறிந்திருந்தால் அவர் வெறுமனே விளக்குகிறார். அவர் அறியாதிருந் தால் அது அப்படித்தான் என்று முதலில் அதை நிருபிப்பார். அறிந் திருக்கிறவர்கள் அறியப்படாததைப் பற்றிய விளக்கத்தை மட்டுமே தருகிறார்கள். அதற்கு எந்த நிருபணத்தையும் அவர்கள் தருவதில்லை.

மேற்கில் கிறித்தவ புனிதர்கள் கடவுளுக்கு சாட்சியங்கள் அளித்திருக்கிறார்கள். அதைப் பார்த்தால் நமக்கு சிரிப்புதான் வருகிறது. ஏனெனில் அது சிரிப்புக்கிடமானது. கடவுளை மனிதன் நிருபிக்க முயல்வது கேலிக்கிடமானது. எப்படி உங்களால் நிருபிக்க முடியும்? மேலும் கடவுள் போன்ற ஒன்றை நீங்கள் நிருபிக்கும்போது மற்ற வர்கள் அதை மறுப்பதற்கு நீங்கள் தூண்டுபவராகிறீர்கள். கடவுளை மெய்ப்பிக்க முயலும் இத்தகைய கிறித்தவ புனிதர்களால்தான் மேற்குலகம் முழுவதும் மெல்லமெல்ல கடவுளை மறுப்பதாகிவிட்டது.

ஏனெனில் உண்டு என்று மெய்ப்பிப்பதை இல்லை என்று மெய்ப் பிக்கவும் மக்களால் எப்போதும் இயலும். தர்க்கமானது இருபுறமும் கூருள்ள வாளாகும். இரண்டு பக்கத்திலும் அது வெட்டுகிறது. ஒன்றை நீங்கள் நிரூபித்தால் அதை இல்லை என்று நிரூபிக்கவும் முடியும்; அதற்கு எதிராகவும் வழக்காட முடியும். கடவுளை மெய்ப்பிக்க முயன்ற கிறித்தவ துறவிகளால்தான் மேற்கு முழுவதும் நாத்திகமாகிவிட்டது. கிழக்கில் நாம் ஒருபோதும் இதற்கு முயன்றதில்லை. ஒருபோதும் நாம் எவ்வித சான்றையும் வழங்கியதில்லை. உபநிடதங்களை பாருங்கள்: ஒரே ஒரு சாட்சியம்கூட காணப்படுவதில்லை. ''கடவுள் இருக்கிறது'' என்று மட்டுமே அவை கூறுகின்றன. நீங்கள் அறிய விரும்பினால் உங்களால் அறிய முடியும். அறிந்துகொள்ள நீங்கள் விரும்பா விட்டால் அது உங்கள் விருப்பம். ஆனால் கடவுளுக்கு எந்த நிருபணமும் கிடையாது.

அந்த நிலையே நிர்விதர்க்க சமாதி எனப்படும். பகுத்தாய்வு எதுவுமற்ற சமாதிநிலை. அந்த சமாதி முதன்முதலாக இருப்புக்கு வருகிறது. ஆனால் அதுவும் இறுதி அல்ல.மேலும் ஒரு இறுதிப் படி உள்ளது. அதைப்பற்றி நாம் பின்னால் பேசுவோம்.

○

# 4. மனதைக் கண்டுகொள்ளாத இருப்பு

*முதல் கேள்வி:*

*இயற்கையானது ஒழுங்கீனத்தை அறுவெறுக்கிறது என்றும் உரிய நேரத்தில் குழப்பமானது தானே தணிந்து விடுகிறது என்றும் நீங்கள் சொன்னீர்கள். பின் ஏன் உலகம் எப்போதும் குழப்பத்திலும் ஒழுங்கீனத்திலுமே இருந்து வருகிறது?*

உலகம் ஒருபோதும் குழப்பத்திலும் ஒழுங்கீனத்திலும் இல்லை. மனம்தான் அப்படி இருக்கிறது. உலகம் முற்றிலும் ஒழுங்காகவே இருக்கிறது. அது ஒரு பெருங்குழப்பமாக அல்ல, பேரொழுங்காகவே இருக்கிறது. மனம்மட்டுமே எப்போதும் பெரும் குழப்பத்தில் இருக்கிறது. இனியும் அது எப்போதும் அப்படியே இருந்து வரும்.

ஒன்றை புரிந்துகொள்ள வேண்டும். மனதின் தன்மையே குழப்பத்தில் இருப்பதுதான். ஏனெனில் அது ஒரு மாறுதல் கட்டம்தான். இயற்கையில் இருந்து பேரியற்கைக்கு போகும்வழியில் மனம் என்பது ஒரு மாறுதல் நிலவரம்தான். நிலைமாற்ற கட்டம் எதுவும் ஒழுங்கானதாக இருக்க முடியாது. எப்படி அது ஒழுங்காக இருக்கமுடியும்? ஒரு நிலையில் இருந்து இன்னொரு நிலைக்கு நீங்கள் மாறும்போது இடைப்பட்ட நிலவரம் குழப்பமாகத்தான் இருக்கும்.

மனத்தை ஒழுங்குபடுத்த வழியேதுமில்லை. இயற்கையை கடந்து பேரியற்கைக்குள் நீங்கள் சென்று கொண்டிருக்கும்போது, வெளியிலிருந்து உள்ளுக்கு – பொருளிலிருந்து ஆன்மாவுக்கு நீங்கள் மாறிக் கொண்டிருக்கும் போது, இரண்டுக்குமிடையில் எந்த இடத்திலும் நீங்கள் இல்லாத ஒரு இடைநிலை ஏற்பட்டே தீர்கிறது. இந்த உலகத்துக்கும் நீங்கள் சொந்தமல்ல, மறுஉலகத்தையும் இன்னும் நீங்கள் சேரவில்லை என்னும் நிலை அது. இதுதான் குழப்பம். இந்த வாழ்க்கை கைவிடப்பட்டுள்ளது, மரணமோ இன்னும் அடையப்படவில்லை. இரண்டுக்கும் நடுவில் எல்லாமே ஒரு ஒழுங்கீனமாகத்தான் இருக்கிறது. ஆகவே நடுவழியிலேயே நீங்கள் தங்கி இருந்தால் எப்போதுமே நீங்கள் குழப்பத்தில்தான் இருப்பீர்கள். மனத்தை கடந்து அப்பால் சென்றாக வேண்டும். அதனோடு சேர்ந்து வாழ்வதற்காக அல்ல அது.

அது ஒரு பாலத்தைப் போன்றது. பாலம் இருப்பது கடந்து போவதற்காக. அக்கரையை அடைந்தாக வேண்டும் நீங்கள். அதைவிட்டு பாலத்தின்மீதே ஒரு வீடுகட்டி இருக்கிறீர்கள். பாலத்திலேயே வசிக்க

தொடங்கி இருக்கிறீர்கள். மனத்துடன் நீங்கள் சேர்ந்துகொண்டு விட்டீர்கள். அப்படியானால் நீங்கள் ஒரு பொறியில் மாட்டி இருக்கிறீர்கள். ஏனென்றால் நீங்களே எங்குமில்லை. அப்படியிருக்க எங்குமில்லாத இடத்தில் எப்படி உங்களால் நிரந்தரமாக வாழ முடியும்?

கடந்த காலம் விடாமல் உங்களை அழைத்துக்கொண்டே இருக்கும். ''திரும்பிவா, நீ விட்டுச்சென்ற கரைக்கு திரும்பிவா'' என்னும். ஆனால் திரும்புதல் என்ற பேச்சுக்கே இடமில்லை. ஏனெனில் காலத்தால் பின்னோக்கிப்போக உங்களால் முடியாது. ஒரே ஒரு போக்கே உள்ளது. அது முற்போக்குதான். கடந்தகாலம் உங்கள்மேல் ஆழமான செல்வாக்கு செலுத்திக்கொண்டிருக்கிறது. ஏனெனில் நீங்கள் பாலத்திலேயே இருக்கிறீர்கள். மேலும் பாலத்தில் இருப்பதைவிட கடந்தகாலத்தில் இருப்பது மேலானதாகப் படுகிறது. பாலத்தில் இருப்பதைவிட ஒரு சிறுகுடிசையில் இருப்பதுகூட மேல்தான். குறைந்தது நீங்கள் ஒரு வீட்டில் இருக்கிறீர்கள், தெருவில் இல்லை.

மனிதப் பிறவிகளின் கடந்த காலமாகிய விலங்கு நிலைக்கு ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. ''பின்னுக்கு வா'' என்கிறது அது. ''என்னை விட்டுச் செல்லுதல் என்பது இல்லை'' என்கிறது அது. உங்களுக்குள் இருக்கும் விலங்கு ''திரும்பி வா'' என உங்களை அழைத்துக்கொண்டே இருக்கிறது. அதில் ஒரு கவர்ச்சியும் இருக்கிறது. ஏனென்றால் பாலத்தோடு ஒப்பிடும்போது அது பரவாயில்லாமல் இருக்கிறது. ஆனால் உங்களால் திரும்பிப்போக முடியாது. ஒரு நடவடிக்கை எடுக்கப்பட்டு விட்டால் பின் அதை இல்லை என்று ஆக்கிவிட முடியாது. முன்னோக்கி நீங்கள் சென்றுவிட்டால் பின் உங்களால் பின்னோக்கி செல்ல முடியாது. வேண்டுமானால் அந்த கனவை நீங்கள் சீராட்ட முடியும், அதில் உங்கள் ஆற்றலை நீங்கள் வீணாக்க முடியும். உங்களை முன்னோகி இட்டுச் சென்றிருக்கக்கூடிய அதே ஆற்றல்தான் அது.

ஆனால் பின்னோக்கி போவதென்பது சாத்தியமில்லை. ஓர் இளைஞன் எப்படி மீண்டும் ஒரு குழந்தை ஆக முடியும்? ஒரு முதியவர் எப்படி மீண்டும் ஓர் இளைஞனாக முடியும்? அதற்கு வாய்ப்பில்லை. உடல்ரீதியாக வேண்டுமானால் என்றாவது ஒருநாள் உங்கள் உடல் மீண்டும் இளமையாக மாற அறிவியல் உதவக்கூடும். அது சாத்தியம் தான். ஏனெனில் மனிதன் மிகவும் சூழ்ச்சியானவன். அறிவியலைக் கொண்டு உங்கள் உடலின் அணுக்களை ஏமாற்ற முடியும். அவற்றுக்கு ஒரு புதிய நிகழ்ச்சிநிரலை வழங்க அதனால் முடியும், அவையும் பின்னோக்கி செல்லக் கூடும். ஆனால் அப்போதும் உங்கள் மனம் வயசானதாகவே இருக்கும். உங்கள் உடல் இளமையாக ஆகலாம்,

ஆனால் நீங்கள் எப்படி இளமையாக ஆக முடியும்? நீங்கள் அனுபவித்த அனைத்தும் உங்களுக்குள்தானே இருக்கும்? அவற்றை உங்களால் தூக்கி எறிந்துவிட முடியாதே.

திரும்பிப்போக எவராலும் முடியாது. விட்டு வந்த கரை என்றென்றைக்குமாக கைவிட்டுப் போய்விட்டது. மீண்டும் நீங்கள் ஒரு மிருகமாக ஆக முடியாது. அந்த விருப்பத்தையும் திரும்பிப்போவதில் உள்ள மயக்கத்தையும் விட்டுவிடுவதே மேல். எவ்வளவு விரைவாக அதை விட்டுவிடுவீர்களோ அவ்வளவுக்கு நல்லது. இறந்த காலத்தின் – விலங்குநிலையின் ஒரு உணர்வை - சுவையை வழங்கும் விசயங்களை ரசித்து அனுபவிக்கிறான் மனிதன். எனவேதான் காமத்துக்கு இந்த அளவுக்கு கவர்ச்சி இருக்கிறது. எனவேதான் மக்கள் சாப்பாட்டு ராமன்களாக ஆகிறார்கள் - தின்றுகொண்டே இருக்கிறார்கள்; உணவினால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள். எனவேதான் பேராசை - கோபம் -பொறாமை - வெறுப்பு இவை எல்லாம் ஏற்புடையதாக இருக்கிறது. இவை எல்லாம் விலங்கு ராச்சியத்தை சேர்ந்தவை. நீங்கள் நீந்திவந்த கரை - விலங்கரசின் கரை - அங்குதான் இருக்கிறது. இன்னொரு கரை - இன்னும் நீங்கள் (உங்கள் கனவுகளில் கூட) சென்று சேராத அக்கரைதான் கடவுளின் அரசு. இந்த இரண்டுக்கும் இடையில் மனத்தில் நீங்கள் நிற்கிறீர்கள். உங்களால் திரும்பிப்போக முடியாது. முன்னோக்கிப் போவதும் கடினமே. ஏனெனில் இறந்த காலம் தொடர்ந்து உங்களை ஈர்த்துக்கொண்டே இருக்கிறது; வருங்காலமோ அறியப்படாததாக - பனிமூட்டம்போல் மங்கலானதாக இருக்கிறது. அக்கரையை உங்களால் பார்க்க முடிவதில்லை. கண்ணுக்கு அது புலனாவதில்லை. இதற்கு காரணம் அது மிக தொலையில் உள்ளது என்பதல்ல. நீங்கள் விட்டுவந்த கரை கண்ணுக்கு புலப்படுவதாயுள்ளது, நீங்கள் அணுகிக் கொண்டிருக்கும் அக்கரை மிகத் தொலைவில் இருக்கிறது என்பதல்ல. மாறாக தன் இயல்பிலேயே புலப்படாததாக உள்ளது அது. எனவேதான் அது கண்ணுக்கு தெரிவதில்லை. அதை நீங்கள் அடைந்துவிட்ட நிலையிலும் அது புலப்படாததாகவே இருக்கும். ஏனெனில் அதன் இயல்பே அதுதான்.

விலங்கு மிகவும் தெளிவாக புலப்படுகிறது. ஆனால் கடவுள்? யாராவது எப்போதாவது கடவுளை பார்த்திருக்கிறார்களா? யாருமில்லை. ஏனென்றால் நீங்கள் பார்ப்பதையோ பாராதிருப்பதையோ பொறுத்த விசயமல்ல இது; கடவுள் என்றாலே புலப்படாமைதான். தெரிந்து கொள்ளப்பட முடியாதது எதுவோ, புரிந்து கொள்ளப்பட முடியாதது எதுவோ, அதுவேதான் கடவுள். அதை சென்றடைந்தவர்களும் அதை தாங்கள் கண்டதில்லை என்றே கூறுகிறார்கள்; ஆனால் அடைந்திருக்கிறார்கள்!

ஏனென்றால் கடவுள் என்பது ஒரு பொருளாக இருக்க முடியாது. உங்கள் சொந்த உயிரின் அடியாழமே அது.அதை எப்படி உங்களால் பார்க்க முடியும்? நீங்கள் விட்டுவந்த கரை வெளி உலகில் உள்ளது. நீங்கள் நெருங்கிக் கொண்டிருக்கும் கரை உள் உலகில் உள்ளது. நீங்கள் நீந்தி வந்த கரை புறஉலகு சார்ந்தது. நீங்கள் அணுகிக்கொண்டிருக்கும் கரை அகவுலகு சார்ந்தது. உங்கள் உயிரின் அகத்தன்மையே அது. அதை உங்களால் புறவயப்படுத்த முடியாது. உங்களால் காண முடியாது. ஒரு பொருளாக சுருக்கி நீங்கள்காண முடியக்கூடிய ஒன்று அல்ல அது. காணப்படுவதல்ல அது, காண்பதுவே அதுதான். அறியப் படுவதல்ல அது. அறிவதுவே அதுதான். உங்கள் உயிரின் உள் ஆழத்தில் இருக்கும் நீங்களே அது.

மனத்தால் திரும்பிப் போக முடியாது. முன்னோக்கிப் போவது எங்கு என்பதை தெரிந்து கொள்ளவும் அதனால் முடியாது. அது குழப்பமாகவே இருக்கிறது. எப்போதும் வேரற்றதாய் - வெளியேற்றப்பட்டதாய், எங்கு போகிறோம் என்றுதெரியாமலே எப்போதும் போய்க் கொண்டிருப்பதாய் - பயணத்தில் இருப்பதாய் அது இருக்கிறது. மனம் ஒரு தேடல். இலக்கு அடையப்பட்டதும்தான் தேடல் நிற்கிறது.

இதை நினைவில் கொள்ளுங்கள்: உலகைப் பாருங்கள். அது ஒரு பேரொழுங்காக இருக்கிறது. ஒவ்வொரு காலையிலும் சூரியன் தவறாமல் - பொய்க்காமல் உதிக்கிறது. பகலை இரவு தொடர்கிறது, மறுபடியும் இரவை பகல் தொடர்கிறது. இரவு வானத்தில் கோடிக்கோடிக்கணக் கான விண்மீன்கள் தத்தம் பாதையில் போகின்றன. பருவங்கள் ஒன்றை அடுத்து மற்றது தவறாமல் தொடர்கின்றன. மனிதன் இல்லாவிட்டால் குழப்பம் எங்கே இருக்கிறது? ஒவ்வொன்றும் அதுஅது எப்படி எப்படி இருக்க வேண்டுமோ அப்படி அப்படி இருக்கிறது. பெருங்கடல் முழங்கிக் கொண்டே இருக்கும். வானில் திரும்பத்திரும்ப மேகங்கள் நிரம்பிக் கொண்டே இருக்கும். மழை வரும், பனி வரும், கோடை வரும்; எல்லாமே ஒரு செம்மையான சக்கர வட்டமாக இயங்குகிறது. உங்களுக்குள்ளே தவிர வேறெங்கும் எவ்வித ஒழுங்கீனமும் இல்லை. ஏனென்றால் இயற்கையானது தான் எங்கெங்கு இருந்தாலும் அங்கங்கே நிலைகொண்டு இருக்கிறது. இயற்கையானது எதை நோக்கியும் முன்னேறிக்கொண்டு இருக்கவில்லை. பரிணாம வளர்ச்சி என்பது இயற்கைக்கு கிடையாது. கடவுளிலும் பரிணாமம் என்பது இல்லை. இயற்கை தன் உணர்வின்மையில் இன்பமாக இருக்கிறது. கடவுளும் தன் உணர்வில் ஆனந்தமாக இருக்கிறார்.

இரண்டுக்கும் இடையில் நீங்கள் அல்லல்படுகிறீர்கள், இறுக்கமாக இருக்கிறீர்கள். நீங்கள் உணர்வில்லாமலும் இல்லை. உணர்வுடனும்

இல்லை. ஒரு பேய்போலவே அல்லாடிக்கொண்டு இருக்கிறீர்கள். எங்கும் நீங்கள் நிம்மதியாக இல்லை. வேர்கள் இல்லாமல், ஒரு வீடு இல்லாமல் மனம் எப்படி அமைதி அடைய முடியும்? அது தேடுகிறது, துளாவுகிறது, ஒன்றும் கிடைப்பதில்லை. அதன்பின் நீங்கள் அதிகமதிகமாய் முடுக்கி விடப்படுகிறீர்கள், அதிகமதிக நிராசை கொள்கிறீர்கள், அதிகமதிக எரிச்சல் அடைகிறீர்கள். உங்களுக்கு என்ன நேர்ந்து கொண்டுள்ளது? ஒரு எந்திரப் பிழைப்பில் அழுந்திக் கிடக்கிறீர்கள். உங்களின் மனத்தை அறுக்க முடிகிற - அவிழ்க்க முடிகிற ஒன்றை -- மனத்தை காலியாக்கும் ஒன்றை நீங்கள் கற்றுக்கொள்ளாத வரைக்கும் இதுவே தொடரும்.

அதைக் கற்றுக்கொள்வதே தியானம் முழுவதும். தியானம் என்பது உங்கள் உயிரின் மனமறுக்கும் ஒரு வழியாகும்; மனத்தைக் கைவிடும், பாலத்தை கடந்து மேற்செல்லும், அறியாததுக்குள் பிரவேசிக்கும், புதிரானதற்குள் குதித்துவிடும் ஒரு முறையாகும். எனவேதான் இதில் கணக்கு போடாதீர்கள் என்கிறேன் நான். ஏனெனில் கணக்கிடுவது மனதின் வேலை. எனவேதான் ஆன்மீகத் தேடல் படிப்படியானது அல்ல, ஆன்மீகத் தேடல் ஒரு திடீர் பாய்ச்சல் என்கிறேன் நான். அது கணிப்பு அல்ல, துணிவு. அது அறிவு அல்ல. ஏனெனில் அறிவு மனம் சார்ந்தது; ஆன்மீகமோ அதிகமும் இதயம் சார்ந்தது.

ஆனால் இன்னும் ஆழ்ந்து நீங்கள் போகும்போது, இதயத்தையும் கடந்தது அது என மென்மேலும் நீங்கள் உணர்வீர்கள். அது எண்ணம் சார்ந்ததும் அல்ல, உணர்ச்சி சார்ந்ததும் அல்ல, இன்னும் ஆழமானதும் முழுமையானதும் ஆகும் அது; இரண்டைக் காட்டிலும் அதிகமாய் இருத்தல் சார்ந்ததாகும் அது. மனமற்ற நிலையை அடைந்துகொள்ளும் விதத்தை நீங்கள் செயல்படுத்த தொடங்கியதுமே — அதன் பிறகு மட்டுமே பையப்பைய உங்களுக்கு சமாதானம் உண்டாகும். பையப் பைய ஒரு அமைதி உங்கள்மேல் வந்திறங்கும்; ஒரு இசை - அறியப்படாததின் இசை - இசைக்கப்படாததின், இசை - கேட்கப்படும். பின் ஒவ்வொன்றும் மீண்டும் ஒழுங்காகும். மனம் கடந்து சென்று கொண்டிருக்கிறது;. அப்படித்தான் அது இருந்தாக வேண்டி இருக்கிறது. ஏனெனில் நீங்கள் நிலைகொண்டும் வேர்கொண்டும் இருந்த இறந்த காலத்தை நீங்கள் நிலைகொண்டும் வேர்கொண்டும் இருக்கக்கூடிய ஒரு வருங்காலத்துக்குள் நீங்கள் கைவிடுகிறீர்கள்; மீண்டும் நீங்கள் பிரவேசிக்கிறீர்கள்.

ஆனால் நடுவழியில் இருக்கிறான் மனிதன். மனிதன் ஒரு இருப்பு அல்ல; மனிதன் என்பது ஒரு நடப்பு. மனிதன் என்று ஒன்று இல்லை. மனிதன் என்பவன் ஒரு பயணம் மட்டுமே. இயற்கைக்கும் பேரியற் கைக்கும் இடையில் இழுத்துக்கட்டப்பட்ட ஒரு கயிறு மட்டுமே மனிதன்.

எனவேதான் அவன் இறுக்கமாயிருக்கிறான். மனிதராகவே நீங்கள் இருந்தால் இறுக்கமாகவே நீங்கள் இருப்பீர்கள். ஒன்று, மனிதருக்கும் கீழான மட்டத்துக்கு நீங்கள் வீழவேண்டும் அல்லது மனிதருக்கும் மேலான மட்டத்துக்கு உங்களை நீங்களே உயர்த்திக்கொள்ள வேண்டும்.

மனித இனம் மட்டுமே குழப்பத்தில் இருக்கிறது. இயற்கையை பாருங்கள் - காகங்கள் கரைகின்றன, குருவிகள் கீச்சிடுகின்றன. எல்லாமே நலமாக இருக்கிறது. இயற்கையில் எந்த சிக்கலும் இல்லை. மனித மனத்துடன்தான் இருத்தலில் சிக்கல் வருகிறது. மனித மனம் கரைந்ததும் சிக்கலும் அவிழ்ந்து விடுகிறது. ஆனால் வாழ்வின் சிக்கலை மனத்தைக் கொண்டே தீர்க்க முயலாதீர்கள். அது நடக்காது. ஒருவர் செய்ய முடிவதிலேயே மிகவும் மடத்தனமான செயல் அதுதான். மனம் ஒரு பாலம் என்பதை புரிந்துகொள்ளுங்கள் - அதை கவனியுங்கள் - அது நிரந்தரமானது அல்ல, தற்காலிமானதே.

இது நீங்கள் குடிமாறுவதைப் போன்றதுதான்: பழைய வீடு குழப்பமில்லாமல் இருந்தது. எல்லாமே அதனதன் இடத்தில் இருந்தன. பின் நீங்கள் வீடு மாற்றுகிறீர்கள். இப்போது வீட்டு சாமான்கள், துணிகள், பின் பிறபொருள்கள்...ஒழுங்காக இருந்த எல்லாமே கலைக்கப்படுகின்றன. புதுவீடு ஒன்றுக்கு நீங்கள் குடிபோய்க் கொண்டிருக்கிறீர்கள், எல்லாமே குழப்பமாக உள்ளது. மீண்டும் அவற்றை எல்லாம் ஒழங்குபடுத்த வேண்டி உள்ளது. வீடு மாறிக் கொண்டிருக்கும்போது இதுவரை வசித்துவந்த ஒரு வீட்டை நீங்கள் விட்டுவிட்டீர்கள், புதுவீட்டையோ இன்னும் நீங்கள் போய் சேர வில்லை. உங்கள் எல்லா சாமான்களோடும் நடுவழியில் ஒரு லாரியில் நீங்கள் இருக்கிறீர்கள்.

இதுதான் மனம் என்பது: அது ஒரு வீடல்ல; கடந்துபோக வேண்டிய ஒரு கடப்புமட்டுமே அது. இதை நீங்கள் புரிந்து கொண்டாலே அப்பால் நிலையின் ஒரு கூறு உங்களில் ஊடுருவி இருக்கிறது. புரிதல் என்பது அப்பாலிருந்தே வருகிறது. மனத்தினுடையது அல்ல அது. அறிவு, மனத் திலிருந்து வருகிறது.புரிதல் என்பதோ மனத்திலிருந்து வருவதல்ல. நீங்கள் ஏன் இந்த குழப்பத்தில் இருக்கிறீர்கள் என்பதை கவனியுங்கள் – ஒரு புரிதல் உங்கள் மேல் விடியத் தொடங்கும்.

**இரண்டாவது கேள்வி:**

**சில ஆண்டுகளாக உணர்ச்சி வடிகால் முறைகளை பயிற்சி செய்து வந்த பிறகு ஒரு ஆழமான உள் ஒத்திசைவு - சமநிலை - மையம் கொண்ட நிலை எனக்கு நேரிட்டுள்ளதாக உணர்கிறேன். ஆனால் சமாதியின்**

**இறுதிக் கட்டத்துக்குள் புகுவதற்கு முன் ஒருவர் ஒரு பெரும்குழப்பத்தினூடாக கடந்து செல்கிறார் என நீங்கள் சொன்னீர்கள். எனது பெருங்குழப்பக் கட்டம் முடிந்துவிட்டதா என்பதை எவ்வாறு நான் அறிந்து கொள்வது?**

முதலாவதாக: நூற்றுக்கணக்கான பிறவிகளாக ஒரு பெரும் குழப்பத்தில்தான் நீங்கள் வாழ்ந்து வந்திருக்கிறீர்கள். அது ஒன்றும் புதிதல்ல. மிகவும் பழகுதான் அது. இரண்டாவதாக உணர்ச்சி வடிப்பை அடிப்படையாகக் கொண்ட இயக்காற்றல் தியான முறைகள், உங்களுக்குள் இருக்கும் குழப்பங்கள் அனைத்தும் வெளியில் தூக்கி எறியப்படுவதற்கு வகை செய்கின்றன. அதுதான் இந்த உத்திகளின் சிறப்பாகும். அமைதியாக அமர உங்களால் முடிவதில்லை ; ஆனால் இயக்காற்றல் தியானங்களையோ கலக்கல் தியானங்களையோ மிக எளிதாக உங்களால் செய்ய முடிகிறது. குழப்பம் வெளியில் எடுத்தெறியப்பட்டதுமே அமைதி உங்களில் நிகழத் தொடங்குகிறது. அதன் பிறகு உங்களால்அமைதியாக அமர முடிகிறது. சரியாகச் செய்தால் - இடைவிடாமல் செய்தால் பின் கலக்கல் தியான முறைகள் உங்கள் குழப்பங்கள் அனைத்தையும் எளிதாக வெளியேற்றி முடித்து விடும். ஒரு பைத்திய கட்டத்தினூடாக நீங்கள் செல்ல தேவையே இராது. அதுதான் இந்த முறைகளின் சிறப்பு. பைத்திய நிலை ஏற்கனவே எடுத்தெறியப்பட்டிருக்கிறது. அதற்கான வழிமுறை அந்த உத்திகளுக்குள்ளேயே வைக்கப்பட்டிருக்கிறது.

ஆனால் பதஞ்சலி கூறுவதுபோல் அமைதியாக நீங்கள் அமர்ந்தால்.... பதஞ்சலியிடம் கலக்கல் முறைகள் எதுவும் இல்லை. அவர் காலத்தில் அவை தேவைப்படவில்லை என்று தோன்றுகிறது. இயல்பாகவே மக்கள் அதிக அமைதியும் சமாதானமும் எளிமையும் வாய்ந்தவர்களாக இருந்தார்கள். மனம் இன்னும் அதிகம் செயல்பட ஆரம்பித்திருக்கவில்லை. மக்கள் நன்றாக உறங்கினார்கள். விலங்குகள் போலவே வாழ்ந்தார்கள். அதிகம் சிந்திக்கிறவர்களாக, தர்க்கரீதியாக, பகுத்தறிவு பூர்வமாக அவர்கள்.... இல்லை. இப்பவும் பழங்குடி மக்கள் இருப்பது போலவே பெரும்பாலும் இதயத்திலேயே மையம் கொண்டிருந்தார்கள் அவர்கள். மேலும் உணர்ச்சி வெளியேற்றங்கள் பலவும் தாமாக நிகழும் விதத்தில் வாழ்க்கை அமைந்திருந்தது.

எடுத்துக்காட்டாக ஒரு விறகுவெட்டியை எடுத்துக்கொள்வோம். அவர் எவ்வித உணர்ச்சி வெளியேற்றத்துக்கும் உட்படத் தேவையில்லை. ஏனெனில் விறகு பிளப்பதன் மூலமே அவரது கொலை உந்தல்கள் யாவும் வெளியேற்றப் பட்டு விடுகின்றன. விறகு பிளப்பது என்பது ஒரு மரத்தை

கொல்வதற்கே சமமாகும். கல்உடைப்பவர் ஒருவர் உணர்ச்சிவெளியேற்ற தியானத்தை செய்ய தேவையில்லை. நாள் முழுவதும் அதைத்தான் அவர் செய்து கொண்டிருக்கிறார். ஆனால் நவீனகால மனிதருக்கோ நிலைமைகள் மாறி இருக்கின்றன. இப்போது நாம் எத்தகைய வசதியில் வாழ்கிறோம் என்றால், உங்கள் வாழ்வில் உணர்ச்சிகளை தூய்மை செய்து கொள்வதற்கான வாய்ப்பே இருப்பதில்லை - வெறித்தனமாக நீங்கள் காரோட்டிச் செல்லும்போது தவிர.

எனவேதான் மேற்கில் ஆண்டுதோறும் வேறு எதையும்விட கார் விபத்துக்களிலேயே நிறைய பேர் மடிகிறார்கள். அதுவே அவர்களைப் பிடித்த மாபெரும் நோயாய் இருக்கிறது. புற்றுநோயோ, காச நோயோ .... வேறு எந்த நோயோ கார் ஓட்டுதலைப் போல பெருமளவு உயிர்களை காவு கொள்வதில்லை. இரண்டாம் உலகப் போரில் ஓராண்டில் கோடிக்கணக்கான மக்கள் இறந்தார்கள். வெறித்தனமாக ஓட்டும் காரோட்டிகளால் மட்டுமே பூமி முழுவதிலும் ஒவ்வோர் ஆண்டும் அதைவிட அதிகமான மக்கள் சாகிறார்கள்.

நீங்கள் ஒரு வாகன ஓட்டியாக இருந்தால் நீங்கள் ஒன்றை கவனித்திருக்கலாம். அதாவது நீங்கள் கோபமாக இருக்கும் போதெல்லாம் நீங்கள் வேகமாக ஓட்டுகிறீர்கள். முடுக்கியை அழுத்திக்கொண்டே இருக்கிறீர்கள். வேகத்தடை என்று ஒன்று இருப்பதையே மறந்திருக்கி றீர்கள். நீங்கள் மிகுந்த வெறுப்புடன் இருக்கும்போது, எரிச்சலுடன் இருக்கும்போது, அதை வெளியிடுவதற்கான ஒரு சாதனமாகி விடுகிறது கார். மற்றபடி நீங்கள் எந்த அளவுக்கு மிகுந்த வசதியாக வாழ்கிறீர்கள் என்றால், வரவர உடலால் குறைவான செயல்களையே செய்கிறீர்கள்; அதிகமதிகமாய் மனத்திலேயே வாழ்கிறீர்கள்.

மூளையின் உள் ஆழ மையங்களைப் பற்றி அறிந்துள்ளவர்கள் கூறுகிறார்கள்: தம் கைகளைக்கொண்டு வேலை செய்கிறவர்களுக்கு அதிக பதற்றம் - அதிக இறுக்கம் இருக்காது. நன்றாக தூங்குகிறார்கள் அவர்கள். ஏனெனில் உங்கள் கைகள் ஆழ்மனதுடன் - மூளையின் உள் ஆழ மையத்துடன் தொடர்பு கொண்டுள்ளன.... உங்கள் வலது கை இடது மூளையுடனும் இடதுகை வலது மூளையுடனும் தொடர்பு கொண்டுள்ளன. உங்கள் கைகளால் நீங்கள் வேலை செய்யும்போது தலையிலிருந்து ஆற்றல் கைகளுக்குப் பாய்ந்து அங்கு விடுவிக்கப் படுகிறது. தம் கைகளைக் கொண்டு வேலை செய்பவர்களுக்கு உணர்ச்சி வடிகால் உத்திகள் தேவையில்லை. ஆனால் தம் தலைகளைக் கொண்டு வேலை செய்வோ ருக்கு தான் உணர்ச்சி வடிகால் உத்திகள் அதிகமாக தேவைப்படுகிறது. ஏனெனில் அதிக ஆற்றலை அவர்கள் சேகரித்துக்

கொள்கிறார்கள். ஆனால் அதை வெளியிட அவர்கள் உடலில் எந்த வழியுமில்லை, வாசலுமில்லை. மனத்துக்குள்ளேயே அது சுற்றிசுற்றி வருகிறது. மனம் பைத்தியம் பிடித்துப் போகிறது.

ஆனால் நம் பண்பாட்டிலும் சமுதாயத்திலும் – அலுவலகத்திலும் தொழிற்சாலைகளிலும், சந்தைக்கடையிலும் – தம் தலைகளைக் கொண்டு செயல்படுபவர்களே தலைமை (ஹெட்ஸ்) என அறியப்படுகிறார்கள்: தலைமை – எழுத்தர், தலைமை – கண்காணிப்பாளர் என, கைகளால் பணிபுரிகிறவர்கள் கையாட்கள் (ஹேண்ட்ஸ்) என இழித்துரைக்கப் படுகிறார்கள். 'கைகள்' என்ற சொல்லே இழிவான சொல்லாகி விட்டிருக்கிறது.

இந்த சூத்திரங்களை பதஞ்சலி இயற்றிக் கொண்டிருந்தபோது உலகம் முற்றிலும் வேறுவிதமாக இருந்தது. மக்கள் கரங்களாக இருந்தார்கள். உணர்ச்சித் தூய்மைக்கான குறிப்பான தேவை எதுவும் இருக்கவில்லை. வாழ்க்கையே ஒரு தூய்மைப்படுத்தலாகத்தான் இருந்தது. அதன்பின் மிக எளிதாக அவர்கள் அமைதியாக அமர முடிந்தது. ஆனால் நீங்களே அப்படி அமர முடிவதில்லை. எனவேதான் உணர்ச்சி வடிகால் முறை களை நான் உருவாக்கிக் கொண்டிருக்கிறேன். அவற்றுக்குப் பிறகு மட்டுமே உங்களால் அமைதியாக அமர முடியும்; அதற்கு முன்பு அல்ல.

**சில ஆண்டுகளாக உணர்ச்சி வடிகால் முறைகளை பயிற்சி செய்து வந்த பிறகு ஒரு ஆழமான உள் ஒத்திசைவு – சமநிலை - மையம் கொண்ட நிலை எனக்கு நேரிட் டுள்ளதாக உணர்கிறேன்.**

இப்போது ஒரு தடங்கலை உருவாக்காதீர்கள். அது நிகழ அனுமதியுங்கள். மனம் இப்போது தன் மூக்கை நுழைத்துக் கொண் டிருக்கிறது. மனம் கூறுகிறது, ''அது எப்படி நிகழ முடியும்? முதலில் நான் குழப்ப கட்டத்தின் வழியாக சென்றாக வேண்டுமே'' என்கிறது. இந்த கருத்தே குழப்பத்தை உருவாக்கிவிட முடியும். நான் கண்டறிந்தது இப்படித்தான் இருக்கிறது: அமைதிக்காக ஏங்குகிறார்கள் மக்கள். அது நிகழத் தொடங்கும்போதோ அதை அவர்களால் நம்ப முடிவதில்லை. நம்ப முடியாத அளவுக்கு அற்புதமானதாக இருக்கிறது அது. அதிலும் குறிப்பாக, தம்மைத் தாமே எப்போதும் கண்டனம் செய்து வந்திருப்போர், தமக்கு அது நேர்ந்துகொண்டு இருக்கிறது என்பதை ஒருக்காலும் நம்ப முடியாது. ''வாய்ப்பே இல்லை! ஒரு புத்தருக்கு அல்லது ஒரு யேசுவுக்கு அது நிகழ்ந்திருக்கக்கூடும், ஆனால் எனக்கு நிகழுமோ? இல்லை, அதற்கு வாய்ப்பே இல்லை'' என்பார்கள். அவர்கள் என்னிடம்

வருகிறார்கள்; அமைதியால் - அது நிகழ்ந்துகொண்டு இருப்பதால் - வெகுவாக குழம்புகிறார்கள் அவர்கள். ''அது நிசம்தானா அல்லது நான் தான் அதை கற்பனை செய்து கொண்டிருக்கிறேனா?'' என்று கேட்கிறார்கள். ஏன் கவலைப்படுகிறீர்கள்? அப்படியே அது ஒரு கற்பனையாகவே இருந்தாலும், கோபத்தை கற்பனை செய்வதைவிடவும் காமத்தை - மோகத்தை கற்பனை செய்வதை விடவும் அது மேல் தானே?

மேலும் நான் உங்களுக்கு சொல்லுகிறேன்: அமைதியை யாராலும் கற்பனை செய்ய முடியாது. கற்பனைக்கு ஏதாவது வடிவம் தேவை. அமைதிக்கு எந்த வடிவமும் இல்லை. கற்பனை என்றால் பிம்பங்களைக் கொண்டுசிந்திப்பது என்று பொருள். அமைதியிலோ, எந்த பிம்பமும் கிடையாது. உங்களால் அதை கற்பனை செய்ய முடியாது. அதற்கு வாய்ப்பே இல்லை. ஞானநிலையை உங்களால் கற்பனை செய்யவே முடியாது. சட்டோரி - சமாதி - அமைதி இவற்றை உங்களால் கற்பனை செய்ய முடியவே முடியாது. கற்பனைக்கு ஒரு அடிப்படை - ஒரு வடிவம் தேவை. அமைதியோ வடிவற்றது, வரையறையற்றது. ஒருவரும் ஒருபோதும் அதன் வடிவத்தை சித்திரமாய் தீட்டியதில்லை. ஒருவராலும் தீட்ட முடியாது. எவரும் அதன் பிம்பத்தை சிற்பமாய் செதுக்கியதில்லை. எவராலும் செதுக்க முடியாது.

அமைதியை உங்களால், கற்பனை செய்ய முடியாது. மனம் சூழ்ச்சிகள் செய்து கொண்டிருக்கிறது. மனம் கூறும், ''அது கற்பனையாக இருக்க வேண்டும். உனக்கு - உன்னைப்போன்ற ஒரு மடையனுக்கு அது எப்படி இயலமுடியும், அமைதி உனக்கு எப்படி நிகழமுடியும்? - அது உன் கற்பனையாகத்தான் இருக்கவேண்டும்'' என்னும். அல்லது ''ரஜ்னீஷ் என்னும் இந்த பேர்வழி உன்னை வசியப்படுத்தி இருக்கிறான், ஏதோ ஒரு இடத்தில் நீ ஏமாற்றப்பட்டிருக்க வேண்டும்'' என்னும். இத்தகைய சிக்கல்களை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள். வாழ்க்கையில் பிரச்சனைகள் வேண்டிய அளவுக்கு உள்ளன. அமைதி நிகழும் போது அதை அனுபவியுங்கள், கொண்டாடுங்கள். குழப்ப சக்திகள் வெளியேற்றப்பட்டுள்ளன என்பதையே அது காட்டுகிறது. மனம் அதன் கடைசி ஆட்டத்தை ஆடிக்கொண்டிருக்கிறது. கடைசிவரை அது ஆடுகிறது. ஆட்ட முடிவு வரைக்குமே அது ஆடிக்கொண்டே இருக்கிறது. ஞானநிலை பேறுகிட்டும் கடைசி கணத்திலும், அது நிகழ இருக்கும் அந்த கணத்திலும் கூட மனம் தன் ஆட்டத்தை ஆடிப் பார்க்கிறது. ஏனென்றால் அதுவே அதன் கடைசி ஆட்டமாக இருக்கிறது.

அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். அது மெய்யா, பொய்யா, அதை அடுத்து குழப்பம் வருமா, வராதா என்றெல்லாம் கவலை வேண்டாம். ஏனெனில் இந்த முறையில் எண்ணுவதன் மூலமே குழப்பத்தை நீங்கள் கொண்டு வந்துவிடுகிறீர்கள். உங்கள் கருத்தே குழப்பத்தை உருவாக்க முடியும். அப்படி அது உருவாக்கப்பட்டதும் ''பார்த்தாயா, முன்பே நான் சொல்லவில்லையா'' என்று சொல்லும் மனம்.

மனமானது தான் நினைத்ததை சாதிப்பது. முதலில் அது ஒரு விதையை தருகிறது. அது முளைவிட்டதும் மனம், ''பார்த்தாயா, நீ ஏமாற்றப்படுகிறாய் என முன்பே உன்னிடம் நான் சொல்லவில்லையா'' என்கிறது. குழப்பம் ஏற்பட்டுவிட்டது. ஒரு கருத்தே அதை கொண்டு வந்துள்ளது. எனவே குழப்பம் இனித்தான் வருமா வராதா, அல்லது ஏற்கனவே அது கடந்து விட்டதா இல்லையா என வரும்காலத்தைப் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? இந்த கணத்தில் நீங்கள் அமைதியாக இருக்கிறீர்கள் - அதை ஏன் கொண்டாடக் கூடாது? மேலும் நான் உங்களுக்கு சொல்லுகிறேன், அதை நீங்கள் கொண்டாடினால் அது மென்மேலும் வளர்கிறது.

உணர்வின் உலகில் கொண்டாட்டத்தைப் போல் உதவுவது வேறு எதுவுமில்லை. கொண்டாட்டம் என்பது வேருக்கு நீர் வார்ப்பது போன்றதாகும். கவலைப்படுவது என்பது கொண்டாட்டத்துக்கு நேர் எதிரானதாகும். அது வேர்களை வெட்டிவீழ்த்துவது போன்றதாகும். மகிழ்வாக உணருங்கள்! உங்கள் அமைதியுடன் நடனமாடுங்கள். இந்தக் கணத்தில் அது இருக்கிறது - போதும். அதற்கு மேல் ஏன் கேட்பது? நாளை தன்னைத் தான் பார்த்துக் கொள்ளும். இந்த கணமே ரொம்ப அதிகம் — அதை ஏன் வாழக்கூடாது? அதை ஏன் கொண்டாடக் கூடாது, பகிர்ந்து கொள்ளக் கூடாது, அனுபவிக்கக் கூடாது? அது ஒரு பாடலாக - ஆடலாக - கவிதையாக ஆக அனுமதியுங்கள், படைப்புத்தன்மை உள்ளதாக அது ஆக அனுமதியுங்கள்; உங்கள் அமைதி படைப்புத்தன்மை உள்ளதாக ஆகும். அதைக் கொண்டு ஏதாவது செய்யுங்கள்.

கோடிக்கணக்கான செயல்களுக்கான வாய்ப்புகள் உள்ளன. ஏனெனில் அமைதிமையவிடவும் அதிக படைப்புத்தன்மை உள்ளது வேறு எதுவுமில்லை. மிகப்பெரிய ஓவியராகவோ உலகப்புகழ்பெற்ற பிக்காசோ ஆகவோ ஆகத் தேவையில்லை. ஒரு ஹென்றி மூராக ஆகத் தேவை யில்லை. பெருங்கவிஞராக ஆகத் தேவையில்லை. பெரிய மனிதர் ஆக விரும்பும் அவ்வித பேராசைகள் மனதினுடையவை; அமைதியுனுடை யவை அல்ல. எவ்வளவுசிறிய அளவினதாயினும் உங்கள் சொந்த வழியில்

ஓவியம் தீட்டுங்கள். எவ்வளவு சிறிய அளவினதாயினும் உங்கள் சொந்த வழியில் ஹைக்கூ எழுதுங்கள். எவ்வளவு சின்ன அளவினதாயினும் உங்கள் சொந்த வழியில் ஒரு பாடல் பாடுங்கள், ஒரு சிறிது ஆடுங்கள், கொண்டாடுங்கள். அப்போது அடுத்த கணம் இன்னுமதிக அமைதியை கொணர்வதை காண்பீர்கள். எந்த அளவுக்கு அதிகமாய் கொண்டாடுவீர்களோ அந்த அளவுக்கு அதிகமாய் உங்களுக்கு தரப்படுகிறது என்பதையும், எந்த அளவுக்கு அதிகமாய் பகிர்ந்து கொள்வீர்களோ அந்த அளவுக்கு அதிகமாய் பெறுவதற்கு நீங்கள் தகுதியானவர்களாக ஆகிறீர்கள் என்பதையும் ஒருமுறை நீங்கள் அறிந்ததுமே.... ஒவ்வொரு கணமும் அது வளர்ந்துகொண்டே போகிறது. அடுத்த கணம் என்பது எப்போதும் இந்த கணத்திலிருந்தே பிறக்கிறது. எனவே அதுபற்றி ஏன் கவலை கொள்கிறீர்கள்? இந்த கணம் அமைதியாக இருந்தால் அடுத்த கணம் எப்படி குழப்பமாக இருக்க முடியும்? எங்கிருந்து அது எழும்? இந்த கணத்திலிருந்தே அது பிறக்கப் போகிறது. இந்த கணத்தில் நான் மகிழ்ச்சியாக இருந்தால் அடுத்த கணத்தில் எப்படி நான் மகிழ்ச்சி இல்லாதவனாக இருக்க முடியும்?

அடுத்த கணம் மகிழ்ச்சியில்லாமல் இருக்க நீங்கள் விரும்பினால் இந்த கணத்திலேயே மகிழ்ச்சியில்லாதவர்களாக நீங்கள் இருக்க வேண்டி இருக்கும். ஏனெனில் மகிழ்ச்சியின்மையில் இருந்தே மகிழ்ச்சியின்மை பிறக்கிறது. மகிழ்ச்சியில் இருந்து மகிழ்ச்சியே பிறக்கிறது. அடுத்த கணத்தில் எதை அறுவடை செய்ய நீங்கள் விரும்புவீர்களோ அதை இக்கணமே நீங்கள் விதைத்தாக வேண்டி இருக்கும். கவலைக்கு ஒருதடவை இடம் கொடுத்ததுமே குழப்பம் வரும் என்று எண்ண ஆரம்பித்து விடுகிறீர்கள் நீங்கள். அப்படியே அதுவும் வருகிறது. ஏற்கனவே அதை நீங்கள் கொண்டு வந்திருக்கிறீர்கள். இப்போது அதை நீங்கள் அறுவடை செய்ய வேண்டி இருக்கிறது. ஏற்கனவேயே அது வந்துவிட்டது. அடுத்த கணம்வரைகூட தாமதமாவதில்லை, ஏற்கனவே அது அங்கு இருக்கிறது.

இதை நினைவில் கொள்ளுங்கள். உண்மையாகவே இது ஒரு விநோதம்தான்: அதாவது நீங்கள் சோகமாக இருக்கும் போது அது கற்பனையாக இருக்கலாம் என்று ஒருபோதும் நீங்கள் எண்ணுவதில்லை. தான் வருத்தமாக இருந்து, அது வெறும் கற்பனையாகவே இருக்கலாம் என என்னிடம் கூறிய ஒரு மனிதரையும் இதுவரை நான் சந்தித்ததில்லை. வருத்தம் என்றால் முற்றிலும் நிசமானதே. ஆனால் மகிழ்ச்சி? -உடனடியாகவே ஏதாவது கோளாறாகப் போகிறது - ''அது கற்பனையாக இருக்கலாம்'' என்று எண்ணத் தொடங்குகிறீர்கள் நீங்கள். மன இறுக்கத்தோடு இருக்கும்போது எல்லாம் அது கற்பனையே என

ஒருபோதும் நீங்கள் எண்ணுவதில்லை. உங்கள் இறுக்கமும் பதற்றமும் கற்பனையே என்று எண்ண உங்களால் முடிந்தால் அது மறைந்துவிடும். அப்படியே உங்கள் அமைதியும் மகிழ்ச்சியும் கற்பனையே என்று நீங்கள் எண்ணினால் அது மறைந்துவிடும்.

நிசமென எடுத்துக் கொள்ளப்படும் எதுவும் நிசமெனவே ஆகிறது. நிசமற்றது எனக் கொள்ளப்படும் எதுவும் நிசமற்றதே ஆகிறது. உங்களை சூழ்ந்துள்ள முழு உலகையும் படைப்பவர் நீங்கள்தான். இதை நினைவில் கொள்ளுங்கள். மகிழ்ச்சியை - பேரின்பத்தை ஒரு கணம் அடைவதும் மிக அரிதாக இருக்கிறது. எனவே எண்ணத்தால் அதை இல்லாமல் செய்யாதீர்கள். ஆனால் எதையும் நீங்கள் செய்யாவிட்டால் கவலைக்கான வாய்ப்பு அங்கே இருக்கிறது. எதையும் நீங்கள் செய்யாவிட்டால்... நீங்கள் ஆடாவிட்டால் - பாடாவிட்டால் -பகிர்ந்து கொள்ளாவிட்டால் அதற்கான வாய்ப்பு இருக்கிறது. படைப்புத் தன்மையதாய் இருந்திருக்கக்கூடிய அதே ஆற்றலே கவலையை உருவாக்கும். புது நெருக்கடிகளை உள்ளுக்குள் அது உருவாக்கத் தொடங்கும்.

ஆற்றலானது படைப்புத் தன்மையதாய் இருக்கவேண்டும். மகிழ்ச்சிக்காக அதை நீங்கள் பயன்படுத்தாவிட்டால் அதே ஆற்றல் மகிழ்ச்சி இன்மைக்காக பயன்படுத்தப்படும். ஆயின் மகிழ்ச்சி யின்மைக்கான உங்களின் பழக்கவழக்கங்கள் மிக ஆழ்ந்து வேர்கொண் டுள்ள சூழலில் ஆற்றல் ஒழுக்கு மிக இணக்கமாக - இயல்பாக இருக்கிறது. மகிழ்ச்சிக்கோ, அது ஒரு மலை ஏறும் சாகசமாக இருக்கிறது.

எனவே சில நாள்களுக்கு நீங்கள் இடைவிடாது விழிப்புணர்வாக இருக்க வேண்டி இருக்கும். ஒரு கணம் கிடைத்தாலும் அது உங்களை பற்றிக்கொள்ள விடுங்கள், தன்வசப்படுத்த அனுமதியுங்கள்; அதை அதன் முழுமையில் அனுபவியுங்கள்... அடுத்த கணம் எப்படி வேறுவிதமாக இருக்க முடியும்? எங்கிருந்து அது வேறுபடும்? எங்கிருந்து அது வரும்?

உங்கள் நேரம் உங்களுக்குள் படைக்கப்படுகிறது. உங்கள் நேரம் என் நேரம் அல்ல. எத்தனை மனங்கள் உள்ளனவோ அதற்கிணையாக அத்தனை நேரங்கள் உள்ளன. இருப்பது ஒரே நேரம் அல்ல. ஒரே நேரம் இருந்தால் பின் சிக்கல்தான். பின் பரிதாபகரமான இந்த மொத்த மனுக்குலத்தின் நடுவிலும் யாரும் ஒரு புத்தராக ஆக முடியாது. ஏனெனில் நாமெல்லாரும் ஒரே நேரத்தை சேர்ந்தவர்களாக இருப்போம். இல்லை - அது ஒரே நேரமாக இல்லை. என் நேரம் என்னிடமிருந்து வருகிறது; என் படைப்பு அது. இந்த நிமிசம் அழகானதாக இருந்தால் அடுத்த நிமிசம் இன்னும் அழகானதாக பிறக்கிறது - இது என் நேரம். இந்த நிமிசம் உங்களுக்கு சோகமானதாக அமைந்தால் பின் அதைவிட

சோகமான நிமிடமே உங்களிடமிருந்து பிறக்கிறது - அது உங்கள் நேரம். தனித்தனியாக கோடிக்கணக்கான நேரக் கோடுகள் நிலவு கின்றன. மேலும் காலமின்றி நிலவும் சில மனிதர்களும் இருக்கிறார்கள் - இவர்கள் மனமற்ற நிலையை அடைந்திருக்கிறவர்கள். அவர்களுக்கு காலம் இல்லை. ஏனெனில் கடந்த காலத்தை அவர்கள் நினைப்ப தில்லை. அது போய்விட்டது. எனவே மூடர்கள் மட்டுமே அதைப்பற்றி நினைக்கிறார்கள். ஒன்று போய்விட்டது என்றால் அது போயே விட்டது.

**''கதே, கதே, பர கதே -ஸ்வாஹ''** அதாவது ''போனது போனது முழுசாய் போனது. (அது) தீக்கிரை ஆகுக''என்னும் ஒரு புத்த மந்திரம் இருக்கிறது. கடந்த காலம் கடந்துவிட்டது. வருங்காலம் இன்னும் வரவில்லை. அது குறித்து அலட்டிக்கொள்வானேன்? அது வருகிற போது பார்ப்போம். அதை எதிர்கொள்ள அப்போது நீங்கள் அங்கே இருக்கப் போகிறீர்கள் - பின் ஏன் அதுகுறித்து இப்போதே கவலைப்படுவது? போனது போய்விட்டது. வரக்கூடியதோ இன்னும் வரவில்லை. இந்த கணம் மட்டுமே மீந்துள்ளது - தூய்மையாய், தீவிரமாய், ஆற்றலுடன். அதை வாழுங்கள்! அது அமைதியாயிருந்தால் அதற்கு உடன்படுங்கள். அது ஆனந்தமாயிருந்தால் கடவுளுக்கு நன்றி கூறுங்கள், நம்பகத் தன்மை யோடிருங்கள். உங்களால் நம்பகத் தன்மையோடிருங்கள். இருக்க முடிந்தால் அது இனியும் வளரும். அதில் நீங்கள் நம்பகத்தன்மை யோடிருங்கள். ஏற்கனவே அதை நீங்கள் விசமாக்கி விட்டீர்கள் என்றாகும்.

**மூன்றாவது கேள்வி:**

**நம் பங்குக்கு நாம் செய்யும் எல்லா செய்கைகளும் அதிக சிக்கல்களையே உருவாக்கும் என்கிறீர்கள். கவனித்துக் கொண்டும் பொறுமையாக காத்துக் கொண்டும் இளைப்பாறிக் கொண்டும் இருக்கவேண்டும் என்றும் நிலைமைகள் தாமே தெளியும்படி விடவேண்டும் என்றும் சொன்னீர்கள். பின் எப்படி யோகத்தில் நூற்றுக்கணக்காக செய்முறைகளும் பயிற்சிகளும் நிறைந்துள்ளன?**

உங்களால்தான்! பதஞ்சலியால் அல்ல, உங்களால்தான். உங்கள் பங்குக்கு எதுவும் செய்யாமலேயே அறுதி அனுபவம் உங்களுக்கு நிகழ முடியும் என்பதை உங்களால் நம்ப முடிவதில்லை - நீங்கள் நம்பமுடியாது! ஏதாவது ஒன்றை செய்வது உங்களுக்கு தேவைப்படுகிறது. சின்ன குழந்தைகள் வைத்து விளையாட சில செப்புப் பொம்மைகள் தேவைப்படுவதைப் போலவே, நீங்கள் வைத்து விளையாட சில

செய்முறைகள் தேவைப்படுகிறது. மேலும் கடவுள் மிக எளிமையானவர், மிக எளிதாக கிடைப்பவர் என்பதை உங்களால் நம்ப முடிவதில்லை என்பதால் செய்முறைகள் வகுக்கப்பட வேண்டி உள்ளன. அந்த உத்திகள் உங்களை கடவுளிடம் இட்டுச் செல்லாது. அறுதி அனுபவத்தை அடைய அந்த உத்திகள் உதவாது. பின் அவை என்ன தான் செய்யும்? உங்கள் மடத்தனத்தை மட்டுமே உங்களுக்கு அவை சுட்டிக்காட்டும் - நீங்கள் செய்துகொண்டு இருப்பதை திடீரென ஒருநாள் நீங்கள் உணரும்போது உத்திகள் உதிர்கின்றன, அங்கே கடவுள் இருக்கிறார். கடவுள் எப்போதும் அவ்விடத்திலேயேதான் இருக்கிறார். உங்களால்தான். நீங்கள் கண்டிப்பாக கேட்கிறீர்கள்.

பலர் என்னிடம் வருகிறார்கள். அவர்களிடம் எதையும் செய்யத் தேவையில்லை என்று நான் சொன்னால் அவர்கள் சொல்கிறார்கள், ''இருந்தாலும்... எதையாவது கொடுங்கள். நாங்கள் உச்சரிப்பதற்காக குறைந்தது சில மந்திரங்களையாவது நீங்கள் தரமுடியும்'' என்கிறார்கள். ''அமைதியாக அப்படியே அமர்ந்திருப்பது அசாத்தியமாக இருக்கிறது - எதையாவது நாங்கள் செய்தாக வேண்டும்'' என்கிறார்கள். எனவே இந்த மக்களை வைத்துக் கொண்டு என்ன செய்வது? ''அமைதியாக உட்காருங்கள்'' என அவர்களிடம் நான் சொன்னால் அவர்களால் உட்கார்ந்திருக்க முடிவதில்லை. எனவே வலுவந்தமாக எதையாவது உருவாக்க வேண்டி உள்ளது. அவர்கள் செய்வதற்கு எதையாவாது நான் கொடுக்கிறேன். அதை செய்யும்போது, குறைந்தது சிலமணி நேரத்துக் காவது அதில் அவர்கள் ஈடுபட்டிருப்பார்கள். உட்கார்ந்துகொண்டு ராம் - ராம் - ராம் சொல்லிக் கொண்டிருப்பார்கள். குறைந்தது இந்த மந்திரத்தில் உதவியால் யாருக்கும் அவர்கள் எந்த தீங்கும் செய்ய மாட்டார்கள்; பேசாமல் உட்கார்ந்திருப்பார்கள். கெடுதல் செய்ய அவர்களால் முடியாது. மேலும் இந்த ராம் - ராம் - ராமை தொடர்ச்சியாக ஓதுவதன் மூலமாக தாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை ஒருநாள் அவர்கள் உணர்ந்து கொள்வார்கள்.

ஒரு ஸென் குரு தன் சீடரிடம் சென்றார். அந்த சீடர் மெய்யான தேடலுள்ள சீடர். தொடர்ச்சியாக தியானம் செய்து வந்தார் அவர். தியானத்தை கைவிட்டாக வேண்டிய கடைசி நிலையை அவர் அடைந்து விட்டிருந்தார். எல்லா உத்திகளும் கைவிடப்படவேண்டும். அவை எல்லாம் வெறும் பொம்மைகளே. ஏனெனில் பொம்மைகள் இல்லாமல் உங்களால் இருக்கமுடிவதில்லை. எனவே வெறும் பொம்மைகளே அவை என்பதை என்றாவது ஒருநாள் நீங்கள் உணர்வீர்கள் என்னும் நம்பிக்கையில்தான் அவை வழங்கப்படுகின்றன. நீங்களே அவற்றை வீசிஎறிந்துவிட்டு அமைதியாக அமர்வீர்கள்.

சரியான தருணம் வந்துவிட்டது என்பதால் அந்த குரு சென்றார். அப்போதும் அந்த சீடர் அந்த மந்திரத்தை விடாமல் உச்சரித்துக் கொண்டிருந்தார். அதற்கு அவர் பழக்கப்பட்டுவிட்டார். இப்போது அதனால் அவர் பீடிக்கப்பட்டுவிட்டார். அதை அவரால் கைவிட முடியவில்லை. சில நேரங்களில் ஏதாவது ஒரு பாடலின் குறிப்பிட்ட வரி உங்கள் மனதில் திரும்ப திரும்ப மேல் எழுவதை நீங்கள் காண்கிறீர்கள். இது அதைப் போன்றதே. அதை நீங்கள் கைவிட விரும்பினாலும் விடமுடிவதில்லை. உள்ளே அது துரத்துகிறது, திரும்பத் திரும்ப வந்து ஒட்டுகிறது; நீங்கள் அறியாதது அல்ல இது. ஆண்டுக்கணக்கில் ஒரு ஆள் ஒரு மந்திரத்தை முணுமுணுத்து வரும்போது அதை கைவிடுவது ஏறக்குறைய முடியாத செயல் ஆகிறது. அவரிலிருந்து பிரிக்க முடியாத பகுதியாகி விடுகிறது அது - அவரது தூக்கத்தில்கூட அவரால் அதை விடமுடிவதில்லை. அயர்ந்து அவர் தூங்கும்போதும் ராம் - ராம் - ராம் என அவர் உதடுகள் உச்சரிப்பதை நீங்கள் காணமுடியும்; அது ஒரு அடியோட்டமாக ஆகிறது. அது ஒரு பொம்மைதான் - விளையாட்டுப் பொருள்தான். ஆனால் மிகவும் பழக்கப்பட்டு விட்டதால் அது இல்லாமல் குழந்தையால் உறங்கப்போக முடிவதில்லை.

குரு போய் பேசாமல் சீடர்முன் அமர்ந்தார். சீடர் புத்தர் போல் அமர்ந்துகொண்டு தன் மந்திரத்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தார். குரு தன்னுடன் ஒரு செங்கல்லை எடுத்துச் சென்றிருந்தார். அதை ஒரு கல்மேல் உரசி தேய்க்கத் தொடங்கினார்: கர- கர - கர என ஒரு மந்திரம்போலவே விடாமல் செய்தார் அவர். முதலில் இந்த தொந்தரவை செய்து கொண்டிருப்பது யார் என அறிவதற்கான ஆவலை அடக்க முயன்றார் சீடர். ஆனால் பின் அவர் தன் மந்திரத்தை தொடர்ந்தார். பல மணிநேரம் இப்படியே சென்றது. சீடர் தன் கண்களை திறந்து பார்த்தார். ''என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்றார். குரு, ''இந்த செங்கல்லை பளபளப்பாக்க நான் முயன்று கொண்டிருக்கிறேன், ''இதை ஒரு கண்ணாடிபோல ஆக்கப்போகிறேன்'' என்றார். சீடர் சொன்னார், ''நீர் ஒரு மடையன். ஞானமடைந்திருக்கிறவர் என்ற உயர்நிலையை பெற்றுள்ள மனிதராகிய நீர் இத்தகைய ஒரு மடச் செயலை செய்வீர் என நான் ஒருபோதும் நினைத்ததில்லை. செங்கல் ஒருநாளும் ஒரு கண்ணாடியாக ஆகாது — அதை ஒரு கல்லின்மேல் நீர் எவ்வளவுதான் கடுமையாக தேய்த்தாலும். அது முழுவதுமாக தேய்ந்து போகலாம். ஆனால் ஒரு கண்ணாடியாக அது மாறவே மாறாது. இந்த முட்டாள்தனத்தை நிறுத்தும்! ''குரு சிரித்தார். பின் சொன்னார், நீரும் நிறுத்தும். ஏனென்றால் மனம் என்ற செங்கல்லை நீர் எவ்வளவுதான் உரசினாலும் ஒருபோதும் அது உள்ளார்ந்த சுயமாக ஆகாது. முடிவின்றி

அது மெருகேற்றப்படலாம், ஆனாலும் அது உம் உள்ளார்ந்த யதார்த்தமாக ஆகாது.''

மனத்தை கைவிட வேண்டியதே. அப்படி கைவிட உதவும் ஒரு தந்திரமே தியானம், செய்முறை உத்திகள் ஆகியன. அதன்பின் தியானமும் கைவிடப்பட வேண்டியதே. இல்லாவிட்டால் அதுவே உங்கள் மனமாக ஆகிறது. இது, உங்கள் பாதத்தில் ஒரு முள் இருப்பதை ஒத்ததே. இன்னொரு முள்ளைக் கொண்டு உங்கள் பாதத்தில் உள்ள முதல் முள்ளை அகற்றுகிறீர்கள். இரண்டாவது முள் உதவுகிறது. ஆனால் இரண்டாவது முள்ளும் முதல் முள்ளைப் போலவே ஒரு முள்தான். இரண்டாவது ஒன்றும் ஒரு மலர் அல்ல. இரண்டாவதன் துணை கொண்டு முதலாவதை அகற்றியபின் நீங்கள் என்ன செய்வீர்கள்? இரண்டாவது பெரிய உதவியாக இருந்தது என்பதால் அதை அந்த காயத்தில் செருகிக் கொள்வீர்களா? இந்த முள் மகத்தானது என்று அதை வழிபட வேண்டுமா? இரண்டாவது முள்ளை நீங்கள் வழிபாடு செய்வீர்களா? இல்லை, இரண்டு முள்களையும் வீசி எறிந்து விடுவீர்கள்.

இதை நினைவில் இருத்தியாக வேண்டும்: மனம் ஒரு முள். எல்லா உத்திகளும் முதல் முள்ளை வெளியில் எடுப்பதற்கான உத்திகளே. தியானமும் ஒரு முள்தான். முதல் முள் வெளிவந்தவுடன் இரண்டு முள்களையும் சேர்த்து வீசிவிட வேண்டியதே. ஒரே ஒரு கணம் நீங்கள் பிந்தினாலும்கூட முதல் முள்ளின் இடத்தில் இரண்டாவது முள் போய் அமர்ந்துகொள்ளும்; உங்களின் துன்பமும் பழையபடி தொடரும்.

எனவேதான் ஒரு ஆசான் தேவைப்படுகிறார். ''இதுவே சரியான தருணம், இந்த தியானத்தை - இந்த மடசெயலை - கைவிடுக'' என உங்களிடம் அவர் சொல்ல முடியும். தியானம் மறையாத வரை தியானம் கைகூடவில்லை என்றே பொருள். தியானம் தேவையற்றதாக ஆகிறபோதுதான் முதல்முறையாக நீங்கள் ஒரு தியானியாகி இருக்கிறீர்கள். ஏற்கனவே உங்களிடம் ஒரு முள் இருந்ததால்தான் செய்முறை உத்திகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஏற்கனவே ஒரு முள் இருக்கிறது, அதை வெளியெடுக்க ஒரு சாதனம் தேவைப்படுகிறது. ஆனால் இரண்டாவது முள்ளும் முதலாவதைப் போலவே ஒரு முள்தான், இரண்டுமே வீசி எறியப்பட வேண்டியவைதான் என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். ஒருபோதும் மறந்துவிடாதீர்கள்.

எனவேதான் ஒரு குருவுக்கும் குருவின் அருகில் வாழ்வதற்கும் இவ்வளவு அதிகமாக முக்கியத்துவம் தரப்படுகிறது. ஏனெனில் நீங்களாகவே அறிந்துகொள்ள முடியாமல் போகும். மனம் உதிர்ந்ததும் உடனடியாக தியானமே மனமாக ஆகிறது. மறுபடியும் அதில் நீங்கள்

ஈடுபட்டுக் கொள்கிறீர்கள். ஈடுபட்டுக் கொள்ளாத நிலையில்தான் – மனமும் இல்லாமல் தியானமும் இல்லாமல் போகும்போதுதான் – மனதில் அறவே பற்றற்ற அந்த நிலையில்தான் – அறுதி அனுபவம் நிகழ்கிறது; அதற்கு முன்பு அல்லவே அல்ல.

நடந்த ஒரு நிகழ்ச்சி: பெரிய ஸென் ஆசான் ஒருவர் அவர் ஞானம் அடைவதற்கு முன், ஒரு ஸென் ஆசானாக ஆவதற்கு முன், அவர் தேடிக்கொண்டும் துளாவிக்கொண்டும் இருந்த காலத்தில் தன் ஆசானிடம் போனார். அந்த ஆசான் எப்போதும் மக்களிடம், ''அதிக மதிகம் தியானியுங்கள்'' என்று சொல்லிக்கொண்டிருந்தார். அவரிடம் யார் வந்தாலும் இதே அறிவுரையைத்தான் பெற்றார்கள்: ''அதிக மதிகம் தியானியுங்கள் - மிகுந்த ஆற்றலை அதில் கொண்டுவாருங்கள்.'' எனவே இந்த சீடர் தன்னால் முடிந்த எல்லாவற்றையும் செய்திருந்தார். உண்மையில் ஒரு மனித பிறவி செய்ய முடியுமளவுக்கு முழுமையாக தியானத்தை அவர் செய்து கொண்டிருந்தார். அவர் தன் ஆசானைப் பார்க்க போனார். அவரை பார்த்ததும் ஆசான் தன் அதிருப்தியை தெரிவித்துக் கொண்டார். அவர் முகம் மகிழ்ச்சியாக இல்லை. சீடர் கேட்டார், '' என்ன விசயம்? இன்னும் அதிகமாய் நீங்கள் செய்யச் சொன்னாலும் நான் செய்ய முயல்கிறேன். அதற்காக ஏன் நீங்கள் என்னை இவ்வளவு வேதனையாக பார்க்கிறீர்கள்? நான் தேறமாட்டேன் என கருதுகிறீர்களா?'' அதற்கு ஆசான் கூறுகிறார், ''இல்லை, நிலைமை தலைகீழாக உள்ளது - அளவுக்கு அதிகமாக செய்து கொண்டிருக்கிறீர். கொஞ்சம் குறைத்துக்கொள்ளும். ஒட்டுமொத்தமாய் தியானத்தாலும் ஸென் னாலும் அளவுக்கு அதிகமாகவே நிரம்பி வழிகிறீர். கொஞ்சம் குறைவாகச் செய்தாலே போதும்'' என்றார்.

தியானத்தாலும் ஒருவர் பீடிக்கப்பட்டுவிட முடியும். ஆயின் பீடிக்கப்படுவதுதான் பிரச்சனை. பணத்தால் நீங்கள் பீடிக்கப்பட்டீர்கள். இப்போது தியானத்தால் நீங்கள் பீடிக்கப்படுகிறீர்கள். பணம் அல்ல பிரச்சனை. பீடிக்கப்படுவதே பிரச்சனை. முன்பு சந்தையினால் நீங்கள் பீடிக்கப்பட்டிருந்தீர்கள். இப்போது கடவுளால் பீடிக்கப்பட்டிருக்கிறீர்கள். சந்தை அல்ல பிரச்சனை... பீடித்தல் தான். நாம் இளக்கமாகவும் இயல்பாகவும் இருக்க வேண்டும், மனம்/தியானம் எதனாலும் பீடிக்கப்படக்கூடாது. அதன் பிறகு மட்டுமே - ஈடுபாடற்றவராய், பீடிக்கப்படாதவராய் வெறுமனே நீங்கள் பாய்ந்தோடும்போது மட்டுமே அறுதிநிலை உங்களுக்கு நிகழ்கிறது.

**நான்காவது கேள்வி:**

**அன்பைப்பற்றியும் அதன்மீது தியானிப்பது எவ்வளவு நல்லது என்றும் நீங்கள் பேசுகிறீர்கள். ஆனால் அச்சமே**

**என் இருத்தலுக்கு அதிக நெருக்கமாக உள்ளது. அச்சத்தைப் பற்றியும் அதைக் குறித்து நாங்கள் என்ன மனப்பான்மையை மேற்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியும் பேசுவீர்களா?**

முதல் விசயம்: அச்சம் என்பது அன்பின் மறுபக்கம்தான். நீங்கள் அன்பாயிருந்தால் அச்சம் மறைகிறது. நீங்கள் அன்பாயில்லாவிட்டால் அச்சம் எழுகிறது - மிகப் பெருமளவான அச்சம். காதலர்கள் மட்டுமே அச்சமற்றவர்களாக இருக்கிறார்கள். காதலின் ஆழமான ஒரு கணத்தில்மட்டுமே அச்சம் இருப்பதில்லை. அன்பின் ஆழமான ஒரு கணத்தில் பிரபஞ்சமே ஒரு வீடாக ஆகிறது - இங்கு நீங்கள் ஓர் அந்நியர் அல்ல, நீங்கள் ஒரு அயலார் அல்ல; நீங்கள் ஏற்கப்பட்டிருக்கிறீர்கள். ஒரே ஒரு மனித உயிரால் நீங்கள் ஏற்கப்பட்டாலும்கூட உங்கள் ஆழத்தில் ஏதோ ஒன்று திறக்கிறது - உங்களை உள்ளார்ந்த இருப்பில் மலர் போன்ற ஒரு நிகழ்வு மலர்கிறது. உங்களின் ஒருவர் ஏற்றுக்கொண்டுள்ளார். உங்களுக்கு மதிப்பு கிடைத்துள்ளது. நீங்கள் வீணானவர் அல்லர். உங்களுக்கு என்று ஒரு முக்கியத்துவம் உள்ளது; ஒரு அர்த்தம் உள்ளது. உங்கள் வாழ்வில் அன்பு இல்லாவிட்டால் பின் நீங்கள் அஞ்சுபவர் ஆவீர்கள். பின் எல்லா இடத்திலும் உங்களுக்கு பயமே இருக்கும். ஏனெனில் எல்லா இடத்திலும் எதிரிகளே இருக்கிறார்கள்; நண்பர்கள் இல்லை. மேலும் மொத்த இயற்கையும் அந்நியமானதாகத்தான் தோன்றுகிறது. நீங்கள் இங்கு ஒரு தற்செயலாக தோன்றுகிறீர்கள்; வேரற்றவராக - வீடற்றவராக தோன்றுகிற்ர்கள். ஒற்றை மனித பிறவிகூட காதலில் உங்களுக்கு அவ்வளவு ஆழமான வீடுபேற்றுணர்வை தரமுடிகிறபோது, பிரார்த்தனையில் ஒருவர் சாதிப்பதைக் குறித்து என்ன நினைப்பது?

அன்பின் சிகரமே பிரார்த்தனை ஆகும். முழுமையான அன்பே பிரார்த்தனை; முழுமையுடனான அன்பே பிரார்த்தனை. ஆனால் அன்பையே அடைந்திராதவர்கள் பிரார்த்தனையை எட்டமுடியாது. அன்பே முதல் படி. பிரார்த்தனையே உயர்படி. பிரார்த்தனை என்றால் முழுமையை நீங்கள் காதலிக்கிறீர்கள், முழுமையும் உங்களை காதலிக்கிறது என்று பொருள். தனி ஒரு நபரால்கூட அவ்வளவு ஆழ மான மலர்ச்சி உங்களுக்குள் ஏற்பட முடியும்போது முழுமையே உங்களை நேசிப்பதாக உணரப்படுவதுபற்றி என்ன நினைப்பது? நீங்கள் கடவுளை காதலிப்பதும் கடவுள் உங்களை காதலிப்பதுமே பிரார்த்தனை. மேலும், அன்பும் பிரார்த்தனையும் உங்கள் வாழ்வில் இல்லை என்றால் அப்போதுமட்டுமே பயம்...

ஆக உண்மையில் அன்பில்லாமையே அச்சம். மேலும் அச்சம்தான் உன் சிக்கல் என்றால் நீ தவறான பக்கத்தை பார்த்துக் கொண்டுள்ளாய் என்பதைத்தான் அது எனக்குக் காட்டுகிறது. அன்பே உன் சிக்கல், அச்சம் அல்ல. அச்சமே சிக்கல் என்றால் அன்பை நீ தேடியாக வேண்டும் என்பதே அதன் பொருள். அச்சமே பிரச்சனை என்றால், ஒருவர் உன்னிடம் இன்னுமதிகமாக அன்பு செலுத்தும் அளவுக்கு நீ அவரிடம் கூடுதல் அன்பாக இருக்கவேண்டும் என்பதே உண்மையான பிரச்சனை ஆகும். அன்புக்கு நீ இன்னுமதிகமாய் திறந்து கொள்ளவேண்டும்.

ஆனால் இதுதான் சிக்கல்: (நீங்கள்) பயப்படும்போது நீங்கள் அடைபட்டவர் ஆகிறீர்கள். எந்த அளவுக்கு மிகுதியான அச்சத்தை நீங்கள் உணரத் தொடங்குகிறீர்கள் என்றால் ஒரு மனிதரிடம் நெருங்குவதையே நிறுத்திக் கொள்கிறீர்கள். தனிமையில் இருப்பதையே விரும்புவீர்கள். யாராவது அருகில் இருக்கும் போதெல்லாம் நடுக்கமாக உணர்கிறீர்கள். ஏனெனில் அடுத்தவர் ஒரு எதிரியைப் போல் தெரிகிறார். அந்த அளவுக்கு பயத்தால் பீடிக்கப்பட்டவராக நீங்கள் இருந்தால் அது ஒரு நச்சுவட்டமாகிறது. அன்பின்மை உங்களுக்குள் அச்சத்தை உருவாக்கு கிறது; பின் அச்சத்தால் நீங்கள் அடைபட்டவராகிறீர்கள். திறப்புகளே இல்லாத சிறை அறைபோல் ஆகிறீர்கள். ஏனெனில் வாயில்கள் வழியாக யாராவது உள்ளே வந்துவிட முடியும் என அஞ்சுகிறீர்கள் - வெளியிலோ எல்லாரும் எதிரிகளாக இருக்கிறார்கள்... கதவை திறக்க பயப்படுகிறீர்கள். ஏனெனில், கதவை நீங்கள் திறக்கும்போது எது நடப்பதற்கும் வாய்ப்புள்ளது. எனவேதான் காதல் வந்து உங்கள் கதவை தட்டும்போதுகூட நீங்கள் நம்புவதில்லை.

அச்சத்தில் ஆழமாக ஊறியிருக்கும் ஒரு ஆண்/பெண், காதல் வயப்பட எப்போதுமே பயப்படுகிறார். ஏனெனில் இதயக் கதவுகள் அப்போது திறந்திருக்கும். அப்போது உங்களுக்குள் அடுத்தவர் நுழைகிறார். அந்த அடுத்தவரோ எதிரியாய் இருக்கிறார். ''அடுத்தவர் நரகமாயிருக்கிறார்'' என்கிறார் சார்த்தர்.

காதலர்கள் வேறொரு யதார்த்தத்தை அறிந்திருக்கிறார்கள். (அங்கு) அடுத்தவர் சொர்க்கமாயிருக்கிறார். சொர்க்கமே அவர்தான். சார்த்தர் மிக ஆழமான அச்சத்தில் - துயரத்தில் - பதற்றத்தில் வாழ்ந்திருக்க வேண்டும். மேலும் மேற்கின்மேல் சார்த்தர் மிகுந்த செல்வாக்கு செலுத்துபவராக இருக்கிறார். உண்மையில் ஒரு நோயைப்போல் - ஒரு கொடுமையான நோயைப்போல் அவர் தவிர்க்கப்பட வேண்டும். ஆனால் அவர் கவர்ச்சியாக தெரிகிறார். ஏனெனில் எதை அவர் கூறினாலும் அதையே

சரியென தம் சொந்த வாழ்வில் உணர்கிறார்கள் பல பேர். அதுதான் அவரது கவர்ச்சி. மனச்சோர்வு - சோகம் - துயரம் - பயம் இவையே சார்த்தரின் கருப்பொருள்கள்; இருத்தலியல் என்னும் மொத்த இயக்கத்தினதும் கருப்பொருள்கள். இவையே தம் பிரச்சனைகள் என மக்கள் உணர்கிறார்கள். அன்பைப்பற்றி நான் பேசும்போது அது உங்கள் பிரச்சனை அல்ல, அச்சமே உங்கள் பிரச்சனை என நீங்கள் உணரலாம் தான். ஆனால் நான் உங்களுக்கு சொல்ல விரும்புகிறேன்: உங்கள் பிரச்சனை அன்புதான், அச்சமல்ல.

இதைப் போலத்தான்: வீடு இருட்டாக உள்ளது. நான் ஒளியைப்பற்றிப் பேசுகிறேன். உடனே நீங்கள் கூறுகிறீர்கள், ''நீங்கள் ஒளியைப்பற்றியே பேசிக்கொண்டிருக்கிறீர்கள், அதற்கு பதிலாக இருளைப்பற்றி பேசினால் நலமாக இருக்கும், ஏனென்றால் இருட்டுதான் எங்கள் பிரச்சனை, வீடு இருட்டால் நிரம்பியுள்ளது, ஒளி எங்களுக்கு பிரச்சனையே அல்ல'' என்கிறீர்கள். ஆனால் நீங்கள் சொல்லிக் கொண்டிருப்பது என்ன என்பது உங்களுக்கே புரிகிறதா? இருட்டுதான் உங்கள் சிக்கல் என்றால் இருட்டைப்பற்றிப் பேசுவது பயன்படாது. இருட்டுதான் உங்கள் சிக்கல் என்றால் இருட்டுடன் நேரடியாக எதுவும் செய்ய முடியாது. அதை உங்களால் வெளியில் வீச முடியாது, அதை நீங்கள் வெளியே தள்ள முடியாது. அதிலிருந்து உங்களால் வெளியேறி விடவும் முடியாது. இருள் என்பது ஒரு இன்மை. அதை நேரடியாக எதுவும் செய்யமுடியாது. உங்களால் ஏதாவது செய்யக் கூடுமானால் ஒளியைக் கொண்டுதான் செய்யவேண்டும், இருட்டுடன் அல்ல.

ஒளியில் அதிக கவனம் செலுத்துங்கள் - ஒளியைக் கண்டுபிடிப்பது எவ்வாறு, ஒளியை உருவாக்குவது எவ்வாறு, வீட்டில் ஒரு விளக்கை பொருத்துவது எவ்வாறு என்பதில் கவனம் செலுத்துங்கள் - பின் திடீரென அங்கு இருள் இருக்காது.

அன்பே சிக்கல், அச்சம் ஒருபோதும் சிக்கல் அல்ல என்பதை நினைவில் இருத்துங்கள். தவறான பக்கத்தை பார்த்துக்கொண்டு இருக்கிறீர்கள் நீங்கள். மேலும் பல பிறவிகளாக, தொடர்ச்சியாக நீங்கள் தவறான பக்கத்தையே பார்த்திருக்க முடியும். ஆனால் அதன்மூலம் உங்களால் தீர்வுகாண முடியாது. இல்லாததை ஒரு பிரச்சனையாக்கக் கூடாது என்பதை எப்போதும் நினைவில் வையுங்கள். ஏனெனில் அதைக்குறித்து ஒன்றும் செய்ய முடியாது. இருப்பதை மட்டுமே ஒரு பிரச்சனை ஆக்கவேண்டும்; ஏனெனில் அப்போது ஏதாவது செய்ய முடியும். சிக்கலையும் தீர்க்க முடியும்.

அச்சமாக உணர்கிறீர்கள் என்றால் அன்புதான் பிரச்சனை. அதிக அன்பானவராக ஆகுங்கள். அடுத்தவரை நோக்கி சில அடிகள் எடுத்து

வையுங்கள். ஏனெனில் நீங்கள் மட்டுமல்ல, ஒவ்வொருவருமே பயத்தோடுதான் இருக்கிறார்கள். யாராவது உங்களிடம் வந்து உங்களை நேசிக்கவேண்டும் என்பதற்காக நீங்கள் காத்திருக்கிறீர்கள். காலாகாலத்துக்கும் நீங்கள் காத்திருக்க வேண்டி வரலாம், ஏனெனில் அடுத்தவரும் அச்சத்தில்தான் இருக்கிறார். மேலும் பயப்படுவோர் முற்றமுழுக்க ஒரு காரணத்துக்காகவே பயப்படுவோர் ஆகிறார்கள் - அதுதான், தாம் நிராகரிக்கப்பட்டு விடலாமோ என்கிற பயம்.

நான் வந்து உங்கள் கதவை தட்டினால் நீங்கள் என்னை ஒதுக்கிவிடலாம் என்னும் சாத்தியம் இருக்கிறது. அந்த ஒதுக்கல் ஒரு காயமாக ஆகிவிடும். எனவே உங்களிடம் வராதிருப்பதே நல்லது. தனியாக இருந்து கொள்வதே மேல். அடுத்தவருடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளாமல் நீங்களாக இயங்கிக்கொள்வதே சாலச் சிறந்தது. ஏனெனில் அடுத்தவர் உங்களை மறுத்துவிட முடியும். நீங்களாக அணுகி அன்பை நோக்கிய முன்முயற்சி எடுக்கும் தருணத்தில் அதை மற்றவர் ஏற்றுக்கொள்வாரா மாட்டாரா என்பதே முதலில் வரும் பயமாக இருக்கிறது. அவர் / அவள் அதை மறுத்துவிடுவதற்கான சாத்தியமும் இருக்கிறது.

எனவேதான் பெண்கள் ஒருபோதும் முன்முயற்சி எடுப்பதில்லை. அதிக பயத்துடன் இருக்கிறார்கள். எப்போதுமே ஆண்களுக்காக அவர்கள் காத்திருக்கிறார்கள் - அவன்தான் முதலில் முன்வரவேண்டும். ஏற்பது அல்லது மறுப்பது என்னும் முடிவை எப்போதும் அவர்கள் தம்மிடமே வைத்துக் கொள்கிறார்கள். அடுத்தவர்களுக்கு அவர்கள் ஒருபோதும் வாய்ப்புத் தருவதில்லை. ஏனென்றால் ஆண்களைவிட அதிகம் பயப்படுகிறவர்களாக இருக்கிறார்கள் பெண்கள். இந்நிலையில் பல பெண்கள் தம் வாழ்நாள் முழுவதும் வெறுமனே காத்திருக்கிறார்கள். யாரும் வந்து அவர்களின் கதவை தட்டுவதில்லை. ஏனெனில் அச்சப்படும் ஒரு ஆள் ஒருவிதத்தில் மூடுண்டவராக ஆகிறார். எனவே தன்னிடம் வரும் எவரையும் தள்ளிவிடுபவராக ஆகிறார். அவரை நெருங்கும்போது அந்த பயந்த மனிதர் தன்னை சுற்றிலும் பரப்பும் அதிர்வுகளே அவர் அருகில் வரும் எவரையும் விரட்டிவிடுவதாய் இருக்கிறது. பயந்த மனிதர் அசையத் தொடங்குகிறார். அசைவுகளில்கூட....

ஒரு பெண்ணிடம் நீங்கள் பேசுகிறீர்கள் - ஏதோ ஒரு விதத்தில் அவளிடம் நீங்கள் பாசமாகவும் நேசமாகவும் உணர்ந்தால், அவளிடம் அதிகமதிகம் நெருங்கி இருக்க விரும்புவீர்கள். அவளுக்கு மிகவும் அருகில் நின்று பேச விரும்புவீர்கள். ஆனால் உடலைப்பாருங்கள். ஏனெனில் உடலுக்கு அதற்கே உரிய மொழி இருக்கிறது. அந்தப் பெண் தனக்கே

தெரியாமல் பின்னோக்கி வளைந்து கொண்டிருக்கலாம். அல்லது அப்படியே பின்னுக்கு நகர்ந்து செல்லலாம். நீங்கள் நெருங்கிக் கொண்டிருக்கிறீர்கள்; நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறீர்கள்; அவளோ பின்வாங்கிக் கொண்டிருக்கிறாள். அல்லது அதற்கு வழியில்லை என்றால், அங்கொரு சுவர் இருந்தால் அதன்மேல் சாய்வாள். முன்னோக்கி வராமல், ''போய்விடு'' என குறிப்புக் காட்டிக் கொண்டிருக்கிறாள் அவள்; ''என்கிட்டே வராதே'' என்று உணர்த்திக் கொண்டிருக்கிறாள் அவள்.

மக்கள் உட்கார்ந்திருப்பதையும் நடப்பதையும் கவனியுங்கள். அருகில் வரும் எவரையும் விலக்கிவிடக்கூடிய சிலர் இருக்கிறார்கள். யார் அவர்களிடம் நெருங்கி வந்தாலும் அவர்கள் பயப்படுகிறார்கள். ஆயின் அச்சம் என்பதும் அன்பைப் போலவே ஓர் ஆற்றல்தான் - ஆனால் எதிர்ப்பு / விலக்கு ஆற்றல். காதல் கொப்புளிப்பதாக உணரும் மனிதர் ஏற்பு / ஈர்ப்பு ஆற்றலை வெளிப்படுத்துகிறார். அவர் அருகில் வந்தால் ஒரு காந்தம் உங்களை ஈர்ப்பதுபோலவே அந்த மனிதருடன் சேர்ந்திருக்க நீங்கள் விரும்புவீர்கள்.

பயமே உங்கள் பிரச்சனை என்றால் உங்கள் ஆளுமையைப்பற்றி ஆலோசியுங்கள். அதைக் கவனியுங்கள்: அன்புக்கு உங்கள் வாயில்களை நீங்கள் அடைத்திருக்க வேண்டும் - அவ்வளவுதான். அந்தக் கதவுகளை திறங்கள். மறுக்கப்பட்டுவிடும் சாத்தியமும் அதில் உள்ளதுதான். ஆனால் அதற்காக ஏன் அஞ்சவேண்டும்? மறுப்பு சொல்ல மட்டுமே மற்றவரால் முடியும். மறுப்புக்கு 50 சதவீத வாய்ப்பு உள்ளதுதான்; ஆனால் அதற்காக 100 சதவீதம் அன்பில்லாத வாழ்வை தேர்ந்தெடுத்து விடுகிறீர்கள் நீங்கள்.

வாய்ப்பு இருக்கிறதுதான்; ஆனால் அதற்காக கவலைப்படுவது ஏன்? நிறைய மனிதர்கள் இருக்கிறார்கள். ஒருவர் மறுப்பு தெரிவித்தால் அவர் புண்படுத்திவிட்டதாகக் கொள்ள வேண்டாம்; காயப்படுத்திவிட்டதாக எடுத்துக் கொள்ள வேண்டாம் - அந்த நிகழ்ச்சியே நடக்காததுபோல எடுத்துக்கொள்ளுங்கள். உங்களை நெருங்கி வரும் மனநிலையில் அவர் இல்லை என்று மட்டுமே எடுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் ஒருவருக் கொருவர் பொருந்தவில்லை. நீங்கள் இருவரும் வெவ்வேறு மாதிரிகள். உண்மையில் அவரோ/அவளோ உங்களுக்கு மறுப்பு தெரிவிக்கவில்லை. அது ஒரு தனிப்பட்ட மறுப்பல்ல. நீங்கள் பொருந்தவில்லை. தாண்டி செல்லுங்கள். மேலும் அந்த மனிதர் மறுத்துவிட்டது நன்மைக்கே. ஏனெனில் ஒரு மனிதருடன் நீங்கள் பொருந்தாமல் போய் அவர் உங்களை ஏற்றுக்கொண்டு விட்டால் அப்போதுதான் உங்களுக்கு நிசமாகவே துன்பம். உங்களுக்கு தெரியாமலே மற்றவர் ஒரு முழுநீள

துன்ப வாழ்விலிருந்தும் உங்களைக் காப்பாற்றிவிட்டார்! அவருக்கு / அவளுக்கு நன்றி சொல்லி விட்டு கடந்து செல்லுங்கள். ஏனெனில் எல்லாரும் எல்லாருடனும் பொருந்த முடியாது.

ஒவ்வொரு தனிநபரும் தனித்தன்மை உள்ளவராக இருக்கிறார். எனவே உண்மையில் உங்களுக்கு பொருத்தமான சரியாக மனிதரை கண்டுபிடிப்பது மிகவும் கடினமாகும். வருங்காலத்தில் என்றாவது அமையக்கூடிய ஒரு சிறந்த உலகில் மக்களுக்கு அதிக அசைவு திறன் இருக்கும். அதனால் மக்கள் போய் தமக்கான சரியான பெண்ணை/ஆணை தாமே கண்டுகொள்ள முடியும். பிழைகள் செய்து விடுவது பற்றி பயப்படாதீர்கள். ஏனெனில் தவறுகள் இழைத்து விடுவோம் என பயந்தீர்களானால் அதன்பின் நீங்கள் இயங்கவே மாட்டீர்கள்; முழு வாழ்வையும் தவறவிட்டு விடுவீர்கள். செயல் செய்யாதிருப்பதைவிட தவறு செய்வது மேல். உங்கள் இடத்திலேயே, பயந்தபடி, எவ்வித முன்முயற்சியையும் எடுக்காமல் சும்மா இருந்து கொண்டிருப்பதை விடவும் நிராகரிக்கப்படுவது மேலானதே. ஏனெனில் மறுப்பானது ஏற்புக்கான வாய்ப்பை கொடுக்கிறது. ஏற்பின் மறுபக்கம்தானே அது.

ஒருவர் மறுத்தால் ஒருவர் ஏற்பார். நாம் முன்னேறிக்கொண்டே இருக்கவேண்டி உள்ளது; சரியான ஆளை கண்டுபிடிக்க வேண்டி உள்ளது. சரியான மனிதர்கள் சந்தித்துக்கொண்டால் ஏதோ ஒன்று ஒத்துப்போகிறது. அவர்கள் ஒருவர் மற்றவருக்காக உண்டாக்கப்பட்ட வர்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் நன்றாக பொருந்துகிறார்கள். அங்கே முரண்பாடுகளே வராது என்பதல்ல. கோபமும் சண்டையுமான கட்டங்களே வராது என்பதல்ல; வரும். காதல் உயிருள்ளதானால் மோதலும் அதில் இருக்கும். சில நேரங்களில் கோபதாபங்களும் அங்கு இருக்கும். அந்த காதல் ஒரு உயிருள்ள நிகழ்வாயிருக்கிறது என்பதைத் தான் அது காட்டுகிறது. சில நேரங்களில் வருத்தம்.... ஏனென்றால் எங்கெல்லாம் மகிழ்ச்சி நிலவுகிறதோ அங்கெல்லாம் வருத்தமும் நிலவியே தீரும்.

மணவாழ்வில் மட்டும்தான் சோகமே இருக்காது. ஏனெனில் அங்கு மகிழ்ச்சியும் இருக்காது. ஒருவர் வெறுமனே சகித்துக்கொள்கிறார் - அது ஒரு ஒப்பந்தம் அது ஒரு சமாளிப்பு. உண்மையான வாழ்வுக்குள் நீங்கள் போனால் அங்கு கோபம் இருக்கும். ஆனால் ஒருவரை காதலிக்கும்போது அந்த கோபத்தை நீங்கள் ஏற்றுக்கொள்கிறீர்கள். ஒருவரை நீங்கள் காதலிக்கும்போது அவரது/அவளது சோகத்தையும் நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள். மீண்டும் நெருங்கி வருவதற்காகவே சில நேரங்களில் நீங்கள் விலகிப் போகிறீர்கள். உண்மையில் ஒரு ஆழமான இயக்கப்போக்கு

உள்ளது: திரும்பத் திரும்ப காதல் வயப்படுவதற்காகவும் திரும்பத் திரும்ப திரும்ப சிறுசிறு தேனிலவுகளை கொண்டாட முடிவதற் காகவுமே காதலர்கள் சண்டைபிடித்துக் கொள்கிறார்கள்.

காதலைக் குறித்து பயப்படாதீர்கள். ஒருவர் பயப்பட வேண்டிய விசயம் ஒன்றே ஒன்றுதான் உண்டு - அதுதான் பயம். அச்சத்தைக் குறித்து அச்சப்படுங்கள். வேறு எதற்கும் ஒருபோதும் அஞ்சாதீர்கள். ஏனென்றால் அச்சம் முடமாக்குகிறது. அச்சம் நஞ்சானது. அச்சம் தற்கொலைக்கு இணையானது. அதிலிருந்து விலகுங்கள். அதிலிருந்து விடுபட்டு வெளியேறுங்கள். நீங்கள் விரும்பும் எதை வேண்டுமானாலும் செய்யுங்கள். ஆனால் அச்சத்துக்கு மட்டும் இடம் கொடுத்து விடாதீர்கள். அது ஒரு எதிர்மறை உணர்வு. மேலும், அன்பை நீங்கள் தவறவிட்டால்...

என்னைப் பொறுத்தவரை, அன்பும் ஒரு பெரிய சிக்கல் அல்ல. ஏனெனில் உங்களைவிடவும் தொலைவாகப் பார்க்கிறேன் நான். அன்பை நீங்கள் தவறவிட்டால் பிராத்தனையை நீங்கள் தவற விடுவீர்கள். ஆயின் என்னைப் பொறுத்தவரை பிரார்த்தனைதான் நிசமான பிரச் சனை. உங்களுக்கு இன்னமும் அது ஒரு சிக்கலாக ஆகாதிருக்கலாம். ஏனென்றால் அச்சமே உங்கள் பிரச்சனை என்றால் பின் அன்புகூட இன்னும் உங்களுக்கு ஒரு பிரச்சனையாகவில்லை. அந்நிலையில் பிரார்த்தனையைப்பற்றி நீங்கள் எப்படி நினைக்க முடியும்? ஆனால் வாழ்வின் முழுவரிசையையும் அது இயங்கும் விதத்தையும் என்னால் காண முடிகிறது. அன்பைத் தவறவிட்டால் ஒருபோதும் உங்களால் வழிபட முடியாது. ஏனெனில் வழிபாடு என்பது பேரண்ட (அளவிலான) அன்பாகும். அன்பைத் தொடாமல் கடந்து பிரார்த்தனையை உங்களால் அடைந்துவிட முடியாது. பலபேர் முயன்றிருக்கிறார்கள், அவர்கள் மடாலயங்களில் செத்திருக்கிறார்கள். உலக முழுவதிலும் பலர் முயன் றிருக்கிறார்கள். அச்சம் காரணமாக அன்பை முற்றிலுமாக தவிர்த்து விட அவர்கள் முயன்றார்கள். பயத்திலிருந்து வழிபாட்டுக்கு ஒரு நேரடி குறுக்கு வழியை கண்டுபிடிக்க அவர்கள் முயன்று வந்திருக்கிறார்கள்.

இதைத்தான் நூற்றாண்டுகள் நெடுகவும் துறவிகள் செய்து கொண்டு வந்திருக்கிறார்கள். கிறித்தவ - இந்துஇய - பவுத்த என அனைத்து மத துறவிகளும் அதை செய்து வந்திருக்கிறார்கள். அன்பை அறவே தொடாமல் கடந்துவிட அவர்கள் முயன்று வந்திருக்கிறார்கள். அவர்களின் வழிபாடு போலியாகவே இருக்கும். அவர்களின் வழிபாட்டில் உயிர் இருக்காது அவர்களின் பிரார்த்தனை எங்கும் கேட்கப்படாது. பேரண்டமானது அவர்களின் பிரார்த்தனைக்கு பதில் அளிக்கப் போவதில்லை. மொத்த பேரண்டத்தையும் ஏமாற்றவே அவர்கள் முயன்று கொண்டிருக்கிறார்கள்

இல்லை, எவரும் அன்பின் வழியாக கடந்து தானாக வேண்டும். அச்சத்திலிருந்து அன்புக்குள் செல்லுங்கள். அன்பிலிருந்து பிரார்த் தனைக்குள் இயங்குவீர்கள். பிரார்த்தனையிலிருந்து அச்சமின்மை எழுகிறது. அன்பில்லாவிட்டால் அச்சம். அன்பிருந்தால் அச்சமில்லை. இறுதியான துணிவு வழிபாட்டில் பிறக்கிறது. ஏனெனில் அந்நிலையில் மரணம்கூட அச்சுறுத்தலாக இருப்பதில்லை. ஏனெனில் அந்நிலையில் மரணம் என்பதே இல்லை. இருத்தலுடன் மிக ஆழமாக ஒன்றி - லயித்து இருக்கும் உங்களுக்கு பயம் எப்படி இருக்க முடியும்?

எனவே தயவு செய்து பயத்திலேயே கட்டுண்டுவிடாதீர்கள். அதிலிருந்து உடனடியாக வெளியேறிவிடுங்கள். அன்பை நோக்கி முன்னேறுங்கள். தாமதம் செய்யாதீர்கள். ஏனெனில் யாருக்கும் உங்கள்மேல் அக்கறை இல்லை. காத்துக்கொண்டிருந்தால் நீங்கள் காத்துக்கொண்டே இருக்க வேண்டியதுதான். இதுவே நான் கூர்ந்து கண்டறிந்தது: அன்பின் வழியாக அன்றி உங்களால் கடந்து செல்ல முடியாது. வேறு வழியில், நீங்கள் தற்கொலைதான் செய்து கொள்வீர்கள். ஆனால் வெறுமனே நீங்கள் காத்துக் கொண்டிருந்தால் அன்பு உங்களை தாண்டி சென்றுவிடும். இயங்குங்கள்! அன்பு ஒரு தீவிர உணர்ச்சியாக இருக்க வேண்டும். முழு ஆற்றலோடு - முழு விழிப்போடு - உயிர்த்துடிதுடிப்போடு இருக்கவேண்டும் அது. அப்போது மட்டுமே ஒருவரை உங்கள் பக்கமாக நீங்கள் ஈர்க்கிறீர்கள். சவம் போலிருந்தால் உங்களை யார் கண்டு கொள்வார்? சவம் போலிருந்தால், மக்கள் உங்களிடமிருந்து பிய்த்துக்கொண்டு ஓடவே விரும்புவார்கள். சவம் போலிருந்தால் நீங்கள் ஒரு சலிப்பூட்டும் நிகழ்வாக - சலிப்பாகவே ஆகிவிடுகிறீர்கள். உங்களைச் சுற்றி எல்லாப்புறத்திலும் சலிப்பென்னும் மலத்தினை நீங்கள் ஏற்றிச் செல்கிறீர்கள். இதனால் உங்கள் எதிரில் வரும் எவரும் விலகிப்போகவே விரும்புவார்கள்.

அன்பாக, உயிர்த்துடிப்போடு, பயமில்லாமல் இருங்கள் - அப்படியே நடமாடுங்கள். நீங்கள் அஞ்சாதிருந்தால் உங்களுக்கு தருவதற்கு வாழ்க்கை எவ்வளவோ வைத்திருக்கிறது. மேலும், வாழ்க்கை உங்க ளுக்கு வழங்க முடிவதைவிடவும் அதிமானதை அன்பு உங்களுக்கு அளிக்க இருக்கிறது. ஏனெனில் இந்த வாழ்வின் நடுமையமே அன்பு தான். அந்த மையத்திலிருந்தே அக்கரைக்கு நீங்கள் செல்ல முடியும்.

வாழ்க்கை - அன்பு - ஒளி: இவற்றை மூன்று படிகள் என்கிறேன் நான். உயிர்வாழ்க்கை ஏற்கனவே இங்கு இருக்கிறது. அன்பு, நீங்கள் அடையவேண்டியது. ஏற்கனவே அது தரப்பட்டிராததால் அதை நீங்கள் தவறவிட்டுவிட முடியும். நாம்தான் அதை உருவாக்க வேண்டி உள்ளது.

வாழ்க்கை என்பது கொடுக்கப்பட்ட ஒரு நிகழ்வு. ஏற்கனவே நீங்கள் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறீர்கள். இயற்கை பரிணாமம் அத்தோடு நின்று விடுகிறது. அன்பை நீங்கள்தான் கண்டுபிடிக்க வேண்டி இருக் கிறது. அதில் ஆபத்துகள் - அபாயங்கள் இருக்கிறதுதான்; ஆனால் அவை எல்லாம்தான் அதனை அழகானதாக ஆக்குகின்றன.

நீங்கள்தான் அன்பை கண்டுபிடித்தாக வேண்டும். மேலும் அன்பை நீங்கள் கண்டுகொள்ளும்போது மட்டுமே ஒளியை உங்களால் கண்டு கொள்ள முடியும். அதன்பின் பிரார்த்தனை எழுகிறது. உண்மையில், அன்பின் ஆழத்தில், மனிதர்கள் - அன்பர்கள் - தம்மையறியாமல் பையப்பையப் பிரார்த்தனையை நோக்கி இயங்கத் தொடங்குகிறார்கள். ஏனெனில் அன்பின் உச்ச கணங்களே பிரார்த்தனையின் அடித்தள கணங்களாகவும் இருக்கின்றன. மிக அருகில்தான் பிரார்த்தனை இருக்கிறது.

அன்பர்கள் பலருக்கு இது நிகழ்ந்திருக்கிறது. ஆனால் அன்பர்கள் நிலவுவது மிகவும் அரிதானதே - அன்பில் ஆழ்ந்திருக்கையில் திடீரென அவர்கள் வழிபடத் தொடங்கி இருக்கிறார்கள். அமைதியாக ஒருவருக்கருகில் மற்றவர் பேசாமல் இருந்தபடி, ஒருவர் மற்றவரின் கைகளைப் பிடித்தபடி, அல்லது ஒரு கரையில் சேர்ந்து படுத்தபடி இருக்கும்போது திடீரென அவர்களில் ஒரு உந்தல் எழுகிறது - அப்பால் கடந்து செல்லும் உந்தல்.

எனவே அச்சத்தின்மீது அதிக கவனம் செலுத்தாதீர்கள். ஏனெனில் அது அபாயகரமானது. பயத்தின்மீது அதிக கவனம் செலுத்தினீர்களானால் அதற்கு நீங்கள் ஊட்டமளிக்கிறீர்கள், அது வளரும். அச்சத்துக்கு புறமுதுகு காட்டி, அன்பை நோக்கி இயங்குங்கள்.

ஐந்தாவது கேள்வி:

**கரையில் நாங்கள் நின்று, நீர்கள் தாமே தெளிய விட வேண்டுமானால், பின் செயலூக்கமான தியானங்கள் எல்லாம் எதற்காக?**

உங்களால் அமர முடிந்தால் தியானங்கள் தேவையே இல்லை. ஜப்பானில் தியானத்துக்கு 'ஸாஸென்' என்ற பெயர் உண்டு. அதன் பொருள், ஒன்றும் செய்யாமல் சும்மா இருத்தல் என்பதே ஆகும். ஒன்றும் செய்யாமல் அமர உங்களால் இயன்றால் அதுவே தியானங் களின் உயர்நிலை; வேறெதற்கும் தேவை இல்லை.

ஆனால் உங்களால் அமர முடியுமா? மொத்த சிக்கல்களின் முடிச்சும் அங்குதான் இருக்கிறது. உங்களால் அமர முடியுமா? ஒன்றும் செய்யாமல்

சும்மா இருக்க உங்களால் முடியுமா? ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்கும் தன்மை இயன்றால் எல்லாமே தானே தெளிகிறது. எல்லாமே தானே அதன் போக்கில் பாய்கிறது. எதை செய்வதற்கும் நீங்கள் தேவையில்லை. ஆனால் உங்களால் அமரமுடியுமா என்பதுதான் கேள்வி.

ஒரு கதை: ஒரு சிற்றூரின் அருகில் ஒரு கரட்டின்மேல் ஒரு மனிதர் நின்றுகொண்டிருந்தார். அப்போதுதான் விழந்திருந்தது. சூரியன் உதித்திருந்தது. மூன்று ஆட்கள் அப்போதுதான் காலை நடைக்காக போயிருந்தவர்கள், அந்த மனிதரைப் பார்த்தார்கள். அந்த நேரத்தில் அந்த மனிதர் அங்கே என்ன செய்து கொண்டிருந்தார் என்பது பற்றி தம் மனம்போன போக்கில் தமக்குள் பேசிக்கொள்ள தொடங்கினார்கள். அவர் அங்கு தன் மாட்டைத் தேடிக் கொண்டிருக்க வேண்டும் என்றார் ஒருவர். ''சில நேரங்களில் அவருடைய மாடு காணாமல் போய் விடுகிறது. அப்போது அவர் அந்த கரட்டின் உச்சிக்கு சென்று அதை தேடுகிறார். அங்கிருந்து எல்லா பக்கமும் பார்க்க முடியுமே'' என்றார். இரண்டாவது ஆள், ''ஆனால் அவர் எல்லா பக்கங்களிலும் பார்க்க வில்லை. சும்மா நின்று கொண்டிருக்கிறார். எனவே அது காரணமாக இருக்க முடியாது. காலை நடைக்கு ஒரு நண்பருடன் அவர் வந்திருக்க வேண்டும் என எனக்கு தோன்றுகிறது. நண்பர் பின்தங்கி விட்டிருக் கிறார், அதனால் அவருக்காக காத்துக் கொண்டிருக்கிறார்'' என்றார். மூன்றாமவர் சொன்னார், ''இதுவும் சரியல்ல. ஏனென்றால் ஒருவருக் காக நீங்கள் காத்துக் கொண்டிருந்தால் அவ்வப்போது நீங்கள் திரும்பிப் பார்ப்பீர்கள். இவரோ ஒருதடவை கூட திரும்பிப் பார்க்க வில்லை. எனவே அவர் தியானம் செய்து கொண்டிருக்கிறார் என நினைக்கிறேன். அவரது அங்கியை பார்த்தீர்களா? அவர் ஒரு துறவி. அவர் தியானித்துக்கொண்டிருக்க வேண்டும்'' என்றார் அவர். அவர் களின் வாக்குவாதம் மிகவும் சூடுபிடித்தது. எனவே ''இப்போதே அந்த மேட்டுக்குப் போய், இங்கு நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று அந்த மனிதரிடமே கேட்டுவிட வேண்டியதுதான்'' என்றார்கள் அவர்கள்.

பல மைல்கள் நடந்து அந்த கரட்டை அவர்கள் அடைந்தார்கள். முதல் ஆள் கேட்டார், ''இங்கு நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்? உமது மாட்டை தொலைத்து விட்டீர், அதைத்தான் தேடிக் கொண் டிருக்கிறீர் என்று நான் நினைக்கிறேன்.'' அந்த மனிதர் தன் கண்களைத் திறந்து ''இல்லை'' என்றார். உடனே இரண்டாவது ஆள் முன்வந்து ''அப்படியானால் நான் சொன்னதே சரியாக இருக்கவேண்டும்.

பின்தங்கிவிட்ட யாரோ ஒருவருக்காகத்தான் நீங்கள் காத்திருக்கி நீர்களா?'' என்றார். ''இல்லை'' என்றார் அவர். உடனே மூன்றாவது ஆளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. அவர் சொன்னார், ''அப்படியானால் நான்தான் முற்றிலும் சரி. நீங்கள் தியானித்துக் கொண்டுதானே இருந்தீர்கள்?'' அம்மனிதர் ''இல்லை'' என்றார். மூவருக்கும் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டது. அவர்கள் மூவரும் கேட்டார்கள்,'' நீர் என்ன செய்து கொண்டிருக்கிறீர்? ஒவ்வொருவருக்கும் இல்லை என்கிறீர். அப்படியானால் இங்கு நீர் என்னதான் செய்துகொண்டிருக்கிறீர்?'' என்றார்கள். ''ஒன்றும் செய்யாமல் சும்மா நின்று கொண்டிருக்கிறேன்'' என்றார் அந்த மனிதர்.

இது இயன்றால் இதுவே தியானத்தின் அறுதி நிலை. இது இயலாவிட்டால் பின் நீங்கள் செய்முறை உத்திகளை பயன்படுத்த வேண்டி இருக்கும். ஏனெனில் செய்முறை உத்திகள் மூலமாக மட்டுமே இது இயல்வதாக ஆகும். உத்திகள்மூலமாக மொத்த அனர்த்தத்தையும் ஒருநாள் உணர்வீர்கள். எல்லா தியான உத்திகளுமே, உங்கள் காலி லுள்ள செருப்புகளின் வார்களை இழுப்பதன்மூலம் உங்களை இழுக்க முயல்வதை போன்றவைதான். தியானம் என்பது அபத்தமானதுதான்; ஆனால் அதை அவ்வாறு ஒருவர் உணர்ந்தாக வேண்டியுள்ளது. அது ஒரு பெரும் அனுபவம். தன் தியானம் அபத்தமானது என்பதை ஒருவர் உணர்கிறபோது அப்படியே அது விட்டுவிடுகிறது.

மகரிசி மகேஷ் யோகி இருக்கிறார். இவருக்கு செய்முறைதான் முக்கியம். ஏதோ எல்லாமே செய்முறையில்தான் இருக்கிறது என்பது போல. அப்புறம் கிருஷ்ணமூர்த்தி இருக்கிறார். இவர் எல்லா வித செய்முறைகளுக்கும் முற்றிலும் எதிரானவர். இதோ நான் இருக்கிறேன். நான் செய்முறைகளுக்கு ஆதரவாகவும் இருக்கிறேன், எதிராகவும் இருக்கிறேன்.

ஒரு செய்முறை, அதை நீங்கள் விட்டுவிட முடிகிற இடம்வரை உங்களை இட்டுச் செல்கிறது. மகரிசி மகேஷ் யோகி ஆபத்தானவர். பலரையும் பாதையில் தொடங்கி விட்டுவிடுவார். ஆனால் அவர்கள் ஒருபோதும் இலக்கை அடையமாட்டார்கள். ஏனென்றால் போகும் பாதையே மிக முக்கியமானதாக கருதப்படுகிறது. லட்சக்கணக்கான பேரை அவர்செய்முறையில் ஈடுபடுத்தி விடுவார். பின் செய்முறையே ஒரே குறிக்கோள் ஆகிறது. மேலும், அதை விட்டுவிட எந்த வழியும் இருப்பதில்லை. அடுத்து கிருஷ்ணமூர்த்தி. இவர் ஆபத்தில்லாதவர், ஆனால் பயனும் இல்லாதவர். அவரால் ஒருவருக்கும் ஒருபோதும் தீங்கு விளைவிக்க முடியாது. ஏனெனில் அவரால் அது எப்படி முடியும் -

அவர்தான் ஒருவரையும் ஒருபோதும் பாதையில் செலுத்துவதே இல்லையே. இலக்கைப்பற்றி மட்டுமே அவர் பேசுகிறார். நீங்களோ இலக்கைவிட்டு மிகமிக தொலைவில் இருக்கிறீர்கள். மகரிசி மகேஷ் யோகியின் வலைக்குள் நீங்கள் மாட்டுவீர்கள். அறிவுரீதியாக கிருஷ்ணமூர்த்தி உங்களைக் கவரலாம். ஆனால் அவரிடமிருந்து எந்த உதவியும் கிடைக்காது. அவரால் கேடு செய்ய முடியாது. உலகிலேயே மிகவும் கெடுதலற்ற மனிதர் அவர்தான்.

பிறகு இங்கே நான் இருக்கிறேன். திரும்ப எடுத்துக் கொள்வதற்காகவே நான் உங்களுக்கு ஒரு பாதையை கொடுக்கிறேன். உங்களுக்கு நான் ஒரு செய்முறையை தருகிறேன் – ஒரு செய்முறை அல்ல, பல செய்முறைகளை தருகிறேன். விளையாட்டுப் பொம்மை கள் தருவதைப்போல தந்துவிட்டு, எல்லா செய்முறைகளும் ''ஸ்வாஹ, (அதாவது) தீக்கிரை ஆகுக'' என நீங்கள் கூறப்போகும் ஒரு தருணத்துக் காக காத்திருக்கிறேன்.

○

## 5. சுத்தமான பார்வை

நினைவு சுத்தப்படுத்தப்பட்டதும், பொருள்களின் மெய் இயல்பை தடையின்றி பார்க்க மனத்தால் இயன்றதும் நிர்விதர்க்க சமாதி கைகூடுகிறது.

சவிதர்க்க, நிர்விதர்க்க சமாதிகளுக்குத் தரப்படும் விளக்கங்கள், சமாதியின் அதிஉயர் நிலைகளையும் விளக்குகின்றன. ஆனால் சவிசார, நிர்விசார சமாதிகளின் இந்த அதிஉயர் நிலைகளில், தியானிக்கப்படும் பொருள்கள் அதிக நுண்மையானவையாக உள்ளன.

இந்த அதிநுண் பொருள்களுடன் தொடர்புடைய சமாதியின் பரப்பானது நுண் ஆற்றல்களின் உருவற்ற நிலைவரை விரிகிறது.

மனம் என்றால் நினைவு. அது ஒரு கணினி. இன்னும் சரியாக சொன்னால் அது ஒரு உயிர்க் கணிணி. அனுபவிக்கப்படுகிற - அறியப்படுகிற அனைத்தையும் சேகரித்துக் கொள்கிறது அது. பல பிறவிகளின் வழியாக கோடிக்கணக்கான அனுபவங்களின் வழியாக நினைவுகளை சேகரிக்கிறது மனம். அது ஒரு பரந்துபட்ட நிகழ்வாகும். கோடிக்கோடிக்கணக்கான நினைவுகள் அதில் சேமிக்கப்பட்டிருக் கின்றன. மிகப்பெரிய ஒரு சேமிப்புக்கிடங்கு ஆகும். அது.

உங்கள் முற்பிறவிகள் யாவும் அதில் பதியப்பட்டுள்ளன. ஒரே ஒரு நொடியில்கூட ஆயிரக்கணக்கான நினைவுகள் இடைவிடாமல் அதில் திரட்டப்பட்டுக் கொண்டுள்ளன என்கிறார்கள் அறிவியலார் - அதுவும் உங்கள் கவனத்துக்கு கொண்டு வராமலேயே மனமானது இவ்வாறு இயங்கிக் கொண்டே போகிறது. நீங்கள் தூங்கும் நேரத்திலும் கூட நினைவுகள் உருவாக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் நேரத்தில்கூட... யாரோ அழுது தேம்புகிறார்கள். உங்கள் புலன்கள் செயல்பட்டுக்கொண்டுள்ளன — அந்த அனுபவத்தை சேகரித்துக் கொண்டுள்ளன. காலையில் அதை உங்களால் திரும்பவும் நினைவுகூற முடியாமல் போகலாம். ஏனென்றால் தூங்கும்போது நீங்கள் உணர்வு நிலையில் இல்லை. ஆனால் ஆழமான வசியத்தின்கீழ் உங்களால் அதை திரும்பவும் நினைவுகூற முடிகிறது. நீங்கள் அறிந்தும் அறியாமலும் இதுவரை உங்களுக்கு அனுபவமாகியிருக்கிற அனைத்தும், ஆழ்ந்த வசியத்தில் திரும்பவும் நினைவுகூறப்பட முடிகிறது — உங்கள் முற்பிறவிகள் உட்பட. மனதின் இயல்பான விரிவு உண்மையிலேயே பரந்தது. இந்த நினைவுகளை நீங்கள் பயன்படுத்த முடிந்தால் அவை பயனுள்ளவை. ஆனால் நினைவுகள் உங்களை பயன்படுத்த தொடங்கினால் அவை ஆபத்தானவை.

தன் சொந்த நினைவுகளுக்கு தானே அதிகாரியாய் இருக்கும் மனமே சுத்தமான மனம். நினைவுகளால் ஓயாமல் அலைக்கழியும் மனம் அசுத்தமான மனம் ஆகும். ஒரு மெய்விவரத்தை நீங்கள் பார்க்கிறபோது

அதை பெயர்த்துரைக்காமல் பார்க்க உங்களால் முடியும். அப்போது தான் உணர்வானது யதார்த்தத்துடன் நேரடியாக தொடர்பு கொள்கிறது. அவ்வாறே மனதின் மூலமாக - பெயர்ப்புரைகளின் வாயிலாகவும் அதை உங்களால் பார்க்க முடியும். அப்போது நீங்கள் யதார்த்தத்துடன் தொடர்புடையவராக இல்லை. ஒரு கருவி என்னும் முறையில் மனம் பயனுள்ளதுதான். ஆனால் மனம் ஒரு பீடிப்பாக ஆகிறபோது, மனத்தால் உணர்வு ஒடுக்கப்படும்போது, யதார்த்தமும் மனத்தால் ஒடுக்கப்படும். அந்நிலையில் நீங்கள் மாயையில் வாழ்கிறீர்கள்; அந்நிலையில் நீங்கள் ஒரு பொய் உணர்வில் வாழ்கிறீர்கள்.

ஒரு மெய்விவரத்தை நீங்கள் பார்க்கும்போதெல்லாம் அதை நீங்கள் நேரடியாக - உடனடியாக பார்த்தால் மட்டுமே, மனமும் நினைவும் குறுக்கிடாதபடி பார்த்தால் மட்டுமே, அது ஒரு மெய்விவரம் ஆகும். மற்றபடி அது ஒரு பெயர்ப்புரையாகவே ஆகிறது. ஆயின் பெயர்ப் புரைகள் எல்லாமே தவறானவையே. ஏனெனில் எல்லா பெயர்ப் புரைகளும்/வியாக்கியானங்களும்/பொருள்விளக்கங்களும் உங்கள் கடந்தகால அனுபவத்துக்கு இசைவான விசயங்களை மட்டுமே உங்களால் பார்க்கவே முடிகிறது. உங்கள் கடந்தகால அனுபவங்களுடன் பொருந்தாத விவரங்களை உங்களால் பார்க்கவும் முடிவதில்லை. ஆனால் உங்களின் கடந்தகால அனுபவமே முழுமை அல்ல. வாழ்க்கை யானது உங்கள் கடந்தகால அனுபவத்தைவிட பெரியதாகும். மனம் எவ்வளவுதான் பெரியதாக இருந்த போதிலும் மொத்த இருத்தலுடன் ஒப்பிட்டால் அது ஒரு அற்ப பகுதிதான்; மிகச்சிறு கூறுதான்; அது அறிந்திருப்பது மிகவும் குறைவானதே. அறியப்படாதிருப்பதோ மிகவும் பரந்ததும் அளவிட முடியாததும் ஆகும். அறியப்படாததை அறியப்பட்டதன் மூலமாக அறிய நீங்கள் முற்படும்போது இலக்கை நீங்கள் தவற விடுகிறீர்கள். இதுதான் அசுத்தம். அறியப்படாததை உங்களுக்குள் உறையும் அறியப்படாததின் மூலமாக அறிய நீங்கள் முயலும் போதோ அங்கே நிகழ்வது ஒரு திருவெளிப்பாடு.

நடந்த கதை: ஆற்றிலிருந்து மிகமிகப் பெரிய மீன் ஒன்றைப் பிடித்தார் முல்லா நசுருதீன். அங்கு ஒரு கூட்டமே கூடிவிட்டது. ஏனென் றால் அவ்வளவு பெரிய மீனை அதுவரை அவர்களில் யாருமே கண்டதில்லை. முல்லா நசுருதீனும் அந்த மீனைப் பார்த்தார். இவ்வளவு பெரிய மீனா? இப்படி ஒன்று இருக்க முடியும் என்பதை அவரால் நம்பவே முடியவில்லை. வியப்பால் விரிந்த கண்களுடன் அந்த மீனை சுற்றிச்சுற்றி வந்தார். ஆனால் இன்னும் அவரால் நம்ப முடியவில்லை. அந்த மீனைத் தொட்டுப் பார்த்தார்; அப்போதும் அவரால் நம்ப

முடியவில்லை. ஏனென்றால் அவ்வளவு பெரிய மீனை மீனவர்களின் கற்பனைக் கதைகளில் மட்டுமே அவர் கேள்விப்பட்டிருந்தார். கும்பலும் நம்ப முடியாத கண்களுடன் அங்கே நின்று கொண்டிருந்தது. பின் முல்லா நசுருதீன் சொன்னார், ''இந்த மீனை திரும்பவும் ஆற்றில் தூக்கி வீச எனக்கு உதவுங்கள்; ஏனெனில் இது ஒரு மீனல்ல, இது ஒரு பொய்.''

உங்கள் கடந்த கால அனுபவத்துடன் பொருந்தும் எதுவும் மெய். அப்படி அது பொருந்தாவிட்டால் பின் அது பொய். உங்கள் கடந்த கால அனுபவத்துடன் பொருந்தவில்லை என்பதால் கடவுளை உங்களால் நம்ப முடிவதில்லை; தியானத்தை உங்களால் நம்ப முடிவதில்லை. ஏனென்றால் எப்போதும் நீங்கள் சந்தையிலேயே வாழ்ந்திருக்கிறீர்கள். சந்தையின் இருப்பு மட்டுமே உங்களுக்கு தெரியும். கணக்கிடும் மனதின் – வியாபார மனதின் இருத்தலை மட்டுமே நீங்கள் அறிவீர்கள். தூய - எளிய கொண்டாட்டத்தைப் பற்றி, எந்த காரணமும் இல்லாமலேயே - காரணமின்றி நிலவும் கொண்டாட்டத்தைப்பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. ஓர் அறிவியலாரின் உலகில் நீங்கள் வாழ்ந்து கொண்டிருந்தால், தன்னிச்சையாக எதுவும் நிலவ முடியும் என்பதை உங்களால் நம்ப முடியாது. ஏனென்றால் அறிவியலார் காரண - விளைவின் உலகில் வாழ்கிறார். ஒவ்வொன்றுக்கும் ஒரு காரணம் உள்ளது; தான்தோன்றியாக எதுவும் இல்லை. எனவே தன்னிச்சையாக ஒன்று நிலவ முடியும் என்பதை அறிவியலார் கேள்விப்படுகிற போது (தன்னிச்சை என்பதற்கு தனக்கொரு காரணமில்லாதது, அத்துவானத்தில் இருந்து திடுமென தோன்றியது என பொருள்கொள்கிறோம்) அறிவியலாராலும் அதை நம்ப முடிவதில்லை. எனவே ''அது ஒரு மீனாக இருக்க முடியாது, அது ஒரு பொய்தான், அதை திரும்பவும் ஆற்றில் எறிந்துவிடு'' என்றே அவர் கூறுவார்.

ஆனால் அக உலகில் செயல்பட்டிருக்கிறவர்கள், காரணமற்ற நிகழ்வுகளும் உள்ளன என்பதை அறிந்திருக்கிறார்கள். இதை அவர்கள் அறிந்திருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல; மொத்த இருத்தலுமே மூல காரணமற்றதுதான் என்பதையும் அவர்கள் அறிந்திருக்கிறார்கள். அறிவியல் மனத்திலிருந்து மாறுபட்ட - முற்றிலும் மாறுபட்ட - ஒரு உலகம் அது.

எதை நீங்கள் பார்த்தாலும், அதை நீங்கள் பார்ப்பதற்கும் முன்பே கூட, அதுபற்றிய விளக்கம்/வியகாக்கியானம் வந்துவிடுகிறது. மனிதர்களை தொடர்ச்சியாக கவனித்து வந்திருக்கிறேன் நான். அவர்களிடம் பேசி வந்திருக்கிறேன். அது அவர்களுக்கு ஒத்து வந்தால், அதுபற்றி எதையும் அவர்கள் வாய்திறந்து தெரிவிக்கும் முன்பே, உள்ளூர ஒரு ஒப்புதலான தலையசைப்பை எனக்கு தெரிவித்து

விடுகிறார்கள். ''சரிதான்'' என்கிறார்கள் அவர்கள். அவர்களின் நிலைபாடுகளுடன் அது ஒத்துவராவிட்டால் அவர்கள் எதுவும் கூறுவதில்லை; ''இல்லை'' என்பது அவர்களின் முகத்திலேயே எழுதி ஒட்டி வைத்திருக்கிறது. உள்ளுக்குள் ''இல்லை, இது உண்மை அல்ல'' என அவர்கள் கூறத் தொடங்கி இருக்கிறார்கள்.

அண்மையில்தான் ஒரு இரவில் ஒரு நண்பருடன் நான் பேசிக்கொண்டிருந்தேன். சில நாள்களுக்கு முன்புதான் அவர் வந்திருந்தார். மிகவும் புதியவர். உண்ணாநோன்பை அவர் நம்புகிறார். நான் அவரிடம் சொல்லிக்கொண்டிந்தேன், ''உண்ணாநோன்பு ஆபத்தானதாக முடியும். இதை நீங்கள் கடைப்பிடிக்கக் கூடாது. இதில் தேர்ச்சி உள்ள ஒருவரிடம் நீங்கள் கேட்டுக்கொள்ள வேண்டும். என் பேச்சை நீங்கள் கேட்பதானால் பட்டினிநோன்பை நான் ஆதரிப்ப தில்லை. ஏனெனில் பட்டினி போடுவது என்பது ஒருவித ஒடுக்குதலே ஆகும். உடல் நிசமானது. உடலின் பசி நிசமானது. உடலின் தேவை நிசமானது. அளவுக்கு அதிகமாக உண்ணாதீர்கள். ஏனெனில் அதுவும் உடலுக்கு எதிரானதே. அதுவும் ஒருவித ஒடுக்குமுறைதான். அப்படியே உண்ணாநோன்பையும் மேற்கொள்ளாதீர்கள். ஏனெனில் அதுவும் நிசமானதல்ல. அதுவும் ஒடுக்குதல்தான். அதுவும் இயற்கையோடு ஒத்திசைய மறுப்பதுதான். எனவேதான் அதை நான் நிசமற்றது என்கிறேன்.''

உணவு உண்பதால் ஒருவர் பீடிக்கப்பட்டிருக்கிறார் - அவருக்கு பித்துப் பிடித்திருக்கிறது. இன்னொருவர் உணவு உண்ணாதிருப்பதனால் பீடிக்கப்பட்டிருக்கிறார் - அவருக்கும் பித்துப் பிடித்திருக்கிறது. இருவருமே தம் உடல்களை நாசமாக்கிக் கொண்டிருக்கிறார்கள் - அதன் எதிரிகளாக இருக்கிறார்கள். இதற்கு ஒரு உபாயமாகவே உண்ணாவிரதம் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது.

நீங்கள் உண்ணாநோன்பு மேற்கொள்ளும் போதெல்லாம் உங்கள் ஆற்றல்மட்டம் தாழ்ந்து விடுகிறது; தாழ்ந்துதான் ஆகவேண்டும். ஏனென்றால் இடையறாது அதை உயர்ந்த மட்டத்தில் வைத்திருக்க உணவு தேவைப்படுகிறது. மூன்று, நான்கு நாட்கள் உண்ணநோன்பு இருந்த பிறகு உங்கள் ஆற்றல்மட்டம் மிகவும் தாழ்ந்துவிடுகிறது. அதனால் அதிலிருந்து மனதுக்குரிய பங்கு என்று எதுவும் கிடைப்ப தில்லை. ஏனெனில் மனம் ஒரு ஆடம்பரம்தான். உடலுக்கு அதிகமாக கிடைக்கிற போது மனதுக்கும் அது தருகிறது. மனம் என்பது இந்த உலகுக்கு பிந்தி வந்த ஒன்று; மிகவ் பிந்தி வந்தது. உடலே அடிப் படையானது; மூல முதன்மையானது. முதலில் உடலின் தேவைகள நிறைவு செய்யப்பட வேண்டும். பிறகுதான் மனதின் தேவைகள்.

இது எதைப் போன்றது என்றால், நீங்கள் பசியாய் இருக்கும் போது உங்கள் ஊரில் ஒரு தத்துவரை வைத்து ஆதரிக்க உங்களால் முடியாது. நீங்களே பசியாக இருக்கும்போது அங்கிருந்து தத்துவர் போய்விட வேண்டி இருக்கிறது. அங்கு அவர் பிழைக்க முடியாது. சமூதாயம் வளமாக இருக்கும்போதுதான், வசதியாக இருக்கும்போது தான் தத்துவம் வருகிறது. சமுதாயம் செல்வம் மிக்கதாக இருந்து அதன் அடிப்படைத் தேவைகள் நிறைவேறும் போது மட்டுமே மதம் வருகிறது. உடலுக்கும் இதே பொருளியல்தான்; முதலில் உடல். இரண்டாவதாக வருவதே மனம். உடலே சிரமத்தில் இருக்கும்போது, தனக்குரிய பங்கை பெறாதபோது, மனதுக்கான பங்கு உடனடியாக துண்டிக்கப்படும்.

இந்த சூழ்ச்சியைத்தான் மக்கள் தம் சொந்த உடல்களைப் பொறுத்தவரை கையாண்டு வந்திருக்கிறார்கள்: மனதுக்கான ஒதுக்கீடு துண்டிக்கப்பட்டால் மனத்தால் சிந்திக்க முடியாது. ஏனென்றால் சிந்திப்பதற்கு ஆற்றல் தேவைப்படுகிறது. அதன்பின் மனதில் சிந்தனை கள் எழுவதில்லை: மக்களும், தாம் தியானத்தன்மை உடையவர் களாக ஆகிவிட்டதாக எண்ணுகிறார்கள். அது உண்மை அல்ல. அவர் களுக்கு உணவளியுங்கள், எண்ணங்கள் திரும்பிவிடும். ஆற்றல் பாய்ந்து கொண்டிராதபோது மனம் ஒரு கோடைக்கால ஆற்றுப்படுகை போல ஆகிவிடுகிறது. ஆறு ஓடிக்கொண்டில்லை; ஆனால் கரைகள் அப்படியேதான் உள்ளன. எல்லாமே ஆயத்தமாக உள்ளது. மழை பெய்யும் போதெல்லாம் மறுபடியும் ஆறும்பாயும். ஆற்றல் சேரும் போதெல்லாம் பாம்பு பழையபடி படமெடுத்து ஆடும். பாம்பு செத்து விடவில்லை - உணர்விழந்த நிலையில்தான் இருக்கிறது. ஏனென் றால் அதற்கு வேண்டிய ஆற்றல் வழங்கப்படவில்லை.

உண்ணாநோன்பு என்பது தியானநிலையை போலியாக உருவாக்கு வதற்கான ஒரு தந்திரம்தான். அவ்வாறே போலி பிரம்மச்சரியத்தை / கற்பை உருவாக்குவதற்கும் உண்ணாநோன்பு என்ற சூழ்ச்சி கடைப்பிடிக்கப் படுகிறது. ஏனென்றால் நீங்கள் நோன்பு மேற்கொள்ளும்போது ஆற்றல் மட்டம் உயர்வதில்லை; காம மையம் ஆற்றலைப் பெற முடிவதில்லை.

இங்கும் பொருளியல்தான் பிரச்சனை: உணவின்மூலமே தனியர் உயிர் பிழைக்கிறார். காமம்மூலமே சமுதாயம் உயிர்பிழைக்கிறது. காமம்மூலமே மனிதஇனம் உயிரோடிருக்கிறது. உங்கள் பெற்றோர் ஒருவரை ஒருவர் காதலித்ததால்தான் - காமத்தில் ஈடுபட்டதால்தான், நீங்கள் இங்குஇருக்கிறீர்கள். நீங்கள் காமத்தில் ஈடுபட்டால், நீங்கள் போய்விடுவீர்கள்; உங்கள் பிள்ளைகள் இங்கு இருப்பார்கள். காமத்தில் நீங்கள் நுழையாவிட்டால் பின் வருங்காலம் என்பதில்லை;

இனம் தொடர்ந்து நிலவ நீங்கள் உதவுவதில்லை. எல்லாருமே பிரமச் சாரியாக - மண உறவு கொள்ளாதவராக ஆனால் பின் சமுதாயம் மறைந்துவிடும்.

உணவின்மூலமாக தனிஆள் உடம்பு உயிர்பிழைக்கிறது. உடலுறவின் மூலமாக இனஉடம்பு உயிர்பிழைக்கிறது. ஆனால் முதலில் தனியாள்தான். ஏனெனில் தனியாள் இல்லாமல் இனம் எப்படி உயிர்பிழைக்க முடியும்? எனவே தனியாளே முதன்மையானவர்; இனம் இரண்டாவதானதே. நீங்கள் ஆற்றல் நிரம்பியவராக இருந்து உடல் நலமாக உணர்கிறபோது உடனடியாக ஆற்றல் காம மையத்துக்கு பங்கிட்டளிக்கப்படுகிறது. இப்போது உங்களிடம் போதிய வளம் இருக்கிறது; இனத்துக்காக அதை உங்களால் பகிர்ந்துகொள்ள முடிகிறது. ஆற்றல் பற்றாக்குறையாக பாய்ந்துகொண்டிருக்கும்போது காமம் மறைகிறது. ஒரு பத்து நாள்கள் மட்டும் பட்டினி கிடங்கள்; பதினொன்றாம் நாளில் பெண்கள்மேல் உங்களுக்கு நாட்டம் ஏற்படுவதில்லை என்பதைக் காண்பீர்கள். ஒரு பதினைந்து நாள்களுக்கு நீங்கள் நோன்பு அனுசரிப்பீர்களானால், பதினைந்தாவது நாளில் மிக அழகிய நிர்வாண படங்கள் வெளிவரும் ஏடுகள் அருகில் இருந்தாலும்கூட, அவற்றை உங்களால் திறக்கக்கூட முடியாதுபோகும். அவை அங்கே கிடந்து அவற்றின்மீது தூசு சேர்ந்துகொண்டிருக்கும். உங்களுக்கு உந்துதல் எழாது. இருபத்தொரு நாள்கள் வரை விரதத்தை நீங்கள் தொடர்ந்தால் அன்று அம்மண மங்கைகள் ஆடிக்கொண்டிருந்தாலும் அங்கு நீங்கள் ஒரு புத்தரைப்போல் அமர்ந்திருப்பீர்கள். இதன் பொருள் நீங்கள் ஒரு புத்தரைப் போல் ஆகியிருக்கிறீர்கள் என்பதல்ல.... ஒருநாள் நல்ல சாப்பாடு போதும்; மறுநாளே நிர்வாண படங்களில் உங்களுக்கு ஆர்வம் பிறந்துவிடும். மூன்றாவது நாளில் ஆற்றல் மீண்டும் பாய்ந்து கொண்டிருக்கிறது: பெண்கள் மீது ஆர்வம் காட்டுகிறீர்கள் நீங்கள்.

உண்மையில் இதை ஒரு அளவுகோலாகவே ஆக்கி இருக்கிறார்கள் உளவியலார்: ஒரு ஆணுக்கு ஒரு பெண்ணிடம் ஆர்வம் ஏற்படாவிட்டால் அவனிடம் ஏதோ கோளாறு என்று பொருள்; ஒரு பெண்ணுக்கு ஒரு ஆணிடம் நாட்டம் தோன்றாவிட்டால் அவளிடம் ஏதோ கோளாறு என்று பொருள்; ஆற்றல் மிகவும் தாழ்வாக பாய்ந்து கொண்டிருக்கிறது என்கிறார்கள் அவர்கள். இப்படிப்பட்ட நூறு பேரில் தொண்ணூற்று ஒன்பது பேரைப் பொறுத்தவரை அவர்கள் கூறுவது சரிதான்; உண்மைதான். நூற்றில் ஒருவரின் விசயத்தில்மட்டும் அவர்களின் அளவுகோல் சரியானதல்ல. ஏனெனில் அவர் ஒரு புத்தராக இருப்பார். அவரில் ஆற்றல் மட்டம் தாழ்வாக இருப்பதில்லை, மிக உயர்வாகவே

இருக்கிறது - மிக அதிகமாகவே இருக்கிறது - உச்சத்திலேயே இருக்கிறது. ஆனால் இப்போது அவர் தன்னிலேயே மிகுந்த நிறைவு காண்கிறவர் ஆக இருக்கிறபடியால், மற்றவரில் ஆர்வம் காட்டாத மாறுபட்ட ஒரு பரிமாணத்துக்குள் இயங்கிக்கொண்டிருக்கும் மாறுபட்ட ஒரு மனிதராக அவர் இருக்கிறார். ஆற்றல் பற்றாக்குறையாக இருக்கிறது என்பதல்ல; மற்றவருக்கான இயக்கம் என்பது இருப்பதில்லை என்பதே.

அந்த புதியவரிடம் நான் பேசிக்கொண்டிருந்தபோது, ''இல்லை'' என்ற தலையசைப்பு அவர் முகத்தில் எழுதி ஒட்டப்பட்டிருப்பதை என்னால் பார்க்க முடிந்தது. ஒரு வார்த்தைகூட அவர் பேசவில்லை. ஆனால் ''இதை என்னால் ஏற்க முடியாது'' என அவர் கூறிக் கொண் டிருப்பதை நான் அறிகிறேன். பின்னும் அவர் சொன்னார், ''ஆனால் உண்ணாநோன்பில் நம்பிக்கை உள்ளவன் நான்; உண்ணாநோன்பை நம்புவதால்தான் இங்கே நான் வந்திருக்கிறேன். நீங்கள் என்னதான் கூறினாலும் அதற்கு இசைவாக என்னால் உணர முடியவில்லை'' என்றார்.

உங்களால் கவனிக்க முடியாது; ஏனெனில் நினைவு இருக்கிறது. நினைவின் காரணத்தால் உங்களால் பார்க்க முடிவதில்லை. நினைவு இருப்பதால் உலகின் மெய்யான இருப்பை உங்களால் பார்க்க முடிவதில்லை. நினைவு உள்ளே வந்து விடுகிறது - உங்கள் கடந்த காலம், உங்கள் அறிவு, உங்கள் கல்வி, உங்கள் அனுபவங்கள் இவை எல்லாம் யதார்த்தத்தை திரித்து விடுகின்றன. உலகம் மாயமானது அல்ல; ஆனால் நீங்கள் பெயர்த்துரைக்கும் விதத்தில் ஒரு மாயா உலகிலேயே நீங்கள் வாழ்கிறீர்கள். இதை நினைவில் கொள்ளுங்கள்.

உலகே மாயை, அது ஒரு பொய்த்தோற்றம் என்கிறார்கள் இந்துக்கள். இப்படி அவர்கள் கூறும்போது, வெளியில் இருக்கும் உலகைப்பற்றி அவர்கள் குறிப்பிடுவதில்லை. உங்களுக்குள் இருக்கும் உலகையே, உங்கள் பெயர்ப்புரைகளின் உலகையே அவர்கள் குறிப்பிடுகிறார்கள். மெய்நடப்பு உலகம் பொய்யானது அல்ல. பிரம்மமே அதுதான். அதுதான் மிக உயர்ந்த யதார்த்தம். ஆனால் உங்கள் மனதாலும் நினைவாலும் நீங்கள் உருவாக்கி இருக்கின்ற உலகமே, காற்றுமண்டலம் போல் உங்களை சுற்றிலும் அதுவே சூழ்ந்திருக்கிறது. அதிலேயே நீங்கள் வாழ்கிறீர்கள்.. அதனுடனேயும் அதனுள்ளேயுமே நீங்கள் இயங்குகிறீர்கள். எங்கெங்கு நீங்கள் சென்றாலும் உங்களைச் சூழவும் அதை நீங்கள் எடுத்துக் செல்கிறீர்கள். அதுவே உங்களின் சுற்றுச்சூழலாக இருக்கிறது. அதனூடாகவே உலகை நீங்கள் பார்க்கிறீர்கள். அந்நிலையில் நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் எதுவும் ஒரு மெய்விவரமாக இருப்பதில்லை; உங்களின் பெயர்ப் புரையாகவே இருக்கிறது.

**பதஞ்சலி கூறுகிறார்:**

> **நினைவு சுத்தப்படுத்தப்பட்டதும், பொருள்களின் மெய் இயல்பை தடையின்றி பார்க்க மனதால் இயன்றதும் நிர்விதர்க்க சமாதி கைகூடுகிறது.**

பெயர்ப்புரையே தடையாக இருக்கிறது. பெயர்த்துரை; யதார்த்தம் காணாமல் போய்விடுகிறது. பெயர்த்துரைக்காமல் பார்; அங்கே யதார்த்தம் இருக்கிறது. எப்போதுமே அது அங்கேதான் இருக்கிறது. ஒவ்வொரு கணமும் யதார்த்தம் இங்குதான் இருக்கிறது. அது எப்படி அது இங்கில்லாமல் இருக்க முடியும்? நிசத்தில் இருப்பது என்பது தான் யதார்த்தம் என்பதன் பொருள். ஒரே ஒரு கணத்துக்குக்கூட அதன் நிலையில் இருந்து அது மாறி இருக்கவில்லை. நீங்கள்தான் உங்கள் வியாக்கியானங்களில் வாழ்கிறீர்கள்; உங்கள் சொந்த உலகம் ஒன்றை உருவாக்குகிறீர்கள். யதார்த்தம் பொதுவானது; மாயையோ தனிநபர் சார்ந்தது.

இந்த கதையை நீங்கள் கேள்விப்பட்டிருக்கக்கூடும். மிகப்பழைய - பழமையான இந்திய கதை: ஐந்து குருடர்கள் ஒரு யானையை பார்க்க வந்தார்கள். ஒருநாளும் அவர்கள் ஒரு யானையை பார்த்திருந்ததில்லை. அந்த நகருக்கே அது முற்றிலும் புதிது. அவர்கள் நாட்டின் அந்தப் பகுதியில் யானைகளே கிடையாது. அவர்கள் எல்லாரும் யானையை தொட்டுப் பார்த்தார்கள். ஆளுக்கொரு பக்கம் தொட்டு உணர்ந்தார்கள். தாம் உணர்ந்த மாதிரியெல்லாம் அதை அவர்கள் பெயர்த்துரைத்தார்கள். தம் அனுபவத்தின் வழியாக அதை அவர்கள் விளக்கினார்கள். ஒருவன் ''யானை என்பது ஒரு தூணை போன்றது'' என்றான். ஏனென்றால் அவன் தொட்டது யானையின் கால்களை - அப்படியால் அவன் சொன்னது சரிதானே! மேலும் அவன் தானே தன் சொந்த கைகளால் தொட்டுப் பார்த்தான். அப்போது அவனுக்கு தூண்களின் நினைவு தான் வந்தது. அவையும் தூண்களை போலதானே உள்ளன. இதே மாதிரியே அவர்கள் யாவரும் பெயர்த்துரைத்தார்கள்.

அமெரிக்காவில் ஓர் ஆரம்பப் பள்ளியில் நடந்தது இது: இந்த கதையை ஒரு ஆசிரியை தன் மாணவ மாணவிகளுக்கு கூறினார். ஆனால் யானையைத் தொட்டுப் பார்த்த ஐவரும் பார்வையற்றவர்கள் என்பதைஅவர்களிடம் அவர் தெரிவிக்கவில்லை. மேலும் இந்த கதை நன்கு தெரிந்த ஒரு கதைதான், எனவே குழந்தைகள் புரிந்திருப்பார்கள் என அந்த ஆசிரியை எதிர்பார்த்தார். பிறகு அவர் கேட்டார், ''சரி, இப்போது சொல்லுங்கள், யானையைப் பார்க்க வந்த அந்த ஐந்து பேரும் யார்?'' ஒரு சிறுவன் கைதூக்கி சொன்னான், ''நிபுணர்கள்.''

நிபுணர்கள் எப்போதும் குருடர்களாகவே இருக்கிறார்கள். அந்த மாணவன் உண்மையான ஓர் கண்டுபிடிப்பை செய்துவிட்டான். முழுகதையின் சாரமுமே கூட அதுதான். உண்மையாகவே அவர்கள் நிபுணர்களாகவே இருந்தார்கள். ஏனெனில் மிக சிறியதைப் பற்றி மிக அதிகமாக அறிந்திரக்கிறவனே வல்லுநன் எனப்படுகிறான். அதிக மதிகம் குறுக்கி குறுக்கி குறுக்கிப் பார்ப்பவனே வல்லுநன் ஆகிறான்; மீத முழு உலகத்துக்கும் ஏறக்குறைய ஒரு குருடனாகவே அவர் ஆகிவிடுகிறான். ஒருகுறிப்பிட்ட திசையில் மட்டுமே அவன் கண்களோடு இருக்கிறான். மற்ற திசைகளில் அவன் குருடனாகவே இருக்கிறான். அவனது பார்வை மென்மேலும் குறுகிகுறுகி குறுகி செல்கிறது. எவ்வளவு பெரிய வல்லுநரோ அவ்வளவு அதிக குறுகலாக இருக்கிறது பார்வை. மிகப் பெரிய வல்லுநர் என்பவர் முழுக் குருடனாகத்தான் இருக்கவேண்டும். மென்மேலும் குறைவான விசயத்தைப் பற்றி மென்மேலும் அதிகமாக அறிந்திருப்பவரையே ஒரு வல்லுநர் என்கிறார்கள்.

சில நூற்றாண்டுகளுக்கு முன்பும் சிறப்பு மருத்துவர்கள் இருந் தார்கள். ஆனால் அவர்களுக்கு உடலைப்பற்றிய அனைத்தும் தெரிந்திருந்தது. வல்லுநர்கள் என்பவர்கள் அன்று இல்லை. இன்றோ உங்கள் இதயத்தில் ஏதாவது கோளாறு என்றால் அதற்கான ஒரு சிறப்பு மருத்துவரிடம் நீங்கள் போகிறீர்கள். உங்கள் பல்லில் ஏதாவது குறை பாடு என்றால் இன்னொரு சிறப்பு மருத்துவரிடம் போகிறீர்கள். இதுபற்றியும் ஒரு கதை கேள்விப்பட்டேன்: ஒருவன் ஒரு மருத்துவ ரிடம் போனான். ''நான் மிகுந்த சிரமத்தில் இருக்கிறேன். என்னால் சரியாக பார்க்க முடியவில்லை. எல்லாமே ஒரே மங்கலாக தெரிகிறது'' என்றான். மருத்துவர் சொன்னாராம், ''முதலில் இதைச் சொல்லு, உனக்கு எந்த கண்ணில் கோளாறு என்பதைச் சொல்லு, ஏனென்றால் நான் வலது கண்ணுக்கு மட்டுமே வல்லுநன். உன் இடது கண்ணில் தான் கோளாறு என்றால் நேர் எதிரே இருக்கிற அந்த வல்லுநரிடம் போ'' என்று. விரைவிலேயே இடதுகண் நிபுணர்கள், வலதுகண் நிபுணர்கள் என்ற பிரிவினை ஏற்படலாம். அப்படித்தான் அது ஆகும். ஏனென் றால் நிபுணத்துவம் என்பதே தொடர்ச்சியாக குறுகி குறுகி குறுகிக் கொண்டு போவதுதான். எல்லா வல்லுநர்களும் குருடர்களாகவே இருக்கிறார்கள். மேலும் அனுபவம் உங்களை ஒரு வல்லுநராகவே ஆக்குகிறது.

யதார்த்தத்தை / மெய்மையை அறிய நீங்கள் ஒரு நிபுணராக இருக்க வேண்டியதில்லை. யதார்த்தத்தை அறிய நீங்கள் குறுகிய - தனிப்பட்ட பார்வை கொண்டவர்களாக இருக்க வேண்டியதில்லை. யதார்த்தத்துடன்

இசைந்திருக்க வேண்டுமானால் உங்கள் அறிவு அனைத்தையும் நீங்கள் கைவிட்டாக வேண்டும், ஒதுக்கிவிட வேண்டும்; ஒரு குழந்தையின் கண்களுடன் யதார்த்தத்தைப் பார்க்க வேண்டும் — ஒரு நிபுணரி கண்களுடன் பார்க்கக் கூடாது. ஏனெனில் நிபுணரின் கண்கள் எப் போதும் குருடாகவே இருக்கின்றன. ஒரு குழந்தைக்கு மட்டுமே மெய்யான கண்கள் உள்ளன: அகன்று விரிந்த பார்வை, ஒன்றையும் ஒதுக்காமல் பார்க்கும் பார்வை, எல்லா திசைகளிலும் எல்லா இடங்களையும் சுற்றிப் பார்க்கிற பார்வை குழந்தையிடமே உள்ளது. ஏனெனில் அதற்கு எதுவும் தெரியாது. எல்லா நேரத்திலும் எல்லா புறங்களிலும் அது இயங்கிக் கொண்டிருக்கிறது. ஒன்றை நீங்கள் அறிகிற அக்கணமே அவ்விடத்தில் நீங்கள் சிக்குண்டு விடுகிறீர்கள். மறுபடியும் ஒரு குழந்தையாக ஆக உங்களால் முடிந்தால் - எவ்வித தடையும், பெயர்ப்புரையும், அறிவும், அனுபவமும், நிபுணத்துவமும் இன்றி யதார்த்தத்தை பார்க்க உங்களால் முடிந்தால் - **நிர்விதர்க்க சமாதி** கைகூடுகிறது என்கிறார் பதஞ்சலி. ஏனெனில் பெயர்ப்புரை ஏதும் இல்லாத போது நினைவு சுத்தப்படுத்தப்படுகிறது; பொருள் களின் உண்மைத்தன்மையை மனத்தால் காண இயல்கிறது.

**சமாதி**யை பல படிகளாக பிரிக்கிறார் பதஞ்சலி. முதலில் அவர் **சவிதர்க்க சமாதி** பற்றி பேசுகிறார். அதன் பொருள் பகுத்தாய்தலோடு கூடிய **சமாதி** என்பதாகும். இன்னமும் நீங்கள் ஒரு பகுத்தாயும் ஆளாகவே — தர்க்க ரீதியானவராகவே இருக்கிறீர்கள். பின் இரண் டாவது **சமாதி**யை **நிர்விதர்க்க சமாதி** என அழைக்கிறார்; அதாவது பகுத்தாய்தலற்ற **சமாதி**. இப்போது நீங்கள் யதார்த்தம் பற்றி வாதிட்டுக் கொண்டு இருப்பதில்லை; உங்கள் அறிவைக் கொண்டு யதார்த்தத்தை நீங்கள் பார்த்துக்கொண்டு கூட இருப்பதில்லை; யதார்த்தத்தை வெறுமனே பார்த்துக் கொண்டு இருக்கிறீர்கள் நீங்கள்.

தர்க்கம் - பகுத்தாய்வு — மூலம் யதார்த்தத்தைப் பார்க்கிறவன் யதார்த்தத்தை ஒருபோதும் பார்ப்பதில்லை. யதார்த்தத்தின்மீது தன் சொந்த மனத்தையே அவன் திணிக்கிறான் / திரையிடுகிறான். தன்னையே திரையிடுவதற்கு அவனுக்கு யதார்த்தமானது ஒரு திரை யாக பயன்படுகிறது. மேலும் எதையெல்லாம் நீங்கள் திரையிடுகிறீர் களோ அதையெல்லாம்தான் அங்கே நீங்கள் காண்பீர்கள். முதலில் அதை நீங்கள் அங்கு வைக்கிறீர்கள்; பின் அதை அங்கு நீங்கள் காண்கிறீர்கள். இது ஒரு ஏமாற்றுதான். ஏனென்றால் அதை அங்கு வைப்பதே நீங்கள்தான்; பின் அதையே அங்கு நீங்கள் காண்கிறீர்கள். அங்கேயே உள்ளது அல்ல அது.

''என் மனைவிதான் உலகிலேயே மிக அழகான பெண்மணி'' என்று ஒரு தடவை என்னிடம் கூறினார் முல்லா நசுருதீன். நான் அவரிடம் கேட்டேன், ''முல்லா, உங்களுக்கு இது தெரிய வந்தது எப்படி?'' அவர் சொன்னார், ''எப்படியா? ரொம்ப எளிது. என் மனைவியே என்னிடம் சொன்னாள்!'' இப்படித்தான். மனதில் நடப்பது இதுதான். யதார்த்தத்தின் மீது ஒன்றை நீங்கள் ஏற்றுகிறீர்கள்; பின்னர் அதையே அங்கிருந்து கண்டெடுக்கிறீர்கள். இதுவே **சவிதர்க்க** மனதின் பான்மை. **நிர்விகல்ப** மனம் - **நிர்விதர்க்க** மனம் எதையும் வைப்பதில்லை. நிலைமை எதுவாயினும் அதை அப்படியே காண்கிறது அது.

எப்போது பார்த்தாலும் ஏன் எதையாவது, உங்கள் மனத்தி லிருந்து யதார்த்தத்தின்மீது சுமத்திக்கொண்டே போகிறீர்கள்? ஏனென் றால் யதார்த்தம் குறித்து நீங்கள் பயப்படுகிறீர்கள். யதார்த்தம் பற்றிய ஓர் ஆழமான அச்சம் இருக்கிறது. யதார்த்தம் உங்களுக்கு பிடித்த தாக இல்லை என்பதால் இந்த அச்சம் இருக்கலாம்; அது உங்களுக்கு – உங்கள் மனத்துக்கு எதிரானதாக இருக்கிறது என்பதால் இருக்கலாம். ஏனென்றால் யதார்த்தம் யதார்த்தமாக இருக்கிறது. நீங்கள்தான் தேவையில்லாமல் துன்புறுகிறீர்கள். அங்கே ஒரு கதவு இருக்கிறது என எண்ணுகிறீர்கள்; ஆனால் அங்கே கதவு இல்லை. சுவர்தான் இருக் கிறது. அதன் வழியாக வெளியேற முயல்கிறீர்கள். அதனால் துன்புறு கிறீர்கள். அதன்பின் நீங்கள் திகைக்கிறீர்கள்.

யதார்த்தத்தை நீங்கள் பார்க்காத வரை நீங்கள் இருக்கும் சிறையிலிருந்து வெளியேறும் வாயிலை ஒருபோதும் உங்களால் கண்டு கொள்ள முடியாது. கதவு இருக்கிறது. ஆனால் நீங்கள் விரும்பும் இடத்தில் அது இருக்க முடியாது. கதவு இருக்கவே செய்கிறது. உங்கள் ஆசைகளை நீங்கள் விட்டுவிட்டால் உங்களால் அதை காண முடியும். ஆனால் சிக்கல் இதுதான்: உங்கள் விருப்பத்தின்படியே பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். தொடர்ந்து வெறுமனே நம்பிக்கொண்டும் உருவேற்றிக்கொண்டும் போகிறீர்கள். ஒவ்வொரு தடவையும் ஒரு நம்பிக்கை தகர்கிறது, ஒரு உருவேற்றம் கலைகிறது. பல தடவைகள் இது நிகழும்; ஏனென்றால் உங்கள் பகல் கனவுகளை எல்லாம் யதார்த்தத்தால் நிறைவேற்ற முடியாது. ஒரு கனவு தகர்க்கப்படும் போதெல்லாம் - ஒரு வானவில்த் தோற்றம் வீழ்ச்சியுறும் போதெல்லாம் - ஒரு ஆசை மடியும் போதெல்லாம் - நீங்கள் துன்புறுகிறீர்கள். ஆனால் உடனடியாகவே இன்னொரு ஆசையை உருவாக்கத் தொடங்கிவிடுகிறீர்கள். உங்கள் விருப்பங்களாலான இன்னொரு வானவில்லை கட்டியெழுப்ப தொடங்கி விடுகிறீர்கள். மறுபடியும், உங்களுக்கும் யதார்த்தத்துக்கும் இடையில் ஒரு புதிய வானவில் பாலத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

வானவில் பாலத்தின்மேல் எவராலும் நடக்க முடியாது. அது ஒரு பாலம்போல தோன்றுகிறது; ஆனால் அது ஒரு பாலம் அல்ல. உண்மையில் வானவில் என்றே ஒன்று இல்லை. அது ஒரு தோற்றம் மட்டுமே. அந்த இடத்துக்கு நீங்கள் போனால் அங்கு எந்த வானவில்லையும் நீங்கள் காணமாட்டீர்கள். அது ஒரு கனவு போன்ற நிகழ்வு. ''இனிமுதல் எவ்வித திரையீடுகளுக்கும் பெயர்ப்புரைகளுக்கும் இடம் தரமாட்டேன். இனி முதல் உண்மை நிலை எதுவாக இருந்தாலும் அதை அப்படியே சந்திக்க ஆயத்தமாயிருக்கிறேன்'' என்ற புரிதலை வந்தடைவதில் தான் முதிர்ச்சி இருக்கிறது.

இந்த யுகத்தின் மிகக் கூர்மையான அறிவாளிகளில் ஒருவரான விட்ஜென்ஸ்ட்டீன் ட்ராக்ட்டாட்டஸ் என்ற தன் அளவுகடந்த மதிப்புமிக்க நூலை, பின்வரும் வாசகத்துடன் தொடங்குகிறார்: ''உண்மையாக உள்ளது எல்லாம்தான் உலகம். அதைச் சூழ்ந்து நீங்கள் கனவு கண்டு கொண்டே போகமுடியும்; அது உதவாது. கனவு காண்பதை நிறுத்தி விட்டு பாருங்கள்: உண்மையாக உள்ளது எல்லாம்தான் உலகம்.'' உண்மையில் அங்கு இல்லாத எதையாவது பார்க்கும் முயற்சியில் உங்கள் வாழ்க்கை, நேரம், ஆற்றல் ஆகியவற்றை தேவையின்றி வீணாக்காதீர்கள். கனவு காண்பதை நிறுத்துங்கள்: யதார்த்தத்தை நோக்குங்கள்.

இதுதான் நிர்விதர்க்க சமாதி அதாவது பகுத்தாய்தலற்ற சமாதி என்பதன் பொருள். அது ஒரு வெறும் பார்வை - சுத்தமான பார்வை. அதைக்குறித்து நீங்கள் பகுத்தாய்வதில்லை. வெறுமனே அதை நீங்கள் பார்க்கிறீர்கள். அதன்மேல் நீங்கள் எதுவும் செய்வதில்லை. அங்கே உள்ளபடி அது இருக்கவும் உங்களை அது ஊடுருவவும் பேசாமல் அனுமதிக்கிறீர்கள். சவிதர்க்க சமாதியில் யதார்த்தத்தை நீங்கள் ஊடுருவ முயல்கிறீர்கள்; நிர்விதர்க்க சமாதியில் யதார்த்தம் உங்களை ஊடுருவ விடுக்கிறீர்கள். சவிதர்க்க சமாதியில் யதார்த்தம் உங்களுக்கு ஏற்ப இருக்க முயல்கிறீர்கள்; நிர்விதர்க்க சமாதியில் நீங்கள் யதார்த் தத்துக்கு இசைவாக இருக்க முயல்கிறீர்கள்.

**சவிதர்க்க நிர்விதர்க்க சமாதிகளுக்கு தரப்படும் விளக்கங்கள், சமாதியின் அதிஉயர்நிலைகளையும் விளக்குகின்றன. ஆனால் சவிசார, நிர்விசார சமாதிகளின் இந்த அதிஉயர் நிலைகளில், தியானிக்கப்படும் பொருள்கள் அதிக நுண்மையானவையாக உள்ளன.**

அடுத்ததாக சவிசாரம், நிர்விசாரம் என்னும் வேறு இரு சொற்களை கொண்டுவருகிறார் பதஞ்சலி. சவிசாரம் என்றால் ஆராய்ச்சிச்

சிந்தனையுடன் என்று பொருள். **நிர்விசாரம்** என்றால் ஆராய்ச்சிச் சிந்தனையற்று என்று பொருள். **சவிதர்க்கம், நிர்விதர்க்கம்** என அவர் அழைக்கும் அதே நிகழ்வின் உயர் நிலைகள் இவை. **சவிதர்க்க சமாதியைக்** கடைப்பிடித்தால் அது **சவிசாரமாக** ஆகும்.

தர்க்கரீதியாக நீங்கள் எண்ணினால், எண்ணிக்கொண்டே இருந்தால், தொடர்ந்து எண்ணிக்கொண்டே போனால் அதற்கு ஒரு எல்லை வருகிறது. தர்க்கம் எல்லையற்றது அல்ல. வரம்பற்றதாக அது இருக்க முடியாது. உண்மையில் முடிவற்றவை அனைத்தையும் தர்க்கம் மறுக்கிறது. தர்க்கம் எப்போதும் ஓர் எல்லைக்குள்ளேயே நிகழ்கிறது. அப்போது மட்டுமே அது தர்க்க ரீதியானதாகவே இருக்கமுடியும். ஏனெனில் எல்லையற்றதுடன் அதர்க்கமும் நுழைந்து விடுகிறது; எல்லையற்றதுடன் புதிரான தன்மை புகுந்து விடுகிறது; எல்லையற்றதுடன் அற்புதம் நுழைந்து விடுகிறது. அதன் நுழைவுடன் பண்டோராவின் (துயர) பெட்டி திறந்துகொள்கிறது. எனவேதான் தர்க்கம் ஒரு போதும் எல்லையற்றதைப் பற்றி பேசுவதில்லை. ஒவ்வொன்றும் எல்லையுடையது, வரையறுக்கப்பட முடிவது என்கிறது தர்க்கம். எல்லாமே எல்லைகளுக்குள்ளேயே இருக்கிறது, (எனவே) அவற்றை புரிந்துகொள்ள முடியும் என்கிறது தர்க்கம் எல்லையற்றதைக் குறித்து எப்போதுமே அச்சப்படுகிறது தர்க்கம். அது ஒரு பரந்த இருள்வெளி போல அதற்கு தெரிகிறது. அதற்குள் நுழைவதற்கே நடுங்குகிறது தர்கம். எபோதுமே நெடுஞ்சாலையோடு நின்றுகொள்கிறது அது; ஒருபோதும் இயற்கை சூழலுக்குள் அது புகுவதில்லை. நெடுஞ்சாலையில் எல்லாமே பாதுகாப்பாக இருக்கிறது. நெடுஞ்சாலையில் நீங்கள் எங்கே போய்க்கொண்டிருக்கிறீர்கள் என்பது உங்களுக்கு தெரிகிறது; அதிலிருந்து ஒருமுறை விலகி அக சூழலுக்குள் இறங்கிவிட்டால் பின் எங்கே போய்க்கொண்டிருக்கிறீர்கள் என்பதை உங்களால் அறிய முடிவதில்லை. தர்க்கத்துக்கு மிக ஆழமான ஒரு பயம் இருக்கிறது.

என்னைக் கேட்டால் தர்க்கம் மிகப்பெரிய ஒரு கோழை என்பேன். துணிச்சல்காரர்கள் எப்போதுமே தர்க்கத்தை கடந்து அப்பால் செல்கிறார்கள். கோழைகள் எப்போதும் தர்க்கத்தின் வரம்புகளுக் குள்ளேயே நின்று கொள்கிறார்கள். தர்க்கம் ஒரு சிறை. அழகாக அலங் கரிக்கப்பட்டுள்ளது. ஆனாலும் அது பரந்த வான்வெளியைப் போல இல்லை. வானம் அலங்கரிக்கப்பட்டே இல்லை. அது அலங்கரிக்கப் படாமல் இருக்கிறது. ஆனால் அது பரந்து விரிந்தது. அது விடுதலை. ஆயின் விடுதலைக்கு அதற்கே உரிய அழகு உள்ளது. அலங்காரங்கள் அதற்கு தேவையில்லை. வானம் தன்னளவிலேயே நிறைவானது. அதற்கு வண்ணம்பூச எந்த வண்ணகாரரும் தேவையில்லை. அதை

அலங்கரிக்க எந்த அலங்காரரும் அவசியமில்லை. அதன் பரந்த தன்மையேதான் அதன் அழகே. ஆனால் பரந்த தன்மை என்பது அச்சுறுத்தலானதும் ஆகும். ஏனெனில் அது மிகவும் பரந்து விரிந் துள்ளது. அதன்முன் மனம் அப்படியே திக்குமுக்காடுகிறது; மனம் மிக அற்பமாக தோன்றுகிறது; அதன்முன் அகங்காரம் உடைந்து நொறுங்கிப் போகிறது. எனவேதான் தர்க்கத்தாலான ஒரு அழகான கோட்டையை மனம் உருவாக்குகிறது. எல்லாமே தெள்ளத் தெளிவாக உள்ள - எல்லாமே அறியப்பட்டவையாக உள்ள - அனுபவத்துக்கு உட்பட்டதாக உள்ள வரையறைகளை மனம் உருவாக்குகிறது. அறியப்பட்டவற்றோடு தன் கதவுகளை சாத்திக் கொள்கிறது. தன்னால் ஆன ஒரு உலகை - தனி உலகை - தனிமைப்பட்ட உலகை படைக்கிறது. அந்த உலகோ முழுமையின் உலகு அல்ல; அதிலிருந்து பிரிந்திருக்கிற உலகு; முழுமையுடனான அனைத்து உறவுகளையும் இழந்திருக்கிற உலகு.

எனவேதான் தர்க்கம் ஒருபோதும் எவரையும் இறைமைக்கு இட்டுச் செல்லாது. ஏனெனில் தர்க்கம் மனிதருடையது. இறைமையுட னான தொடர்புகள் அனைத்தையும் அது துண்டித்திருக்கிறது. இறை மையோ இயற்கையுடையது. புதிரானதும் மகத்தானதும் ஆகும் அது; தீர்வுகாண முடியாத மாபெரும் புதிர் அது. உங்களால் விடுவிக்க முடிகிற விடுகதை அல்ல அது. அது ஒரு புதிர். அதன் தன்மையே அதற்கு தீர்வு காண முடியாததாக இருக்கிறது. ஆனால் தர்க்க ரீதியான சிந்தனையை நீங்கள் நீட்டித்துக் கொண்டே போனால் தர்க்கத்தின் எல்லையை நீங்கள் அடையும் ஒரு கட்டம் வருகிறது. அதற்கு மேலும் மேலும் நீங்கள் எண்ணிக்கொண்டே போனால் அப்போதுதான் தர்க்கபூர்வ சிந்தனை, உணர்வுபூர்வ சிந்தனையாக - விசாரமாக - மாறுகிறது.

தர்க்கரீதி சிந்தனை என்பது முதல் படி. அதில் நீங்கள் தொடர்ந்தால் உணர்வுரீதி சிந்தனை என்பது அதன் கடைசி படியாக இருக்கும். ஒரு தத்துவர் தொடர்ந்து போனால், போய்க்கொண்டே இருந்தால், எங்கும் மாட்டி நின்றுவிடாமல் இருந்தால், என்றாவது ஒருநாள் அவர் ஒரு கவிஞராவது உறுதி. ஏனெனில் எல்லாம் கடக்கப்பட்டதும் திடீரென அங்கு கவிதை இருக்கிறது. கவிதை என்பது உணர்வுரீதி சிந்தனை - அதாவது விசாரம்.

இதை இப்படி யோசித்துப் பாருங்கள்: தர்க்கரீதிதத்துவர் ஒருவர் ஒரு தோட்டத்தில் உட்கார்ந்துகொண்டு ஒரு ரோசா மலரை பார்த்துக் கொண்டிருக்கிறார். அதை அவர் பெயர்த்துரைக்கிறார், வகைப்படுத்து கிறார். இந்த ரோசா எந்த இனத்தை சேர்ந்தது, எங்கிருந்து அது வந்தது,

அதன் உடல்கூறுத் தன்மை, அதன் வேதித்தன்மை ஆகியவற்றை அவர் அறிகிறார். எல்லாவற்றையும் தர்க்க ரீதியாக அவர் சிந்திக்கிறார். அதை அவர் வகைப்படுத்துகிறார், வரையறுக்கிறார்; அதை அவர் சுற்றி சுற்றி ஆராய்கிறார். உண்மையில் அந்த ரோசாவை ஒருபோதும் அவர் தொடுவதே இல்லை. வெறுமனே அதை சுற்றி சுற்றி சுற்றி சுற்றி வளைய வருகிறார்; சுற்றி வளைக்கிறார்; நேரடியாக அந்த பூவை தொடாமலே விடுகிறார்.

ஏனெனில் தர்க்கத்தால் ஒரு ரோசாவை தொட முடியாது. அதை அதனால் பிய்க்க முடியும், தனித்தனி டப்பிகளில் அடைக்க முடியும், வகை பிரிக்க முடியும், பெயர் எழுதி ஒட்ட முடியும் - ஆனால் அதை அதனால் நெருங்க முடியாது. தன்ன தர்க்கம் நெருங்குவதை ரோசாவும் அனுமதிக்காது. எனவே தர்க்கம் அதை விரும்பினாலும் அது நடக்க முடியாது. தர்க்கத்துக்கு இதயமில்லை. ஆனால் இதயத்தால் மட்டும்தான் ரோசாவை நெருங்கி தொடமுடியும். தர்க்கம் வெறும் தலை சமாச்சாரம். தலையால் ரோசாவை தீண்ட முடியாது. தன் புதிர் தலையிடம் வெளிப்படுவதை ரோசாவும் அனுமதிக்காது. ஏனெனில் தலை என்பது ஒரு கற்பழிப்பை ஒத்ததுதான். ஆயின் ரோசாவோ காதலுக்கு மட்டுமே தன்னை திறந்துகாட்டுகிறது; கற்பழிப்புக்கு அல்ல.

அறிவியல் அத்துமீறுவது; கவிதையோ காதலானது. எவராவது ஐன்ஸ்டீனைப் போல தொடர்ந்து போனால் பின் அந்த தத்துவர் அல்லது அறிவியலார் அல்லது தர்க்கர் ஒரு கவிஞராகி இருப்பார். தன் கடைசி நாட்களில் ஐன்ஸ்டீன் ஒரு கவிஞராக ஆனார். தன் கடைசி நாட்களில் எடிங்டன் ஒரு கவிஞராக ஆனார். அவர்கள் புதிரைப்பற்றிப் பேசத் தொடங்கினார்கள். தர்க்கத்தின் எல்லையை தொட்டுவிட்டிருந்தார்கள் அவர்கள். எல்லையின் கடைசிவரை போயிருக்காதவர்களே - தம் தர்க்கப் பகுப்பாய்வின் இறுதிவரை சென்றிருக்காதவர்களே - எப்போதும் தர்க்கத்தோடு நின்றுகொள்கிறவர்களாக இருக்கிறார்கள். உண்மையில் அவர்கள் தர்க்கரீதியானவர்களே அல்ல. உண்மையாகவே அவர்கள் தொடர்ந்து சென்றால், பின் கண்டிப்பாக தர்க்கம் முடிந்து கவிதை தொடங்கும் ஒரு கட்டம் வந்தே தீரும்.

விசாரம் என்றால் உணர்வுரீதி சிந்தனை. ஒரு கவிஞர் என்ன செய்கிறார்? அவர் உணர்வுரீதியாக சிந்திக்கிறார். மலரை வெறுமனே பார்க்கிறார் அவர். அதைப்பற்றி எண்ணுவதில்லை அவர். இதுதான் வேறுபாடு - இது மிக நுட்பமானது: தர்க்கர் பூவைப்பற்றி சிந்திக்கிறார், கவிஞர் பூவை சிந்திக்கிறார்; அதைப் ''பற்றி'' அல்ல. மேலும் (பூவைப்) ''பற்றியது'' பூ ஆகாது. அதைப்பற்றி நீங்கள் பேசிக்கொண்டே

இருக்கலாம், அனால் அந்த பேச்சு, பூ ஆகாது. தர்க்கர் சுற்றி சுற்றி வருகிறார். கவிஞர் நேராக சென்று மலரின் யதார்த்தத்தையே தொடு கிறார். ஒரு கவிஞருக்கு ஒரு ரோசா என்பது ரோசாவேதான். ரோசா என்றால் அதைப்பற்றிய செய்தி அல்ல. உள்நோக்கி இயங்குகிறார் அவர்; மலருக்குள்ளேயே போகிறார். இப்போது நினைவு அங்கு கொண்டுவரப் படுவதில்லை. மனம் தள்ளி வைக்கப்படுகிறது; ஒரு நேரடித் தொடர்பு உண்டாகிறது.

அதே நிகழ்வின் அதிஉயர் நிலை இது. அதே நிகழ்வுதான்; ஆனால் அதன் தன்மை, சுத்திகரிக்கப்பட்டதாக ஆகியிருக்கிறது.

எனவேதான் பதஞ்சலி கூறுகிறார்,

> **சவிதர்க்க, நிர்விதர்க்க சமாதிகளுக்குத் தரப்படும் விளக்கங்கள், சமாதியின் அதிஉயர் நிலைகளையும் விளக்குகின்றன. ஆனால் சவிசார, நிர்விசார சமாதிகளின் இந்த அதி உயர் நிலைகளில், தியானிக்கப்படும் பொருள்கள் அதிக நுண்மையானவையாக உள்ளன.**

சவிசாரத்தில், கவிஞர் (சவிசாரத்தில் நுழையும் எவரும் ஒரு கவியாக ஆகிறார்) பூவை சிந்திக்கிறார்; பூவைப்பற்றி அல்ல. மாறாக உடனடியாகவும் நேரடியாகவும் சிந்திக்கிறார். இருந்தாலும் அங்கு பிரிவினை இருக்கிறது. பூவிலிருந்து வேறுபட்டவராகவே கவிஞர் இருக்கிறார். கவிஞர் அகப்பொருளாக இருக்கிறார்; பூ புறப்பொருளாக இருக்கிறது - இருமை நிலவுகிறது. இருமை கடக்கப்படவில்லை. கவிஞர் மலராகி இருக்கவில்லை; மலர் கவிஞராகி இருக்கவில்லை. பார்ப்பவர் பார்ப்பவராகவே இருக்கிறார்; பார்க்கப்படுவது இன்னமும் பார்க்கப்படுவதாகவே இருக்கிறது. பார்ப்பவர் பார்க்கப்படுவதாக ஆகியிருக்கவில்லை; பார்க்கப்படுவது பார்ப்பவராக ஆகியிருக்க வில்லை - இருமை நிலவுகிறது.

சவிசார சமாதியில் தர்க்கம் கைவிடப்பட்டிருக்கிறது; ஆனால் இருமை கைவிடப்பட்டிருக்கவில்லை. நிர்விசார சமாதியில் இருமையும் கைவிடப்படுகிறது. ஒருவர் பூவை வெறுமனே பார்க்கிறார். தன்னைப் பற்றி சிந்திப்பதில்லை, பூவைப்பற்றியும் சிந்திப்பதில்லை; சிந்திப்பதே இல்லை - அதுதான் நிர்விசாரம்: அதாவது சிந்தியாதிருத்தல்; சிந்தனை கடந்த நிலை. ஒருவர் வெறுமனே பூவுடன் இருக்கிறார். அதைப்பற்றி சிந்திப்பதும் இல்லை, அதை சிந்திப்பதும் இல்லை - தர்க்கரைப் போலவும் சிந்திப்பதில்லை, கவிஞரைப் போலவும் சிந்திப்பதில்லை.

இப்போது வருகிறார் மறைஞானி; சாது. இவர் வெறுமனே பூவுடன் இருக்கிறார். அவர் சும்மா சிந்திக்கிறார் என்றோ பற்றி சிந்திக்கி

றார் என்றோ நீங்கள் சொல்ல முடியாது. இல்லை; அவர் வெறுமனே உடனிருக்கிறார். பூ அங்கிருப்பதை அவர் அனுமதிக்கிறார்; தான் அங்கிருப்பதையும் அனுமதிக்கிறார். அனுமதிக்கும் அந்த கணத்தில் திடீரென ஒரு ஒருமை வருகிறது; பூ இனியும் பூவாகவே இருப்பதில்லை; பார்ப்பவர் இனியும் பார்ப்பவராகவே இருப்பதில்லை. ஆற்றல்கள் திடீரென சந்தித்து கலந்து ஒன்றாகின்றன. இப்போது இருமை கடக்கப்படுகிறது. பூ யார், பார்த்துக்கொண்டிருப்பது யார் என்பதை சாது அறிவதில்லை. ஞானியிடம்/சாதுவிடம் நீங்கள் கேட்டால் அவர் கூறுவார், ''எனக்கு தெரியாது. பூ என்னை கவனித்துக் கொண்டிருக்கலாம். நான் பூவை கவனித்துக் கொண்டிருக்கலாம். மாறக்கூடியது இது.'' அவர் கூறுவார்,' சார்பு நிலையுடையது இது. சில நேரங்களில் நானும் இருப்பதில்லை, பூவும் இருப்பதில்லை. இரண்டும் மறைந்துவிடுகின்றன. ஒன்றுபட்ட ஒரே ஆற்றல் மட்டுமே எஞ்சுகிறது. நான் பூவாகிறேன்; பூ நானாகிறது.'' இதுதான் நிர்விசார நிலை. சிந்தனை நிலை அல்ல, இருத்தல் நிலை.

**சவிதர்க்கம்** என்பது முதல்படி. **நிர்விதர்க்கம்** என்பது அதே வழியில் கடைசிபடி. **சவிசாரம்** முதல்படி. அதே வழியில் **நிர்விசாரம்** கடைசிபடி. இவை இரண்டு தளங்கள். ஆனால் ஒரே விளக்கமே பொருந்தும் என்கிறார் பதஞ்சலி. இதுவரையான மிக உயர்ந்தது **நிர்விசார**மாக இருக்கிறது.

மேலும் உயர்ந்த நிலைகளுக்கும் பதஞ்சலி வருவார்; ஏனெனில் மேலும் சில செய்திகள் விளக்கப்பட வேண்டி இருக்கின்றன. மிக மெதுவாகவே அவர் போகிறார். ஏனெனில் மிக வேகமாக அவர் போனால் உங்களால் புரிந்துகொள்ள - பின் தொடர முடியாமல் போகும். ஒவ்வொரு அடிவைப்பிலும் அதிகமதிக ஆழத்துக்கு போய்க் கொண்டிருக்கிறார் அவர். பையப்பைய - படிப்படியாக எல்லையற்ற பெருங்கடலுக்கு உங்களை அவர் இட்டுச் சென்று கொண்டிருக்கிறார். திடீர் ஞானோதயத்தில் அவருக்கு நம்பிக்கை இல்லை. படிப்படியான முறையைத்தான் அவர் நம்புகிறார். எனவேதான் அவருடைய கவர்ச்சி மிகப் பெரிதாயிருக்கிறது.

திடீர் ஞானநிலைபேற்றைப்பற்றிப் பேசியுள்ள பலர் இருந்திருக்கிறார்கள்; ஆனால் பொதுமக்களை அவர்கள் கவர்ந்ததில்லை. ஏனென்றால் திடீர் ஞானோதயம் சாத்தியமே என்பது அறவே நம்பமுடியாததாக இருக்கிறது. திலோபா பேசலாம். ஆனால் விசயம் அதல்ல - திலோபா கூறுவது அல்ல. விசயம் இதுதான்: யாராவது அதை புரிந்து கொள்வார்களா? இதனால்தான் பல திலோபாக்கள் காணாமல் போயிருக்கிறார்கள். பதஞ்சலியின் வசீகரமோ தொடர்கிறது. ஏனெனில் திலோபா போன்ற காட்டுப்பூக்களை யாராலும் புரிந்துகொள்ள

முடியாது. அத்துவானத் திலிருந்து திடுமென முளைக்கிறார்கள் அவர்கள். முளைத்து, ''நீங்களும் திடுமென எங்களைப்போல் ஆக முடியும்'' என்கிறார்கள். இது விளங்கிக் கொள்ளவே முடியாததாக இருக்கிறது. அவர்களின் காந்தம் போன்ற ஆளுமையால் அவர்கள் கூறுவதை நீங்கள் கேட்டுக் கொள்ளலாம்; ஆனால் அவர்களை உங்களால் நம்ப முடியாது. அவர்களை விட்டு செல்லும் அக்கணமே நீங்கள் கூறுவீர்கள், ''என் சக்திக்கு மீறிய ஏதோ ஒன்றை இந்த ஆள் சொல்லிக் கொண்டிருக்கிறான். எனக்கு அது எட்டவில்லை'' என்பீர்கள்.

திலோபாக்கள் வாழ்ந்திருக்கிறார்கள், பேசியிருக்கிறார்கள், முயன்றிருக்கிறார்கள். ஆனால் அவர்களால் பலருக்கும் உதவ முடிந்ததில்லை. அரிதாகவே யாராவது அவர்களை புரிந்து கொண்டார்கள். எனவேதான் ஒரு சீடரை கண்டுபிடிக்கவே திலோபா திபெத்துக்கு போக வேண்டி இருந்தது. இவ்வளவு பரந்த நாடு; ஆனால் இங்கே அவரால் ஒரே ஒரு சீடரைக்கூட கண்டு பிடிக்க முடியவில்லை. அவ்வாறே போதி தர்மரும் ஒரு சிடரைக் கண்டுபிடிக்க சீனாவுக்குப் போக வேண்டி இருந்தது. பழைமை வாய்ந்த இந்த நாட்டில் - ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஆன்மீக பரிமாணத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் நாட்லடி ஒரே ஒரு சீடரை கண்டுபிடிக்கவும் அவரால் முடியவில்லை. ஆம்; ஒரு சீடரை கண்டுபிடிப்பதுகூட திலோபாவுக்குக் கடினம்தான்; போதி தர்மருக்கு கடினம்தான்.

திலோபாவை புரிந்துகொள்ள முடிகிற ஒருவரை கண்டுபிடிப்பது கடினம்தான். ஏனென்றால் இலக்கு குறித்தே பேசுகிறார் அவர். ''பாதை என்பதில்லை; முறை ஒன்றும் இல்லை'' என்கிறார் அவர். மலை உச்சியில் நின்றுகொண்டு அவர் ''இதற்கு பாதை கிடையாது'' என்கிறார் நீங்களோ பள்ளத்தாக்கில் - இருட்டில், சகதியில், உங்கள் அவலத்தில் - நின்று கொண்டிருக்கிறீர்கள். திலோபாவைப் பார்த்து நீங்கள், ''இருக்கலாம்... ஆனால், மேலே வருவது எப்படி?''என்கிறீர்கள். எப்படி? ''எப்படி?'' என்று கேட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்.

வழிமுறை இல்லை என மக்களிடம் சொல்லிக் கொண்டே போகிறார் கிருஷ்ணமூர்த்தி. ஆனாலும் ஒவ்வொரு சொற்பொழிவுக்குப் பிறகும் ''வேறு எப்படி? பின் எப்படி அடைவது?''என மக்கள் கேட்கிறார்கள். அதை அவர் உடனே புறக்கணித்து விடுகிறார். பதிலாக கோபப்படுகிறார்: ''வழிமுறை எதுவும் இல்லை என்று சொல்லி இருக்கிறேன்; எனவே எப்படி என்று கேட்காதீர்கள். ஏனெனில் எப்படி என்பது மறுபடியும் வழிமுறையை கேட்பதே ஆகும்'' என்கிறார்.

மேலும் இப்படி கேட்கும் ஆட்கள் புதிதாக வந்தவர்களும் அல்லர் கிருஷ்ணமூர்த்தியிடம் போகும் ஆட்கள் 30,40 ஆண்டுகளாகவே அவரிடம் போய்க் கொண்டிருக்கும் ஆட்கள்தான். அவருடைய சொற்பொழிவுகளில் மிக வயதான பழங்காலத்து ஆசாமிகளையே நீங்கள் பார்ப்பீர்கள். அவர்கள் அவர் பேச்சை தொடர்ச்சியாக கேட்டு வந்திருக்கிறார்கள்; மத உணர்வுடன் அவரை அவர்கள் கவனிக் கிறார்கள். எப்போதும் அவர்கள் வருகிறார்கள், கவனிக்கிறார்கள். ஆண்டுதோறும், ஆண்டுதோறும், ஆண்டுதோறும் ஏறக்குறைய அதே முகங்களையே நீங்கள் பார்ப்பீர்கள். அவர்களும் தம் பள்ளத்தாக்கு களில் இருந்து திரும்பத் திரும்ப ''எப்படி?'' என்றே கேட்கிறார்கள். கிருஷ்ணமூர்த்தியும் தன் தோள்களைக் குலுக்கிக்கொண்டு ''எப்படி என்பது இல்லை. நீங்கள் புரிந்துகொண்டால் அடைந்து கொள் கிறீர்கள் - அவ்வளவே. இதற்கு பாதை இல்லை'' என்றே கூறுகிறார்.

திலோபா, போதிதர்மர், கிருஷ்ணமூர்த்தி - இவர்கள் வருவார்கள், போவார்கள். இவர்களால் அதிக பலன் இல்லை. இவர்கள் பேசுவதை கவனிக்கும் மக்கள், இவர்கள் பேசுவதை கவனிப்பதில் இன்பம் காண்கிறார்கள்; அறிவுரீதியான ஏதோ ஒரு புரிதலுக்கும் வந்து சேர் கிறார்கள் – ஆனாலும் பள்ளத்தாக்கிலேயே கிடக்கிறார்கள். கிருஷ்ண மூர்த்தியை கவனிக்கிற பலபேரை நான் சந்தித்திருக்கிறேன். ஆனால் அவரை கவனித்ததன்மூலம் தன் பள்ளத்திலிருந்து மேலே வந்த ஒரே ஒரு ஆளைக்கூட இதுவரை நான் பார்த்ததில்லை. அவர்கள் பள்ளத் திலேயே கிடக்கிறார்கள். ஆனால் கிருஷ்ணமூர்த்தி போலவே பேசத் தொடங்கிவிடுகிறார்கள், அவ்வளவு தான். ''வேறு வழியில்லை, பாதையில்லை'' என மற்றவர்களிடம் சொல்லத் தொடங்கி விடு கிறார்கள்; சொல்லிக்கொண்டு தம் பள்ளத்தாக்கிலேயே தொடர்ந்து இருக்கிறார்கள்.

மிகப்பெரிய - ஒப்பிட முடியாத உதவியாக இருந்துவருகிறார் பதஞ்சலி. அவருடைய உதவியால் கோடிக்கணக்கானோர் இந்த உல கத்தின் வழியாக கடந்து போயிருக்கிறார்கள். ஏனென்றால் தன் புரிதல் நிலையிலிருந்து அவர் பேசுவதில்லை; உங்களுடன் சேர்ந்து அவர் இயங்குகிறார். உங்கள் புரிதல் வளர வளர அவர் மேலும் மேலும் மேலும் ஆழமாகப் போகிறார். பதஞ்சலி சீடரை பின்பற்றுகிறார்; திலோபா தன்னை சீடர் பின்பற்றுவதை விரும்புவார். பதஞ்சலி உங்களிடத்துக்கு வருகிறார்; திலோபா நீங்கள் அவரிடம் போக வேண்டும் என விரும்புவார். ஆனால் பதஞ்சலி உங்கள் கையைப் பிடித்து சாத்தியமான மிக உயர்ந்த சிகரத்துக்கு பையப்பைய உங்களை கூட்டிச் செல்கிறார். அதே சிகரத்தைப் பற்றித்தான் திலோபா பேசு

கிறார்; ஆனால் அவரால் கூட்டிச்செல்ல முடிவதில்லை. ஏனென்றால் ஒருபோதும் அவர் உங்களின் பள்ளத்தாக்குக்கு இறங்கி வர மாட்டார். தன் மலை உச்சியிலேயே அவர் இருந்துகொள்வார். அங்கிருந்து கத்திக்கொண்டே இருப்பார். உண்மையைச் சொன்னால் நிறைய பேருக்கு அவர் எரிச்சலையே ஏற்படுத்துவார். ஏனென்றால் கத்துவதை அவர் நிறுத்த மாட்டார். உச்சியிலிருந்து ஓயாமல் கத்திக்கொண்டே இருப்பார்: ''இது நடைபெறக்கூடியதே! ஆனால் இதற்கு வழி கிடையாது, முறை கிடையாது. அப்படியே நீங்கள் வரமுடியும். இது தானே நிகழ்வது; நீங்கள் செய்ய முடிவதல்ல'' – எரிச்சலூட்டுகிறார் அவர்.

முறை ஒன்று இல்லாதபோது மக்கள் எரிச்சல் அடைகிறார்கள். அவர் கத்துவதை அவர்கள் விரும்பமாட்டார்கள்; நிறுத்துவதையே விரும்புவார்கள். ஏனெனில் வழி இல்லை என்றால் பின் எப்படி பள்ளத்திலிருந்து சிகரத்துக்கு போவது? உளறிக்கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். ஆனால் பதஞ்சலியோ மிகவும் அர்த்தமானவர், மிகவும் ஆரோக்கியமானவர். படிப்படியாய் நடத்துகிறார் அவர். நீங்கள் இருக்கும் இடத்திலிருந்து உங்களை கூட்டிச் செல்கிறார். பள்ளத் தாக்குக்கே வருகிறார். உங்கள் கையைப் பிடித்து ''ஒவ்வொரு அடியாக எடுத்துவை'' என்கிறார்.

''ஒரு பாதை இருக்கிறது, அதில் போக முறைகள் இருக்கின்றன'' என்கிறார் பதஞ்சலி. மேலும் உண்மையாகவே மிகமிக அறிவானவர் அவர் மெல்லமெல்ல கடைசியில் முறையை கைவிடவும் பாதையை கைவிடவும் ஏனெனில் அப்படி ஒன்றுமில்லை அவர் உங்களை இணங்கச் செய்வார்; ஆனால் அது கடைசியில்தான் – சிகரத்தின் அருகில்தான் – நீங்கள் அடையப்போகிற – தருணத்தில்தான். அந் நிலையில் பதஞ்சலியே உங்களை விட்டு நீங்கினாலும் உங்களுக்கு எந்த சிக்கலும் ஏற்படுவதில்லை; நீங்களாகவே அடைந்து விடுவீர்கள். கடைசி நிமிசத்தில் அவர் பொருளற்றவர் ஆகிறார். அதுவரை அவர் பொருளுடையவரே. மேலும் வழிமுழுவதிலும் அவர் மிகுந்த பொருளுடையவராகவே இருந்திருக் கிறார். எந்த அளவுக்கு எனில் பொருத்தமற்றவர் ஆகிறபோதும் அவர் பொருந்தவே செய்கிறார். அந் நிலையிலும் அவர் மிகுந்த பொருளுடையவராகவே தோன்றுகிறார். ஏனெனில் பதஞ்சலியைப் போன்ற ஒரு மனிதர் பொருளற்றுப் பேச முடியாது. அவர் நம்பகமானவர்.

**சவிதர்க்க, நிர்விதர்க்க சமாதிகளுக்குத் தரப்படும் விளக்கங்கள், சமாதியின் அதிஉயர் நிலைகளையும் விளக்குகின்றன. ஆனால் சவிசார, நிர்விசார சமாதிகளின் இந்த அதிஉயர் நிலைகளில், தியானிக்கப்படும் பொருள்கள் அதிக நுண்மையானவையாக உள்ளன.**

பையப்பைய, தியானிக்கப்படும் பொருள் அதிமதிக நுண்மை யானதாக ஆக்கப்பட வேண்டியிருக்கிறது. எடுத்துக்காட்டாக ஒரு கல்லின்மீது நீங்கள் தியானிக்க முடியும் அல்லது ஒரு மலரின்மீது நீங்கள் தியானிக்க முடியும். அல்லது மலரின் மணத்தை நீங்கள் தியானிக்க முடியும். அல்லது தியானிப்பவரை நீங்கள் தியானிக்க முடியும். அப்போது பொருள்கள் மேலும் மேலும் மேலும் நுண்மை யாகிச் செல்கின்றன. காட்டாக, ஓம் எனும் ஒலியின்மீது நீங்கள் தியானிக்க முடியும். முதல் தியானத்தில் அதை உரக்க சொல்கிறீர்கள் - உங்களைச் சுற்றிலும் அது எதிரொலிக்கிறது. உங்களைச் சூழவும் ஒரு ஒலிக் கோயிலாக அது மாறுகிறது. **ஓம் - ஓம் - ஓம்** என. உங்களைச் சுற்றிலும் பருண்மையான அதிர்வுகளை உருவாக்குகிறீர்கள். இது முதல் படி. பின் நீங்கள் உங்கள் வாயை மூடிக் கொள்கிறீர்கள். இப்போது அதை நீங்கள் உரத்து சொல்வதில்லை. உள்ளுக்குள்ளேயே **ஓம் - ஓம் - ஓம்** என சொல்கிறீர்கள்; உதடுகள் அசைய அனுமதிக்கப் படுவதில்லை; நாக்கும் கூட. நாவும் உதடுகளும் இல்லாமலே ஓம் எனச் சொல்கிறீர்கள். இப்போது ஒரு உள் சூழலை - **ஓம்** எனும் உள் நிலவரத்தை உருவாக்குகிறீர்கள். (தியானிக்கப்படும்) பொருள் நுட்பமானதாக ஆகியுள்ளது. பின் மூன்றாவது கட்ட நடவடிக்கை: மனதால் கூட அதை நீங்கள் உச்சரிப்பது இல்லை; அதை வெறுமனே நீங்கள் செவிமடுக்கி றீர்கள். இடத்தை மாற்றுகிறீர்கள். செய்பவர் என்ற நிலையிலிருந்து கவனிப்பவர் என்ற செயப்பாட்டு நிலைக்கு மாறுகிறீர்கள். மூன்றாவது நிலையில் **ஓம்** என்பதை உள்ளுக்குள் கூட நீங்கள் உச்சரிப்பதில்லை. சும்மா அமர்ந்து அவ்ஒலியைக் கேட்கிறீர்கள். உள்ளே அது இருப்பதால் அங்கிருந்து அது வருகிறது. நீங்கள் அமைதியாக இல்லை, எனவே தான் அதை உங்களால் கேட்க முடிவதில்லை.

**ஓம்** என்பது மனிதர்களின் எந்த மொழியிலும் உள்ள சொல் அல்ல; எந்த பொருளையும் அது குறிப்பதில்லை. எனவேதான் இந்துக் கள் வழக்கமான அகரவரிசையில் அதை சேர்த்து எழுதுவதில்லை. மாறாக அதை தனித்து குறித்து காட்டுவதற்காகவே அதற்கொரு சிறப்பு வடிவத்தை அவர்கள் உருவாக்கி இருக்கிறார்கள் - இது நெடுங் கணக்கின் ஒரு பகுதி அல்ல என காட்ட. அது தானே தனித்து நிலவு கிறது; எதையும் அது குறிப்பதில்லை. மனித மொழியைச் சேர்ந்த ஒரு சொல் அல்ல அது. இருத்தலினுடையவே ஒலி அது. எல்லாமே அமைதியாக இருக்கிறபோது கேட்கப்படுகிற ஒலி அது. எனவே அதை கேட்பவராக நீங்கள் ஆகிறீர்கள். அது தொடர்கிறது; மென்மேலும் நுண்மையாகிச் செல்கிறது. அடுத்து நான்காம் நிலையில் எல்லா வற்றையும் அப்படியே மறந்துவிடுகிறீர்கள்: செய்பவர், கேட்பவர், ஒலி - எல்லாவற்றையும். நான்காம் நிலையில் ஒன்றுமில்லை.

எருது மேய்ப்பதை சித்தரிக்கும் பத்துப் படங்களை ஸென்னில் நீங்கள் பார்த்திருக்க முடியும். முதல் படத்தில் ஒரு மனிதன் தன் எருதை தேடிக்கொண்டிருக்கிறான் - அடர்ந்த காட்டுக்குள் எருது எங்கேயோ போய் விட்டிருக்கிறது. எந்த தடயமும் இல்லை, காலடி தடங்களும் இல்லை. சுற்றி எங்கு பார்த்தாலும் வெறும் மரங்கள் மரங்கள் மரங்கள் தான். இரண்டாவது படத்தில் அவன் மகிழ்ச்சியாக காணப்படுகிறான் - காலடி தடங்கள் கிடைத்திருக்கின்றன. மூன்றாவதில் அவன் சிறிது திகைத்து குழம்பி காணப்படுகிறான் - எருதின் பின்புறம் மட்டுமே ஒரு மரத்தின் அருகில் தெரிகிறது; ஆனாலும் பிரித்தறிய கடினமாகவே உள்ளது. காடு அடர்ந்து வனமாக உள்ளது. ஒருவேளை எருதின் பின்பக்கத்தை அவன் பார்ப்பது வெறும் கற்பனை மயக்கமாகவே இருக்கக்கூடும். தன் விருப்பத்தை அவன் வெளியில் ஏற்றிப் பார்த் திருக்கலாம். அடுத்து நான்காவது. வாலைப் பிடித்திருக்கிறான். ஐந்தா வதில் சாட்டை கொண்டு கட்டுப்படுத்தி இருக்கிறான். இப்போது காளை அவனது கட்டுக்குள் வந்திருக்கிறது. ஆறாவதில் எருதின்மேல் சவாரிசெய்து கொண்டிருக்கிறான். எருதின்மேல் சவாரி செய்தபடி ஒரு புல்லாங்குழலுடன் ஒரு பாட்டை பாடிக்கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருக்கிறான். ஏழாவதில் எருது கொட்டிலில் இருக்கிறது; அவன் வீட்டில் இருக்கிறான் - மகிழ்ச்சியாக. எருது கண்டுபிடிக்கப் பட்டுவிட்டது. எட்டாவதில் ஒன்றுமில்லை. எருது கண்டடையப் பட்டுவிட்டது. எருதும் அதை தேடியவனும், தேடியவனும், தேடப்பட்ட பொருளும் இரண்டுமே மறைந்துவிட்டிருக்கிறது. தேடல் நிறைவுற்றது.

பண்டை நாள்களில் இந்த எட்டு படங்களே இருந்தன. அதுவே ஒரு முழுமையான தொகுப்பாக இருந்தது. வெறுமையே இறுதியாக இருந்தது. ஆனால் பின் ஒரு பெரும் குரு மேலும் இரு படங்களை சேர்த் தார். ஒன்பதாவதில் - அந்த மனிதன் திரும்பி வருகிறான், திரும்பவும் இருக்கிறான். பத்தாவதில் - அந்த மனிதன் திரும்பி வந்திருப்பது மட்டுமல்ல, சில பொருள்களை வாங்க சந்தைக்கு போயிருக்கிறான்; பொருள்கள் மட்டுமல்ல, ஒரு மதுக்குப்பியையும் ஏந்தியிருக்கிறான்! உண்மையிலேயே அழகானது இது; இதுவே நிறைவானது. வெறுமை யுடன் அது முடிந்தால் ஏதோ ஒன்று குறைவுபடுகிறது. மனிதன் திரும்ப வருகிறான்; திரும்ப வருவது மட்டுமல்ல, சந்தையிலும் இருக்கிறான்; சந்தையில் இருப்பது மட்டுமல்ல, ஒரு மதுக்குப்பியையும் வாங்கி இருக்கிறான்.

முழுமை என்பது மென்மேலும், மென்மேலும் நுட்பமாகி, நுட்ப மாகி செல்கிறது. அது மிக செம்மையாக – மிக நுட்பமாக ஆகி இருப்ப தாக நீங்கள் உணரும் ஒரு கட்டம் வருகிறது. எல்லாமே வெறுமையாக ஆகி எந்த படமும் இல்லாத போது, தேடுவதும் தேடப்படுவதும் -

இரண்டுமே மறைந்திருக்கின்றன. ஆனால் உண்மையில் இதுவும் முடிவல்ல. இன்னும் கூடுதலான ஒரு நுட்பம் இருக்கிறது. அந்த மனிதன் முற்றிலும் புது மனிதனாக மாறி ஊருக்குத் திரும்புகிறான். இனியும் அந்த பழைய ஆள் அல்ல அவன்; புது பிறவி. நீங்கள் புதிதாய் பிறக்கும்போது, உலகமும் பழைய உலகாக இருப்பதில்லை. மது இனி மதுவல்ல; நஞ்சும் இனி நஞ்சல்ல. சந்தை இனி சந்தையல்ல. இப்போது எல்லாமே ஏற்கப்படுகிறது. இது அழகானது. இப்போது அவன் கொண்டாடிக் கொண்டிருக்கிறான். அதன் அடையாளமே மது.

மேலும் மேலும் நுண்மையாக ஆகிறது தேடல். மேலும் மேலும் வன்மையாக ஆகிறது விழிப்புணர்வு. மேலும், விழிப்புணர்வு மிக வன்மையாக ஆகி இந்த உலகில் நீங்கள் ஒரு சாமானியப் பிறவியாக - அச்சமின்றி வாழ முடிகிற ஒரு கணமும் வருகிறது. ஆனால் பதஞ்சலி யுடன் சேர்ந்து படிப்படியாக இயங்குங்கள். தியானத்தின் பொருள்கள் மென்மேலும் நுண்மையாகின்றன.

**இந்த அதிநுண் பொருள்களுடன் தொடர்புடைய சமாதியின் பரப்பானது நுண் ஆற்றல்களின் உருவற்ற நிலைவரை விரிகிறது.**

இதுவே எட்டாவது சித்திரம். இந்த அதிநுண் பொருள்களுடன் தொடர்புடைய சமாதியின் பரப்பு அதிகமதிகம் நுண்மையாக ஆகிறது. இந்நிலையில் உருவம் மறைந்து அது உருவற்றதாகும் ஒரு கணம் வருகிறது.

**...நுண் ஆற்றல்களின் உருவற்ற நிலைவரை விரிகிறது.**

ஆற்றல்கள் அதிக நுட்பமானவை; அவற்றை ஒரு சித்திரமாக நீங்கள் தீட்ட முடியாது; அவற்றை ஒரு சிற்பமாக நீங்கள் செதுக்க முடியாது. வெறுமையால் மட்டுமே அவற்றை காட்ட முடியும். சூனியம் - அதுவே எட்டாவது சித்திரம். மீதி இரண்டு படங்களும் இவற்றுடன் எப்படி சேர்கின்றன என்பதை போகப் போக நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

பதஞ்சலி - இவரை நான் ஆன்மீக உலகின் அறிவியலாளர் என அழைக்கிறேன்; மறைஞானத்தின் கணிதமேதை என அழைக்கிறேன்; அதர்க்க இயலின் தர்க்கவாதி என அழைக்கிறேன். எதிர்மறைகள் இரண்டும் சந்திக்கின்றன அவரில். ஒரு அறிவியலார் பதஞ்சலியின் யோக சூத்திரங்களை வாசித்தால் உடனடியாக அவர் விளங்கிக் கொள்வார். விட்ஜென்ஸ்டீனைப் போன்ற, ஒரு தர்க்க மனம், பதஞ்சலியிடம் உடனடியாக ஒரு நெருக்க உணர்வு கொள்ளும். முற்றிலும் தர்க்கரீதி

யானவர் அவர். மேலும், அதர்க்கத்தை நோக்கி அவர் உங்களை அழைத்துச் செல்கிறார் என்றால் அதையும் தர்க்கரீதியான படிநிலைகள் வழியாகவே செயல்படுத்துகிறார் - எப்போது அவர் தர்க்கத்தை கைவிட்டுவிட்டார், அதைக் கடந்து உங்களை கூட்டிச் செல்கிறார் என்பதை ஒருபோதும் நீங்கள் அறியமுடியாதபடி அழைத்துச் செல்கிறார். ஒரு தத்துவர் போலவே - சிந்தனையாளர் போலவே அவர் செயல்படுகிறார். மிக நுட்பமான பாகுபாடுகளை செய்கிறார். எனவே, நிர் விசாரத்துக்குள் - உணர்வுள்ள சிந்தனையைக் கடந்த நிலைக்குள் உங்களை அவர் கூட்டிச் செல்லும் கணத்தில் பாய்ச்சல் எப்போது நிகழ்ந்தது என்பதை உங்களால் கவனித்துக் குறித்துக் கொள்ள முடியாமல் போகும். பாய்ச்சலையே பல சிறு சிறு கட்டங்களாக அவர் பிரித்திருக்கிறார். பதஞ்சலியில் ஒருபோதும் உங்களுக்கு பயம் தோன்றாது. ஏனெனில் எந்த இடத்தில் நீங்கள் பயப்படுவீர்கள் என்பதை அவர் அறிந்திருக்கிறார். முன்னேற்றத்தை மென்மேலும் சிறிய பகுதிகளாக அவர் பிரிக்கிறார். ஏறக்குறைய கிடைமட்டதளத்தில் நீங்கள் இயங்குவது போலவே தெரியுமளவுக்கு செய்துவிடுவார். அவர் உங்களை மெதுவாகவே அழைத்துச் செல்வதால் பாய்ச்சல் எப்போது நிகழ்ந்தது, எல்லையை எப்போது தாண்டினீர்கள் என்பதையே உங்களால் அவதாணிக்க முடியாது. மேலும் அவர் ஒரு கவிஞரும் கூட; ஒரு ஞானியும் ஆவார் — மிக அபூர்வமான ஒரு கலவை இது. திலோபா போன்ற மறைஞானிகள் இருக்கிறார்கள்; உபநிடத ரிசிகள் போன்ற பெரும் கவிஞர்கள் இருக்கிறார்கள்; அரிஸ்டாட்டில் போன்ற பெரும் தர்க்கர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒரு பதஞ்சலியை நீங்கள் கண்டுபிடிக்க முடியாது. எத்தகைய சேர்க்கை அவர் என்றால், அவருக்குப் பின் அவரோடு ஒப்பிட முடியக்கூடிய ஒருவர்கூட வந்ததில்லை. ஒரு கவிஞராக இருப்பது மிக எளிது. ஏனெனில் அது ஒரு பகுதி மட்டுமே. ஒரு தர்க்கராக இருப்பதும் மிக எளிது. ஏனெனில் அதுவும் ஒரு பகுதி மட்டுமே. ஒரு பதஞ்சலியாக இருப்பது ஏறக்குறைய அசாத்தியம். ஏனெனில் பல்வேறு எதிர்மறைகளை நீங்கள் உள்வாங்குகிறீர்கள். அதுவும் அவ்வளவு அழகான ஒரு ஒத்திசைவுடன், அவை அனைத்தையும் அவர் இணைக்கிறார். எனவேதான் யோக மரபு முழுவதன் முதலும் முடிவுமாக அவரே ஆகியிருக்கிறார்.

உண்மையில் யோகத்தை கண்டுபிடித்தவர் அவர் அல்லர். அவரைவிட தொன்மையானது யோகம். பதஞ்சலிக்கு முன்பே பல நூற்றாண்டுகளாக யோகம் இருந்து வந்திருந்தது. அதை கண்டுபிடித்தவர் அவர் அல்லர். ஆனால் அவரே ஏறக்குறைய அதன் கண்டுபிடிப்பாளரும் நிறுவனருமாக ஆகியிருக்கிறார். இது ஏனென்றால் அவரது இந்த அபூர்வ ஆளுமை சேர்க்கையினாலேயேதான். அவருக்கு முன்பே பலர்

செயல்பட்டிருக்கிறார்கள்; ஏறக்குறைய எல்லாமே அறியப்பட்டும் இருந்தது. ஆனாலும் யோகமானது ஒரு பதஞ்சலிக்காக காத்துக் கொண்டிருந்தது. அப்போது திடீரென அதுபற்றி பதஞ்சலி பேசியதும் எல்லாமே ஒரு வரிசையில் பொருந்தியது. அவர் அதன் நிறுவனர் ஆனார். அதை நிறுவியவர் அவர் அல்லர். ஆனால் அவரது ஆளுமை, எதிர்மறைகளின் அப்பேர்ப்பட்ட ஒரு சேர்க்கையாக இருந்ததால், கிர கித்துக் கொள்ள முடியாத விதமான கூறுகளையும் தனக்குள் அவர் கிரகித்துக் கொண்டதால், அவர் நிறுவனர் ஆனார் – ஏறக்குறைய அவரே அதனை நிறுவியவராக ஆனார். இனி எப்போதும் யோகம் பதஞ்சலியுடன் சேர்த்தே அறியப்படும். பதஞ்சலிக்குப் பிறகும் பலர் செயல்பட்டிருக்கிறார்கள்; யோக உலகின் புதிய பல பிரதேசங்களை சென்றடைந்திருக்கிறார்கள். ஆனாலும் பதஞ்சலியே ஒரு எவரெஸ் டாக ஓங்கி நிற்கிறார். எவராவது என்றாவது பதஞ்சலியைவிட உயர்ந்து விளங்க முடியும் என்பது ஏறக்குறைய நடைபெற முடியாத தாகவே தோன்றுகிறது - பெரும்பாலும் வாய்ப்பில்லை. இந்த அரிய சேர்க்கை அசாத்தியமானது. ஒரு தர்க்கராயும் இருந்து ஒரு கவிஞராயும் இருந்து ஒரு ஞானியாயும் இருப்பது – அதுவும் சமானிய தரத்தில் அல்ல என்பது... நீங்கள் ஒரு தர்க்கராக - பெரிய தர்க்கராக - அதே நேரத்தில் மிக சாதாரண கவியாக இருக்க முடியும் – இது சாத்தியம். நீங்கள் ஒரு மகா கவியாகவும் மிக சாமானிய - நாலாம் தர - தர்க்கராகவும் இருக்க முடியும் - இது இயலும். இது மிகவும் கடினமானதல்ல, பதஞ்சலியோ ஒரு தர்க்க மேதை, கவிதா மேதை, மறைஞான மேதை. அரிஸ்டாட்டில், காளிதாசன், திலோபா மூவரையும் உருட்டித் திரட்டிய ஒருவரே பதஞ்சலி எனவேதான் இந்தளவு சிறப்பு.

முடிந்தவரை ஆழமாக பதஞ்சலியை புரிந்து கொள்ள முயலுங்கள் - ஏனெனில் உங்களுக்கு அவர் உதவமுடியும். ஸென் ஆசான்கள் அவ்வளவாக உதவமாட்டார்கள். அவர்களை நீங்கள் ரசிக்கலாம் – அழகான நிகழ்வுகள் அவர்கள். அவர்களை நீங்கள் வியக்கலாம் – அதிசயத்தால் நீங்கள் நிரப்பப்பட முடியும். ஆனால் அவர்கள் உங்க ளுக்கு உதவமாட்டார்கள். அரிதாகவே உங்களில் எவரேனும் துணிச்சல்கொண்டு பாதாளத்துக்குள் பாய முடியும். பதஞ்சலி நிறைய உதவுவார். உங்கள் இருப்பின் அடித்தளமாகவே அவர் ஆக முடியும். உங்களை அவர் வழிநடத்த முடியும் - பையப்பைய. வேறு எவரையும் விட அதிகமாக அவர் உங்களைப் புரிந்துகொள்கிறார். உங்களை அவர் பார்க்கிறார். உங்களில் கடைசியானவர்கூட புரிந்துகொள்ள முடிகிற மொழி நடையில் உங்களுடன் பேச அவர் முயல்கிறார். அவர் ஒரு ஆசான் மட்டுமல்லர்; அவர் ஒரு சிறந்த ஆசிரியரும் ஆவார்.

ஒரு வகுப்பிலுள்ள முன்னணி மாணவர்கள் ஒரு சிலரால் மட்டும் - முன்பெஞ்சுக்காரர்களால் மட்டும் - ஐம்பது பேருள்ள வகுப்பில் நாலைந்து பேரால் மட்டும் புரிந்துகொள்ள முடிகிற ஆசிரியர் சிறந்த ஆசிரியர் அல்ல என்பதை கல்வியாளர்கள் அறிவார்கள். அவர் ஒரு சிறந்த ஆசிரியர் அல்ல. கடைசி பெஞ்சுக்காரர்கள் கூட புரிந்துகொள்ள முடிகிற ஒருவரே சிறந்த ஆசிரியர். பதஞ்சலி ஒரு ஆசான் மட்டுமல்லர்; அவர் ஒரு ஆசிரியரும் ஆவார். கிருஷ்ணமூர்த்தி ஒரு ஆசான். திலோபா ஒரு ஆசான். ஆனால் ஆசிரியர்கள் அல்லர். முன்னணியில் இருப்போரால் மட்டுமே அவர்களைப் புரிந்துகொள்ள முடியும். சிக்கல் என்னவென்றால் முன்னணி மாணவர்களுக்கு புரிந்துகொள்ள தேவை இருப்பதில்லை. அவர்கள் தாமாகவே முன்னேற முடியும். கிருஷ்ணமூர்த்தியின் உதவி இல்லாமலேகூட அவர்கள் பெருங்கடலுக்குள் பாய்வார்கள்; அக்கரையை சேர்வார்கள் - ஒரு சில நாள்கள் முந்தும்/பிந்தும், அவ்வளவுதான். கடைசி பெஞ்சுக்காரர்கள் தான் தாமாக செயல்பட முடியாதவர்கள். அவர்களுக்கானவர் பதஞ்சலி. மிகவும் கீழ்நிலையில் இருந்து அவர் தொடங்குகிறார். மிகவும் உயர்ந்த நிலையில் சேர்க்கிறார். அவரது உதவி அனைவருக்கு மானது; தேர்ந்தெடுக்கப்பட்ட சிலருக்கானவர் அல்லர் அவர்.

○

# 6. அவசர மனம்

*முதல் கேள்வி:*

*பதஞ்சலியைக் குறித்து நீங்கள் பேசும்போது அவரே எனக்கான பாதை என உணர்கிறேன். ஸென்னைக் குறித்து நீங்கள் பேசும்போது அதுவே எனக்காக பாதையாகத் தெரிகிறது. தந்த்ரா குறித்து நீங்கள் பேசும்போது அதுவே எனக்கான பாதையாக இருக்கிறது. அப்படியானால் எனக்கான பாதைதான் எது என்பதை எவ்வாறு நான் அறிந்து கொள்வது?*

அது மிகவும் எளிது: பதஞ்சலியைக் குறித்து நான் பேசும்போது பதஞ்சலியே உனக்கான பாதை என நீ உணர்ந்தால், ஸென்னைக் குறித்து நான் பேசும்போது ஸென்னே உனக்கான பாதை என நீ உணர்ந்தால், தந்திரத்தைப் பற்றி நான் பேசும்போது தந்திரமே உனக்கான பாதை என நீ உணர்ந்தால் பிறகு பிரச்சனையே இல்லை – நானே உனக்கான பாதை!

**இரண்டாவது கேள்வி:**

**சமாதியின் எல்லா நிலைகளின் ஊடாகவும் ஒரு சாதகர் கடந்து செல்வது இன்றியமையாததா? அவற்றில் ஒரு சிலவற்றைக் கொண்டே கடந்துவிட ஒரு குருவின் அருகில் இருப்பது உதவமுடியுமா?**

இல்லை, அது இன்றியமையாதது அல்ல. எல்லா நிலைகளையும் பதஞ்சலி ஏன் விவரித்திருக்கிறார் என்றால் அந்த நிலைமைகள் எல்லாம் சாத்தியமாகக் கூடியவை என்பதால்தான்; அவை இன்றியமையாதவை என்பதால் அல்ல. அவற்றில் பலவற்றை தவிர்த்துவிட்டு நீங்கள் தாண்டிப் போக முடியும். முதல் நிலையிலிருந்து (நேராக) இறுதி நிலைக்கே நீங்கள் போய்விடவும்கூட முடியும். இடையிலுள்ள மொத்த பாதையையும் முற்றிலுமாக தவிர்த்துவிடவும் முடியும். உங்களைப் பொறுத்தது அது. உங்கள் தீவிரம், உங்கள் உணர்ச்சிகரமான தேடல், உங்கள் முழு ஈடுபாடு ஆகியவற்றைப் பொறுத்தது அது. வேகம் உங்களையே பொறுத்தது.

திடீர் ஞானோதயம் அடைவதும்கூட இதனால்தான் இயலக் கூடியதாக இருக்கிறது. படிப்படி நிகழ்முறைகள் மொத்தத்தையும் துறந்து விடமுடியும். இந்த கணத்திலேயே நீங்கள் ஞானம் அடைந்தவர் ஆகமுடியும். அது இயலக்கூடியதே. ஆனால் அது, உங்கள் தேடல் எந்த அளவுக்கு தீவிரமானதாக உள்ளது, எந்த அளவுக்கு அதில் நீங்கள் ஈடுபாடாக இருக்கிறீர்கள் என்பதையே பொறுத்திருக்கும். உங்களின் ஒருபகுதிமட்டுமே அதில் இருந்தால் பின் ஒரு பகுதியையமட்டுமே – ஒரு படியை மட்டுமே நீங்கள் அடைவீர்கள். பாதியளவு அதில் நீங்கள்

இருந்தால் பின் உடனடியாக பாதிதூர பயணத்தை முடித்துவிடுவீர்கள்; பிறகு அந்த இடத்திலேயே தேங்கிவிடுவீர்கள். ஆனால் உங்களின் முழு உயிரும் அதில் இருந்தால், எதையும் நீங்கள் மிச்சம் வைத்துக் கொள்ளாமல் இருந்தால், இக்கணமே முழுமையும் நிகழ அப்படியே உங்களை நீங்கள் அர்ப்பணித்துவிட்டிருந்தால், உடனடியாக அது நிகழமுடியும்; காலம் தேவைப்படுவதில்லை.

உங்கள் முயற்சி அரைகுறையானதாக குறைபாடுடையதாக இருப்பதால்தான், அரைமனதாகவே அதை நீங்கள் மேற்கொள்வதால் தான் அதிக காலம் தேவைப்படுகிறது. அதை நீங்கள் செய்யவும் செய்கிறீர்கள், செய்யாமலும் விடுகிறீர்கள். ஒரே நேரத்தில் ஓரடி முன்னும் ஓரடி பின்னும் எடுத்து வைக்கிறீர்கள். வலது கையால் செய்வதை எல்லாம் இடது கையால் இல்லாமலாக்குகிறீர்கள் நீங்கள். அந்நிலைமையில் பலப்பல படிகள், பதஞ்சலி விவரிக்க முடிந்ததை விடவும் அதிகமான படிகளே இருக்கும். சாத்தியமான நிலைகள் அனைத்தையும் அவர் விவரித்திருக்கிறார். அவற்றில் பலவற்றை விட்டுவிட முடியும்; அனைத்தையுமே கைவிட்டுவிட முடியும்; பாதை முழுவதையும் அப்படியே துறந்துவிட முடியும் உங்கள் முயற்சிக்குள் உங்கள் முழு உயிரையும் நீங்கள் கொண்டுவர முடிந்தால்.

ஒரு குருவின் அருகில் இருப்பது மகத்தான உதவியாக விளங்க முடியும், ஆனால் அதுவும் உங்களையே பொறுத்தது. உடலால் ஒரு குருவின் அருகில் நீங்கள் வாழமுடியும், ஆனாலும் அவர் அருகிலேயே நீங்கள் இல்லாதிருக்கலாம். ஏனெனில் ஒரு குருவுடன் இருப்பது என்பது உடலின் அருகாமை சார்ந்த விசயம் அல்ல. அவரிடம் நீங்கள் எந்த அளவுக்கு திறந்த தன்மையோடு இருக்கிறீர்கள், அவரை நீங்கள் எந்த அளவுக்கு முழுமையாக நம்புகிறீர்கள், அவர் மீதான உங்களின் அன்பு எந்த அளவில் உள்ளது, உங்களின் உயிரை அவருக்கு நீங்கள் எந்த அளவுக்கு தரமுடியும் என்பதே கேள்வி. உண்மையாகவே நீங்கள் நெருங்கி இருந்தால், அதாவது அவரை நம்பவும் நேசிக்கவும் உங்க ளால் முடிந்தால் பின் அதைவிட வேறெந்த நெருக்கமும் (தேவை) இல்லை. இடத்தைப்பற்றிய பிரச்சனை அல்ல இது; அன்பைப்பற்றிய பிரச்சனை இது. உண்மையாகவே ஒரு ஆசானின் அருகில் நீங்கள் இருந்தால் எல்லா பாதைகளையும் எல்லா முறைகளையும் கைவிட்டு விடமுடியும். ஏனெனில் குருவின் அருகில் இருப்பதுவே அறுதியான முறை. அதைப்போல் வேறொன்று இல்லை. அதனோடு ஒப்பிடத்தக்க தாக இன்னொன்று இல்லை. அப்போது எல்லா முறைகளையும், எல்லா பதஞ்சலிகளையும் அறவே நீங்கள் மறந்துவிட முடியும். அவர்களை எல்லாம் அப்படியே துறந்துவிட முடியும். ஒரு குருவின் அருகில் நீங்கள்

இருந்தால், உங்கள் உயிரில் ஊடுருவ அவரை நீங்கள் அனுமதித்தால், ஒரு ஏற்புத்தன்மையாகவே மாறி இருந்தால், உங்களுக்கென எவ் வித தனிப்பட்ட திட்டமும் வைத்துக்கொள்ளாம லிருந்தால், ஒரு திறப் பாக மட்டுமே இருந்தால், பின் இந்த கணத்திலேயேகூட அந்த நிகழ்வு சாத்தியம்தான்.

மேலும் உங்களுக்கு ஒன்றை நான் நினைவுபடுத்த விரும்பு கிறேன்: இந்த உலகில் நிலவும் முறைகள் அனைத்தையும் கடைப்பிடித்தும் சென்று அடையாதவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். மாறாக ஒரு குருவின் அருகில் சும்மா இருப்பதன் மூலமே சென்று அடைந்தவர்களும் பெருமளவில் இருக்கிறார்கள் – அதுவே மாபெரும் உத்தியாக உள்ளது. ஆனால் இறுதியில் எல்லாமே உங்களைப் பொறுத்ததுதான்.

அதுதான் சிக்கல். சிக்கலின் மையமே அதுதான்: என்னைப் பொறுத்தது அல்ல அது. அப்படி இருந்தால் இதற்குள் உங்களுக்கு நான் வழங்கி இருந்திருப்பேன். அப்போது எந்த சிக்கலும் இருந்திருக்காது. ஒரே ஒரு புத்தரே போதுமானவராக இருந்திருப்பார். அனைவருக்கும் அவர் ஒருவரே வாரி வழங்கி இருப்பார். உண்மையில் அளவுகடந்ததை அவர் தன் கைகளில் வைத்திருக்கிறார். எனவே அதை வாங்கி தீர்த்து விட உங்களால் முடியாது; முடிவின்றி கொடுத்துக்கொண்டே போக அவரால் முடியும். அவரும் கொடுக்க தயாராகவே எப்போதும் இருக் கிறார். ஏனென்றால் எந்த அளவுக்கு அதிகமாக தருகிறாரோ அந்த அளவுக்கு அதிகமாக அவரும் பெறுகிறார். எந்த அளவுக்கு அதிகமாக பகிர்ந்துகொள்கிறாரோ அந்த அளவுக்கு அதிகமாக திறக்கப்படாத ஊற்றுகள் அவருக்கு திறக்கின்றன; முன் அறிந்திராத வரத்துகள் அவரை நோக்கி பெருக்கெடுக்க தொடங்குகின்றன. ஒரு ஆசானைப் பொறுத்ததாக மட்டும் இது இருந்திருந்தால் ஒரு புத்தரே அனைத்து உயிர்களுக்கும் ஞானநிலையை வழங்கி இருப்பார். அப்படி இல்லை. உங்கள் அறியா மையில், உங்கள் மனதின் ஆணவ நிலையில், உங்களின் மூடுண்ட சிறைப்பட்ட நிலைமையில், ஒரு புத்தர் அதை உங்களுக்கு தர விரும்பினாலும், நீங்கள் அதை பெற மறுத்துவிடவே செய்கிறீர்கள். நீங்களாக விரும்பாத வரை அதை நீங்கள் மறுத்தே விடுவீர்கள். உங்களை மீறி உங்களுக்கு அதை தர முடியாது. நீங்கள் தான் அதைப் பெற்றுக்கொண்டாக வேண்டும்; மிகுந்த உணர்வுடனும் விழிப்புடனும் அறிவுடனும் நீங்கள்தான் அதைப் பெற்றுக் கொண்டாக வேண்டும். ஆழமான உணர்விலும் ஆழமான ஏற்பு தன்மையிலும் மட்டுமே அதை நீங்கள் அடைந்துகொள்ள முடியும்.

ஒரு குருவின் அருகில் இருந்தால் – அன்போடும் நம்பிக்கையோடும் நெருங்கி இருந்தால் குரு உங்களுக்கு எதை செய்ய விரும்பினாலும் அதை

செய்ய அவரை நீங்கள் அனுமதித்தால் உங்களுக்கு என்று எந்த தனிவழியும் இல்லாதிருந்தால், பின் எதை செய்யவும் தேவையில்லை. ஆனால் அப்போது எதிர்பார்க்காதீர்கள்; உங்கள் மனதின் மிக ஆழமான ஒரு பகுதியிலிருந்தும் கோரிக்கை வைக்காதீர்கள். ஏனெனில் அந்த எதிர் பார்ப்பும் கோரிக்கையுமே தடையாக ஆகிவிடும். அந்நிலையில் நீங்கள் வெறுமனே காத்திருங்கள். பலப்பல பிறவிகளுக்கு பிறகுமட்டுமே அது நிகழப் போவதாயினும், நித்தியத்துக்கும் நீங்கள் காத்திருக்க வேண்டி வந்தாலும், காத்திருங்கள். இந்த காத்திருத்தலும் கூட ஒரு சோக மான-சோர்வான காத்திருத்தலாக இருக்கக் கூடாது. அது ஒரு கொண்டாட் டமான காத்திருத்தலாக இருக்க வேண்டும்; விழாத்தன்மையதாக இருக்க வேண்டும்; பெருமகிழ்ச்சி நிரம்பியதாக இருக்க வேண்டும்.

ஆக இதுதான் விசயம்: அந்நிலையில் நீங்கள் அதிகமதிகம் நெருங்கி நெருங்கி நெருங்கி வரமுடியும். திடீரென ஒருநாள் வருகிறது. அன்று ஆசானின் சுடரும் உங்கள் உயிரின் சுடரும் ஒன்றாக ஆகின்றன. திடீரென ஒரு பாய்ச்சல் நிகழ்கிறது. அதன்பின் நீங்கள் அங்கு இருப்பதில்லை; ஆசானும் இருப்பதில்லை. இருவரும் ஒருவராகி இருக்கிறீர்கள். அந்த ஒருமையில், உங்களுக்கு தர முடியக் கூடிய அனைத்தையும் அவர் உங்களுக்கு தந்துவிடுகிறார்; தன்னையே உங்களில் பொழிந்துவிடுகிறார்.

எனவே சமாதியின் அனைத்து நிலைகளின் வழியாகவும் ஒரு சாதகர் கடந்து செல்வது இன்றியமையாதது அல்ல. ஒரு சாதகர் இருக்க வேண்டிய அளவுக்கு நீங்கள் இருப்பதில்லை என்பதால் மட்டும்தான் அது இன்றியமையாததாகிறது... பின் பல நிலைகள். நிசமாகவே நீங்கள் தீவிரமாக நேர்மையாக உண்மையாக இருந்தால்; இக்கணமே சாவதற்கும் நீங்கள் தயாராயிருந்தால், அது நிகழ முடியும்.

மூன்றாவது கேள்வி:

**பதஞ்சலியை கவிதை மறைஞானம் தர்க்கம் ஆகியவற்றின் முழு நிறைவான சேர்க்கை என்று சொல்கிறீர்கள். இந்த முழுநிறைவான சமநிலையை நீங்களும் பெற்றிருக்கிறீர்கள், இல்லையா?**

இல்லை. நான் பதஞ்சலிக்கு நேர்மாறானவன். கவிதை, மறைஞானம் மற்றும் தர்க்கத்தின் ஒரு முழு நிறைவான சேர்க்கை பதஞ்சலியிடம் இருந்தது. நானோ வெறும் நேதி நேதி; இதுவுமில்லை அதுவுமில்லை ரகம். கவிதை – மறைஞானம் – தர்க்கம் ஆகியவற்றின் முழுநிறைவான சேர்க்கை என்னிடம் இல்லை. உண்மையில் என்னிடம் சமநிலையும் இல்லை, சமநிலைக் குறைவும் இல்லை. ஏனென்றால்

முழுநிறைவான சமநிலை கொண்ட மனிதன், கூடவே சமநிலையின்மையையும் கொண்டவனா யிருக்கிறான். ஏனெனில் சமநிலையின்மை நிலவும்போது மட்டுமே சமநிலையும் நிலவமுடியும். கூடவே இசைகேடு இருக்கும்போது மட்டுமே ஒத்திசைவும் நிலவமுடியும். நானோ விரிந்துபரந்த ஒரு வெறுமையாக மட்டுமே இருக்கிறேன். என்னில் ஒத்திசைவு – இசைகேடு, சமநிலை –சமமற்ற நிலை, முழு நிறைவு – ப்ற்றாக்குறைவு எதுவுமில்லை வெறும் ஒரு வெறுமை மட்டுமே இருக்கிறது. எனக்குள்ளே நீங்கள் வந்தால் அங்கு என்னை நீங்கள் காணவே மாட்டீர்கள். நானே கண்டிருக்கவில்லை, எனவே நீங்கள் எப்படிகாணமுடியும்?

இது நடந்தது: பாயஸித் என்ற ஒரு சூபி மறைஞானியின் வீட்டுக்குள் ஒரு திருடன் நுழைந்துவிட்டான். இரவு காரிருளாக இருந்தது. பாயஸித்தின் வீடு கருகும்மென்று இருந்தது. ஏனெனில் அவர் பரமஏழையாகஇருந்ததால் ஒரே ஒரு விளக்கை ஏற்றகூட அவரிடம் வசதியில்லை. மேலும் அதற்கு எந்த அவசியமும் இருக்கவில்லை. ஏனெனில் இரவில் அவர் ஒருபோதும் எதையும் செய்வதில்லை. பேசாமல் உறங்கிக் கொண்டிருந்தார் திருடன் புகுந்தபோது அதில் எந்த சிரமமும் இருக்கவில்லை; ஏனென்றால் கதவுகள் எப்போதும் திறந்தே கிடந்தன... திருடன் நுழைந்தான். யாரோ நுழைந்துவிட்டதை உணர்ந்த பாயஸித், ''நண்பா, எதை இங்கே தேடிக் கொண்டிருக்கிறாய்?'' என்றார். பாயஸித்தைப் போன்ற ஒரு குருவின் சன்னிதியில் திருடனால் பொய்யுரைக்க முடியவில்லை. அவரது பிரசன்னம் அத்தகையதாயிருந்தது. அந்த அன்பை உணர்ந்தான். எனவே, ''நண்பா, எதை இங்கே தேடிக்கொண்டிருக்கிறாய்?'' என பாயஸித் கேட்டதும், அந்த மனிதன், ''இதை சொல்வதற்கு மன்னித்துக் கொள்ளுங்கள். ஆனாலும் நான் சொல்லியே தீரவேண்டும் உங்களிடம் என்னால் பொய்சொல்ல முடியவில்லை. நான் ஒரு திருடன். ஏதாவது கண்டெடுக்க முடியுமா என்பதற்காக வந்திருக்கிறேன்'' என்றான். அதற்கு பாயஸித், ''இந்த முயற்சிக்கு பலன் கிடைக்காது. ஏனென்றால் இந்த வீட்டில் நான் முப்பது ஆண்டுகளாக வசித்துக்கொண்டிருக்கிறேன். எனக்கே இதுவரை எதுவும் கிடைத்ததில்லை. உனக்கு ஏதாவது கிடைத்தால் எனக்கும் கொஞ்சம் தெரிவி'' என்றார்.

எனக்குள்ளே நீங்கள் வந்தால் அங்கே என்னை நீங்கள் கண்டுபிடிக்கவே மாட்டீர்கள். ஏனெனில் இந்த வீட்டில் பலப்பல ஆண்டுகளாக வாழ்ந்துவரும் நானே யாரையும் இங்கு கண்டதில்லை. இதுவே நான் கண்டுபிடித்தது. நான் கண்டுபிடித்தது இதுதான்: அதாவது உள்ளே யாரும் இல்லை. உள்ளிருக்கும் இருப்பு ஒரு இல்லாமைதான்.

அதிக ஆழமாக நீங்கள் செல்லச் செல்ல, ஆன்மா என்பது போன்ற எதையும் நீங்கள் கண்டுபிடிக்கும் வாய்ப்பு அந்த அளவுக்கு குறைவே. மேலும் அதன் அடியாழமையத்தை நீங்கள் அடைந்தால் அங்கு வெறும் வெறுமையே – சுத்த சூனியமே இருக்கிறது. வெறுமையின் வெட்ட வெளிமட்டுமே இருக்கிறது. எனவே அங்கு சமநிலை எப்படி நிலவ முடியும்? சமமற்ற நிலை எப்படி நிலவமுடியும்?

மிகவும் அசாதாரண மனிதர்களில் ஒருவராவார் பதஞ்சலி. நான் அப்படி இல்லை. நேர் மாறானவர் பதஞ்சலி. என்னைப் பற்றிப் பேசுமாறு பதஞ்சலியிடம் நீங்கள் சொன்னால், அவரால் முடியாதுபோகும். அவருக்குள் அவரே நிரம்பி இருக்கிறார். ஆனால் திலோபா – போதிதர்மர் புத்தர் – மகாவீரர் – யேசுகிறிஸ்து என எவரைப்பற்றி பேசுமாறும் என்னிடம் நீங்கள் சொன்னால், எளிது; மிகவும் எளிது. ஏனெனில் நான் முற்றிலும் வெறுமையாக இருக் கிறேன்; (எனவே) யாருக்கும் நான் கிடைப்பவனாக முடியும். என் வாயிலாகப் பேச எவரையும் நான் அனுமதிக்க முடியும். ஒரு உள்ளீடற்ற மூங்கில் மட்டுமே இது. இதன் வழியாக எவர் வேண்டுமானாலும் இசை பாட முடியும். ஒரு புல்லாங்குழலாக இது ஆக முடியும்.

எனவே கவிதை, மறைஞானம் அல்லது தர்க்கம் அல்லது, வேறு எதன் சேர்க்கையாகவும் நான் இல்லை. நான் ஒரு சமநிலையே அல்ல; ஆனால் நான் சமமற்ற நிலையும் அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். நேதிநேதி-இதுவுமல்ல அதுவுமல்ல என்கின்றனவே உப நிடதங்கள், அதுவே நான். பதஞ்சலி விரும்பினால் என்மூலமாக அவர் பேசமுடியும். அதில் எந்த சிக்கலும் இல்லை, எந்த தடையும் இல்லை.

எனவேதான் பதஞ்சலி பற்றி நான் பேசும் போதெல்லாம் நீங்கள் திகைத்து குழம்புகிறீர்கள். இருத்தல் அனைத்தின் உச்சமேயாக ஆகிறார் அவர். அப்போது நான் புத்தரையும் மகாவீரரையும் யேசுவையும் முகமதுவையும் மறந்துவிடுகிறேன். அவர்கள் ஒருபோதும் இருந்ததே இல்லை என்பதுபோல், ஏதோ பதஞ்சலிமட்டுமே இங்கு இருந்தது போல் நடந்துகொள்கிறேன். ஏனெனில் அந்த கணத்தில் பதஞ்சலிக்கு மட்டுமே என் முழுமையுடன் நான் கிடைப்பவனாக இருக்கிறேன். இப்படி இயங்க ஒரு வெறுமையால் மட்டுமே முடியும். இப்போதுதான் முதல் முறையாக இப்படி நடந்துகொண்டிருக்கிறது. மற்றபடி கிருஷ்ணரைப் பற்றி யேசு பேசுவதையோ புத்தரைப்பற்றி கிருஷ்ணர் பேசுவதையோ நீங்கள் காணமுடியாது.

மகாவீரரும் புத்தரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள்; ஒரே நாட்டில் வாழ்ந்தவர்கள்; அந்த நாட்டின் ஒரே பகுதியில் வாழ்ந்தவர்கள். பீகாரில்

உள்ள ஒரு சிறு பகுதியிலேயே நாற்பது ஆண்டுகளாக தொடர்ச்சியாக அவர்கள் இயங்கினார்கள். ஒரே காலத்தவரான அவர்கள் இருவரும் சில நேரங்களில் ஒரே ஊரிலேயேகூட ஒரே நேரத்தில் இருந்தார்கள். ஒரு தடவை ஒரே தர்மசாலையிலேயே ஒரே நேரத்தில் இருவரும் தங்கி இருந்தார்கள் அவர்கள். ஆனாலும் ஒருவருடன் ஒருவர் அவர்கள் ஒருபோதும் பேசியதில்லை. அவர்களுக்குள் ஏதோ ஒன்று இருந்தது. தாமே சுயமாக சொல்வதற்கு அவர்களிடம் ஏதோ இருந்தது. ஒருவர் மற்றவருக்கு கிடைக்கக் கூடியவர்களாக அவர்கள் இல்லை.

நானே சுயமாக சொல்வதற்கு என்னிடம் ஏதுமில்லை. நான் ஒரு வெற்று மூங்கில் குழல் மட்டுமே. எனது சிலைகளைச் செய்ய எப்போதாவது நீங்கள் விரும்பினால் அதற்கு ஒரு எளிய வழி உள்ளது: ஒரு வெற்று மூங்கிலை வைத்து விடுங்கள்; அதுவே என் உருவ சிலையாக இருக்கும். அதன்மூலமாக என்னை நீங்கள் நினைத்துக்கொள்ளமுடியும். அதிலிருந்து எதையும் உருவாக்க தேவையில்லை. வெறும் ஒரு வெறுமையே, வெட்ட வெளி மட்டுமே. எந்த பறவையும் அதனூடாக பறக்க முடியும் – வானத்திடம் எந்த நிபந்தனையும் இல்லை: மானசரோவரைச் சேர்ந்த அன்னங்கள் மட்டுமே அனுமதிக்கப்படும், காகங்கள்? இல்லை, அவற்றுக்கு இடம் கிடையாது என எந்த கட்டுப்பாடுகளும் இல்லை. அன்னம், காகம் எல்லாருக்கும் வானம் வசப்படுகிறது. அழகான பறவையோ, அழகற்ற பறவையோ—எந்த நிபந்தனையும் விதிப்பதில்லை வானம்.

பதஞ்சலியிடம் ஒரு சேதி இருக்கிறது. என்னிடம் ஒன்றும் இல்லை. அல்லது ஒன்றுமின்மையே என் சேதி என்றும் நீங்கள் சொல்ல முடியும். நீங்கள் ஒன்றுமில்லாமல் இருந்தால் எனக்கு மிக நெருக்கமாக இருப்பீர்கள். வெறுமையாய் இருந்தால் என்னை நீங்கள் அடைந்து கொள்வீர்கள். மேலும், வெறுமையாய் இருந்தால்தான் என்னை உங்களால் புரிந்துகொள்ளவே முடியும்.

**நான்காவது கேள்வி:**

**அன்புவழி குறித்து மிகவும் நம்பிக்கையில்லாமல் உணர்கிறார்கள் பலர். பிரார்த்தனையை அடைய வேறொரு வழி இல்லையா?**

இல்லை. அன்பைக் குறித்து மிகவும் நம்பிக்கையில்லாமல் நீங்கள் உணர்ந்தால் பிரார்த்தனை குறித்தும் நம்பிக்கையில்லாமலே நீங்கள் உணரவேண்டி இருக்கும். ஏனெனில் அன்பின் சாரமே பிரார்த்தனை. அன்பு மலர் என்றால் அதன் மணமே பிரார்த்தனை. மலரை உங்களால் அடைய முடியாது என்றால் மணத்தை மட்டும் எப்படி உங்களால் அடைய முடியும்? அன்பை துறந்து கடந்துவிட யாராலும் முடியாது. யாரும் அதற்கு

முயலவும் கூடாது. ஏனெனில் தோல்விதான் அங்கே காத்திருக்கிறது; வேறொன்றும் இல்லை.

அன்பைக் குறித்து ஏன் இவ்வளவு நம்பிக்கையில்லாமல் இருக்கிறீர்கள் நீங்கள்? அதே சிக்கல்தான் பிரார்த்தனையிலும் வரும். ஏனெனில் முழுமையுடன் பேரண்டத்துடன் ஆன அன்பு என்பதே பிரார்த்தனையின் பொருள். எனவே அன்பெனும் பிடிக்குள் இன்னும் ஆழமாக போங்கள். பிரார்த்தனையைப்பற்றி சிந்திக்கும் முன்பாக முதலில் அன்பெனும் சிக்கலை தீருங்கள். இல்லாவிட்டால் உங்கள் பிரார்த்தனை – வழிபாடு போலியாகவே இருக்கும்; ஒரு ஏமாற்றாகவே இருக்கும் இதில் ஏமாற்றப்படுவது நீங்கள்தான், வேறு யாருமல்ல. உங்கள் பிரார்த்தனைக்கு செவிகொடுத்துக் கேட்க கடவுள் இல்லை.

உங்கள் வழிபாடு அன்பாக – காதலாக இல்லாதவரை செவிமடுக் காத செவிடாகவே முழுமை இருக்கும். வேறு எந்த வழியிலும் அதை திறக்க முடியாது. அன்பே திறப்பு.

ஆக சிக்கல் என்ன? அன்புகுறித்து ஒருவர் ஏன் மிகவும் நம்பிக்கையில்லாமல் உணர்கிறார்? அளவுகடந்த ஆணவம் இருந்தால் யாரையும் நீங்கள் நேசிப்பதற்கு அது விடாது. அளவுக்கு மீறிய தன் நினைப்பு –அளவுக்கு மீறிய தன்னலம் தன்முனைப்பு தற்பிரியம் இருந் தால் பின் அன்பு சாத்தியப்படாது. ஏனெனில் கொஞ்சமாவது பணிய வேண்டி இருக்கிறது. தன்னுடையதை கொஞ்சமாவது இழக்கவேண்டி இருக்கிறது. காதலில் கொஞ்சமாவது சரணடைய வேண்டி இருக்கிறது. எவ்வளவு கொஞ்சமானாலும் ஓரளவுக்காவது சரணடைய வேண்டி இருக்கிறது. குறிப்பிட்ட சில கட்டங்களில் முழுமையாகவே சரணடைய வேண்டியும் இருக்கிறது.

மற்றவருக்கு அடிபணிவதுதான் சிக்கல் மற்றவர் உங்களுக்கு அடிபணிவதை நீங்கள் விரும்புவீர்கள். ஆனால் இதே சிக்கலிலேயே மற்றவரும் இருக்கிறார். இரண்டு ஆணவங்கள் சந்தித்துக் கொள்ளும் போது ஒவ்வொன்றும் மற்றது தனக்கு அடிபணிய வேண்டுமென்றே விரும்புகிறது; அதற்குத்தான் இரண்டுமே முயன்று கொண்டிருக்கின்றன; அன்பு, நம்பிக்கைக் கிடமற்ற ஒரு விசயமாகிறது.

மற்றவரை உங்களிடம் சரணடைய வற்புறுத்துவதல்ல அன்பு. மற்றவரை உங்களிடம் சரணடையும்படி, வெறுப்புதான் வற்புறுத்துகிறது. வெறுப்பின் தன்மையே அது. ஏனெனில் மற்றவரை உங்களுக்கு சரணடையும்படி வற்புறுத்துவது என்பது அவரை அழிப்பதாகும். ஒருவித கொலைதான் அது. அன்பு என்பதோ மற்றவரிடம் உங்களையே

சரணடைப்பதாகும்: சரணடையுமாறு நீங்கள் நெருக்கப்பட்டதால் அல்ல; நீங்களே விரும்பி மேற்கொள்ளும் ஒரு நிலைபாடு அது. உங்களுக்கு அது மகிழ்ச்சி அளிக்கிறது என்பதால்தான்; நீங்கள் நெருக்கப்படு கிறீர்கள் என்பதால் அல்ல. சரணடையும்படி உங்களை வற்புறுத்தும் எவருக்கும் ஒருபோதும் சரணடையாதீர்கள். ஏனெனில் ஒருவித தற்கொலைதான் அது. உங்களை தனக்கேற்ப ஆட்டுவிக்கும் எவருக்கும் ஒருபோதும் ஆட்படாதீர்கள். ஏனெனில் ஒருவித அடிமைத்தனம்தான் அது; அன்பல்ல. நீங்களாக சரணடையுங்கள்; அப்போது தன்மை உடனடியாக மாறுகிறது.

நீங்களாக சரணடையும்போது அது ஒரு கொடை; இதயத்தின் கொடை. நீங்களாக சரணடையும்போது, நீங்களாக விரும்பி முன் வந்து சரண்புகும்போது உங்களையே அடுத்தவருக்கு கொடுக்கிறீர்கள். முதல் தடவையாக உங்கள் இதயத்தில் ஏதோ ஒன்று திறக்கிறது. முதல் முறையாக அன்பின் சிறு தரிசனக் கீற்றை நீங்கள் பெறுகிறீர்கள். அன்பென்னும் சொல்லை மட்டுமே நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அதன் பொருள் உங்களுக்கு தெரியாது. எல்லாருமே புழங்கினாலும் யாருக்கும் அதன் பொருள் தெரியாத சொற்களில் இந்த அன்பு / காதல் என்பதும் ஒன்று.

வழிபாடு- காதல்- கடவுள்- தியானம் என சில சொற்கள் உள்ளன. இந்த சொற்கள்ளை நீங்கள் பயன்படுத்த முடியும். ஆனால் அவற்றின் பொருள் என்ன என்பதை நீங்கள் அறிவதில்லை. ஏனெனில் அவற்றின் பொருள், அகராதியில் இல்லை. இருந்தால் பின் ஒரு அகராதியை நீங்கள் புரட்டிப் பார்க்க முடியும். அது ஒன்றும் கடினமல்ல. ஆனால் குறிப்பிட்ட ஒரு வாழ்க்கை முறையில்தான் அவற்றின் பொருள் விளங்குகிறது. உங்களுக்குள் நிகழும் குறிப்பிட்ட விதமான ஓர் அடிப்படைப் பண்பு மாற்றத்தில்தான் அவற்றின் அர்த்தம் இருக்கிறது. அவற்றின் பொருள், மொழிவகைப்பட்டதல்ல; வாழ்வியல் வகைப்பட்டது. அனுபவத்தில் அவற்றை நீங்கள் உணராத வரை அவற்றை நீங்கள் அறிவதில்லை. அவற்றை அறிவதற்கு வேறுவழியும் இல்லை. நீங்களாக முன்வந்து நிபந்தனையின்றி சரணடையும் போது தான்... ஏனெனில் நிபந்தனை எதுவும் இருந்தால் பின் அது ஒரு சரணாகதியே அல்ல. அப்போது அது ஒரு பேரம். ''நீ என்னை சரணடைந்தால் நான் உன்னை சரணடைவேன்'' என்னும் ஒரு நிபந்தனை இருந்தால்கூட அது சரண் அல்ல; அது வியா பாரம், பேரம்; சரண் அல்ல.

சரணாகதி சந்தைக்கு சொந்தமானது அல்ல. பொருளியலின் பகுதியே அல்ல அது. சரணடைதல் என்பது நிபந்தனை அற்றது. ''எனக்கு மகிழ்ச்சி ஏற்படுவதால் நான் சரண் அடைகிறேன்; அற்புதமானது அது என்பதால்

நான் சரணடைகிறேன்; சரணடைதலில் திடீரென என் அவலம் மறைகிறது என்பதால் நான் சரணடைகிறேன்.'' நீங்கள் சரண்புகும்போது உங்கள் அவலம் மறைகிறது. ஏனெனில் ஆணவத்தின் நிழல்தான் அவலம்/ துயரம். நீங்கள் சரணடையும்போது அங்கே ஆணவம் இருப்பதில்லை. பின் அவலம் மட்டும் எப்படி இருக்க முடியும்? அதனால் தான் அன்பு என்பது அவ்வளவு இன்பமாக இருக்கிறது.

ஒருவர் காதலாக இருக்கும்போதெல்லாம் திடீரென, அவர் இதயத்துக்குள் வசந்தம் வந்துவிட்டதுபோல, அதுவரை மவுனமாக இருந்த பறவைகள்-அதுவரை நீங்கள் கேட்டறியாத பாடல்களைப் பாடத் தொடங்குகின்றன. மேலும் திடீரென உள்ளுக்குள் ஒவ் வொன்றும் பூத்துக் குலுங்குகிறது. இந்த புவிக்கு சொந்தமில்லாத ஒரு நறுமணத்தால் நீங்கள் நிரம்புகிறீர்கள். அப்பாலில் இருந்து இப்புவிக்கு வரும் ஒரே ஒளிக்கீற்று அன்பு மட்டுமே.

எனவே அன்பை தவிர்த்துவிட்டு வழிபாட்டை நீங்கள் அடைந்து விட முடியாது. ஏனெனில் அன்புதான் வழிபாட்டின் தொடக்கமே. இது எப்படி இருக்கிறது என்றால் ''தொடக்கத்தை விட்டுவிட்டு முடிவை தொட்டு விட முடியுமா?'' என்று நீங்கள் கேட்பதைப்போல இருக்கிறது. இயலாத செயல் இது. இப்படி ஒருபோதும் நடந்ததில்லை, நடக்கப் போவதுமில்லை.

அன்பில் என்ன சிக்கல் இருக்கிறது? முதலாவது, உங்களால் சரணடைய முடிவதில்லை. காதலில் நீங்கள் சரணடைய முடியா விட்டால், பிரார்த்தனையில் நீங்கள் எவ்வாறு சரணடைவீர்கள்? ஏனெனில் வழிபாட்டுக்கு முழுமையான சரணாகதி தேவைப் படுகிறது. அன்புகூட அந்தளவுக்கு கோருவதில்லை. அன்பும் கேட்கிறது, ஆனால் பகுதியளவு சரணாகதியே போதுமானது. ஓரளவே உங்களால் சரணடைய முடிந்தால்கூட, சில நேரங்களில் மட்டுமே உங்களால் சரணடைய முடிந்தால்கூட, போதுமானது. சில நொடிகளுக்கு மட்டுமே உங்களால் சரணடைய முடிந்தால்கூட அந்த சில நொடிகளில் ஒரு கதவு திறக்கும்; மறு உலகின் ஒரு சிறு தரிசனம் உங்களுக்கு கிடைக்கும். காதல் அதிகமாக ஒன்றும் வலியுறுத்துவதில்லை. ஆயின் அன்பின் கோரிக் கையையே உங்களால் நிறைவேற்ற முடியாவிட்டால் பிரார்த்தனையின் கோரிக்கைகளை நீங்கள் எவ்வாறு நிறைவேற்றுவீர்கள்? பிரார்த்தனை என்பது முழுமையான வலியுறுத்தலாக இருக்கிறது. பகுதியளவே சரணடைந்தால் உங்களை அது ஏற்காது. சில நேரங்களில் மட்டுமே சரணடைந்து சில நேரங்களில் சரண் அடையாவிட்டால் உங்களை அது ஏற்காது. பிரார்த்தனை என்பது மிக அதிகமான வலியுறுத்தலாக

இருக்கிறது. அன்பின் வழியாகவே ஒருவர் போகவேண்டி இருக்கிறது. என்னைக் கேட்டால் அன்பு/காதல் என்பது பிரார்த்தனை/வழிபாட்டுக் கான ஒரு பள்ளிதான் – பயிற்சிக்கான, ஒழுங்குக்கான, உயர்நிலைப் பாய்ச்சலுக்கு தயாராதலுக்கான ஒரு பள்ளிதான். அன்பை/காதலையே நான் முழுமையாக ஆதரிக்கிறேன்.

நீங்கள் இப்போது கேட்பதை மக்கள் முயன்று பார்த்திருக் கிறார்கள். பல நூற்றாண்டுகளாக முயன்று பார்த்திருக்கிறார்கள். நேசிக்க முடியாத மக்கள் பிரார்த்திக்க முயன்றிருக்கிறார்கள். எல்லா மடாலயங்களிலும் அத்தகைய மனிதர்களே நிரம்பி வழிகிறார்கள் - காதலில் தோற்றவர்கள், காதலில் நம்பிக்கையில்லாதவர்களாக உணர்பவர்கள். குறைந்தது வழிபாட்டின் வழியாகவாவது தாம் முயலமுடியும் என நினைத்தார்கள் அவர்கள். ஆனால் காதலில் நீங்கள் ஒரு தோல்வி என்றால் கடவுளிடம் மட்டும் எவ்வாறு உங்களால் வழிபட முடியும்? உலக முழுவதிலும் இருந்து வரும் ஆயிரக்கணக்கான மனிதர்கள் மடங்களில் தம் பிரார்த்தனையை செய்து கொண்டிருக் கிறார்கள். ஆனால் அன்பு என்பது இன்னதென்பதை அவர்கள் அறிவதில்லை. அந்நிலையில் அவர்களின் வழிபாடு என்பதும் வார்த்தைகளின் வெறும் சளசளப்பாகவே இருக்கிறது. அந்நிலையில் தம் தலைகளில் இருந்தே கடவுளிடம் பேசிக் கொண்டிருக்கிறார்கள் அவர்கள். கடவுளுடன் ஆன தொடர்பு இதயத்தில் இருந்து வர வேண்டியது. உங்கள் தலையின் மூலமாக கடவுளிடம் நீங்கள் பேசமுடியாது. ஏனென்றால் உங்கள் தலைக்கு தெரிந்துள்ள எந்த மொழியும் கடவுளுக்கு தெரியாது. ஒரே ஒரு மொழி மட்டுமே கடவு ளுக்கு தெரியும்; அதுதான் அன்பு என்னும் மொழி.

எனவேதான் யேசு, ''அன்பே கடவுள்'' என்கிறார். ஏனெனில் அன்பு மட்டுமே அவரை அடைவதற்கான ஒரே வழியாக இருக்கிறது. மேலும் அன்பு மட்டுமே அவருக்கு புரிகிற ஒரே மொழியாக இருக்கிறது. ஆங்கிலத்தில் நீங்கள் பேசினால் அவர் புரிந்துகொள்ள மாட்டார். ஜெர்மானியத்தில் பேசினாலோ கொஞ்சம்கூட புரிந்துகொள்ள மாட்டார்... உலகின் மொழி எதுவும் உதவாது.

''ஜெர்மானியத்தில் பேசினாலோ கொஞ்சம்கூட புரிந்துகொள்ள மாட்டார்'' என்று ஏன் நான் கூறுகிறேன்? ஏனெனில் ஜெர்மானியம் அதிகமும் ஆண்சார்பான மொழியாக இருக்கிறது. ஜெர்மானியர் தம் நாட்டை ''தந்தையர் நாடு'' என்றே அழைக்கிறார்கள். உலகம் முழுவதும் தம் நாட்டை ''தாய் நாடு'' என்கிறது. ஒரு மொழி எந்த அளவுக்கு அதிக ஆண்சார்பாக இருக்கிறதோ அந்த அளவுக்கு குறைவாகவே கடவுளால் அதை புரிந்துகொள்ள முடியும். உண்மையில் ஆண் மனத்தைவிட

பெண்மனத்தையே கடவுள் புரிந்துகொள்கிறார். ஏனெனில் ஆண் மனத்தைவிட பெண்மனமே இதயத்துக்கு மிக அருகில் உள்ளது. உரைநடையைவிட கவிதையையே கடவுள் அதிகம் புரிந்துகொள்கிறார். உண்மையில் எண்ணங்களைவிட உணர்ச்சிகளையே அதிகம் அவர் புரிந்து கொள்கிறார். கருத்துகளைவிட கண்ணீர்களையும் சிரிப்புகளையுமே அதிகம் அவர் புரிந்து கொள்கிறார். மனம்விட்டு கதறிஅழ உங்களால் முடிந்தால் அதை அவர் புரிந்து கொள்வார். உங்களால் ஆடமுடிந்தால் அதை அவர் புரிந்து கொள்வார். ஆனால் வார்த்தைகளை நீங்கள் அடுக்கிக் கொண்டே போனால் அது வெறுமனே வீணடிக்கப்பட்டதாகிறது; யாரும் புரிந்து கொள்வதில்லை.

மவுனத்தையே கடவுள் புரிந்துகொள்கிறார். அன்பு/காதல் மிகவும் மவுனமானது. உண்மையில் இரண்டுபேர் அன்பாக இருக்கும் போதெல்லாம், சேர்ந்து மவுனமாக அமர்ந்திருப்பதையே அவர்கள் விரும்புவார்கள். அன்பு மறைகிறபோது மட்டுமே மொழி நுழைகிறது. கணவன் மனைவிகள் வாய்ஓயாமல் பேசுகிறார்கள்; ஏனெனில் அன்பு மறைந்துவிட்டிருக்கிறது. பாலம் இப்போது அங்கு இல்லை. மொழியால் ஒரு விதமாக ஒரு பாலத்தை கட்டிக் கொண்டிருக்கிறார்கள் அவர்கள். புரளிகள், ஊர்வம்புகள் என எதைப்பற்றியாவது அரட்டை அடிக்கிறார்கள். ஏனென்றால் அமைதியை/மவுனத்தை அவர்களால் தாங்கிக் கொள்ள முடிவதில்லை. மவுனமாக அவர்கள் இருக்கிற போதெல்லாம் திடீரென அவர்கள் தனிமையை உணர்கிறார்கள். மனைவி அங்கு இருப்பதில்லை, கணவன் அங்கு இருப்பதில்லை. ஒரு பெரிய இடைவெளி அங்கு நிலவுகிறது. மொழியின் மூலமாக அப்படி ஒரு இடைவெளி அங்கு இல்லை என ஏய்த்துக் கொள்கிறார்கள் அவர்கள். ஆழமான அன்பில் மக்கள் அமைதியாக இருக்கிறார்கள். பேச்சுக்கு தேவை ஏதுமில்லை. பேச்சில்லாமலே ஒருவரை ஒருவர் புரிந்துகொள்கிறார்கள். ஒருவர் மற்றவரின் கைகளைப் பிடித்தபடி மவுனமாக அமர்ந்திருக்க அவர்களால் முடிகிறது. வழிபாடும் மவுனமானதுதான். ஆனால் காதலில் நீங்கள் ஒருபோதும் மவுனமாக இருந்திராவிட்டால் வழிபாட்டில் மட்டும் எப்படி நீங்கள் மவுனமாக இருப்பீர்கள்? உங்களுக்கும் முழுமைக்கும் இடையிலான காதலே வழிபாடு.

இரண்டு பேருக்கிடையிலான அமைதியே/மவுனமே அன்பு; ஒருவருக்கும் முழுமைக்கும் இடையிலான அமைதியே வழிபாடு/பிரார்த்தனை. அந்த முழுமையே கடவுள். அன்பு ஒரு பயிற்சி; அது ஒரு பள்ளி. அதை தவிர்க்கும்படி ஒருபோதும் உங்களுக்கு யோசனை கூறமாட்டேன். அன்பை நீங்கள் தவிர்த்தால் ஒருபோதும் நீங்கள் வழிபாட்டை சென்றடைய மாட்டீர்கள்; மேலும் வழிபாட்டின்போது

நீங்கள் அளவுக்கு அதிகமாக பேசுவீர்கள். அதனால் இதயத்தால் உறவு கொள்ள—ஒன்றுபட முடியாதுபோகும். எனவே இந்த பாடம் எவ்வளவு கடினமானதாக இருந்த போதிலும், இந்த தடையை உடைப்பது எவ்வளவு கடுமையானதாக இருந்த போதிலும்... ஆனால் அன்பை தவிர்க்க முயலாதீர்கள். வழிபாடு/பிரார்த்தனை என்பது அன்பிலிருந்து தப்பிப்பதற்கல்ல; ஒரு தப்பித்தல் வழியாக அதை ஆக்காதீர்கள். பலரும் இதை செய்து தவறியிருக்கிறார்கள். உலகில் எந்த இடத்தில் இருக்கும் மடத்துக்கும் போய் பாருங்கள் அப்படி தவறிப்போன மடப்பிறவிகளை அங்கே நீங்கள் பார்க்க முடியும். அன்பை தவிர்க்கப் பார்த்ததாலேயே தோற்றுப்போனார்கள் அவர்கள்.

அன்பின் வழியாகவே நாம் போக வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் வாழ்வின்மீது நீங்கள் கோபமாகவே இருப்பீர்கள். அந்நிலையில் எப்படி நீங்கள் பிரார்த்தனை செய்வீர்கள்? வாழ்வை ஆழமான முறையில் மறுதலித்தவராகவே நீங்கள் இருப்பீர்கள்; அந்நிலையில் எப்படி நீங்கள் (அதை) ஏற்றுக் கொண்டு வழிபட முடியும்? எப்போதும் அதை சபிப்பவராகவே நீங்கள் இருப்பீர்கள்; ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மை சாத்தியமாகாது. காதலில்தான் முதல்முறையாக நீங்கள் ஏற்றுக்கொள்கிறீர்கள். காதலில்தான் முதல் முறையாக அதில் அர்த்தமுள்ளது, வாழ்க்கை அர்த்தமுடையது என் பதை புரிந்துகொள்கிறீர்கள். நீங்கள் காதலில்தான் முதல்முறையாக இவ்வுலகுடன் நீங்கள் ஒரு அந்நியராக-வெளியாளாக அல்லாமல் உங்கள் சொந்த வீடுபோல் அந்நியோன்னியமாக உணர்கிறீர்கள். காதலில்தான் முதல்முறையாக ஒரு சொந்த வீடு படைக்கப்படுகிறது. காதலில்தான் முதல்முறையாக நீங்கள் சமாதானமாக உணர்கிறீர்கள். உங்களை ஒருவர் நேசிக்கிறார், உங்களுடன் ஒருவர் மகிழ்ச்சியாக உணர்கிறார்; இப்போதுதான் முதல் தடவையாக உங்களை நீங்களே ஏற்றுக் கொள்கிறீர்கள்-இல்லாவிட்டால் உங்களை நீங்கள் எப்படி ஏற்றுக்கொள்வீர்கள்? வாழ்வில், குழந்தைப்பருவம் முதலே உங்களை நீங்களே சபிக்கவும் மறுக்கவுமே பழக்கப்படுத்தப்பட்டு வந்திருக்கிறீர்கள். ''இதை செய்யாதே, அப்படி நடக்காதே'' - இப்படி ஒவ்வொருவரும் உங்களைப் பார்த்து போதித்துக் கொண்டிருக்கிறார்கள் நீங்கள். முற்றிலும் தவறானவர் என்றும் நீங்கள் திருந்தியாக வேண்டும் என்றும் உங்களிடம் கூற ஒவ்வொருவரும் முயன்று கொண் டிருக்கிறார்கள்.

இப்படி நடந்தது: முல்லா நசுருதீனின் மனைவி மிகுந்த நோய் வாய்ப்பட்டு இருந்தாள். அவளை மருத்துமனையில் சேர்த்தார்கள். ஒவ்வொரு நாளும் முல்லா அங்கு போய் வந்து கொண்டிருந்தார்.

மருத்துவர்களிடமும் தாதிகளிடமும் கேட்பார். ''அவள் தேறிவருகிறாள்'' என்று அவர்கள் சொல்வார்கள் ஆனால் அவளது நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருந்தது. ஆனால் ''அவள் குணமடைந்து வருகிறாள், குணமடைந்து வருகிறாள்'' என்றே மருத்துவர்களும் செவிலிகளும் தொடர்ந்து சொல்லிக்கொண்டு வந்தார்கள். நானும் முல்லா நசுருதீனிடம் ''உம் மனைவி எப்படி இருக்கிறார்?'' என்று வழக்கமாக கேட்பேன். அவரும் ''ரொம்ப நன்றாக இருக்கிறாள்! 'அவள் குணமடைந்து வருகிறாள்' என மருத்துவர்கள் சொல் கிறார்கள். 'அவள் நிலை முன்னேறிவருகிறது, விரைவிலேயே வீடு திரும்பிவிடுவாள்' என்று தாதிகள் சொல்கிறார்கள்'' என்பார். பின் ஒருநாள் திடீரென அவள் இறந்துவிட்டாள். அப்போது நான் அவ ரிடம், ''என்ன நடந்தது நசுருதீன்?'' என்று கேட்டேன். தன் தோள்களை குலுக்கிக் கொண்டார் அவர். ''அந்தளவு முன்னேற்றத்தை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை என நினைக்கிறேன். முன்னேற்றம் அளவுகடந்து ஏற்பட்டு விட்டது!'' என்றார்.

பெற்றோர்கள், ஆசிரியர்கள், சாமியார்கள், சமுதாயம், கலாச்சாரம் எல்லாரும் உங்களை மேம்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு வரும் முன்னேற்றிக் கொண்டிருக்கிறார்கள். அந்தளவு மிகுதியான முன்னேற்றத்துக்கு யாராலும் தாக்குப்பிடித்து நிற்க முடிவதில்லை. இதன் ஒட்டுமொத்த விளைவு என்னவென்றால் ஒருநாளும் நீங்கள் லட்சிய மனிதராக ஆவதில்லை; வெறுமனே உங்களை நீங்களே கண்டனம் செய்து கொள்பவராகவே ஆகிறீர்கள். லட்சியம் என்பது அடைய முடியாதது. லட்சியமென்பது கற்பனையானது. லட்சியம் என்பது முற்றிலும் சாத்தியமற்றது, அருவமானது; இயற்கையானது அல்ல. ஆனால் ஒவ்வொரும் நெருக்கப்படுகிறார்கள்; முன்னேறும்படி- திருந் தும்படி எல்லா திசைகளில் இருந்தும் நீங்கள் தள்ளவும் இழுக்கவும் படுகிறீர்கள். எப்படி நீங்கள் இருந்தாலும் நீங்கள் தவறானவராகவே இருக்கிறீர்கள், அதிலிருந்து மேம்படுங்கள் என்ற சேதியே எல்லாப் புறமிருந்தும் வருகிறது. ஒரு சுய கண்டனத்தை அது உருவாக்குகிறது: உங்களை நீங்களே மதிப் பற்றவர்-தகுதியற்றவர்-குப்பை-கழிசடை என வெறுத்தொதுக்குகிறீர்கள்.

உங்களை மேம்படுத்த ஒருநாளும் முயலாதது அன்புமட்டுமே. நீங்கள் இருக்கிற நிலையிலேயே உங்களை ஏற்றுக்கொள்வது அது மட்டுமே. யாராவது உங்களை நேசிக்கும்போதே, நீங்கள் இருக்கும் நிலையில் நீங்கள் செம்மையானவராகத்தான் இருக்கிறீர்கள்; லட்சிய மனிதராகத்தான் இருக்கிறீர்கள். மேலும் காதலர்களும் ஒருவரை ஒருவர் திருத்த முயன்று கொண்டிருந்தால் அவர்கள் காதலர்கள் அல்லர். மறு

படியும் மொத்த ஆட்டமும் அங்கு நடக்கிறது. நீங்கள் இருக்கும் விதத்திலேயே உங்களை அன்பு ஏற்றுக்கொள்கிறது. இந்த ஏற்பின் மூலமாகவே ஒரு அடிப்படை மாற்றம் ஏற்படுகிறது. முதன்முதலாக நீங்கள் உங்கள் சொந்த வீட்டில் இருப்பதுபோல் உணர்கிறீர்கள்; நீங்கள் இளைப்பாற முடிகிறது; இறுதியில் இதுவே வழிபாடாக ஆகப் போகிறது.

அதன்பிறகு மட்டுமே — இயல்பாகவும் இளைப்பாறுதலாகவும் நீங்கள் இருக்கும்போதே ஒரு பெரும் நன்றியறிதல் எழுகிறது. வெறும் இருத்தலுக்கான நன்றியறிதலானது மிகவும் அழகானது, ஆனந்தமானது. பிரார்த்தனையில்/வழிபாட்டில் எதையும் நீங்கள் கோருவதில்லை, வெறும் நன்றியறிதல்லாகவே நீங்கள் இருக்கிறீர்கள். பிரார்த்தனை என்பது ஒரு நன்றி செலுத்தல்; கடவுளிடமிருந்து ஏதோ ஒன்றை யாசிப்பதல்ல அது. பிச்சைக்காரர்கள் ஒருபோதும் பிரார்த்தனை செய்ய முடிகிறவர்களாக ஆக மாட்டார்கள். பிரார்த்தனை ஒரு நன்றிஉணர்வு. ஒரு ஆழமான நன்றியறிதல் அது. ''நீ தந்திருப்பது எதுவானாலும் அதுவே அதிகம். உண்மையில் அதற்கே நான் தகுதியானவன் அல்லன்'' என்ற உணர்வு. அன்பின் மூலமாக, வாழ்க்கை முழுவதுமே இறைமையின் ஒரு பரிசாகவே ஆகிறது. பின் நீங்கள் நன்றி நிரம்பிய வர்களாக உணர்கிறீர்கள். அந்த நன்றி உணர்விலிருந்து வழிபாட்டின் நறுமணம் எழுகிறது.

மிகவும் நுட்பமான ஒரு நிகழ்முறை அது: அன்பிலிருந்து, உங் களையும் மற்றவரையும் ஏற்றுக்கொள்ளும் தன்மை; அன்பின் — ஏற்பின் வழி, ஒரு அடிப்படையான பண்பு மாற்றம் மற்றும் நீங்கள் எப்படி யிருந்தாலும் என்னவாக இருந்தாலும் நீங்கள் பூரணமாகவே இருக்கி றீர்கள், பரிபூரணமும் உங்களை ஏற்றுக்கொள்கிறது என்ற ஆழமான பார்வை. பின் ஒரு நன்றிகூறல். பின் எழுகிறது ஒரு வழிபாடு. அதுவோ வார்த்தை ரீதியானதல்ல; மொத்த உள்ளமும் நன்றி மிகுதி யினால் நிரம்பி வழிகிறது - அவ்வளவே. வழிபாடு என்பது வார்த்தை வழி அல்ல; அது ஒரு வாழ்க்கை வழி. உண்மையான வழிபாட்டில் நீங்கள் பிரார்த்தனை செய்துகொண்டு இருப்பதில்லை; நீங்களே பிரார்த்தனையாகி இருக்கிறீர்கள். பிரார்த்தனையிலேயே நீங்கள் இருக்கிறீர்கள், பிரார்த் தனையிலேயே நீங்கள் நிற்கிறீர்கள், பிரார்த் தனையிலேயே நீங்கள் நடக்கிறீர்கள், பிரார்த்தனையிலேயே நீங்கள் உயிர்க்கிறீர்கள்.

இதன் ஒரு துளி தரிசனம் காதலில் கிடைக்கிறது. எப்போதாவது நீங்கள் காதலாக இருந்திருக்கிறீர்களா? அப்போது நீங்கள் காதலில் உயிர்க்கிறீர்கள், காதலில் நடக்கிறீர்கள். அப்போது உங்கள் நடையே ஒரு நாட்டியம் ஆகிறது. மற்றவர்கள் பார்வைக்குக்கூட அது புலப்படுவதாக

இருக்கிறது. அப்போது உங்கள் கண்களில் ஒரு ஒளி இருக்கிறது; ஒரு மாறுபட்ட ஒளி அவற்றுக்கு வருகிறது. அப்போது உங்கள் முகத்தில் ஒரு பொலிவு தோன்றுகிறது. உங்கள் குரலில் ஒரு பாட்டு இருக்கிறது.

ஒருபோதும் காதலித்திராதவன் ஒரு நடைபிணம்போல் இழுத்துக் கொண்டு நடக்கிறான். காதலித்திருக்கிறவர் காற்றில் ரெக்கை கட்டிக் கொண்டு பறப்பவர்போல் மிதக்கிறார். ஒருபோதும் காதலித்திராதவனால் நடனமாட முடியாது. ஏனெனில் தன் உள்ளுயிரில் நடனம் என்றால் என்ன என்றே அவன் அறியான். அவனால் ஒருபோதும் பரவசமாக இருக்க முடியாது - சோகமானவனாக, மூடுண்டவனாக, ஏறக்குறைய செத்துப் போனவனாக, ஏறக்குறைய ஒரு கல்லறையில் வாழ்ந்து கொண்டிருப்பவ னாகவே அவன் இருக்கிறான். அன்பு உங்களை மற்றவரை நோக்கிச் செல்ல அனுமதிக்கிறது. அப்படி ஆற்றலானது மற்றவரை நோக்கி போகும்போது, நீங்கள் இயக்காற்றல் உடையவர் ஆகிறீர்கள், ஆற்றலானது மற்றவரை நோக்கி இயங்கி பின் மற்றவரிடமிருந்து உங்களை நோக்கி இயங்கும் போது உங்களுக்கும் மற்றவருக்கும் இடையில் திடீரென ஒரு பாலத்தை நீங்கள் உருவாக்குகிறீர்கள். இந்தப் பாலமே முதல் தரிசனக் கீற்றை உங்களுக்குத் தரும்; வழிபாடு என்றால் என்ன என்பதன் முதல் மாதிரிச்சித்திரத்தை உங்களுக்கு வழங்கும். உங்களுக்கும் முழுமைக்கும் இடையிலான பாலம் அது.

அன்பின் வழியாக அல்லாமல் பிரார்த்தனையை நோக்கி செல்வது எவருக்காயினும் எப்படி இயலும் என்பதை என்னால் எண்ணிப்பார்க்கவும் முடியவில்லை. எனவே அன்பைக் குறித்து கலவரம் அடையாதீர்கள். திரும்பவும் நீங்கள் பிறக்கும்படியாக அன்பிற்குள் மரணமடையுங்கள். மீண்டும் நீங்கள் இளமையும் புதுமையும் ஆனவராக ஆக முடிவதற்காக அன்பிற்குள் உங்களை இழந்துவிடுங்கள். அன்பு நிகழாமல் போனால் பிரார்த்தனை நிகழ எந்த வாய்ப்பும் இல்லை. மேலும், காதலைக் குறித்து நம்பிக்கையற்றவராக உணராதீர்கள். ஏனெனில் அது மட்டுமே ஒரே நம்பிக்கை. ''உப்பானது தன் உவர்ப்புத்தன்மையை இழந்துவிடுமானால், பின் மீண்டும் அதை எப்படி உவர்ப்பானதாக்க முடியும்'' என்று கேட்கிறார் யேசு. நானும் உங்களுக்கு சொல்லுகிறேன், அன்பு மட்டுமே ஒரே நம்பிக்கை; அதுவே நம்பமுடியாததாக ஆகிவிடுமானால் பின் எந்த நம்பிக்கைக்கும் இடமில்லை. பின் மீண்டும் எங்கு நீங்கள் நம்பிக்கையை பெறுவீர்கள்?

முயற்சியைக் கைவிடாதீர்கள்; தோல்வியை ஒப்புக்கொள்ளாதீர்கள். உங்களுக்கென்று யாரோ ஒருவர் இருக்கிறார். யாரோ ஒருவருக்காக நீங்கள்

இருக்கிறீர்கள். தாகம் இருக்குமானால் தண்ணீரும் இருந்தாக வேண்டும். பசி என்பது இருந்தால் உணவு என்பதும் இருந்தாக வேண்டும். ஆசை இருந்தால் அதை நிறைவு செய்வதற்கான ஒரு வழியும் இருந்தாக வேண்டும். நம்பிக்கையற்றவராக உணராதீர்கள். உங்கள் நம்பிக்கையை மறுபடியும் புதுப்பியுங்கள். ஏனெனில் நம்பிக்கையற்ற மனிதரே சமயத்தன்மையற்ற மனிதராவார். நம்பிக்கை இழந்த மனிதரே கடவுளை மறுக்கும் மனிதராவார். அன்பு மட்டுமே ஒரே நம்பிக்கை. அன்பின் வழியாக பல புதிய நம்பிக்கைகள் எழும். ஏனெனில் அன்பே அறுதி நம்பிக்கையின் - அதாவது கடவுளின் - வித்தாக இருக்கிறது. எல்லா முயற்சியையும் எடுங்கள். அவநம்பிக்கையில் அமுந்தி விடாதீர்கள். உங்களின் முயற்சி மிகுந்த கடினமானதாக இருக்காலம், ஆனாலும் அது மதிப்புக்குரியதே. ஏனெனில் அஃதின்றேல் நீங்கள் தேங்கி விடுகிறீர்கள். அன்பெனும் பாடத்தை நீங்கள் படித்துக் கொள்ளாதவரை திரும்ப திரும்ப வாழ்க்கைக்குள் திருப்பி எறியப்படுவீர்கள். ஆனால் ஒருதடவை அன்பை அறிந்து கொண்டால் பின் வழிபாடு மிகவும் எளிதாகிறது. உண்மையில் வழிபாட்டை கற்க தேவையே இல்லை. நீங்கள் அன்பாயிருந்தால் அது தானாகவே வருகிறது.

**ஐந்தாவது கேள்வி:**

**நவீன மனத்தின் விசித்திரமான மனக்கோளாறுகளுக்கு பதஞ்சலி எப்படி பயன்படுவார்?**

என்னைப் போலவேதான்! இங்கே நான் வேறு என்ன செய்து கொண்டிருக்கிறேன்? உங்கள் மனக்கோளாறுகளுடன் போராடிக் கொண்டிருக்கிறேன். ஆணவமே மனக்கோளாறுகள் அனைத்துக்கும் ஆதிகாரணம். ஏனெனில் ஆணவமே பொய்மைகள் அனைத்தின் - புரட்டல்கள் அனைத்தின் மையம். மொத்த சிக்கலும் ஆணவத்திலேயே இருக்கிறது. ஆணவத்துடன் நீங்கள் வாழ்ந்தால் கூடிய விரைவில் நீங்கள் மனக்கோளாறு உடையவர்களாகவே ஆவீர்கள். அப்படி நீங்கள் ஆகவே வேண்டி வரும். ஏனெனில் ஆணவமே அடிப் படையில் ஒரு மனக்கோளாறுதான். ''நானே உலகின் மையம்'' என்கிறது அகம்பாவம். இதுவோ பொய்யானது, பைத்தியக்காரத்தன மானது. கடவுள் என்று ஒருவர் இருந்தால் அவர் வேண்டுமானால் ''நான்'' என்று சொல்ல முடியும். நாம் வெறும் பகுதிகள் மட்டும் தான். நம்மால் ''நான்'' என்று சொல்ல முடியாது. ''நான்'' என்ற அந்த மமதையே மனக்கோளாறானதுதான். நான் என்பதைக் கைவிடுங்கள், எல்லா மனக்கோளாறுகளும் மறைந்துவிடுகிறது.

உங்களுக்கும் மனநோய் மருத்துவ மனைகளில் இருக்கும் மனநோயாளிகளுக்கும் இடையில் பெரிய வேறுபாடு ஒன்றும் இல்லை -

ஒரு சிறிய அளவுரீதி வேறுபாடு மட்டுமே இருக்கிறது; பண்புரீதி வேறுபாடு ஏதுமில்லை, அளவுரீதியான வேறுபாடு மட்டுமே. நீங்கள் 99 பாகையில் இருக்கலாம்; அவர்கள் 100 பாகை வரை போய் விட்டிருக்கிறார்கள். நீங்களும் எந்த நிமிஷத்திலும் போய்விட முடியும் வேறுபாடு மிகப்பெரியதல்ல.

அவ்வப்போது மனநோய் மருத்துவ மனைகளுக்கு போய் கவனியுங்கள்; ஏனெனில் உங்கள் எதிர்காலமும் அப்படியே ஆகிவிட முடியும்.

ஒரு மனநோயாளியை கவனியுங்கள். அவருக்கு என்ன நேர்ந்திருக்கிறது? அதுவேதான் ஓரளவு உங்களுக்கும் நேர்ந்திருக்கிறது. ஒரு பித்தருக்கு என்ன ஆகிறது? அவரது ஆணவம் எந்த அளவுக்கு உறுதிப்பட்டு இருக்கிறது என்றால் பிற எல்லாம் பொய்யாகி போயுள்ளது. உலகம் முழுவதும் மாயமாகி இருக்கிறது; அவரது அக வுலகம் மட்டுமே — ஆணவமும் அதன் உலகமும் மட்டுமே - நிசமாக இருக்கிறது. மனநோய் மருத்துவமனைகளில் இருக்கும் ஒரு நண்பரை நீங்கள் போய்ப் பார்க்கலாம்; உங்களை அவர் திரும்பிப் பாராமல் இருக்கலாம். உங்களை அவர் அடையாளம் கண்டுகொள்ளாமல் கூட இருக்கலாம். ஆனால் தன் அருகில் அமர்ந்திருக்கும் கண்ணுக்கு தெரியாத தன் நண்பருடன் (நீங்கள்தான் அது) அவர் பேசிக் கொண்டிருக்கிறார். அவர் முன் இருக்கும் உங்களை அடையாளம் தெரிவதில்லை; ஆனால் தன் மனதின் வெறும் கற்பனையை நண்பராக இனம்கண்டு அதனுடன் பேசிக்கொண்டும் அதற்கு பதிலளித்துக் கொண்டும் இருக்கிறார் அவர்.

எவரது ஆணவம் முழு ஆதிக்கத்தை எடுத்துக்கொண்டிருக் கிறதோ அவரே ஒரு பித்தர் ஆகிறார். இதற்கு நேர் எதிராக எவர் ஆணவத்தை முழுமையாக துறந்திருக்கிறாரோ அவரே ஒரு சித்தர் ஆகிறார். அந்நிலையில் அவர் இயற்கையாக இருக்கிறார். அகங்காரம் இல்லாத நிலையில் நீங்கள் இயற்கையாக இருக்கிறீர்கள். பெருங்கடலை நோக்கிப் பாயும் ஆறுபோல் இருக்கிறீர்கள்: அல்லது தேவதாரு மரங் களினூடே கடந்துசெல்லும் காற்றைப்போல் இருக்கிறீர்கள்; அல்லது வானில் தவழும் மேகம்போல் இருக்கிறீர்கள்; அகங்காரம் இல்லாத நிலையில் நீங்கள் மீண்டும் இந்த பரந்த இயற்கையின் பகுதியாக இருக்கிறீர்கள் - இயல்பாகவும் இணக்கமாகவும் இருக்கிறீர்கள். அகங்காரத்துடன் இறுக்கம் வந்துவிடுகிறது. அகங்காரத்துடன் நீங்கள் பிளவுபட்டுவிடுகிறீர்கள். அகங்காரத்தில், எல்லா உறவுகளில் இருந்தும் உங்களை நீங்கள் துண்டித்திருக்கிறீர்கள். அப்படியே ஒரு உறவுக்குள் நீங்கள் இயங்கினாலும் அதில் மிக பாதுகாப்பாகவே நீங்கள்

செயல்படுகிறீர்கள். எதற்குள்ளும் முழுமையாக போக அகங்காரம் உங்களை அனுமதிப்பதில்லை; எப்போதும் தன்னை பின்னிழுத்துக் கொள்கிறது அது.

நீங்களே பேரண்டத்தின் மையம் என நினைத்தீர்களானால் நீங்கள் மனநோயாளியாக இருக்கிறீர்கள். பெருங்கடலின் ஓர் அலையே நீங்கள், முழுமையின் ஒரு பகுதியே நீங்கள், முழுமையுடன் இணைந்து இருப்பவரே நீங்கள் என நினைத்தீர்களானால் பின் நீங்கள் ஒருபோதும் மனநோயாளியாக மாட்டீர்கள். பதஞ்சலி இப்போது இருந்தால் நான் செய்துகொண்டிருப்பதைத்தான் அவரும் செய்வார். மேலும் சூழ்நிலைகள் மாறலாம், ஆனால் மனிதன் ஏறக்குறைய மாறாமலேதான் இருக்கிறான் என்பதை நன்றாக நினைவில் கொள்ளுங்கள்.

இப்போது தொழில்நுட்பம் புதியதாக இருக்கிறது. பதஞ்சலியின் நாள்களில் இவை இருக்கவில்லை - புதுவித வீடுகள், புதுவித சாதனங்கள் மனிதனைச் சுற்றி உள்ள எல்லாமே மாறி உள்ளது. ஆனால் மனிதன் அப்படியேதான் இருக்கிறான். பதஞ்சலியின் காலத்திலும் மனிதன் அப்படியே தான் இருந்தான்; ஏறக்குறைய மாறாமலே இருந்தான். மனிதனுக்குள் பெரிதாக எதுவும் மாறிவிடவில்லை: இதை நினைவில் கொண்டாகவேண்டும். இல்லாவிட்டால் நவீன மனிதர் மட்டும் ஏதோ ஒருவிதத்தில் சபிக்கப்பட்டவராக இருக்கிறார் என ஒருவர் கருதத் தொடங்குகிறார். இல்லை. நீங்கள் ஒரு கார் பைத்தியமாக இருக்கலாம். ஒரு பந்தயக் காரை நீங்கள் விரும்புவீர்கள். மிக இறுக்கமாக இருக்கிறீர்கள். மிகுந்த மனபதட்டம் அதனால் உருவாக்கப்படுகிறது. பதஞ்சலியின் காலத்தில் கார்கள் இல்லைதான்; ஆனால் மாட்டு வண்டிகளின் மேல் பைத்தியமாக இருந்தார்கள் மக்கள். இன்றும் கூட ஒரு இந்திய கிராமத்துக்கு நீங்கள் போனால் விரைவாக ஓடக்கூடிய ஒரு மாட்டு வண்டியை வைத்திருப்பவர், ரோல்ஸ் ராய்சை வைத்திருக்கும் ஒரு லண்டன் வாசி போலவேதான் இருக்கிறார்: மாட்டு வண்டியாலோ ரோல்ஸ் ராய்சாலோ எந்த வேறுபாடும் ஏற்படுவதில்லை; ஆணவம் ஒரே விதமாகவே நிறைவுகொள்கிறது. ஒரு சிற்றூரில் உள்ள மாட்டு வண்டியும் அதையேதான் செய்கிறது. பொருள்கள் பெரிய வேறுபாடு எதையும் உண்டாக்குவதில்லை. மனிதமனம் தன்னல நாட்டம் உடையதாக இருந்தால் எப்பொழுதும் ஏதாவது ஒன்றை கண்டுபிடித்துக்கொள்ளும் எனவே அதுவல்ல பிரச்சனை.

நவீன மனிதன் நவீனமானவனாக இல்லை. நவீன உலகமே நவீனமானதாக இருக்கிறது. மனிதன் மிகவும் பழமையானவனாகவும்

வயோதிகனாகவுமே இருக்கிறான். நீங்கள் நவீனமானவர் என நீங்கள் நினைக்கிறீர்களா? உங்கள் முகங்களை நான் பார்க்கும்போது அவற்றில் பழங்காலத்து முகங்களே தெரிகின்றன. பலப்பல பிறவிகளாக நீங்கள் இங்கு இருந்திருக்கிறீர்கள். இருந்தும் ஏறக்குறைய பழைய விதமாகவே நீங்கள் தேங்கி இருக்கிறீர்கள்; எதையும் கற்றுக் கொண்டிருக்கவில்லை. ஏனெனில் ஏற்கனவே செய்ததைத்தான் திரும்பவும் செய்து கொண்டிருக்கிறீர்கள். திரும்பத்திரும்ப அதே பழைய தேய்ந்துபோன பாதையிலேயே போகிறீர்கள். பொருள்கள் மாறியுள்ளன. ஆனால் மனிதன் மாறாமலேயே இருக்கிறான்; பெரிதாக எதுவும் மாறிவிட வில்லை. மாற்றுவதற்கான நடவடிக்கையை உங்கள் கையில் எடுக்காத வரை பெரிதாக எந்த மாற்றமும் ஏற்பட்டுவிட முடியாது. அடிப்படைப் பண்புமாற்றமே உங்களின் இதயமாக ஆகாதவரை, அடிப்படைப்பண்பு மாற்றமே உங்களின் இதயத்துடிப்பாகவே ஆகாதவரை, மனத்தின் மடத்தனத்தையும் அதனால் உண்டாகிற அவலத்தையும் நீங்களே புரிந்து கொள்ளாதவரை... அப்போதுதான் அதிலிருந்து நீங்களே வெளியே பாய்கிறீர்கள்.

மனம் மிகவும் பழசாயிருக்கிறது. மனம் மிக மிக பழமையானது. உண்மையில் மனத்தால் ஒருபோதும் புதிதாக இருக்கமுடியாது. அதனால் ஒருபோதும் நவீனமாக இருக்கமுடியாது. ஏனெனில் மன மற்றது மட்டுமே புத்தம்புதிதாக இருக்க முடியும் - ஒவ்வொரு கணமும் புதிதாக விளங்க முடியும். மனமற்றது ஒருபோதும் சேமிப்பதில்லை. அதன் கண்ணாடி எப்போதும் தெளிவாக இருக்கிறது. அதன்மேல் எந்த மாசும் படிவதில்லை. மனம் ஒரு சேகரிப்பான். அது சேகரித்துக் கொண்டே போகிறது. மனம் எப்போதுமே பழையது. மனம் ஒருபோதும் புதிதாக முடியாது. மனம் ஒருபோதும் அசலானதாக இருக்க முடியாது. மனமற்றது மட்டுமே அசலானது.

எனவேதான் அறிவியலார்கூட, குறிப்பிட்ட ஒரு கண்டுபிடிப்பு செய்யப்படும்போது அதை செய்தது மனம் அல்ல, மனதின் இடைவெளியின் போது மட்டுமே - மனம் நிலவாத போது மட்டுமே - சில நேரங்களில் தூக்கத்தின் போதே அது கண்டுபிடிக்கப்படுகிறது என கருதுகிறார்கள்.

ஆர்க்கிமிடீஸ் போலவேதான். ஒரு குறிப்பிட்ட கணித சிக்கலை தீர்க்க அவர் முயன்றபடியே இருந்தார். ஆனால் அவரால் அதற்கு தீர்வுகாணமுடியவில்லை. தன் மனத்தைக் கொண்டு அவர் முயன்றார், முயன்றார்; ஆனால் தனக்கு தெரிந்துள்ள விடைகளை மட்டுமே மனத் தால் தரமுடியும். முன்பின் தெரியாத எதையும் அதனால் தர முடியாது. அது ஒரு கணினி: அதற்குள் எதையெல்லாம் நீங்கள் ஊட்டி

இருக்கிறீர்களோ அதற்கு மட்டுமே அது பதிலளிக்க முடியும். புதிதாக எதையும் அதனிடமிருந்து உங்களால் பெறமுடியாது. புதிதான ஒன்றுக்கு விடை அளிக்குமாறு பரிதாபமான மனதிடம் எப்படி எதிர் பார்க்க முடியும்? அறவே இயலாத செயல் அது! உங்கள் பெயர் எனக்கு தெரிந்திருந்தால் அதை என்னால் நினைவுகூற முடியும். ஏனென்றால் நினைவும் நினைவு கூறலும்தான் மனம் என்பது. ஆனால் உங்கள் பெயரே எனக்கு தெரிந்திராவிட்டால் நான் என்னதான் முயன்றாலும், அங்கு இல்லாததை எவ்வாறு என்னால் நினைவுகூற முடியும்?

பின் திடீரென அது நிகழ்ந்தது. ஆர்க்கிமிடீஸ் கடுமையாக-மிக கடுமையாக முயன்றார். ஏனென்றால் அவருக்காக மன்னர் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். ஒருநாள் காலையில் நிர்வாணமாக அவர் குளித்துக்கொண்டிருந்த போது-நீருக்குள் இளைப்பாறிக்கொண் டிருந்த போது திடீரென அது குமிழியிட்டு வெளிவந்தது; வெற்றிடத்தி லிருந்து வந்ததுபோல் மேல்வந்தது. உடனே குளியல் தொட்டியி லிருந்து வெளியே குதித்தார். மனமற்ற ஒரு நிலையில் அவர் இருந் தார். தான் நிர்வாணமாக இருப்பதுப்பற்றிக்கூட அவரால் சிந்திக்க முடியவில்லை. ஏனெனில் அதுவும் மனதின் பகுதிதானே. தெருவில் நிர்வாணமாகப் போனால் மக்கள் தன்னை பித்தன் என்று நினைப் பார்கள் என்பதைக் கூட அவரால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. சமுதாயத்தால் வழங்கப்பட்டிருக்கிற அந்த மனம் அப்போது அங்கு இல்லை; அது செயல்பட்டுக் கொண்டிருக்கவில்லை. மனமற்ற நிலை யில் - ஒரு வித சட்டோரி நிலையில் இருந்தார் அவர். ''யுரேகா-யுரேகா!'' அதாவது ''கண்டுகொண்டேன், கண்டுக் கொண்டேன்!'' என்று கத்திக் கொண்டே தெருவில் இறங்கி ஓடினார் அவர். அவருக்கு பைத்தியம் தான் பிடித்துவிட்டது என்றே மக்கள் நினைத்தார்கள்: ''அம்மணமாக தெருவில் ஓடி எதை கண்டு கொண்டீர்?'' அவர் பிடிக்கப்பட்டார். ஏனெ னில் ''யுரேகா!''என்று கத்தியபடி அரசனின் மாளிகைக்குள் நுழைய அவர் முயன்று கொண்டிருந்தார். அவர் கைது செய்யப்பட்டிருக்கக் கூடும். அதற்குள் நண்பர்கள் அவரைப் பிடித்து வீட்டுக்கு கொண்டு சென்றார்கள். ''என்ன செய்து கொண்டிருக்கிறீர்? எதையாவது நீர் கண்டுபிடித்திருந்தாலும்கூட முறையாக உடை அணிந்து பின் செல்லும், இல்லாவிட்டால் நீர்தான் தொல்லைக்குள்ளாவீர்'' என்றார்கள்.

மனத்தின் இரு கணங்களுக்கு இடையில் எப்போதும் ஒரு மனமற்ற ஒரு இடைவெளி உள்ளது. எண்ணங்களுக்கு இடையில் எண்ணமற்ற ஒரு இடைவேளை உள்ளது. முகில்களினூட்ட நீலவானத்தை நீங்கள் காண முடியும். மனமற்ற தான் உங்கள் இயல்பு நிலை. அங்கு எண்ணமு

மில்லை, எதுவுமில்லை... மிகப் பரந்த வெறுமையே உள்ளது, நீல வானின் தன்மையே உள்ளது; அதில் மிக மேலோட்டமாக மிதந்து கொண்டிருக்கிறதுதான் மனம்.

மேலும், பலருக்கும் இது நிகழ்ந்து வந்திருக்கிறது: கியூரி அம்மையாருக்கு இது நிகழ்ந்தது. ஒரு கண அ-மன நிலைக்காக நோபல் பரிசை வென்றார் அவர். அவர் வேலை செய்து கொண்டிருந் தார். இங்கும் ஒரு கணித சிக்கல்தான். அதற்காக கடுமையாக உழைத்துக் கொண்டிருந்தார். ஒரு பலனும் இல்லை. மாதங்கள் கடந்தன. பின் ஓர் இரவு, திடீரென உறக்கத்திலிருந்து எழுந்தார், மேசை அருகில் சென்றார், விடையை எழுதினார், படுக்கைக்கு திரும்பிவிட்டார், இதைஎல்லாம் மறந்துவிட்டார். காலையில் மேசை அருகே வந்தபோது அவரால் நம்பமுடியவில்லை; விடை அங்கே இருந்தது. அதை எழுதிவைத்தது யார்? பின்தான் மெல்ல மெல்ல, ஒரு கனவுபோல, அவருக்கு நினைவு வந்தது: ''இரவில் அது நிகழ்ந்தது...'' அவரே எழுதிவைத்திருந்தார், கையெழுத்தும் அவ ருடையதே.

ஆழ்ந்த உறக்கத்தில் மனம் செயலிழக்கிறது; மனமற்றது செயல்படுகிறது. மனம் எப்போதும் பழையதே. மனமற்றதோ எப்போதும் புதியது, இள்மையானது, அசலானது. மனமற்றது எப்போதும் மன மற்றது காலையில் காணும் பனித்துளியைப்போல் உள்ளது; முற்றி லும் புத்தம்புதிதாய் தெள்ளத்தெளிவாய் இருக்கிறது. மனம் எப்போ தும் அசுத்தமாக இருக்கிறது; அப்படித்தான் அது இருக்கும். அசுத் தத்தை சேகரித்துக் கொண்டிருக்கிறது அது. எண்ணங்களே அந்த அசுத்தம்.

உங்களை நான் பார்க்கிற போது, உங்கள் மனம் மிகவும் பழங்காலத்ததாக இருப்பதை நான் பார்க்கிறேன். பல முற்பிறவிகள் அதில் சேகரமாகியுள்ளன. ஆனால் ஆழத்துக்குள்ளும் என்னால் பார்க்க முடிகிறது. அங்கேதான் உங்கள் அ-மனம் உள்ளது. இதுவோ அறவே காலத்துக்கு சொந்தமானதல்ல; எனவே அது பழங்காலத்ததும் அல்ல, நவீனமானதும் அல்ல. மனிதன் எப்போதும் பழையவன். ஆனால் அவனுக்குள் இருக்கும் ஒன்று உணர்வு பழையதும் அல்ல, புதியதும் அல்ல. அல்லது எப்போதுவே அது புத்தம் புதியதாக இருக்கிறது.

**ஆறாவது கேள்வி- மிக முக்கியமான கேள்வி:**

**உங்கள் பேருரைகளின்போது எங்களில் நிறையபேர் அப்படியே தூங்கி போகிறோம். அல்லது தூக்கமயக்கமான ஒரு நிலைக்குள் நுழைகிறோம். அப்படி நடப்பதை நீங்களும் கவனித்திருப்பீர்கள். இந்த தூக்க மயக்கமானது**

**படைப்புத் தன்மையான, பயனுள்ள ஏதேனும் ஒரு நிகழ் முறையின் பகுதியா? இதைக் குறித்து குற்ற உணர்வு கொள்ளாமல் இது நிகழ நாங்கள் அனுமதிக்க வேண்டுமா? அல்லது தொடர்ந்து விழிப்பாக இருப்பதற்கு கூடுதல் முயற்சி மேற்கொள்ள வேண்டுமா?**

இது சற்று சிக்கலானது. இதில் பல விதங்கள் உள்ளன. முதலாவதாக, மிக உன்னிப்பாக என்னை நீங்கள் கவனித்தால் ஒரு வித தூக்க மயக்கம் வருகிறது. அப்போது அது தூக்கம் போன்றதல்ல; அதை விடவும், வசியம் போன்றதே. என்னுடன் நீங்கள் எந்தளவுக்கு ஆழ மாக இசைகிறீர்கள் என்றால் உங்கள் மனம் செயல்படாதிருக்கத் தொடங்குகிறது. நீங்கள் வெறுமனே என்னை கவனிக்கிறீர்கள். அப்படி வெறுமனே என்னை கவனித்துக்கொண்டிருப்பதே ஒரு தாலாட்டுபோல் ஆகிறது. இதுதான் நிலைமை என்றால் அதில் ஒரு வித தூக்கமயக்கம் இருக்கிறது. ஆனால் இவ்வித தூக்க மயக்க மானது, என்னை நீங்கள் மிக உன்னிப்பாக கவனித்தால்மட்டுமே வரு கிறது – அப்படியானால் அது தூக்கம்அல்ல. அழகானது அது. அது குறித்து நீங்கள் குற்ற உணர்வு கொள்ள வேண்டியதில்லை. என்னை கவனிப்பதால் அது உருவாகியிருந்தால் அதில் எந்த சிக்கலும் இல்லை. உண்மையில் இந்த நிலைமைதான் ஏற்பட வேண்டும். ஏனென்றால் அந்நிலையில் நீங்கள் அதிகமதிக ஆழமாக கவனித்துக் கொண்டிருக்கி றீர்கள். அந்நிலையில் நான் உங்களை அதிகமதிக ஆழமாக ஊடுருவிக் கொண்டிருக்கிறேன். உங்கள் மனம் செயல் படாதிருக்கிற காரணத்தால் ஒரு வித தூக்கமயக்கமாக நீங்கள் உணர்கிறீர்கள்; இளைப்பாறு தலாக இருக்கிறீர்கள் நீங்கள். அது ஒரு கட்டற்ற நிலை. உங்களை நான் மென்மேலும் ஆழமாக ஊடுருவ என்னை நீங்கள் அனுமதித்துக் கொண்டிருக்கிறீர்கள். இது நல்லதுதான். இதில் கெடுதல் ஒன்றும் இல்லை. அது ஒரு செயலற்றநிலை என்பதால்தான் தூக்கமயக்கமாக உணர்கிறீர்கள் நீங்கள். செயலூக்கத்துடன் நீங்கள் இல்லை; அதற்கு தேவையும் இல்லை.

என்னை நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கும்போது நீங்கள் செயல்பட்டுக் கொண்டிருக்க தேவையில்லை. ஏனென்றால் நீங்கள் செயல்பட்டுக்கொண்டு இருந்தால் உங்கள் மனம் பெயர்த்துரைத்துக் கொண்டே போகும். எனவே அப்படி செயல்படாதிருப்பது அழகானதே; அதைக்குறித்து குற்ற உணர்வுகொள்ளத் தேவையில்லை. அதை அனுமதியுங்கள்; அதை குலைக்கும் எந்த முயற்சியும் செய்யாதீர்கள். உங்களுக்குள் ஆழமாக நான் ஊன்றப்படுவேன். இதுவோ உதவிகரமானதே.

இந்தியாவில் நாங்கள் இதற்கொரு தனிப்பெயர் வைத்திருக் கிறோம். இதை பதஞ்சலி ''யோக நித்திரை'' என்கிறார் - அதாவது யோகத்தின் வழிவரும் தூக்கம். எதையுமே ஈடுபாட்டுடன் செய்தால், மிகவும் இளைப்பாறுதலாக நீங்கள் உணர்கிறீர்கள். அந்த இளைப் பாறுதல் தூக்கம்போல் தெரிகிறது. ஆனால் அது தூக்கம் அல்ல. அதைவிட, வசியத்தை ஒத்ததே அது. வசியம் என்றாலும் உறக்கம் என்றே பொருள். ஆனால் வேறு விதமான ஒரு உறக்கம். இரண்டு பேர் ஆழ்ந்த ஒரு இசைவுடன் இருப்பதில் வரும் கிறக்கம்... உங்களை நான் வசியம் செய்தால் என்னை மட்டுமே நீங்கள் கவனிக்க முடியும்; வேறு எதையும் கவனிக்க முடியாது. வசியப்படுத்தப்படும் ஆள் வசியப்படுத்தும் ஆளை மட்டுமே கவனிக்கிறார், வேறு எவரையும் கவனிப்பதில்லை. தனித்தன்மையுள்ள முறையில் அவர் கவனம் குவிக்கப்படுகிறது. இந்த தனிச்சிறப்பான கவனக்குவிப்பில் உணர்வு மனம் செயல்படுவதில்லை; உணர்வற்ற மனம் செயல்படுகிறது. உங்களின் ஆழம் என் ஆழத்தை கவனிக்கிறது. ஆழத்திலிருந்து ஆழத்துக்கான ஒரு தொடர்பு அது. மனம் தேவைப்படுவதில்லை. ஆனால் இங்கு நினைவில் இருத்த வேண்டிய செய்தி என்னவென் றால் என்னை நீங்கள் மிக உன்னிப்பாக கவனித்தாக வேண்டும். அப்போது மட்டுமே அது நிகழும்.

அடுத்தது, இரண்டாவது விதமான உறக்கம்: இதில் என்னை நீங்கள் கவனித்துக்கொண்டு இருப்பதில்லை. மாறாக நீண்ட காலமாக இங்கே நீங்கள் இருந்து கொண்டிருப்பதாலேயே தூக்க கலக்கமாக உணர்கிறீர்கள் நீங்கள்; என்னை கவனித்துக் கொண்டிருப்பதால் அல்ல. அல்லது நான் சொல்லிக் கொண்டிருப்பதெல்லாம் உங்கள் தரத்துக்கு அதிகப்படியாக இருக்கிறது. ஓரளவு சலிப்பு ஏற்படுகிறது. அல்லது நான் கூறிக் கொண்டிருப்பதெல்லாம் ஒரே மாதிரி இருப்பதாக தோன்றுகிறது - இது உண்மைதான். ஏனென்றால் நான் கூறுவது எதுவானாலும் அது ஒரே சுரத்திலேயே இருக்கிறது. ஒரே சுரத்தையே கோடிக்கணக்கான வழிகளில் நான் இசைத்துக் கொண்டிருக்கிறேன்: பதஞ்சலியும் புத்தரும் யேசுவும் வெறும் சாக்குப்போக்குகள்தான். ஒரே ஒரு சுரத்தையே நான் இசைத்துக் கொண்டிருக்கிறேன். அது அலுப்பு தட்டுவதாக இருக் கிறது. அது ஒரேமாதிரியாக இருக்கிறது என நீங்கள் உணர்ந்தால், கொஞ்சம் சலிப்பாக உணர்ந்தால் அல்லது அதை உங்களால் புரிந்து கொள்ள முடியாமல் போனால், உங்கள் மட்டத்துக்கு அது அதிகப் படியாக இருந்தால், அல்லது உங்கள் புரிதலுக்கு எட்டாமலே அது போய்க்கொண்டிருந்தால் அப்போதும் நீங்கள் தூக்க கலக்கமாக உணரமுடியும். ஆனால் அந்த தூக்கம் நல்லதல்ல. ஏனென்றால் உண்மையில் நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கவில்லை; தூங்கிக் கொண்டு

இருக்கிறீர்கள். எனவே உடலால்மட்டும் ஏன் இங்கிருப்பது? அதற்கு அவசியமில்லை.

மூன்றாவது ஒரு விதமும் உள்ளது. இரண்டாவது விதம் குறித்து உண்மையில் நீங்கள் குற்ற உணர்வு கொள்ள வேண்டும். விழிப் போடிருப்பதற்கும் என்னை கவனிப்பதற்கும் கூடுதல் முயற்சி எடுக்க வேண்டும். அப்போது முதல்விதம் நிகழலாம் என்பதற்கு வாய்ப்புள்ளது. அடுத்து மூன்றாவது ஒரு விதம் உள்ளது. இது கவனிப்பதுடனும் தொடர்புடையதல்ல, அல்லது நீங்கள் ஒரு சலிப்பான நிலையில் இருப்பதுடனும் தொடர்புடையதல்ல. இது உங்கள் உடல்நிலையி லிருந்து வருகிறது. இரவில் நீங்கள் நன்றாக தூங்கியிருக்காமல் இருக்க லாம். மிக சிலரே நன்றாக தூங்குகிறார்கள். எனவே இரவில் நீங்கள் நன்றாக தூங்கி இராத போது நீங்கள் குறிப்பிட்ட அளவு களைப்பாக இருக்கிறீர்கள். தூங்குவதற்கு ஏங்குகிறீர்கள். அந்நிலையில் இங்கே ஒரே ஆசனத்தில், திரும்பத்திரும்ப ஒரே மனிதனுடன் இருந்துகொண் டிருப்பதால், திரும்பத்திரும்ப ஒரே குரலையே கேட்டுக் கொண்டிருப்ப தால் உங்கள் உடல் தூக்ககலக்கமாக உணர தொடங்குகிறது. இது உங்கள் உடலில் இருந்து வருவது.

இதுதான் நிலைமை என்றால் பின் உங்கள் தூக்கத்துக்கு ஏதாவது செய்யுங்கள். அது அதிக ஆழமாக்கப்பட வேண்டும். காலம் பெரிய விசயமல்ல. எட்டு மணி நேரம் நீங்கள் தூங்க முடியும். அது ஆழமாக இல்லை என்றால் தூக்கம் போதவில்லை என நீங்கள் உணர்வீர்கள். ஆனால் ஆழம் போதவில்லை என்பதே பிரச்சனை.

ஒவ்வொரு இரவும் நீங்கள் தூங்கப் போகும் முன் ஒரு சிறு உத்தியை செய்துபாருங்கள்; அது மிகப் பெரிய அளவில் உதவும்: விளக்குகளை அணைத்து விடுங்கள். தூங்க ஆயத்தமாக உங்கள் படுக்கையில் அமருங்கள். பதினைந்து நிமிடங்கள் அமர்ந்திருங்கள். கண்களை மூடிக்கொண்டு பொருளற்ற ஏதாவது ஒரே மாதிரியான ஒரு ஒலியை எழுப்ப தொடங்குங்கள். காட்டாக, லா-லா-லா. வேறு புதிய ஒலிகளை மனம் வழங்குவதற்கு காத்திருங்கள். நினைவில் கொள்ள வேண்டிய ஒரே விசயம், அந்த ஒலிகளோ சொற்களோ நீங்கள் அறிந்துள்ள எந்த மொழியை சேர்ந்ததாகவும் இருக்கக்கூடாது என்பதுதான். ஆங்கிலம், ஜெர்மானியம், இத்தாலியம் ஆகிய மொழிகள் உங்களுக்கு தெரியும் என்றால் அவை ஆங்கிலம், ஜெர்மானியம், இத்தாலியம் ஆகிய மொழிகளை சேர்ந்ததாக இருக்கக்கூடாது. நீங்கள் அறிந்திராத வேறெந்த மொழியையும் பயன்படுத்துங்கள். காட்டாக, தீபெத்தியம், சீனம், ஜப்பானியம்; ஆனால் ஜப்பானியம் உங்களுக்கு தெரியும் என்றால் பின் அதை பயன்படுத்தக்கூடாது.

அப்போது இத்தாலியம் சிறப்பானது. நீங்கள் அறியாத எந்த மொழியையும் பேசுங்கள். முதல் நாள் மட்டும் சில நிமிடங்களுக்கு மட்டும் உங்களுக்கு இது கடினமாக இருக்கும். ஏனெனில் நீங்கள் அறியாத ஒரு மொழியை எப்படி நீங்கள் பேசுவீர்கள்? அதை பேச முடியும். ஒருதடவை அது தொடங்கியதுமே, எவ்வித ஒலிகளும், பொருளற்ற சொற்களும் உணர்வுமனத்தை அணைப்பதற்கும் உணர்வற்ற மனத்தை பேச அனுமதிப்பதற்கும்...

உணர்வற்ற மனம் பேசும்போது, உணர்வற்ற மனத்துக்கு எந்த மொழியும் தெரியாது. இது மிகமிக பழைமையான ஒரு முறை. பழைய ஏற்பாட்டில் இது வருகிறது. அந்நாட்களில் அது 'குளோசோலாலியா' என வழங்கப்பட்டது. அமெரிக்காவில் உள்ள சில திருச்சபைகள் இப்பவும் அதை பயன்படுத்துகின்றன. அவர்கள் அதை 'அந்நிய மொழிகளில் பேசுதல்' என அழைக்கிறார்கள். அற்புதமான ஒரு முறை அது; உணர்வற்ற மனத்துக்குள் மிக ஆழமாகவும் ஊடுருவியும் போகக்கூடிய முறைகளில் ஒன்று அது. லா-லா-லா என தொடங்கி பிறகு வாயில் வரும் எதனோடும் தொடர்ந்து மேற்செல்லுங்கள். முதல் நாள் மட்டுமே கொஞ்சம் கடினமாக உணர்வீர்கள். ஒரு முறை அது கைவந்ததுமே அதன் லாவகம் உங்களுக்கு பிடிபட்டுவிடும். பின் பதினைந்து நிமிடங்களுக்கு, உங்களுக்கு வந்திருக்கும் மொழியை பயன்படுத்துங்கள்; ஒரு மொழியாகவே அதை பயன்படுத்துங்கள். உண்மையாகவே அதில் நீங்கள் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். உணர்வுமனம் மிக ஆழமான முறையில் இளைப்பாற இது உதவும். பதினைந்து நிமிடங்கள் மட்டும். பின் அப்படியே படுத்து தூங்கப் போங்கள். உங்கள் தூக்கம் கூடுதல் ஆழம் பெறும். ஒரு சில வாரங்களுக்குள் உங்கள் உறக்கத்தில் ஒரு ஆழத்தை நீங்கள் உணர்வீர்கள். காலையில் நீங்கள் முற்றிலும் புத்துணர்வாக உணர்வீர்கள். அதன்பின் நானே முயன்றாலும் என்னால் உங்களை தூங்கச் செய்ய முடியாது போகும்.

முதல் விதம் அழகானது. மூன்றாவது விதம் உடலின் பற்றாக்குறை; அது ஒரு நோய்க்கூறு. மூன்றாவதற்கு மருத்துவம் செய்யவேண்டும். முதலாவது அனுமதிக்கப்பட வேண்டும். இரண்டாவது விதத்துக்கு நீங்கள் குற்ற உணர்வு கொள்ள வேண்டும்; அதிலிருந்து வெளியேற எல்லா முயற்சியும் எடுக்க வேண்டும்.

**கடைசி கேள்வி:**

**நவீன மனிதன் மிகுந்த அவசரத்தில் இருக்கிறான். பதஞ்சலியின் முறைகளோ நீண்டகாலம் எடுப்பதாக**

**தோன்றுகிறது. எனவே இந்த பேச்சுகளை எல்லாம் நீங்கள் யாருக்கு பேசிக்கொண்டு இருக்கிறீர்கள்?**

ஆம், நவீன மனிதன் அவசரத்தில்தான் இருக்கிறான். ஆகவே அதற்கு நேர் எதிரான நிலையே பயன்படும். நீங்கள் அவசரத்தில் இருந்தால் பின் பதஞ்சலியே பயன்படுவார். ஏனெனில் அவர் அவசரத் தில் இல்லை. அவரே இதற்கு மாற்று மருந்து. உங்கள் மனதுக்கு ஒரு மாற்று தேவை. இதை இந்த முறையில் பாருங்கள்: ஏனெனில் குறிப் பாக மேலைமனம் (மேலும், இன்றும் வேறு எந்த மனமும் இல்லவும் இல்லை; ஏறக்குறைய எல்லா இடத்திலும் மேலைமனம் மட்டுமே உள்ளது, கீழை உலகிலும்கூட.) அவசரத்தில் உள்ளது. எனவேதான் ஸென்னில் அது அக்கறை உள்ளதாக மாறி இருக்கிறது. ஏனெனில் உடனடி ஞானம் என்ற வாக்குறுதியை ஸென் வழங்குகிறது. உடனடி காப்பிபோல் தோன்றுகிறது ஸென். எனவே அதற்கு ஒரு கவர்ச்சி ஏற்பட்டுள்ளது. ஆனால் ஸென் உதவாது என்பது எனக்கு தெரியும். ஏனெனில் ஸென் என்பதால் அல்ல அந்த கவர்ச்சி, உடனடி என்பதால் தான் அந்த கவர்ச்சி ஆயின் அந்நிலையில் நீங்கள் ஸென்னை புரிந்துகொள்வதில்லை. மேற்கில் ஸென்பற்றி பரப்பப்படும் வதந்திகள் ஏறக்குறைய எல்லாமே பொய்யானவையே. அவசர மனத்தின் ஒரு தேவையை அது நிறைவுசெய்கிறது. ஆனால் ஸென்னுக்கு அது உண்மையானது அல்ல. நீங்கள் ஜப்பானுக்குப் போய் ஸென்காரர் களைக் கேட்டால், முதல் சட்டாரி நிகழ்வதற்கே முப்பது ஆண்டுகள் நாற்பது ஆண்டுகள் அவர்கள் காத்திருக்கிறார்கள். உடனடி ஞானத்துக்கு கூட ஒருவர் கடினமாக உழைக்க வேண்டி இருக்கிறது. ஞானோதயம் உடனடியானது; ஆனால் அதற்கான ஆயத்தம் மிக நெடியது. இது, நீரை நீங்கள் கொதிக்க வைப்பதைப் போன்றதே. நீரை சூடாக்குகிறீர்கள். குறிப்பிட்ட ஒரு பாகையில் – நூறாவது பாகையில் – திடீரென நீர் கொதித்து ஆவியாகிறது. சரிதான்; கொதித்து ஆவியாவது திடுமென நிகழ்வதுதான். ஆனால் வெப்பமூட்டுவதை நூறாவது பாகைவரை நீங்கள் கொண்டுவந்தாக வேண்டி இருக்கிறது. வெப்பமேற்ற காலம் எடுக்கும். மேலும் வெப்பம் ஏற்றுவது உங்கள் தீவிரத்தையே பொறுத்தது.

மேலும் நீங்கள் அவசரத்தில் இருந்தால் உங்களிடம் எந்த சூடும் இருக்காது. ஏனெனில் அவசரத்தில் ஸென்னின் சட்டோரியை அல்லது ஞானோதயத்தை போகிற போக்கிலேயே – அப்படி அதைப் பெறமுடிந்தால், விலைக்கு வாங்க முடிந்தால் – நீங்கள் பெறவேண்டி இருக்கும். ஓடிய படியே, யார் கைகளில் இருந்தாவது அதை தட்டிப்பறிக்கவே நீங்கள் விரும்புவீர்கள். அந்த முறையில் அதை அடைய முடியாது. பருவகாலப் பூக்கள் உள்ளன. விதைகளை விதைக்கிறீர்கள்,

மூன்று வாரங்களில் செடிகள் தயாராகிவிடுகின்றன. ஆனால் மூன்று மாதங்களுக்குள் அவை பூத்து முடிந்து மறைந்து விடுகின்றன, நீங்கள் அவசரத்தில் இருந்தால் பின், தியானம்-யோகம்-ஸென் இவற்றில் ஈடுபாடு காட்டுவதைவிட போதைப் பொருள்களில் காட்டுவது மேல். ஏனெனில் போதைப்பொருள்கள் உங்களுக்கு கனவுகளை - உட னடிக் கனவுகளை தரமுடியும். சில நேரங்களில் நரகக் கனவுகள். சில நேரங்களில் சொர்க்கக் கனவுகள். அப்படியானால் தியானத்தை விட கஞ்சாவே மேல். நீங்கள் அவசரத்தில் இருந்தால் பின் நித்தியமான எதுவும் உங்களுக்கு நிகழமுடியாது. ஏனெனில் நித்தியம் நிகழ் வதற்கு நித்திய காத்திருப்பு தேவைப்படுகிறது. நித்தியமானது உங்க ளுக்கு நிகழவேண்டும் என நீங்கள் கேட்டுக்கொண்டிருந்தால் அதற்கு நீங்கள் ஆயத்தமாகவும் வேண்டி இருக்கும். அவசரம் பயன்படாது.

ஸென்னில் ஒரு பொன்மொழி உண்டு: அவசரப்பட்டால் அடையவே மாட்டீர்கள். சும்மா உட்கார்ந்திருந்தால்கூட உங்க ளால் அடைந்துவிட முடியும்; ஆனால் அவசரத்தில் நீங்கள் ஒரு போதும் அடைய முடியாது அந்த அவசரமே ஒரு தடையாகிறது.

நீங்கள் அவசரப்பட்டால் பின் அதற்கு பதஞ்சலிதான் மாற்று. உங்களுக்கு எந்த அவசரமும் இல்லை என்றால் பின் ஸென்னும் கூட சாத்தியமாகும். இந்த கூற்று பார்வைக்கு முரண்பாடாக இருக்கும்; ஆனால் அது அப்படி அல்ல. யதார்த்தம் இப்படித்தான், முரண் பாடாகவே இருக்கிறது. நீங்கள் அவசரத்தில் இருந்தால் பின் ஞானநிலைபேறு உங்களுக்கு நிகழ பல பிறவிகள் நீங்கள் காத் திருக்க வேண்டி வரும்; அவசரப்படாவிட்டால் இக்கணமே அது உங்களுக்கு நிகழவும் முடியும்.

எனக்கு மிகவும் பிடித்த ஒரு கதையை உங்களுக்கு சொல்லு வேன். பழங்காலத்து இந்திய கதைகளில் ஒன்று இது: பூவுலகத்துக்கும் மேலுலகத்துக்கும் இடையில் தூதுவராக இருந்த நாரதர் என்ற புராண பாத்திரம், மேல் உலகுக்கு கிளம்பிக்கொண்டிருந்தார். ஒரு அஞ்சல்காரர் போலவே அவர் செயல்பட்டார். மேலும் கீழும் தொடர்ச்சியாக போய் வந்து கொண்டிருந்தார். மேலிருந்து சேதிகள் கொண்டு வருவார்; கீழிருந்து சேதிகள் கொண்டு போவார். தன் வேலையை அவர் விடாமல் செய்கிறார். மேல் உலகத்துக்கு அவர் போய்க் கொண்டிருந்தார். அப்போது அவர் போகும் பாதையில் மிக மிக வயதான துறவி ஒருவர் ஒரு மரத்தடியில் தன் மாலையுடன் தன்

மணிகளுடன் ராமன் பெயரை உச்சரித்துக் கொண்டிருந்தார். அவர் நாரதரைப் பார்த்து சொன்னார், ''எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்? மேல் உலகத்துக்கா போய்க் கொண்டிருக்கிறீர்? அப்படியானால் எனக்கு ஒரு உதவி செய்யும். இன்னும் எவ்வளவு காலத்துக்கு நான் காத்திருக்க வேண்டும் என்பதை கடவுளிடம் கேட்டு வாரும்'' அந்த கேள்வியிலேயே அவசரம் தெரிகிறது. ''மேலும், மூன்று பிறவிகளாக நான் தியானமும் தவங்களும் செய்து கொண்டிருக்கிறேன், செய்ய முடியக்கூடியதை எல்லாம் செய்துமுடித்து விட்டேன் என்பதையும் அவருக்கு நினைவுபடுத்தும். எதற்கும் ஒரு எல்லை இருக்கிறது'' என்றார் வயதான துறவி. ஒரு வற்புறுத்தல்- எதிர்பார்ப்பு-ஆத்திரம் ... ''நான் போய் கேட்கிறேன்'' என்கிறார் நாரதர்.

கிழ துறவியின் அருகிலேயே இன்னொரு மரத்தடியில் ஒரு இளைஞன் கடவுளின் பெயரைப் பாடி ஆடிக்கொண்டிருந்தான். அந்த இளைஞனிடம்,'உன்னைப்பற்றியும் உனக்கு எவ்வளவு காலம் எடுக்கும் என்பதைப்பற்றியும் நான் கேட்டுவர வேண்டும் என நீயும் விரும்புகிறாயா?'' என்று சும்மா குறும்புக்காக கேட்டார் நாரதர். ஆனால் அந்த இளைஞன் தன் பரவசத்தில் முழுமையாக ஆழ்ந்திருந்த தால் அவன் கவலைப்படவில்லை, பதிலளிக்கவில்லை.

பின் சில நாள்கள் கழித்து நாரதர் திரும்பிவந்தார். முதிய துறவி யிடம் கூறினார், ''கடவுளிடம் நான் கேட்டேன், அவர் சிரித்தார். 'குறைந்தது இன்னும் மூன்று பிறவிகள் ஆகும்' என்றார்.'' உடனே தன் செபமாலையை வீசி எறிந்தார் முதியவர். ''இது அநீதி! கடவுள் நீதியானவர் என்று எவர் சொன்னாலும் அது தவறு!'' அவருக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டது. பிறகு, இப்போதும் ஆடிக்கொண் டிருந்த இளைஞனிடம் போய் நாரதர் சொன்னார், ''நீ கேட்டுவிடா விட்டாலும் நான் கேட்டேன். ஆனால் இப்போது உன்னிடம் அதை சொல்லவே எனக்கு அச்சமாக இருக்கிறது. ஏனென்றால் இப்போது அந்த பெரியவருக்கு இருக்கிற கோபத்தில் அவர் என்னை அடித்து விடவும் கூடும்.'' ஆனால் இப்போதும் அந்த இளைஞன் அதைப்பற்றி கவலைப்படாமல் ஆடிக்கொண்டிருந்தான். அவனிடம் நாரதர் சொன் னார், ''கடவுளிடம் நான் கேட்டேன். அதற்கு அவர், 'எந்த மரத்தின் அடியில் அவன் ஆடிக்கொண்டிருக்கிறானோ அந்த மரத்தில் எத்தனை இலைகள் உள்ளனவோ அத்தனை பிறவிகள் எடுத்த பிறகுதான் அவன் ஞானமடைய முடியும் என்று அவனிடம் சொல்லும்' என்றார்.'' இதை கேட்டதும் அந்த இளைஞன் அளவுகடந்த பரவசமானான்; மகிழ்ச்சியால் ஆடினான், பாடினான், கூத்தாடினான். ''அவ்வளவு

சீக்கிரமாகவா? ஏனெனில் இந்த புவி முழுவதிலும் மரங்கள் நிறைந்துள்ளன. கோடிகோடி மரங்கள் உள்ளன. அப்படியிருக்க இந்த ஒருமரம் மட்டும்தானா? இதன் இலைகளின் எண்ணிக்கை அளவில் தானா? அவ்வளவு விரைவாகவா? கடவுளின் கருணை அளவு கடந்தது. அதற்கு நான் தகுதியற்றவன்!'' என்றான். உடனடியாக அப்போதே அவன் ஞானநிலைபேறு பெற்றுவிட்டான் எனப் படுகிறது. அந்த கணத்திலேயே அவன் உடல் வீழ்ந்தது. அக்கணமே ஞானமடைந்துவிட்டான் அவன்.

நீங்கள் அவசரப்பட்டால் அதிக காலம் பிடிக்கும். நீங்கள் அவசரப்படாவிட்டால் இக்கணத்திலும் அது வாய்க்கும்.

அவசரத்தில் இருப்போருக்கு பதஞ்சலியே மாற்று. அவசரப் படாதவர்களுக்கு ஸென் உரியது. ஆனால் நேர்எதிரானதே இங்கு நடக்கிறது: அவசரப்படுவார் ஸென்னில் ஆர்வம் காட்டுகிறார்கள்; அவசரம் எதுவும் இல்லாதவர்கள் பதஞ்சலியில் ஆர்வம் காட்டு கிறார்கள் – இது தவறானது. நீங்கள் அவசரத்தில் இருந்தால் பின் பதஞ்சலிதான்... ஏனெனில் அவரே உங்களை தணித்து விடுவார். உங்கள் சுய உணர்வுக்கு உங்களை இழுத்துவருவார். மிக நீளமான ஒரு பாதையைப்பற்றி பேசி உங்களுக்கு அதிர்ச்சி தருவார். உங்களில் அவர் புக நீங்கள் அனுமதித்தால் உங்கள் அவசரம் மறையும்.

எனவேதான் நான் பேசிக்கொண்டிருக்கிறேன். உங்களுக்காகத் தான் நான் பதஞ்சலியைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறேன். அவசரத் தில் இருக்கிறீர்கள் நீங்கள். உங்கள் அவசரத்தை பதஞ்சலி குறைப்பார் என நம்புகிறேன். உங்களை அவர் தணித்து விடுவார். யதார்த்த நிலைக்கு உங்களை அவர் இட்டு வருவார். உங்கள் சுய உணர்வுக்கு உங்களை அவர் கொண்டு வருவார்.

○

# 7. எண்ணமின்மைபற்றிய எண்ணம்

ஒரு பொருளின் மீதான தியானத்தின் விளைவான இந்த சமாதிகள் விதையுடன்கூடிய சமாதிகள் ஆகும். மறுபிறப்புச் சுழலில் இருந்து இவை விடுதலை தருவதில்லை.

சமாதியின் நிர்விசார கட்டத்தின் மிகத்தூய நிலையை அடைந்து கொண்டதும் ஆன்மீக ஒளி ஒளிர்கிறது.

நிர்விசார சமாதியில் உணர்வானது உண்மையால் நிரம்புகிறது.

சிந்தனை என்பது தியானம் ஆகாது. இரண்டுக்கும் இடையில் பெரிய வேறுபாடு உள்ளது. அளவுரீதி வேறுபாடு மட்டுமல்ல, பண்பு ரீதியாகவே வேறுபாடு உள்ளது. வெவ்வேறு தளங்களில் அவை நிலவுகின்றன. அவற்றின் பரிமாணங்கள் முற்றிலும் வெவ்வெறானவை. வெவ் வேறானவை மட்டுமல்ல, எதிரெதிரானவையும்கூட.

புரிந்துகொள்ள வேண்டிய முதல் விசயம் இதுதான். சிந்தனை ஒரு பொருளைப்பற்றியது. மற்றதை நோக்கிய உணர்வின் இயக்கமே அது. வெளிநோக்கிய கவனமே சிந்தனை. மையத்தில் இருந்து விலகிப் போவதே – வெளியை நோக்கி இயங்குவதே சிந்தனை. தியானமோ மையத்தை நோக்கி இயங்குவது; வெளியிலிருந்து விடுபட்டு வருவது; மற்றதிலிருந்து ஒதுங்குவது. மற்றவரை நோக்கி செய்யப்படுவது சிந்தனை. தன்னை நோக்கியே செய்யப்படுவது தியானம். சிந்தனையில் இருமை நிலவுகிறது: சிந்திப்பவர், சிந்திக்கப்படுவது என இரண்டு உள்ளது. தியானத்தில் ஒன்று மட்டுமே உள்ளது.

'மெடிட்டேசன்' என்ற ஆங்கில சொல் அவ்வளவு சிறப்பானது அல்ல. தியானம் அல்லது சமாதி என்பதன் சரியான பொருளை அது தருவதில்லை. ஏனெனில் 'மெடிட்டேசன்' என்ற சொல்லிலேயே ஏதோ ஒன்றின்மீது நீங்கள் தியானம் செய்வதாக தோன்றுகிறது. எனவே புரிந்துகொள்ள முயலுங்கள்: ஏதோ ஒன்றின்மேல் தியானிப்பது சிந்தனை. ஏதோ ஒன்றின்மேல் தியானிப்பது தியானம் அல்ல. தானாக இருத்தலே தியானம். மையத்திலிருந்து விலகாதிருத்தலே - எந்த அசைவும் இல்லா திருத்தலே .... துளி ஆணவமும் இன்றி முற்றிலும் நீங்களாகவே இருத்தல்; உள் ஒளிச்சுடர் அலுங்காமல் எரிகிறது. மற்றது மறைந்துவிட்டிருக்கிறது; நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள். ஒரே ஒரு எண்ணம்கூட இருப்பதில்லை. டூழு உலகமும் மறைந்து விட்டுள் ளது. மனம் இப்பொழுது அங்கில்லை; நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள். – உங்கள் முழுமையான தூய்மையில் இருக்கிறீர்கள். ஒன்றை பிரதி பலிக்கும் கண்ணாடி போன்றது சிந்தனை. சும்மா பிரதிபலித்துக் கொண்டிருப்பதே தியானம்; வேறு ஒன்றைப் பிரதிபலிப்பதில்லை - பிரதிபலிப்பதற்கான வெறும் திறன்மட்டுமே, ஆனால் உண்மையில் எதையும் பிரதிபலிக்காதிருத்தலே தியானம்.

சிந்தனையில் நிர்விசார சமாதிவரை எண்ணமற்ற சமாதி வரை நீங்கள் அடைய முடியும். ஆனால் நிர்விசாரத்தில் ஒரு எண்ணம்

மிச்சம் இருக்கிறது. அதுதான் எண்ணமின்மைபற்றிய எண்ணம். அதுவும் ஒரு எண்ணம்தான். இறுதியான - மிக இறுதியான எண்ணம்; ஆனாலும் அது தங்கி இருக்கிறது. எண்ணம் எதுவும் இல்லை என் பதை ஒருவர் உணர்கிறார். எண்ணம் எதுவும் இல்லை என்பதை ஒருவர் அறிகிறார். ஆனால் எண்ணம் இல்லை என்னும் இந்த அறிதல் என்னது? மாபெரும் மாற்றம் நடந்துள்ளது. எண்ணங்கள் மறைந்துள்ளன. ஆனால் இப்போது எண்ணமின்மை என்பதே ஒரு பொருளாக ஆகிஉள்ளது. ''வெறுமையை நான் அறிகிறேன்'' என நீங்கள் சொன்னால், பின் அது முழு வெறுமை ஆவதில்லை. வெறுமைபற்றிய எண்ணம் அங்கே இருக்கிறது. இன்னமும் மனம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. மிகமிக மந்தமான – எதிர்மறையான ஒரு முறையிலேயே அது இயங்கிக் கொண்டிருக்கிறது – ஆனாலும் இன்னும் இயங்கிக் கொண்டிருக்கிறது. வெறுமை இருக்கிறது என்பதை நீங்கள் உணர்கிறீர்கள். இப்போது, நீங்கள் உணர்ந்திருக்கிற இந்த வெறுமை என்பது என்ன? மிக நுண்மையான எண்ணமே அது–மிக இறுதியானது; இதற்கப்பால் பொருள் முழுமையாக மறைந்து விடுகிறது.

எனவே இந்த சாதனையுடன் ஒரு சாதகர்/சீடர் மிகுந்த மகிழ்ச்சி யாக தன் ஸென் குருவிடம் வந்து ''நான் வெறுமையை அடைந்து விட்டேன்'' என்று கூறும் போதெல்லாம், ''போய் இந்த வெறுமையையும் எறிந்து விடு. திரும்பவும் அதை என்னிடம் கொண்டு வராதே. உண்மையாகவே நீ வெறுமையாக இருந்தால் பின் வெறுமைபற்றிய இந்த எண்ணமும்கூட இருப்பதில்லை'' என்கிறார் குரு.

சுபுத்தி என்பவனைப்பற்றிய பிரபல கதையில் இதுவே நடந்தது. எண்ணமின்றி, எண்ணமின்மைபற்றிய எண்ணம்கூட இன்றி ஒரு மரத்தடியில் அவன் அமர்ந்து கொண்டிருந்தான். திடீரென பூமாரி பொழிந்தது. பெரும் வியப்படைந்தான் அவன். ''என்ன நடந்து கொண்டிருக்கிறது?'' சுற்றுமுற்றும் பார்த்தான். வானிலிருந்து ஒரே பூமழை. அவன் வியந்துநிற்பது கண்ட தேவர்கள் சொன்னார்கள், ''பிரமிக்காதே! வெறுமைபற்றிய மாபெரும் போதனையை இன்று நாங்கள் கேட்டோம். நீதான் அதனை போதித்தாய். அதைத்தான் நாங்கள் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம். அதன் ஒரு அடையாளமாகவே இந்த மலர்களை உன்மேல் பொழிந்து கொண்டிருக்கிறோம். வெறுமைபற்றிய உன் போதனையைப் பாராட்டி நாங்கள் விழா எடுத்துக்கொண்டிருக்கிறோம்.'' சுபுத்தி தன் தோள்களைக் குலுக்கியபடி ''ஆனால் நான் போதிக்க வில்லையே'' என்று சொல்லி இருக்க வேண்டும். கடவுளரும், ''ஆம், நீ பேசவில்லை, நாங்கள் கேட்கவும் இல்லை – அதுவேதான் வெறுமை பற்றிய மாபெரும் போதனை'' என்றார்கள்.

நீங்கள் பேசினால், ''நான் வெறுமையாய் இருக்கிறேன்'' என நீங்கள் தெரிவித்தால், இலக்கை நீங்கள் தவறவிட்டு விட்டீர்கள். எண்ண மின்மைபற்றிய எண்ணம்வரை அது நிர்விசார சமாதியாக, சிந்தனை அற்றதாக இருக்கிறது. இருந்தாலும் இன்னும் அந்த இறுதி பகுதி... யானை போய்விட்டது. வால் மிச்சமிருக்கிறது. கடைசி பகுதி. சில நேரங்களில் யானையைவிட அதன் வாலே பெரிதாக தெரிகிறது- ஏனெனில் அது மிக நுண்மையானதாக இருக்கிறது. எண்ணங்களை எடுத்தெறிவது எளிது. ஆனால் வெறுமையை எப்படி எறிவது? எண்ணமின்மையை எப்படி எறிவது? மிகமிக நுண்ணியது அது. அதை பற்றிப்பிடிப்பது எவ்வாறு? சீடரிடம் ஸென் குரு, ''போய் இந்த வெறுமையையும் எறிந்து விடு!'' என்று கூறும்போது நடந்தது இதுவே. ''ஆனால் வெறுமையை எப்படி எறிவது?'' என்கிறார் சீடர். அதற்கு குரு கூறினார், ''அப்படியானால் இங்கிருந்து'' அதை எடுத்துக் கொண்டு போ. போய் அதை எறிந்துவிடு. ஆனால் உன் தலைக்குள் இந்த வெறுமையுடன் என் முன்னே நில்லாதே. ஏதாவது செய்!''

மிக நுண்மையானது அது. அதை ஒருவர் தொற்றிக்கொள்ள முடியும். அப்படியானால் கடைசிக் கட்டத்தில் மனம் உங்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறது. தொண்ணூற்றொன்பது புள்ளி ஒன்பது பாகம் நீங்கள் அடைந்து விட்டீர்கள். கடைசி அடிவைப்பு மட்டுமே மீதி. அதன் பின் நூறு பாகைகள் நிறைவுற்று விடும்; நீங்கள் இல்லாமல் போயிருப்பீர்கள்.

இந்த நிலைவரை அது சிந்தனை அற்ற சமாதி - **நிர்விசார சமாதி** - என்கிறார் பதஞ்சலி. இந்த சமாதியை அடைந்து கொண்டால் நீங்கள் மிகமிக மகிழ்ச்சியானவராக - அமைதியானவராக - சாந்தமானவராக ஆவீர்கள். எப்போதும் உள்ளுக்குள் ஆன்று அடங்கியவராக - ஒருங்கிணைந்தவராக இருப்பீர்கள். ஒரு தெளிவை-திடத்தை பெற்றிருப் பீர்கள். ஒரு சாமானிய மனிதராக இருக்கமாட்டீர்கள். ஏறக்குறைய ஒரு அமானுடராகவே நீங்கள் தோன்றுவீர்கள். ஆனாலும் மீண்டும் மீண்டும் நீங்கள் திரும்பிவரவே வேண்டி இருக்கும்: மறுபடியும் பிறப்பீர்கள், இறப்பீர்கள்.

(மறு) பிறவிச் சக்கரம் நில்லாது. ஏனெனில் எண்ணமின்மை என்பது ஒரு நுண்மையான விதை போன்றதே. எண்ணிறந்த பிறவிகள் அதிலிருந்து வரமுடியும். விதை மிக நுண்ணியது; மரம் மிகப் பெரியது. ஆனால் விதைக்குள்தான் முழு மரமும் அடங்கியிருக்கிறது. விதை ஒரு கடுகுவிதையாக இருக்கலாம், மிக சிறியதாக இருக்கலாம். ஆனால் தனக்குள் முழு மரத்தையும் அது தாங்கியிருக்கிறது. சுமந்து கொண் டிருக்கிறது. ஒரு வளர்ச்சித் திட்டத்தை அது வைத்திருக்கிறது. திரும்பத் திரும்பத் திரும்ப முழு மரத்தையும் அது கொண்டுவர முடியும். மேலும்

ஒரு விதையிலிருந்து கோடிக்கணக்கான விதைகள் வெளிவரமுடியும். ஒரு சிறு கடுகுவிதையே இந்த புவி முழுவதையும் தன் மரங்களால் நிரப்பிவிடமுடியும்.

எண்ணமின்மை என்பது மிகவும் நுண்மையான விதைபோல் இருக்கிறது. அது உங்களுக்குள் இருந்தால் அதை பதஞ்சலி, ''விதை யுடன் கூடிய சமாதி'' - **சபீஜ் சமாதி** - என அழைக்கிறார். தொடர்ந்து நீங்கள் வந்து கொண்டிருப்பீர்கள்; தொடர்ந்து சக்கரம் உருண்டு கொண்டே இருக்கும், பிறப்பு -இறப்பு, பிறப்பு - இறப்பு என. மறுபடி மறுபடி அது திரும்பிவரும்: விதைகளை நீங்கள் எரித்திருக்கவில்லை.

எண்ணமின்மைபற்றிய இந்த எண்ணத்தை எரித்துவிட உங்க ளால் முடிந்தால், அகமின்மை பற்றிய இந்த எண்ணத்தை எரித்துவிட உங்களால் முடிந்தால், ஆணவமின்மை பற்றிய இந்த எண்ணத்தை எரித்துவிட உங்களால் முடிந்தால், அப்போது மட்டுமே **நிர்பீஜ் சமாதி** - விதையற்ற சமாதி - நிகழ்கிறது. அதன்பின் பிறப்பில்லை, இறப்பில்லை. மொத்த சுழற்சியையும் நீங்கள் கடந்துவிட்டீர்கள். விடுபட்டு அப்பால் போய்விட்டீர்கள். இப்போது நீங்கள் சுத்த உணர்வாக இருக்கி றீர்கள். இருமை தொலைந்து விட்டது. ஒருமையுடன் இருக்கிறீர்கள் நீங்கள். இந்த ஒருமையே - இந்த இருமை விடலே – வாழ்வையும் சாவையும் விடுதலும் ஆகும். மொத்த சக்கரமும் திடுமென நிற்கிறது: தீக்கனவிலிருந்து வெளியேறி இருக்கிறீர்கள் நீங்கள்.

இப்போது சூத்திரங்களுக்குள் நாம் போவோம். மிகமிக ஆழமான சூத்திரங்கள் அவை. அவற்றை புரிந்துகொள்ள முயலுங்கள். ஆழமான முக்கியத்துவம் உடையவை அவை. அவற்றின் நுண்மையான பொருள் பாகுபாடுகளை புரிந்துகொள்ள நீங்கள் மிகமிக விழிப்புடன் இருக்க வேண்டி இருக்கும்.

> **ஒரு பொருளின் மீதான தியானத்தின் விளைவான இந்த சமாதிகள் விதையுடன் கூடிய சமாதிகள் ஆகும். மறுபிறப்பு சுழலிலிருந்து இவை விடுதலை தருவதில்லை.**

ஒரு பொருளின்மீதான தியானத்தின் விளைவான இந்த சமாதிகள்... ஒரு பொருளின்மீது - அது உலகியலானதாயினும் ஆன்மீகமானதாயினும் அதன் மீது-நீங்கள் தியானிக்க முடியும். அந்த பொருள், பணமாக இருக்கலாம் அல்லது அந்த பொருள், இறுதி அடைதலாகிய வீடுபேறாக இருக்கலாம். அந்த பொருள் ஒரு கல்லாக இருக்கலாம், அல்லது அந்த பொருள் கோகினூர் வைரமாக இருக்கலாம். அதனால் எந்த வேறுபாடும் இல்லை. பொருள் எங்கு இருக்கிறதோ அங்கு மனமும் இருக்கிறது. பொருளின் வழியாகவே மனம் தொடர்ச்சியைப்

பெறுகிறது. மற்றதன் மூலமாகவே மனம் தொடர்ந்து ஊட்டம் பெறுகிறது. ஆயின் மற்றது அங்கே இருந்தால் உங்களை நீங்கள் அறிய முடியாது; முழுமனமும் மற்றதன் மேலேயே குவிகிறது. மற்றது அகற்றப்பட வேண்டும். முற்றிலுமாக விலக்கப்பட வேண்டும். நீங்கள் சிந்திப்பதற்கு அங்கு எதுவும் இருக்கக்கூடாது. உங்கள் கவனத்தை ஈர்ப்பதற்கு அங்கு எதுவும் இருக்கக்கூடாது. நீங்கள் போவதற்கு எந்த போக்கிடமும் இருக்கக்கூடாது.

பொருளுடனேயே பல வாய்ப்புகள் வந்து விடுகின்றன என்கிறார் பதஞ்சலி. பொருளுடன் உங்கள் உறவு ஒரு பகுத்தறிவாளர் உடையதாக இருக்கமுடியும். பொருளைப்பற்றி தர்க்கரீதியாக நீங்கள் சிந்திக்கமுடியும். இந்நிலைக்கு **சவிதர்க்க சமாதி** என்ற பெயர்தருகிறார் பதஞ்சலி. பல சந்தர்ப்பங்களில் இது நிகழ்கிறது: அறிவியலார் ஒருவர் ஒரு பொருளை ஆராயும்போது முற்றிலும் அமைதியானவராக ஆகிறார். அவரது வானத்தில் — அவரது இருத்தலில் எந்த எண்ணங்களும் இருப்பதில்லை. அந்த அளவுக்கு பொருளுடன் ஒன்றிப்போய் விடுகிறார் அவர். அல்லது சில நேரங்களில் தன் பொம்மையை வைத்து விளையாடிக் கொண் டிருக்கும் குழந்தை அதில் மிகவும் லயித்துப்போய் விடுகிறது; மனம், முழுமையாக - ஏறக்குறைய முற்றிலுமாக நின்று விடுகிறது; மிக ஆழமான ஒரு சாந்தி நிலவுகிறது. உங்கள் கவனம் முழுவதையும் பொருள் எடுத்துக் கொள்கிறது - மிச்சம் எதுவும் வைக்காமல். அதில் எந்த பதட்டமும் இருப்பதில்லை, எந்த இறுக்கத்துக்கும் இடமில்லை, எந்த துயரத்துக்கும் இடமில்லை, ஏனெனில் பொருளில் முழுமை யாக நீங்கள் மனம் ஒன்றி இருக்கிறீர்கள்; பொருளுக்குள் போய் விட்டிருக்கிறீர்கள்.

ஒரு அறிவியலார், மாபெரும் தத்துவர் ... சாக்ரட்டீசுக்கு இது நடந்தது. ஓர் இரவில் அவர் நின்று கொண்டிருந்தார். அது ஒரு முழு நிலா நாள். நிலவை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். அதனால் முற்றிலும் கவரப்பட்டுவிட்டார்... பதஞ்சலி கூறும் **சவிதர்க்க சமாதி** நிலைக்கு அவர் போயிருக்க வேண்டும். ஏனென்றால் இதுவரை உலகில் இருந்துள்ள மிகவும் தர்க்கபூர்வ மனிதர்களில் ஒருவராக அவர் இருந்தார். மிகவும் பகுத்தறிவான மனிதர்களில் ஒருவராக அவர் இருந்தார். பகுத்தறிவின் சிகரமாகவே அவர் விளங்கினார். நிலவைப்பற்றியும் விண்மீன்களைப் பற்றியும் இரவைப்பற்றியும் வானத்தைப்பற்றியும் அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார். அதில் தன்னை அவர் முற்றிலுமாக மறந்துவிட்டார். பனிகொட்ட தொடங்கியது. காலையில் பார்த்தபோது ஏறக்குறைய இறந்து போன நிலையில் அவர் காணப்பட்டார். அவர் உடல் பாதியளவுக்கு பனிமூடி உறைந்திருந்தது. அந்நிலையிலும் அவர் வானத்தை

பார்த்துக்கொண்டிருந்தார். அவரில் உயிர் இருந்தது; ஆனால் விறைத்துப் போயிருந்தார். அவர் எங்கே போய்விட்டார் என தேடி மக்கள் வந்தார்கள். அப்போது அவர் நின்று கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். இரவு முழுவதும் மரத்தடியில் அவர் நின்றுகொண்டிருந்தார். அப்போது அவர்கள் ''ஏன் நீங்கள் வீட்டுக்கு திரும்பிவரவில்லை? பனி பொழிந்து கொண்டிருக்கிறது - இதில் ஒருவர் இறந்து போய்விடக்கூடுமே'' என்று கேட்டார்கள். அதற்கு அவர் சொன்னார், ''அதை அறவே நான் மறந்து போனேன். என்னைப் பொறுத்தவரை பனிபொழிய வில்லை. என்னைப் பொறுத்தவரை நேரம் ஆகவில்லை. அந்த அளவுக்கு, இரவின் - விண்மீன்களின் - இயற்கை ஒழுங்கின்-பேரண்டத்தின் அழகில் என்னை நான் இழந்து விட்டேன்.''

தர்க்கம் எப்போதும் மற்றதால் - உலகில் காணும் இசைவால் ஈர்க்கப்பட்டு விடுகிறது. ஒரு பொருளை சுற்றியே தர்க்கம் இயங்குகிறது. அந்த பொருளை சுற்றிச் சுற்றிச் சுற்றி அது வந்து கொண்டிருக்கிறது. மொத்த ஆற்றலையும் அந்த பொருளே எடுத்துக் கொள்கிறது. இதுதான் பகுத்தாய்வுடன் கூடிய சமாதி - **சவிதர்க்க சமாதி**. ஆனால் பொருள் அங்கு இருக்கிறது; அறிவியல் மனம், பகுத்தறிமனம், தத்துவமனம் அதை அடைந்து கொள்கிறது.

பின் இன்னொரு சமாதி - **நிர்விதர்க்க சமாதி** என்று ஒன்று இருக்கிறது என்கிறார் பதஞ்சலி. அழகியல் மனம் - கவிஞர், ஓவியர், இசைஞர்களின் மனம் - அதை அடைந்து கொள்கிறது. கவிஞர் பொருளை சுற்றிச்சுற்றி வருவதில்லை; நேராக பொருளுக்குள் போய்விடுகிறார். ஆனாலும் அங்கே பொருள் இருக்கிறது. அதைப் பற்றி அவர் சிந்திக்காமல் இருக்கலாம். ஆனால் அவரது கவனம் அதன்மேல் குவிந்திருக்கிறது. அங்கே தலை செயல்படாமல் இருக்கலாம்; இதயமே செயல்பட்டுக்கொண்டிருக்கலாம். ஆனாலும் அங்கே பொருள் இருக்கிறது. மற்றது அங்கே இருக்கிறது. மிகவும் ஆழமான - ஆனந்தமான நிலைகளை அடைய ஒரு கவிஞரால் முடியும். ஆனாலும் மறுபிறவிச் சுழற்சி நின்றுவிடாது. அறிவியலாருக்கும் நிற்காது, கவிஞருக்கும் நிற்காது.

அடுத்து **சவிசார சமாதிக்கு** வருகிறார் பதஞ்சலி. இதில் தர்க்கம் கைவிடப்பட்டிருக்கிறது. தூய சிந்தனை மட்டுமே இருக்கிறது. ஒன்றைப் பற்றிய சிந்தனை அல்ல; வெறுமனே அதைப் பார்த்துக்கொண்டிருப்பது, கவனித்துக் கொண்டிருப்பது, சாட்சியாக இருப்பது அது. இதிலும் பொருளால் பீடிக்கப்பட்டே நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் சொந்த சுயத்தில் இன்னும் நீங்கள் இல்லை - மற்றது அங்கே இருக்கிறது. அடுத்து **நிர்விசாரத்துக்கு** வருகிறார் பதஞ்சலி.

நிர்விசாரத்தில் பையப் பைய பொருள் மிகவும் நுண்ணிய தாக்கப்படுகிறது. இதுதான் மிக முக்கியமாக புரிந்துகொள்ளப்பட வேண்டிய நிலையாகும். நிர்விசாரத்தில் பொருள் மென்மேலும் நுண்மையாகி செல்கிறது. பருண்மையான பொருள்களில் இருந்து நுண்மையான பொருள்களை நோக்கி நீங்கள் இயங்குகிறீர்கள் - கல்லில் இருந்து பூவுக்கு, பூவிலிருந்து மணத்துக்கு என இயங்குகிறீர்கள். நுண்மையை நோக்கி போகிறீர்கள். மெல்ல மெல்ல பொருள் மிகவும் நுண்மையாகிப் போகிற - ஏறக்குறைய அது இல்லை என்பதுபோல் ஆகிற - ஒரு கட்டம் வருகிறது.

எடுத்துக்காட்டாக, வெறுமையின் மீது நீங்கள் சிந்திக்கிறீர்கள். வெறுமையின்மீது நீங்கள் தியானித்தால் பொருள் என்பது ஏறக்குறைய இல்லை. ஒரே ஒரு தியானத்தை மட்டுமே வலியுறுத்தும் புத்த பள்ளிகள் உள்ளன - வெறுமையின்மீது மட்டுமே தியானிக்கும்படி அவை வலியுறுத்துகின்றன. ஒன்றும் நிலவில்லை என்ற கருத்தையே ஒருவர் சிந்திக்க வேண்டி இருக்கிறது, தியானிக்க வேண்டி இருக்கிறது. உள் வாங்கி தோய வேண்டியிருக்கிறது. வெறுமையைக் குறித்தே இடை விடாமல் தியானிக்கும்போது, பொருள் மிகவும் நுண்மையாக ஆகிற ஒரு கணம் வருகிறது - அதன்பின் உங்கள் கவனத்தை அதனால் கட்டுப் படுத்த முடிவதில்லை. எந்த அளவுக்கு அது நுண்ணியதாகிறது என்றால் சிந்திப்பதற்கு அதில் ஒன்றுமிருப்பதில்லை. இந்த ரீதியில் ஒருவர் தொடர்ந்து போய்க்கொண்டே இருந்தால் ஒருநாள் திடீரென உணர் வானது தன்மீதே தாவுகிறது. நிற்பதற்கான தளம் எதையும் பொருளில் காணாமையால், காலடி தாங்கல் எதையும் காணாமையால், தொற்றிக் கொள்வதற்கான எதையும் காணாமையால் உணர்வானது தன்மீதே எகிறுகிறது. அது திரும்புகிறது; தன் சொந்த மையத்துக்கு திரும்பி வருகிறது. அப்போது அது மிக உயர்ந்த - மிக தூய நிர்விசாரம் ஆகிறது.

உணர்வானது தன்மேல் தானே துள்ளிக் குதிக்கிற போதுதான் மிகஉயர்ந்ததான நிர்விசாரம் கைகூடுகிறது. ''எண்ணமற்ற நிலையை நான் அடைந்திருக்கிறேன், வெறுமையை நான் அடைந்திருக்கிறேன்'' என நீங்கள் நினைக்கத் தொடங்கினால், மறுபடியும் ஒரு பொருளை நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள்; அதன்மேல் உணர்வானது போய்விடுகிறது. ஒரு சாதகருக்கு பல சந்தர்ப்பங்களில் இது நடக்கிறது. உள்ளத்தின் மருமங்களை அறியாத நிலையிலேயே, பல தடவைகள் உங்கள் மீதே நீங்கள் திரும்பிப்பாய்கிறீர்கள்; சில நேரங்களில் உங்கள் மையத்தையும் நீங்கள் தொடுகிறீர்கள்; ஆனால் மறுபடியும் வெளியேறி விடுகிறீர்கள். திடீரென் ''ஆம், நான் அடைந்து விட்டேன்'' என்ற கருத்து எழுகிறது. திடீரென ''ஆம், இங்கே இருக்கிறது, சட்டோரி நிகழ்ந்திருக்கிறது, சமாதி

அடையப்பட்டிருக்கிறது'' என உணர தொடங்குகிறீர்கள். உங்களுக்கு ஏற்படும் பரவசத்தில் இந்த கருத்து எழுவது இயல்பே. ஆனால் இந்த கருத்து எழுந்துவிட்டால் புறத்தன்மைகொண்ட ஒன்றுக்கு மறுபடியும் நீங்கள் பலியாகி இருக்கிறீர்கள்; அகத்தன்மையை மறுபடியும் இழந்துவிடுகிறீர்கள். ஒருமை இருமையாகி விடுகிறது. இருமை மறுபடியும் அங்கு இருக்கிறது.

எண்ணமின்மைபற்றிய எண்ணம் எழ அனுமதிக்கக் கூடாது என்பதில் ஒருவர் எச்சரிக்கையாக இருக்க வேண்டி உள்ளது. அதற்கு முயலாதீர்கள் - இதுபோன்ற ஒன்று நிகழும் போதெல்லாம் அதிலேயே தங்கியிருங்கள். அதைப்பற்றி சிந்திக்க முற்படாதீர்கள். அதைப் பற்றிய கருத்து எதையும் உருவாக்காதீர்கள். அதை அனுபவியுங்கள். நீங்கள் ஆடமுடியும்; அதனால் எந்த கெடுதலும் நேராது. ஆனால் அதற்கு பெயர்தர அனுமதிக்காதீர்கள். மொழிக்கு இடம் கொடுக்காதீர்கள். ஆடுவதால் தடை ஏற்படாது. ஏனெனில் ஆட்டத்தில் நீங்கள் ஒருமையிலேயே இருக்கிறீர்கள்.

சூபி மரபில் மனதை தவிர்க்க நடனம் பயன்படுத்தப்படுகிறது. கடைசி நிலையில் சூபி ஆசான்கள், ''பொருள் மறைந்து விட்டிருக்கிற ஒரு நிலைக்கு நீங்கள் வருகிற போதெல்லாம் உடனே ஆடத் தொடங்குங்கள். அதன்மூலம் ஆற்றல் உடலுக்குள் போகிறது; மனதுக்குள் போவதில்லை. உடனடியாக ஏதாவது செய்யுங்கள். எதுவும் உதவும்'' என்கிறார்கள்.

ஜென் ஆசான்கள் தாம் அடைந்து கொண்டதும் அடிவயிற்றிலிருந்து சிரிக்க தொடங்குகிறார்கள் - இடிமுழக்கம்போல், சிங்கத்தின் கர்ச்சனை போல், சத்தம்போட்டு சிரிக்கத் தொடங்குகிறார்கள். அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? ஆற்றல் அங்கே இருக்கிறது. முதல் முறையாக ஆற்றலானது ஒன்றாகி இருக்கிறது. மனதில் வேறெதற்கும் நீங்கள் இடமளித்தால் உடனே மறுபடியும் அங்கே பிரிவினை வந்து விடுகிறது; மேலும் பிரிவினை என்பது உங்கள் நீண்டகால பழக்கமாகவும் இருக்கிறது. சிலநாள்களுக்கு அது அப்படியே நீடிக்கும். குதியுங்கள்-ஓடுங்கள்-ஆடுங்கள்-அடிவயிற்றிலிருந்து சிரியுங்கள். ஆற்றல் தலையில் ஏறிவிடாமல் உடம்புக்குள் இறங்கும் விதத்தில் எதையாவது செய்யுங்கள். ஏனெனில் ஆற்றலும் இருந்து, பழைய பழக்கமும் அங்கு இருப்பதால், மறுபடியும் அது பழையபடியேதான் இயங்க முயலும்...

பலர் என்னிடம் வருகிறார்கள். அது நிகழ்கிற போதெல்லாம் - மாபெரும் சிக்கல் எழுகிறது. மாபெரும் என்று ஏன் சொல்கிறேன் என்றால் சாதாரண சிக்கல் அல்ல அது. உடனடியாக மனம் அதை கைப்பற்றிக்கொண்டு, ''ஆம், நீ அடைந்துவிட்டாய்'' என்கிறது. அகங்காரம் நுழைந்து இருக்கிறது, மனம் நுழைந்திருக்கிறது; உடனடியாக எல்லாமே

வீணாகி விடுகிறது. ஒரே ஒரு கருத்தால் ஒரு பெரும் பிரிவினை உடனடியாக அங்கு தோன்றுகிறது. ஆடல் நல்லது. நீங்கள் ஆட முடியும் - அதனால் எந்த கெடுதலும் நேராது. நீங்கள் பரவசமாக முடியும், நீங்கள் கொண்டாட முடியும். எனவேதான் கொண்டாட்டத்தை நான் வலியுறுத்துகிறேன்.

ஒவ்வொரு தியானம் முடிந்ததும் கொண்டாடுங்கள்; அதன்மூலம் கொண்டாட்டம் உங்களின் ஒரு பகுதியாக ஆகட்டும். அப்போதுதான் அறுதியானது நிகழும்போது உடனடியாக அதை உங்களால் கொண்டாட முடியும்.

**ஒரு பொருளின் மீதான தியானத்தின் விளைவான இந்த சமாதிகள் விதையுடன் கூடிய சமாதிகள் ஆகும். மறுபிறப்புச் சுழலில் இருந்து இவை விடுதலை தருவதில்லை.**

மற்றதில் இருந்து - பொருளில் இருந்து விடுபடுவது எப்படி என்பதே முழு சிக்கலும். பொருள் என்பது முழு உலகமும். பொருள் இருக்கும் வரை மீண்டும்மீண்டும் நீங்கள் இங்கு வருவீர்கள். ஏனெனில் பொருளுடன் ஆசை இருக்கிறது- பொருளுடன் எண்ணம் இருக்கிறது - பொருளுடன் ஆணவம் இருக்கிறது - பொருளுடன்தான் நீங்கள் இருக்கிறீர்கள். பொருள் வீழ்ந்ததுமே, உடனடியாக நீங்களும் வீழ்கிறீர்கள். ஏனெனில் புறமும் அகமும் ஒன்றுபோலவே நிலவமுடியும். ஒன்று மற்றதன் பகுதியாக உள்ளது. ஒன்று மட்டும் தனியே நிலவ முடியாது. அது ஒரு நாணயம் போன்றதே. தலையும் பூவும் சேர்ந்தே உள்ளன. ஒன்றை எறிந்துவிட்டு மற்றதை நீங்கள் வைத்துக் கொள்ள முடியாது. பூவை எறிந்துவிட்டு தலையைப் பத்திரப்படுத்திக்கொள்ள முடியாது. சேர்ந்தே அவை உள்ளன. ஒன்றா, இரண்டையும் நீங்கள் வைத்துக்கொள்ள வேண்டும். அல்லது இரண்டையுமே நீங்கள் எறிந்துவிட வேண்டும். ஒன்றை நீங்கள் எறிந்தாலே மற்றதும் எறியப் பட்டு விடுகிறது. அகம்-புறம் இரண்டும் ஒன்றாகவே உள்ளன. அவை ஒன்றே ஒன்றின் இரு அம்சங்களே. பொருள் விழுந்ததும் அகத்தன்மை எனும் முழுமாளிகையும் அப்படியே சரிந்து வீழ்கிறது. அதன்பின் நீங்கள் பழையபடி இருப்பதில்லை. அந்நிலையில் நீங்கள் கடந்து போய் இருக்கிறீர்கள். கடந்த தன்மையே பிறப்பு - இறப்பு இரண்டையும் கடந்ததாக இருக்கிறது.

நீங்கள் இறந்தாக வேண்டியிருக்கும்; மீண்டும் நீங்கள் பிறந்தாக வேண்டியிருக்கும். இறக்கும்போது, ஒரு மரத்தைப் போலவே உங்கள் ஆசைகள் அனைத்தையும் மீண்டும் ஒரு விதைக்குள் நீங்கள் சேகரிக்கிறீர்கள். மீண்டும் ஒரு பிறப்புக்குள் நீங்கள் போவதில்லை; விதையே பறந்து போய் இன்னொரு பிறப்புக்குள் விழுகிறது. நீங்கள்

வாழ்ந்திருக்கும் — அனைத்தும் உங்கள் ஆசைகள் அனைத்தும், நிராசைகள் அனைத்தும், உங்கள் தோல்விகள். உங்கள் வெற்றிகள் அனைத்தும், உங்கள் உறவுகள் - பகைமைகள் அனைத்தும் — மொத்த ஆற்றலும், நீங்கள் இறக்கும்போது ஒரு விதைக்குள் திரள்கிறது. அந்த விதை ஆற்றல்மயமானது. அந்த விதை உங்களிடம் இருந்து குதித்து ஒரு கருப்பத்துக்குள் போகிறது. மீண்டும் அந்த விதை உங்களை மறுபடியும் தோற்றுவிக்கிறது - மரத்திலிருக்கும் ஒரு விதை போலவே. மரம் சாகும்போது தன்னை அது விதைக்குள் பாதுகாக்கிறது. விதைகளின் வழியாக மரம் தொடர்ந்து உயிர்வாழ்கிறது. விதைமூலமாக நீங்கள் தொடர்ந்து இருக்கிறீர்கள். எனவேதான் பதஞ்சலி அதை சபீஜ் சமாதி என அழைக்கிறார். பொருள் இருந்தால் மீண்டும் மீண்டும் நீங்கள் பிறக்க வேண்டி இருக்கும். அதே அவலத்தின் ஊடாக திரும்ப திரும்ப நீங்கள் செல்ல வேண்டி இருக்கும். வாழ்க்கை எனும் அதே நரகத்தை திரும்பத்திரும்ப நீங்கள் அனுபவிக்க வேண்டி இருக்கும் — விதையற்றவராக நீங்கள் ஆகாத வரைக்கும்.

விதையின்மை என்றால் என்ன? பொருள் இல்லை எனில் விதை இல்லை. அந்நிலையில் உங்கள் கடந்தகால கருமங்கள் அனைத்தும் அப்படியே மறைந்துவிடுகின்றன. ஏனெனில் உண்மையில் நீங்கள் ஒருபோதும் எதையும் செய்ததில்லை. எல்லாவற்றையும் செய்திருப்பது மனம்தான். ஆனால் அதனுடன் உங்களை நீங்கள் அடையாளப்படுத்தி இருக்கிறீர்கள் மனமே நீங்கள் என நீங்கள் நினைக்கிறீர்கள். எல்லாவற்றையும் செய்திருப்பது உடல்தான் — ஆனால் அதனுடன் உங்களை நீங்கள் அடையாளப்படுத்தி இருக்கிறீர்கள். உடலே நீங்கள் என நீங்கள் நினைக்கிறீர்கள்.

விதையற்ற சமாதியில் - **நிர்விசார சமாதியில்** - உணர்வு மட்டுமே தன் முழு தூய்மையில் இருக்கும்போது, முதன்முதலாக மொத்த விசயத்தையும் நீங்கள் புரிந்துகொள்கிறீர்கள்: நீங்கள் ஒருபோதும் செயல்படுபவராக இருந்ததில்லை. ஒரே ஒரு பொருளையும்கூட ஒருபோதும் நீங்கள் விரும்பியதில்லை. ஆசைப்பட எந்த தேவையுமில்லை. ஏனெனில் எல்லாமே உங்களுக்குள் உள்ளது. நீங்களே அறுதி நிலை. ஆசைப்பட்டது உங்களின் மடமை. ஏனெனில் ஒரு பிச்சைக்காரர் ஆவதற்கு நீங்கள் ஆசைப்பட்டீர்கள். வழக்கமாக நீங்கள் வேறுவிதமாகவே நினைக்கிறீர்கள்: நீங்கள் ஒரு பிச்சைக்காரராக இருக்கிறீர்கள், எனவேதான் ஆசைப் படுகிறீர்கள் என்றே நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் விதையற்ற சமாதியில்தான் இந்த புரிதல் விடிகிறது: நேர்மாறானதே உண்மையாக உள்ளது: நீங்கள் ஆசைப்பட்டதால்தான் நீங்கள் ஒரு பிச்சைக்காரராக இருக்கிறீர்கள். முற்றிலும் தலைகீழாக இருக்கிறீர்கள் நீங்கள். ஆசை மறைந்தால் அப்படியே திடீரென பேரரச

ராக ஆகிறீர்கள். பிச்சைக்காரர் ஒருபோதும் அங்கு இருந்ததில்லை. நீங்கள் ஆசைப்பட்டுக் கொண்டிருந்ததால் தான், பெரிதும் பொருளையே நீங்கள் நினைத்துக் கொண்டிருந்ததால்தான், பொருளாலும் பொருள்களாலும் மிக அதிகமாக நீங்கள் பீடிக்கப்பட்டிருந்ததால் தான், உள்ளுக்குள் பார்ப்பதற்கு உங்களுக்கு நேரமோ சந்தர்ப்பமோ இடமோ இருக்கவில்லை. உள்ளே இருப்பது யார் என்பதை முற்றிலுமாக நீங்கள் மறந்து விட்டிருக்கிறீர்கள். உள்ளிருப்பது இறைமை. உள்ளே இருப்பது கடவுளேதான்.

எனவேதான் இந்துக்கள் **அகம் பிரம்மாஸ்மி** என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள்! ''நானே இறைமை'' என்கிறார்கள் அவர்கள். ஆனால் அப்படி சொல்வதாலேயே அதை அடைந்து விடமுடியாது. **நிர்விசார சமாதியை** நீங்கள் அடைந்தாக வேண்டி இருக்கிறது. அப்போது மட்டுமே உபநிசத்துகள் உண்மையாக ஆகிறது. அப்போது மட்டுமே புத்தர்கள் உண்மையாக ஆகிறார்கள். நீங்கள் ஒரு சாட்சியாக ஆகிறீர்கள். ''ஆம், அவர்கள் கூறுவது சரிதான்'' என்கிறீர்கள். ஏனெனில் இப்போது அது உங்களின் சொந்த அனுபவமாகவே ஆகியிருக்கிறது.

**சமாதியின் நிர்விசார கட்டத்தின் மிகத் தூய நிலையை அடைந்து கொண்டதும் ஆன்மீக ஒளி ஒளிர்கிறது.**

**நிர்விசார வைஷராதயே அதியாத்ம ப்ரசாத.** இந்த பிரசாத் என்ற சொல் மிகமிக ஆழமானது. அதன் பொருள், அருள் என்பதாகும். தன் சொந்த இருத்தலில் ஒருவர் அமைதிகொண்டதும், வீடு சேர்ந்ததும், உடனடியாக ஓர் ஆசிர்வாதம் ... அவர் எப்போதும் ஆசித்து வந்திருக்கிற அனைத்தும் திடீரென நிறைவுறுகிறது. நீங்கள் விரும்பியிருக்கிற அனைத்துமாகவும் திடீரென நீங்கள் இருக்கிறீர்கள். அதற்கான எதையும் நீங்கள் செய்திருக்கவில்லை. அதற்கான எந்த முயற்சியும் நீங்கள் எடுத்திருக்கவில்லை. தன் இயல்பில் - மிக ஆழமான இயல்பில் - ஒருவர் எப்போதும் நிறைவுற்றவராகவே இருக்கிறார் - ஒரு நிறைவு களிநடனம் புரிகிறது என்பதை **நிர்விசார சமாதியில்** ஒருவர் அறிய வருகிறார்!

**மிகத் தூய நிலையை அடைந்து கொண்டதும் ...**

அந்த மிகத் தூய நிலை என்பது என்ன? - எண்ணமின்மைபற்றிய எண்ணம்கூட நிலவாத இடம் அது. அதுதான் மிகத் தூய நிலை. அங்கு கண்ணாடி கண்ணாடியாகவே இருக்கிறது. எதுவும் அதில் பிரதிபலிக்கப் படுவதில்லை. ஏனெனில் ஒரு பிரதிபலிப்புகூட ஒரு தூய்மைக்கேடாகவே இருக்கிறது. உண்மையில் கண்ணாடிக்கு அது எதுவும் செய்துவிடுவதில்லை தான். இருந்தாலும் இப்போது கண்ணாடி தூய்மையாக இல்லை. பிரதிபலிப்பால் கண்ணாடிக்கு எதுவும் நேர்ந்து விடாது. எந்த பதிவுகளையும் அது ஏற்படுத்தாது. எந்த தடயங்களையும் அது

விட்டுச் செல்லாது. ஆனாலும் அது அங்கு இருக்கும்போது கண்ணாடியில் ஏதோ ஒன்று நிரம்பியிருக்கிறது. அயலான ஏதோ ஒன்று அங்கு இருக்கிறது: கண்ணாடி தன் மிகத் தூய நிலையில் இல்லை; தன் அதீத தனித்துவத்தில் இல்லை. கண்ணாடி அப்பழுக்கற்றதாக இல்லை - ஏதோ ஒன்று அதில் இருக்கிறது.

மனம் முற்றிலுமாக போயிருந்து, மனமற்றது / அ-மனம் அங்கே வந்திருக்கும்போது, எதைப்பற்றியும் எந்த ஒரு எண்ணமும் அங்கு இல்லாதிருக்கும்போது, அத்தகைய ஆனந்த கணத்தில் இருக்கும் உங்கள் இருத்தல் நிலை பற்றியும்கூட எந்த எண்ணமும் இல்லா திருக்கும்போது - சமாதியின் மிகத் தூய நிலையாகிய நிர்விசார நிலையிலேயே நீங்கள் இருக்கிறீர்கள். ஆன்மீக ஒளி ஒளிரத் தொடங்கு கிறது: பல விசயங்கள் அதில் நிகழ்கின்றன.

சுபுத்திக்கு நிகழ்ந்தது அதுதான்: என்ன காரணம் என தெரியாத நிலையிலேயே திடீரென மலர்மாரி பொழிந்தது. அதற்கு அவன் எதுவும் செய்திருக்கவில்லை. தன் வெறுமையைக்கூட அவன் உணர்ந்திருக்க வில்லை. அப்படி இருந்தால் பின் மலர்கள் அவன்மீது பொழிந்திருக்கப் போவதில்லை. எதைப்பற்றியும் எதுவும் தெரியாதவனாக ஆகியிருந்தான் அவன். தன்னில் தான் முழுமையாகத் தங்கி இருந்தான். உணர்வின் மேல்பரப்பில் ஒரேஒரு சலனம் கூட இல்லை. கண்ணாடியில் ஒரே ஒரு பிரதிபலிப்பு கூடஇல்லை. வானத்தில் ஒரே ஒரு வெண்மேகம் கூட இல்லை. ஒன்றுமில்லை.

பூமாரி பொழிந்தது... அதைத்தான் பதஞ்சலி கூறுகிறார்: நிர்விசார வைஷராத்யே அதியாத்ம ப்ரசாத - திடீரென அருள் இறங்குகிறது. உண்மையில் எப்போதுமே அது இறங்கிக் கொண்டுதான் இருக்கிறது.

நீங்கள் உணர்வோடு இல்லை: இந்த கணத்திலும் உங்கள் மேல் மலர்கள் பொழிந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் நீங்கள் வெறுமையாய் இல்லாததால் அவற்றை உங்களால் காண முடிவதில்லை. வெறுமையின் கண்களால் மட்டுமே அவற்றை காணமுடியும். ஏனெனில் அவை இவ்வுலகின் பூக்கள் அல்ல; மறு உலகின் பூக்கள்.

ஞானமடைந்த அனைவரும் ஒரு விசயத்தை ஒத்துக்கொள்கிறார் கள்: அந்த இறுதி அடைவில் எல்லாமே நிறைவேறி இருப்பதாக காரணமில்லாமலே ஒருவர் உணர்கிறார். மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டவராக தன்னை அவர் உணர்கிறார். இத்தனைக்கும் அதற்காக எதையும் அவர் செய்திருக்கவில்லை. தியானம்குறித்து நீங்கள் ஏதாவது செய்திருக்கி றீர்கள். சிந்தனை குறித்து நீங்கள் ஏதாவது செய்திருக்கிறீர்கள். பொருளை தொற்றிக் கொள்ளாதிருப்பதுகுறித்து நீங்கள் ஏதாவது செய்திருக்கி றீர்கள். இந்த வழிகளில் நீங்கள் ஏதாவது செய்திருக்கிறீர்கள். ஆனால்

திடீர் ஆசீர்வாதங்கள் உங்கள்மேல் பொழிவதற்கு நீங்கள் எதுவும் செய்திருக்கவில்லை. உங்கள் ஆசைகள் நிறைவேறுவதற்கு நீங்கள் எதுவும் செய்திருக்கவில்லை.

பொருளுடன் துன்பம் இருக்கிறது. ஆசையுடன் மனதின் அவலம் இருக்கிறது. வற்புறுத்தும் - குறைகூறும் மனதுடன் நரகம் இருக்கிறது. திடீரென பொருள் போய்விட்டிருக்கிறது. நரகமும் மறைந்திருக்கிறது. சுவர்க்கம் உங்கள்மேல் இறங்கிக் கொண்டிருக்கிறது. அது ஒரு அருள் கணம். அதை நீங்கள் அடைந்திருப்பதாக கூறமுடியாது. நீங்கள் எதையும் செய்ததில்லை என்று மட்டுமே உங்களால் கூறமுடியும். அதுவே அருளின் - பிரசாதம் என்பதன் - பொருள். உங்கள் பங்குக்கு நீங்கள் எதுவும் செய்யாமலேயே அது நிகழ்ந்துகொண்டு இருக்கிறது. உண்மையில் எப்போதுமே அது நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் எப்படியோ அதை நீங்கள் தவறவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அந்த அளவுக்கு பொருளால் நீங்கள் சூழப்பட்டுக் கிடக்கிறீர்கள். எனவேதான் உங்களின் உள்ளே பார்க்க உங்களால் முடிவதில்லை. அங்கே நிகழ்ந்து கொண்டிருப்பது என்ன என்பதை காண முடிவதில்லை. உங்கள் கண்கள் உள்நோக்கி இல்லை. உங்கள் கண்கள் வெளிநோக்கி போய்க் கொண்டிருக்கின்றன. பிறக்கும்போதே நிறைவானவராகவே நீங்கள் பிறக்கிறீர்கள். எதையும் நீங்கள் செய்யத் தேவையில்லை. ஒரே ஒரு அடியைகூட எடுத்துவைக்க தேவையில்லை. இதுவே பிரசாதம் என்பதன் பொருள்.

### ஆன்மீக ஒளி ஒளிர்கிறது.

எப்போதும் நீங்கள் இருளாலேயே சூழப்பட்டிருக்கிறீர்கள். விழிப்புணர்வு உள்நோக்கி இயங்கியதும் ஒளி இருக்கிறது. அந்த ஒளியில், இருள் ஒரு போதும் இருந்ததில்லை என்பதை அறிய வருகிறீர்கள். நீங்கள் தான் உங்களில் இசைந்திருக்கவில்லை. அதுதான் ஒரே இருள்.

இதை நீங்கள் புரிந்து கொண்டால், அமைதியாக அமர்ந் திருப்பதன்மூலமே அனைத்தும் நடக்கும். நீங்கள் பயணம் கிளம்பத் தேவையில்லை. இலக்கை அடைய தேவையில்லை. எதையும் நீங்கள் செய்யத் தேவையில்லை. ஆனால் எல்லாமே நடக்கிறது. இதை புரிந்துகொள்வது கடினம்தான். ஏனெனில் ''அது எப்படி முடியும்? மேலும் இதுவரை நான் நிறைய செயல்பட்டு வந்திருக்கிறேன். அப்படி இருந்துமே ஆனந்தம் ஏற்படவில்லை. அப்படி இருக்க எதையுமே செய்யாமல் அது எப்படி நிகழ முடியும்?'' என மனம் கேட்கிறது. ஒவ்வொருவரும் மகிழ்ச்சியையே தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொருவரும் அதை தவறவிட்டுக்கொண்டே இருக்கிறார்கள் இந்நிலையில், இந்தளவு தேடலிலேயே அது நிகழாவிட்டால் தேடாமலேயே அது எப்படி நிகழ

முடியும் என மனம் கேட்பது தர்க்கரீதியானதே. மேலும் இந்த மாதிரி பேசிக்கொண்டிருப்பவர்கள் கிறுக்கர்களாக இருக்கவேண்டும். கடுமையாக தேடவேண்டும், அப்போது மட்டுமே அது சாத்தியம்.'' மேலும், ''தீவிரமாக தேடு, அதிக முயற்சிசெய், விரைவாக ஓடு, வேகத்தை அதிகப்படுத்து; ஏனெனில் இலக்கு மிகவும் தொலைவில் உள்ளது'' என்று மனம் சொல்லிக் கொண்டே போகிறது.

உங்களுக்குள்ளேயே இருக்கிறது இலக்கு. எந்த அவசரத்துக்கும் அவசியமில்லை; எங்கேயும் போகத் தேவையுமில்லை; எந்தவிதமான செயலை செய்வதற்கும் தேவையில்லை. செயல் ஓய்ந்த நிலையில், நோக்கமேதம் இன்றி, அமைதியாக் அமர்ந்திருத்தலே தேவையான ஒரே செய்கை. உங்களில் நீங்களே முழுநிறைவாக – முழுமையாக மையம்கொண்டு, மேற்பரப்பில் எவ்வித சலனமும் தோன்றாமல் அமர்ந்திருப்பதே வேண்டியது. அந்நிலையில் பிரசாதம் இருக்கிறது. அந்நிலையில் அருள் உங்கள்மேல் இறங்குகிறது; ஆசீர்வாதங்கள் பொழிகின்றன. இதுவரை அறிந்திராத பேரின்பம் உங்களின் உயிரில் நிறைகிறது. பின் இந்த உலகமே ஒரு சொர்க்கமாக ஆகிறது. பின் இந்த வாழ்க்கையே இறைமையாக ஆகிறது. அந்நிலையில் எதுவுமே தவறானதில்லை. அப்போது எல்லாமே அது அது இருக்க வேண்டிய இடத்தில்/முறையில் இருக்கிறது. உங்களின் உள்பரவசத்தால் வெளி எங்கிலும் பரவசத்தையே நீங்கள் உணர்கிறீர்கள். ஒரு புதிய பார்வையால் - ஒரு புதிய தெளிவால், வேறொரு உலகமும் இல்லாது போகிறது; வேறொரு வாழ்க்கையும் இல்லாது போகிறது; வேறொரு கணமும் இல்லாது போகிறது; இந்த கணமே - இந்த வாழ்க்கையே ஒரே உண்மையாக இருக்கிறது.

ஆனால் உங்களை நீங்கள் உணராத வரை இருந்தலானது இலவசமாக வழங்கும் அனைத்து ஆசிர்வாதங்களையும் நீங்கள் தவற விட்டுக் கொண்டேதான் போவீர்கள்.

பிரசாதம் என்றால் இருத்தலிடமிருந்து வரும் கொடை எனப்பொருள். அதை நீங்கள் ஈட்டியதில்லை. எனவே அதை நீங்கள் கோரமுடியாது. உண்மையில் கோருபவரு இல்லாதொழிந்ததுமே அது அங்கு இருக்கிறது.

**சமாதியின் நிர்விசார சட்டத்தின் மிகத்தூய நிலையை அடைந்துகொண்டதும் ஆன்மீக ஒளி ஒளிர்கிறது.**

... மேலும் உங்களின் உள்ளார்ந்த இருப்பின் இயல்பு ஒளியாகவே இருக்கிறது. உணர்வே ஒளிதான். உணர்வுமட்டுமே ஒரே ஒளி. மிகவும் உணர்வில்லாமல் நீங்கள் இருந்து கொண்டிருக்கிறீர்க்ள். ஏன் செய்கிறோம்• என்று தெரியாமலே செயல்களை செய்கிறீர்கள்; ஏன்

ஆசைப்படுகிறோம் என்று தெரியாமலே பொருள்கள்மேல் ஆசைப் படுகிறீர்கள். ஏன் கேட்கிறோம் என்று தெரியாமலே பொருள்களை கேட்கிறீர்கள். ஏன் உறக்கம் வருகிறது என தெரியாமலே உணர்வற்ற உறக்கத்தில் வழுக்கி விழுகிறீர்கள். நீங்கள் எல்லாரும் அரைத் தூக்கத்தில் நடப்பவர்களாக இருக்கிறீர்கள். தூங்கியபடியே நடப்பது என்பதுதான் ஒரே ஆன்மீக நோயாகும் - தூங்கியபடியே நடத்தல், தூக்கத்திலேயே வாழ்தல்.

கூடுதல் உணர்வுள்ளவராக ஆகுங்கள். பொருள்களிடம் உணர்வுடன் இருப்பதில் இருந்து தொடங்குங்கள். பொருள்களை அதிக விழிப்புடன் பாருங்கள். ஒரு மரத்தை கடந்து செல்கிறீர்கள். அந்த மரத்தை அதிக விழிப்புடன் பாருங்கள். கொஞ்சம் அங்கு நில்லுங்கள். மரத்தை நோக்குங்கள். உங்கள் கண்களைத் துடைத்துக் கொள்ளுங்கள். மரத்தை அதிக விழிப்புடன் பாருங்கள். உங்கள் விழிப்புணர்வை திரட்டிக் கொண்டு மரத்தைப் பாருங்கள். வேறுபாட்டை கவனியுங்கள். நீங்கள் விழிப்பாக ஆனவுடனேயே மரம் வித்தியாசமாக இருக்கிறது. அதிக பசுமையாக இருக்கிறது. அதிக உயிரோட்டம் உள்ளதாக இருக்கிறது. அதிக அழகாக இருக்கிறது. மரம் அதேதான். மாறியிருப்பது நீங்கள் தான். ஒரு பூவை பார்க்கும்போது உங்கள் முழு வாழ்வுமே இந்த பார்வையைத்தான் பொறுத்துள்ளது என்பது போல் பாருங்கள். உங்கள் உணர்வு முழுவதையும் பூவிடம் தேக்குங்கள். உடனடியாக பூ மறு உருவம் அடைகிறது. அதிக பளிச்சென்று ஆகிறது. அதிக துலக்கமாக ஆகிறது. நித்தியத்தின் மகிமை அதனிடம் கொஞ்சம் வந்துவிட்டதாக தெரிகிறது. நித்தியமானதே இந்த தற்காலிகத்துக்குள் ஒரு பூவின் வடிவில் வந்துவிட்ட மாதிரி இருக்கிறது.

உங்கள் கணவரின், உங்கள் மனைவியின், உங்கள் நண்பரின், உங்கள் காதலியின் முகத்தை விழிப்புடன் பாருங்கள். அதன்மேல் தியானியுங்கள். திடீரென நீங்கள் உடலை மட்டும் காண்பதில்லை; உடலை கடந்த ஒன்றையும் காண்கிறீர்கள். உடலில் இருந்து வெளிப் பட்டுக் கொண்டிருக்கும் ஒன்றையும் காண்கிறீர்கள். உடலை சூழவும் ஒரு ஒளி உடல் - ஆன்மீக ஒளி இருக்கிறது. காதலியின் முகம் இனியும் உங்கள் காதலியின் முகமாக இருப்பதில்லை. காதலியின்முகம் கடவுளின் முகமாக ஆகியிருக்கிறது. உங்கள் குழந்தையை பாருங்கள். அது விளையாடிக் கொண்டிருப்பதை முழு விழிப்புடன் - உணர்வுடன் பாருங்கள். திடீரென பொருள் மறுஉருவம் பெறுகிறது.

முதலில் பொருள்களில் இருந்து தொடங்குங்கள். எனவேதான் பதஞ்சலி, விதையற்ற சமாதியான **நிர்விசார சமாதி** பற்றி பேசும் முன்பாக பிற சமாதிகள்பற்றி பேசுகிறார் பொருள்களில் இருந்து தொடங்குங்கள், அதிக நுட்பமான பொருள்கள் நோக்கி இயங்குங்கள்.

காட்டாக, மரத்தில் ஒரு பறவை பாடுகிறது: விழிப்பாக இருங்கள் - ஏதோ அந்த கணத்தில் நீங்களும் பறவையின் பாடலும் மட்டுமே இருப்பதுபோல். மற்ற உலகம் முழுவதும் நிலவவில்லை - பரவாயில்லை. பறவையின் பாடலை நோக்கி உங்கள் உயிரை குவியுங்கள். வேறுபாட்டை காண்பீர்கள். போக்குவரத்து சத்தம் அதன்பின் கேட்பதில்லை. அல்லது இருத்தலின் கடைக்கோடியில் - மிக தொலைவில் தள்ளியே கேட்கிறது. அதன் பாடலே உங்களின் இருத்தல் முழுமையும் நிலவுகிறது. நீங்களும் அந்த பறவையும் மட்டுமே இருக்கிறீர்கள். பின் பாடல் நின்றதும் பாடலின் இன்மையை கவனியுங்கள். இப்போது பொருள் நுண்மையாகிறது ஏனென்றால்...

இதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள் : ஒரு பாடல் நின்றதும், அந்த சுற்று சூழலில் ஒரு குறிப்பிட்ட தன்மையை - தன் தன்மையை - அது விட்டுச் செல்கிறது. அந்த சூழல் பழையது அல்ல. சூழல் முழுவதுமாக மாறி இருக்கிறது. ஏனெனில் பாட்டு இருந்தது; இப்போது இல்லை ... இப்போது பாட்டு இல்லை என்பது இருக்கிறது. அதை கவனியுங்கள் - முழு இருத்தலும் பாடலின்மையால் நிரம்பி இருக்கிறது. இதுவோ எந்த பாடலை விடவும் அதிக அழகானது. ஏனென்றால் இது அமைதியின் பாடல். ஒரு பாடல் ஒலியைப் பயன்படுத்துகிறது. ஒலி மறைந்ததும் பாடலின் இன்மை அமைதியை பயன்படுத்துகிறது. மேலும், ஒரு பறவை பாடி முடிந்தபின் நிலவும் அமைதி அதிக ஆழமானது. அதை கவனிக்க உங்களால் முடிந்தால், அதில் விழிப்பாயிருக்க உங்களால் முடிந்தால், அப்போது நுண்மையான ஒரு பொருளை - மிகவும் நுண்மையான ஒரு பொருளை - நீங்கள் தியானித்துக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு ஆள் போகிறார் - அழகான மனிதர் ஒருவர் போகிறார் - அவரை கவனியுங்கள். பின் அவர் போனதும் அவர் இல்லாததை கவனியுங்கள். ஏதோ ஒன்றை அவர் விட்டுச் சென்றுள்ளார். அவரது ஆற்றல் அறையின் தன்மையை மாற்றி உள்ளது. முன்பு இருந்த அதே அறை அல்ல அது.

புத்தர் இறந்து கொண்டிருந்த போது அவரிடம் ஆனந்தர் கேட்டார் ... கதறி அழுது கொண்டிருந்தார் அவர். அவர் கேட்டார், "இனி எங்களுக்கு என்ன ஆகும்? நீங்கள் இருக்கும் போதே எங்களால் ஞானமடைய முடியவில்லை. இனி நீங்கள் இங்கே இருக்கப் போவதில்லை. அப்போது நாங்கள் என்ன செய்வோம்? "அதற்கு புத்தர்" இனி என் இன்மையை நேசியுங்கள், என் இன்மையில் கவனம் செலுத்துங்கள்" என்று சொன்னதாக கூறப்படுகிறது. அந்த இன்மையை உணரமுடிவதற்காக 500 ஆண்டுகள் வரை சிலைகள் செய்யப்படவில்லை. சிலைகளுக்குப் பதிலாக போதிமரத்தை மட்டுமே சித்தரித்தார்கள். கோயில்கள் இருந்தன. ஆனால் புத்தர் சிலை இருக்கவில்லை. போதிமரம் மட்டுமே

இருந்தது. போதிமரத்தின் கற்சிலை. அதன்கீழ் இல்லாமலிருக்கும் ஒரு புத்தர். மக்கள் போய் அமர்ந்து அந்த மரத்தை கவனிப்பார்கள். மரத்தடியில் புத்தர் இல்லாதிருக்கும் தன்மையை கவனிக்க முயல்வார்கள். அவர்களில் பலர் மிக ஆழமான அமைதியையும் தியானத்தையும் அடைந்து கொண்டார்கள். பின்பு படிப்படியாக அந்த நுண்பொருள் இல்லாமல் போனது. ''தியானிக்க இப்போது என்ன இருக்கிறது? ஒரு மரம் மட்டும்தான் இருக்கிறது. ஆனால் புத்தர் எங்கே இருக்கிறார்?'' என்று மக்கள் பேசத் தொடங்கினார்கள். ஏனெனில் இல்லாதிருக்கும் புத்தரை உணர மிகமிக ஆழமான தெளிவும் கவனமும் தேவைப்படுகிறது. அந்நிலையில் நுண்மையான இன்மையின் மேல் இப்போது மக்களால் தியானிக்க முடியவில்லை என்று கண்டதும் சிலைகள் உருவாக்கப்பட்டன.

உங்களின் புலன்கள் எதைக்கொண்டும் இதை நீங்கள் செய்ய முடியும். ஏனெனில் மக்களுக்கு பல்வேறு திறன்களும் நுண்உணர்வுகளும் உள்ளன. காட்டாக உங்களுக்கு இசையை கேட்கும் காது இருந்தால் பின் ஒரு பறவையின் பாடலை கவனிப்பதும் அதில் விழிப்பாயிருப்பதும் நல்லது. சில நொடிகளுக்கு அது இருக்கிறது, பின் போய்விடுகிறது. அந்நிலையில் அது இல்லாதிருப்பதை கவனியுங்கள். மேலும் இன்மையை உங்களால் கவனிக்க முடிந்தால் சிலிர்த்துப் போவீர்கள் நீங்கள்: திடீரென பொருள் நுண்மையாகி இருக்கிறது. பறவையின் நிசமான பாடலை விடவும் இதை கவனிக்க அதிக கவனமும் அதிக விழிப்பும் தேவைப்படும்.

உங்கள் மூக்கு கூர் உணர்வுள்ளதாக இருந்தால்... மிக சிலருக்கே நல்ல மூக்கு உள்ளது. மனித இனம் ஏறக்குறைய முழுவதுமே மூக்கை முழுவதுமாக இழந்துவிட்டது. விலங்குகள் பரவாயில்லை. அவற்றின் மோப்ப ஆற்றல் மனிதரைவிடவும் அதிக கூர்மையானதாகவும் திறனுடையதாகவும் உள்ளது. மனிதரின் மூக்குக்கு என்னவோ ஆகிவிட்டது. ஏதோ கோளாறாக போயிருக்கிறது. திறமுள்ள மூக்கு மிகச் சிலரிடமே உள்ளது. உங்களுக்கு அப்படி இருந்தால் பின் ஒரு பூவின் அருகில் செல்லுங்கள். மணம் உங்களை நிரப்ப விடுங்கள். பின் சிறுகச் சிறுக அந்த பூவிலிருந்து விலகிச் செல்லுங்கள் - மிக மெதுவாக - ஆனால் தொடர்ச்சியாக மணத்தை கவனித்திருங்கள். நீங்கள் தள்ளி செல்ல செல்ல மணம் அதிக நுண்மையாகி செல்லும். அதை உணர உங்களுக்கு அதிகமதிக விழிப்புணர்வு தேவைப்படும். மூக்காக மாறுங்கள். முழு உடலையும் மறந்து விடுங்கள். உங்கள் ஆற்றல் முழுவதையும் மூக்குக்கு கொண்டுவாருங்கள் - ஏதோ மூக்குமட்டுமே இருப்பதுபோல். மணத்தின் தடத்தை நீங்கள் தவற விட்டுவிட்டால்

மெல்லமெல்ல மலரை நோக்கி சில அடிகள் எடுத்து வையுங்கள், விட்ட மணத்தை மீண்டும் பிடியுங்கள், திரும்பி வாருங்கள், பின்னோக்கி நகருங்கள். படிப்படியாக ஒரு பூவின் வாசத்தை அதிலிருந்து மிகமிக தொலைவான இடத்தில் இருந்தே முகர உங்களால் முடியும் - அந்த இடத்திலிருந்து அந்த பூவை வேறு எவராலும் வாசம்பிடிக்க முடியாது. அதன்பிறகும் போய்க் கொண்டே இருங்கள். மிக எளிமையான ஒரு வழியில் பொருளை நுண்பொருளாக மாற்றிக்கொண்டிருக்கிறீர்கள். பின் மணத்தை உங்களால் பிடிக்கவே முடியாமல் போகும் ஒரு கணம் வரும். இப்போது மணம் இன்மையை முகருங்கள். ஒரு கணத்துக்கு முன்புதான் இருந்து இப்போது இல்லாதிருக்கிற மணத்தின் இன்மையை இப்போது முகருங்கள். அதுவே இருத்தலின் மறுபக்கம், இல்லாத பக்கம், இருளான பக்கம். மணத்தின் இன்மையை உங்களால் முகரமுடிந்தால், அதில் ஒரு வேறுபாடு உண்டாகிறது என்பதை உங்களால் உணர முடிந்தால், அதில் ஒரு வேறுபாடு உண்டாகிறது. அந்நிலையில் பொருள் மிக நுண்மையானதாக ஆகியிருக்கிறது; இப்போது அது சமாதியின் ஏறக்குறைய நிர்விசார கட்டத்தை – எண்ணமற்ற நிலையை கிட்டத்தட்ட அடைந்து எட்டிக் கொண்டிருக்கிறது.

தியானத்தின் ஒரு பொருளாக நறுமணத்தை பயன்படுத்தி இருக்கிறார் முகம்மது. தியானத்துக்கு மணத்தை பயன்படுத்திய ஞானி இவர் மட்டுமே. மணத்தை ஒரு தியானப்பொருளாக ஆக்கி இருக்கிறது இசுலாம். இது அழகானது.

முகர்திறன் மனிதரிலிருந்து ஏன் மறைந்து வருகிறது? சிக்கலான பல விசயங்கள் இதில் தொடர்பு கொண்டுள்ளன. ஆனால் போகிற போக்கில் அவற்றை உங்களுக்கு சொல்லிச் செல்ல நான் விரும்புகிறேன் - நீங்கள் அவற்றை நினைவுகொள்ள வசதியாக. மேலும் அந்த தடைகளை நீங்கள் கடந்துவிட்டால் உடனடியாக உங்கள் முகர்திறன் திரும்பிவிடும். ஒடுக்கி வைக்கப்படுகிறது அது.

மணம் என்பது காமத்துடன் ஆழமான தொடர்புடையது என்பதை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். காமத்தின் ஒடுக்குதலே மணத்தின் ஒடுக்குதலாகவும் ஆகி உள்ளது. விலங்குகள் உடலுறவு கொள்ளும் முன்பாக முதலில் உடலை முகருகின்றன. உண்மையில் அவை உடலுறவு கொள்ளும்முன் புணர்ச்சிஉறுப்பை முகர்கின்றன. உடலுறவு உறுப்பே / காம மையமே அவற்றுக்கு குறிப்புகளை தருகிறது: ''நீ ஏற்கப்படுகிறாய், அனுமதிக்கப்படுகிறாய்'' என. அதன் பிறகு மட்டுமே அவை உறவு கொள்கின்றன, இல்லாவிட்டால் இல்லை.

மனிதஉடலும் வாசங்களை - ஏற்ட!க்கும் மறுப்புக்கும், ஈர்ப்புக்கும் விலக்கலுக்கும் ஆன வாசங்களை - வெளியிடுகிறது. உடலுக்கு அதற்கே

உரிய மொழியும் குறியீடுகளும் உள்ளன. ஆனால் அவற்றை உங்களால் முகர முடிந்தால் சமுதாயத்தில் மிகுந்த குழப்பமாகிவிடும். நண்பர் ஒருவருடன் நீங்கள் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். அப்போது அவரது மனைவி வாசம்வீச தொடங்குகிறாள். காமத்துக்கு அழைப்பு சமிக்ஞை அனுப்புகிறாள். அப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்? அது ஆபத்தானதாகும். எனவே இதை நாகரிகம் சமாளிப்பதற்கான ஒரேவழி முகர்திறனையே முற்றிலுமாக அழித்துவிடுவதாகும். ஏனெனில் அது காமத்தில் மையம்கொண்ட ஒரு நிகழ்வாக இருக்கிறது. சாலையை கடந்து கொண்டிருக்கிறீர்கள். ஒரு பெண் உங்களை தாண்டி செல்கிறாள். உங்கள்மேல் அவள் உணர்வுபூர்வமாக ஈடுபாடு கொள்ளாதிருக்கலாம். ஆனாலும் வரவேற்கும் வாசத்தை அவள் வெளியிடலாம். என்ன செய்வது? உங்கள் மனைவியுடன் நீங்கள் உறவுகொள்ள விரும்புகிறீர்கள். அவள் உங்கள் மனைவி என்பதால் அவளுடன் நீங்கள் உறவுகொள்ள விரும்பும்போதெல்லாம் உங்களுடன் அவள் உறவுகொள்ள வேண்டி இருக்கிறது. ஆனால் அவள் உடல், இப்போது தனக்கு விருப்பமில்லை - வரவேண்டாம் - விலகு என்னும் சமிக்ஞையை உங்களுக்கு தருகிறது. என்ன செய்வீர்கள்? உடல்களை கட்டுப்படுத்த முடியாது. மனத்தால் மட்டுமே அவற்றை நீங்கள் கட்டுப்படுத்திவிட முடியாது. மணம் அபாயகரமானது. அது காமமாக ஆகிறது. காமமாகவே அது இருக்கிறது.

எனவேதான் நறுமணப் பொருள்களின் பெயர்கள் எல்லாம் சிற்றின்ப சுவைசார்ந்த பெயர்களாகவே உள்ளன. ஒரு கடைக்குப் போய் வாசனை திரவியங்களின் பெயர்களை பாருங்கள் - எல்லாமே பாலியல் சார்ந்தனவாகவே உள்ளன. நறுமணமே காமம்சார்ந்ததுதான். எனவே தான் மூக்கு முழுமையாக மூடப்பட்டுள்ளது. காமத்தை இசுலாம் ஒடுக்குவதில்லை, ஏற்றுக்கொள்கிறது. காமத்தை இசுலாம் மறுப்ப தில்லை, ஏற்கிறது. சிற்றின்ப உலகத்தை இசுலாம் துறப்பதில்லை. எனவேதான் முகர் திறனுக்கு சிறிது சுதந்திரத்தை இசுலாமால் வழங்க முடிந்தது. உலகின் வேறெந்த மதமும் அதை செய்ய முடியவில்லை.

ஆனால் மணத்தை ஒரு தியானப் பொருளாக மாற்ற உங்களால் முடிந்தால் அது மிகமிக அழகானதாக ஆகமுடியும். மேலும் அது மிகவும் நுண்மையான ஒரு நிகழ்வுமாகும். பையப்பைய நுண்மையின் இறுதிக்கே உங்களால் போக முடியும்.

சிலவிதமான மணப்பொருள்களை இந்துக்களும் பயன்படுத்தி இருக்கிறார்கள். குறிப்பாக கோயில்களில் சாம்பிராணி காட்டுகிறார்கள். ஆனால் அவர்களின் மணப்பொருள் மாறுபட்டது. காமத்துக்கென வாசங்கள் உள்ளது போலவே ஆன்மீகத்துக்கான வாசங்களும் உள்ளன. இரண்டும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையனவே. மிக நீண்டகால தேடலுக்குப்பின் சில மணங்கள் காமத்தன்மையானவை அல்ல என்பதை

இந்துக்கள் கண்டுபிடித்தார்கள். அதற்கு மாறாக அவற்றின் ஆற்றல் மேல்நோக்கி போகிறது, கீழ் நோக்கி அல்ல என கண்டார்கள். வாசனைப் பொருள் மிகமிக முக்கியமானதாக ஆனது. கோயிலில் அவற்றை பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அதுவும் பயன்படுகிறது. உங்களில் பாலுணர்வை தூண்டமுடிகிற இசைகள் இருப்பது போலவே உங்களை ஆன்மீகத்தில் அமிழ்த்த முடியும் இசைகளும் இருக்கின்றன. குறிப்பாக நவீன இசை மிகவும் பாலியல் தன்மையதாக உள்ளது. பாரம்பரிய இசை அதிகமும் ஆன்மீகமானது. எல்லா புலன்களின் விசயத்திலும் இதுவே உள்ளது. ஆன்மீக உணர்வை தூண்டமுடிகிற ஓவியங்களும் உள்ளன; காம உணர்வை தூண்டமுடிகிற ஓவியங்களும் உள்ளன. காமத்தை யும் ஆன்மீகத்தையும் தூண்ட முடியும் ஒலிகள், மணங்கள் உள்ளன. ஒவ்வொரு புலனுக்கும் இரண்டு உணர்வுகள் உள்ளன. அதன் வழியாக ஆற்றல் வீழ்ச்சியுற்றால் - கீழ்நோக்கி இயங்கினால் அது காமத் தன்மையது. ஆற்றல் மேல்நோக்கி எழுந்தால் அது ஆன்மீகமானது.

மணப்பொருளைக் கொண்டும் இதை நீங்கள் செய்யமுடியும். தூபத்தை கொளுத்துங்கள். அதன்மேல் தியானியுங்கள். அதை உணருங்கள், முகருங்கள். அதனால் நிரம்புங்கள். பின் பின்னோக்கி நகருங்கள். அதிலிருந்து விலகிச் செல்லுங்கள். அதன்மேல் தியானித்துக் கொண்டே அதிலிருந்து விலகிச் செல்லுங்கள். அதிகமதிகம் நுண்மை யாக அது ஆகட்டும். அதன் இன்மையை நீங்கள் உணர முடியும் ஒரு கட்டம் வருகிறது. மிக ஆழமான ஒரு விழிப்புணர்வு நிலைக்கு அப்போது நீங்கள் வந்திருக்கிறீர்கள்.

**சமாதியின் நிர்விசார கட்டத்தின் மிகத்தூய நிலையை அடைந்து கொண்டதும் ஆன்மீக ஒளி ஒளிர்கிறது.**

ஆனால் பொருள் முற்றிலுமாக மறையும்போது, பொருளின் தோற்றம் மறைந்து பொருளின் மறைவும் மறையும்போது, எண்ணம் மறைந்து எண்ணமின்மையும் மறையும்போது, மனம் மறைந்து அ-மனம் என்ற கருத்தும் மறையும்போது, அப்போதுதான் மிகத் தூய நிலையை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள். இப்போது இந்த கணத்தில் திடீரென உங்கள்மேல் அருள் பொழிகிறது. இதுவே பூமாரி பொழியும் கணம். வாழ்வின் - உயிரின் ஆதாரத்துடன் நீங்கள் தொடர்புறுத்தப்படும் நேரம் இதுவே. அதன்பின் நீங்கள் ஒரு ஆண்டியாக இல்லாது போகும் தருணம் இதுவே. நீங்கள் ஒரு அரசராகும் கணம் இதுவே. முன்பு நீங்கள் முள்முடி சூட்டப்பட்டிருந்தீர்கள், இந்த கணத்தில் மணிமுடி சூட்டப் படுகிறீர்கள்.

**....நிர்விசார சமாதியில் உணர்வானது உண்மையால் நிரம்புகிறது.**

எனவே உண்மை என்பது எட்டப்பட வேண்டிய ஒரு இறுதி முடிவு அல்ல. அடைந்துகொள்ளப்பட வேண்டிய ஒரு அனுபவமே அது. உண்மை என்பது நீங்கள் சிந்திப்பதற்கான ஒன்றல்ல; நீங்கள் இருக்கவேண்டிய ஒரு நிலையே உண்மை. எந்த பொருளும் இல்லாமல் முற்றிலும் தனித்திருக்கும் சுயத்தின் அனுபவமே உண்மை. மிகத் தூய நிலையில் இருக்கும் (போது) நீங்களே உண்மை. உண்மை என்பது ஒரு தத்துவ தீர்வு அல்ல. எந்த தீர்க்க முடிவாலும் உண்மையை உங்களுக்கு வழங்க முடியாது. எவ்வித கோட்பாடும் எவ்வித கருதுகோளும் உண்மையை உங்களுக்கு தரமுடியாது. மனம் மறைகிறபோது உங்களுக்குள் உண்மை இருக்கிறது. ஏற்கனவே மனதில் உண்மை மறைந்திருக்கிறது. அதை பார்ப்பதற்கு மனம் உங்களை விடுவதில்லை. ஏனெனில் மனம் வெளிநோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது; பொருள்களைப் பார்ப்பதற்கே உங்களுக்கு அது உதவிக் கொண்டிருக்கிறது.

**நிர்விசார சமாதியில் உணர்வானது உண்மையால் நிரம்புகிறது.**

ரிதம்பர என்பது மிக அழகான ஒரு சொல். தாவோ என்பதற்கு ஈடானதே அது. உண்மை என்ற சொல்லால் அதை முழுமையாக விளக்க முடிவதில்லை. வேதங்களில் அது ரித் எனப்படுகிறது. பேரண்டத்தின் அடிப்படையையே அந்த **ரிதம்** என்பது குறிக்கிறது. இருத்தலின் அடிப்படை விதிகளையே **ரிதம்** என்பது குறிக்கிறது. ரிதம் என்றால் வெறும் உண்மை அல்ல. உண்மை என்பது ரொம்பவே வறட்சியான ஒரு வார்த்தை. தர்க்கத் தன்மையையே அதிகமும் அது கொண்டிருக்கிறது. ''இது உண்மை, அது பொய்'' என்கிறோம் நாம். எந்த கொள்கை சரி எந்த கொள்கை சரியல்ல என்று தீர்மானிக்கிறோம் நாம். 'உண்மை'யில் அதிகமும் தர்க்கமே ஏறி உள்ளது. தர்க்கரீதியான ஒரு சொல் அது. **ரிதம்** என்றால் பேரண்ட ஒத்திசைவு விதி என பொருள். அந்த விதியே விண்மீனை இயக்குகிறது; அந்த விதியாலேயே பருவங்கள் வந்துபோகின்றன; கதிரவன் உதித்து மறைகிறது, இரவும் பகலும் மாறிமாறி வருகிறது; பிறப்பும் இறப்பும் மாறிமாறி வருகிறது. உலகைப் படைக்கிறது மனம். உள்ளதை நீங்கள் அறிந்து கொள்ள அனுமதிக்கிறது அ.மனம் (மனமற்றது). ரித் என்றால் பேரண்ட விதி எனப்பொருள்; இருத்தலின் மிகவும் உள்ளார்ந்த மையம் / சாரம் என பொருள்.

அதை உண்மை என அழைப்பதைவிட இருத்தலின் அடிப்படை என அழைப்பதே பொருத்தம். உண்மை என்பது ஒரு அயலான பொருள்போல் தோன்றுகிறது; உங்களிடமிருந்து தனியாக நிற்கிற ஒன்றுபோல் தோன்று கிறது. **ரிதம்** என்பது உங்களின் உள்ளார்ந்த

இருப்பு. உங்களின் உள்ளார்ந்த உயிர் மட்டுமல்ல, அனைத்துக்கும் உள்ளார்ந்த உயிரே ரிதம்பரம். நிர்விசார சமாதியில் உணர்வானது ரிதம்பரத்தால் - பேரண்ட ஒத்திசைவால் நிரம்புகிறது. அதில் இசை கேடு ஏதுமில்லை, முரண்பாடு ஏதுமில்லை; எல்லாமே ஒரே சீரில் அமைகிறது. தவறானதும்கூட உள்வாங்கப்படுகிறது, புறந்தள்ளப்படுவ தில்லை; கெட்டதும் கூட உள்வாங்கப்படுகிறது, புறந்தள்ளப்படுவதில்லை; நஞ்சும்கூட உள்வாங்கப்படுகிறது, புறந்தள்ளப் படுவதில்லை; எதுவுமே வேண்டாமென ஒதுக்கப்படுவதில்லை.

உண்மையில், உண்மையின்மை மட்டுமே விலக்கப்படுகிறது. ரிதம்பரத்தில் முழுமையும் ஏற்கப்படுகிறது. மேலும் முழுமை என்பது எப்பேர்ப்பட்ட ஒத்திசைவான நிகழ்வாக இருக்கிறது என்றால் நஞ்சும் கூட அதன் பங்கை ஆற்றுகிறது; வாழ்வு மட்டுமல்ல - சாவும்கூட. ஒவ்வொன்றும் புதிய ஒளியில் பார்க்கப்படுகிறது. துன்பம் / துக்கம் கூட ஒரு புது தன்மை பெறுகிறது. அசிங்கம்கூட அழகாக ஆகிறது. ஏனெனில் ரிதம்பரம் ஒளிரும் அக்கணமே, எதிர்நிலைகள் நிலவுவது ஏன் என்பதை முதன்முறையாக நீங்கள் புரிந்துகொள்கிறீர்கள். எதிர்நிலைகள் அதன்பின் எதிர்நிலைகளாக இருப்பதில்லை; நேர்நிலைகளின் மறுபாதியாக ஆகி இருக்கின்றன; ஒன்றை ஒன்று நிறைவு செய்துகொள்வதாக — ஒன்றுக்கொன்று — உதவிக் கொள்வதாக ஆகின்றன.

இப்போது உங்களில் எந்த புகாரும் இருப்பதில்லை. இருத்தலுக்கெதிரான எந்த குறையும் இருப்பதில்லை. நிலைமைகள் ஏன் குறிப்பிட்ட விதமாக உள்ளன என்பதை, மரணம் ஏன் உள்ளது என்பதை, இப்போது நீங்கள் புரிந்துகொள்கிறீர்கள். சாவு இல்லாமல் வாழ்வு இருக்க முடியாது என்பதை இப்போது நீங்கள் அறிகிறீர்கள். மேலும் சாவு இல்லாவிட்டால் வாழ்வு என்னவாக இருக்கும்? சாவு இல்லாவிட்டால் வாழ்வு முற்றிலும் சகித்துக்கொள்ள முடியாததாகவே இருக்கும். சாவு இல்லாவிட்டால் வாழ்வு முற்றிலும் அசிங்கமானதாகவே இருக்கும் — சற்றே யோசித்து பாருங்கள்!

மகா அலெக்சாந்தர் பற்றி ஒரு கதை உண்டு: தன்னை இறப்பற்றவனாக ஆக்கமுடிகிற ஒன்றை கண்டுபிடிக்க அவன் தேடி அலைந்தானாம். எல்லாருமே அதுபோன்ற ஒன்றை தேடிக்கொண்டு தான் இருக்கிறார்கள். அதிலும் அலெக்சாந்தர் ஒன்றை தேடினால் நிச்சயமாக கண்டுபிடித்து விடுவான் - ஏனெனில் அத்தகைய பலம்பொருந்திய மனிதன் அவன். தேடிக்கொண்டே இருந்தான் அவன். ஒருமுறை யாரோ ஒரு அறிவாளர் ஒரு குகையை குறிப்பிட்டு "அந்த குகையில் ஒரு சுனை இருக்கிறது. அதன் நீரை குடித்தால் நீ அமரன் ஆகிவிடுவாய்" என்று அவரிடம் கூறியதால் அந்த குகையை வந்தடைந்தான். அலெக்சாந்தர் ஒரு மூடனாகவே இருந்திருக்க வேண்டும். எல்லா அலெக்

சாந்தர்களும் மூடர்களாகவே இருக்கிறார்கள். இல்லாதிருந்தால் அவன் அந்த அறிவாளரிடம் அவர் அந்த சுனையிலிருந்து நீர் அருந்தியிருக்கிறாரா என்று கேட்டிருக்க வேண்டும். ஆனால் அவன் கேட்கவில்லை. அப்படி ஒரு அவசரத்தில் இருந்தான் அவன். மேலும் யாருக்கு தெரியும் - அந்த குகையை அவன் அடைந்துவிட முடியாமல் போகலாம். எனவே அவன் சாவதற்குள்... எனவே அவன் விரைந்தான்.

அந்த குகையை அடைந்தான் அவன். உள்ளே பார்த்ததும் மிகுந்த மகிழ்ச்சி கொண்டான்: பளிங்கனைய நீர் அங்கே இருந்தது. அப்படி ஒரு நீரை அதுவரை அவன் கண்டதில்லை. அதை அவன் குடிக்கப் போனான்... உடனே அந்த குகையில் உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு காகம், ''நிறுத்து! குடிக்காதே. இதை குடித்துவிட்டு துன்பப்பட்டுக் கொண்டு இருக்கிறேன் நான்'' என்றது. அந்த காகத்தை பார்த்தான் அலெக்சாந்தர். ''நீ என்ன சொல்கிறாய்? இதை குடித்துவிட்டு நீ துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறாயா? என்ன துன்பம்?'' என்றான். காகம் சொன்னது, ''இப்போது நான் சாக விரும்புகிறேன், ஆனால் என்னால் சாக முடியவில்லை. எல்லாம் முடிந்துவிட்டது. வாழ்க்கையால் வழங்க முடியும் அனைத்தையும் நான் அனுபவித்து விட்டேன். காதலை நான் அறிந்து விட்டேன், அதிலிருந்து வளர்ந்து வந்திருக்கிறேன். வெற்றியை நான் அறிந்துவிட்டேன். காகங்களின் அரசனாக நான் இருந்தேன். இப்போது எனக்கு திகட்டிவிட்டது. அறியக்கூடிய அனைத்தையும் நான் அறிந்துவிட்டேன். எனக்கு தெரிந்திருந்த எல்லாரும் இறந்துவிட்டார்கள். அவர்கள் திரும்பிப்போய் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். என்னால் ஓய்வெடுக்க முடியவில்லை. தற்கொலை செய்துகொள்ள எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டேன். ஆனால் ஒன்றுமே பலிக்கவில்லை. இந்த பாழாய்ப்போன குகையின் நீரைக் குடித்துவிட்டதால் என்னால் சாக முடியவில்லை. இந்த குகைபற்றி யாரும் அறிந்து கொள்ளாதிருப்பது நல்லது. இதை குடிப்பதற்குமுன் எனது நிலைமையைப்பற்றி நீ ஆலோசித்துப்பார் - பிறகு நீ குடிக்கலாம்'' என்றது. அப்போதுதான் முதன்முறையாக அதுபற்றி அலெக்சாந்தர் யோசித்தான் என்றும் அந்த குகையிலிருந்தும் அந்த சுனையிலிருந்தும் நீர் அருந்தாமல் திரும்பிவந்தான் என்றும் கதை.

சாவு இல்லாவிட்டால் வாழ்க்கை முற்றிலும் தாங்க முடியாததாகிவிடும். அன்பின் எதிர்நிலை இல்லாமல் போனால் அன்பே தாங்க முடியாததாகிவிடும். உங்கள் காதலியிடமிருந்து பிரிய உங்களால் முடியாமல் போனால் அது சகிக்க முடியாததாகிவிடும். மொத்த கதையும் முற்றிலும் ஒரே மாதிரியாக ஆகிவிடும், சலிப்பை உண்டாக்கிவிடும்.

எதிர்நிலைகளால்தான் வாழ்க்கை தொடர்கிறது. அதனால்தான் அது சுவையாக இருக்கிறது. நெருங்கி வருதல் - விலகி செல்லுதல், மறுபடியும் நெருங்கி வருதல் - மறுபடியும் விலகி செல்லுதல். எழுதல் - விழுதல். கடலில் ஒரு அலை எழுந்துவிட்டு விழமுடியாமல் போனால் எப்படி இருக்கும்? ஒரு சூரியன் உதித்துவிட்டு பின் மறைய முடியாதிருந்தால் எப்படி இருக்கும்? சற்றே சிந்தித்துப் பாருங்கள். ஒரு துருவத்திலிருந்து மறு துருவத்துக்கு தொடர்ந்து இயங்கிக் கொண்டிருப்பதுதான், வாழ்க்கை தொடர்ந்து ரசனைக்குரியதாக இருப்பதன் ரகசியம். இந்த ரிதம்பர ரகசியத்தை, அனைத்தினதும் அடிப்படை விதியை, அனைத்தினதும் அடித்தளத்தை ஒருவர் அறிய வருகிற போது எல்லாமே சீராகிறது; ஒருவர் புரிந்து கொள்கிறார். பின் புலம்பல் ஏதும் இருப்பதில்லை. ஒருவர் ஏற்றுக்கொள்கிறார்: இருக்கிறது எதுவாயினும் அது அழகானதே.

எனவேதான் அறிந்திருக்கிறவர்கள் அனைவருமே, வாழக்கை செம்மையானது / பூரணமானது என்கிறார்கள். அதற்குமேல் அதை நீங்கள் மேம்படுத்த முடியாது.

**நிர்விசார சமாதியில் உணர்வானது உண்மையால் நிரம்புகிறது.**

(அதை நீங்கள்) தாவோ என அழையுங்கள்... தாவோ என்பது / ரிதம்பரத்துக்கு இன்னும் சரியான பொருளை தருகிறது. இருந்தாலும் ரிதம்பரம் என்ற சொல்லுடனேயே நீங்கள் தங்கியிருக்க முடிந்தால் அது இன்னும் அழகானதே. அப்படியே இருக்கட்டும் அது. ரிதம்பர என்ற ஒலியே ஒத்திசைவின் ஒருவித தன்மையை கொண்டுள்ளது. 'உண்மை' என்பது ரொம்பவும் வறட்டுத்தனமானது, ஒரு தர்க்க ரீதி கருத்தே அது. உண்மையுடன் அன்பையும் சேர்த்து ஒன்றை நீங்கள் ஆக்க முடிந்தால் அது ரிதம்பரத்துக்கு பக்கத்தில் வரும். ஹெராக்ளிட்டசின் மறைந்துள்ள ஒத்திசைவும் அதுவே. ஆனால் பொருள் முழுமையாக மறைந்திருக்கிற போது மட்டுமே இது நிகழ்கிறது. உங்கள் உணர்வுடன் தனியாக இருக்கிறீர்கள் நீங்கள்; வேறு யாரும் இருப்பதில்லை. எதையும் பிரதிபலிக்காத கண்ணாடி....

○

# 8. ஆசான் தோன்றுகிறார்

முதல் கேள்வி:

கிருஷ்ணமூர்த்தியைப் போன்ற ஒரு ஞானமடைந்த மனிதரால், மக்களுக்கு தான் உதவியாக இல்லை என்பதைப் பார்க்க முடியாமல் போவது எப்படி? அவர் ஞானமடைந்தவராக இருந்தால் எல்லாவற்றையுமே அவரால் பார்க்க முடிய வேண்டாமா? அடுத்து, எல்லா விதமானவர்களுக்கும் உங்களால் உதவமுடியும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் நீங்களும்கூட, சிலர் உங்களை விட்டு போய்விடட்டும் என்பதற்காக, வேண்டுமென்றே முரண்படுவதாக சொல்கிறீர்கள். எல்லாருக்கும் உதவ உங்களால் முடியுமானால் ஏன் சிலர் உங்களைவிட்டு போய்விடுவது தேவையாகிறது?

கிருஷ்ண மூர்த்தியைப் போன்ற மனிதரால் பார்க்க முடியும். அதில் தடையேதும் இல்லை. எந்த தடங்கலும் இல்லை. அவரைச் சுற்றி நடைபெறும் ஒவ்வொன்றையும் அவர் பார்க்கிறார். ஆனால் ஞானமடைந்த ஒரு மனிதரால் எதையும் செய்ய முடியாது. தான் இருப்பதுபோலவே, இயல்பாகவும் இளக்கமாகவும் அவர் இருக்க வேண்டி இருக்கிறது. செயல்பாடு இறுக்கத்தை கொணர்கிறது. செயல்பாடு உங்களை இயல்பற்றவர் ஆக்குகிறது. அப்போது நீங்கள் நீரோட்டத்தை எதிர்த்து போய்க் கொண்டிருக்கிறீர்கள்.

என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை கிருஷ்ணமூர்த்தி அறிவார். ஆனால் அவரால் ஒன்றும் செய்ய முடியாது. நடப்பதை அவர் அனுமதிக்க வேண்டி இருக்கிறது. முழுமையின் சித்தம் அதுவே. அதைக் குறித்து செய்யமுடிவதற்கு ஏதுமில்லை. செய்பவர் எப்போதும் அறியாமையி லேயே இருக்கிறார். விழிப்படைந்ததும் செயல்படுபவர் அறவே காணப்படுவது இல்லை. ஒருவர் விழிப்படைந்ததும், இருக்கிற நிலவரத்தை அப்படியே ஏற்றுக் கொள்கிறார்.

எனவே கிருஷ்ணமூர்த்திக்கு தெரியாது என்று நினைக்காதீர்கள். அவருக்கு மிக நன்றாக தெரியும். ஆனாலும் இப்படித்தான் நடந்திருக்கிறது; இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. மேலும் அது இப்படித்தான் நடந்தாக வேண்டுமா வேறுமாதிரியா என முடிவெடுக்க உள்ளுக்குள் யாரும் இருப்பதில்லை. ஒன்றும் செய்வதற்கில்லை. ஒரு ரோசா செடி ரோசா செடியாகவே இருக்கிறது; ஒரு மாமரம் மாமரமாகவே இருக்கிறது. மாமரத்தில் ரோசாக்கள் பூக்க முடியாது. ரோசா செடியில் மாங்காய்கள் காய்க்க முடியாது. இப்படித்தான் இருக்கிறது. முற்று முழுமையான ஒரு ஏற்பு இது.

'முழுமையான ஏற்பு' என்று நான் கூறும்போது அது உங்களுக்கு விளக்குவதற்காக மட்டும்தான். மற்றபடி விழிப்படைந்த ஒரு உணர்வில் ஏற்பு என்பது இல்லை. ஏனெனில் மறுப்பு என்பதும் அங்கில்லை. எனவேதான் அது முழுமையானது என்கிறேன். முழுமையிடம்

முழுமையாக சரணடைவதாகும் அது. எல்லாமே நன்றாக இருக்கிறது. என்னால் உங்களுக்கு உதவ முடியுமா முடியாதா என்பதை முடிவு செய்ய வேண்டியது என்னைப் பொறுத்ததில்லை. முழுமையே முடிவு செய்கிறது. முழுமையே என்னைப் பயன்படுத்திக் கொள்கிறது. அது முழுமையை பொறுத்தது. மக்களுக்கு உதவாதிருப்பதே நல்ல தானால் பின் மக்களுக்கு உதவ முழுமை என்னை விடுவதில்லை. ஆனால் நான் அதில் எங்குமில்லை. இதுதான் ஞானநிலையின் - விழிப்புணர்வின் நிலைமை. உங்களால் அதை புரிந்துகொள்ள முடிவதில்லை. ஏனெனில் எப்போதும் நீங்கள் செய்பவரை வைத்தே சிந்திக்கிறீர்கள். ஞானமடைந்த மனிதர் உண்மையில் இருப்பதே இல்லை. அவர் அங்கில்லை. அங்கு இருப்பது ஒரு மாபெரும் சூனியம்தான். எனவே நிகழவேண்டியது எதுவும் நிகழ்கிறது. நிகழ வேண்டாதது எதுவும் நிகழ்வதில்லை.

அடுத்து நீங்கள் கேட்கிறீர்கள்:

> **அடுத்து எல்லா விதமானவர்களுக்கும் உங்களால் உதவ முடியும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் நீங்களும்கூட, சிலர் உங்களைவிட்டு போய்விடட்டும் என்பதற்காக வேண்டுமென்றே முரண்படுவதாக சொல்கிறீர்கள். எல்லாருக்கும் உதவ உங்களால் முடியுமானால் ஏன் சிலர் உங்களைவிட்டு போய்விடுவது தேவையாகிறது?**

ஆம், அது அப்படித்தான் இருக்கிறது. எல்லாரும் என்மூலம் உதவிபெற முடியும். எல்லாரும் என் மூலம் உதவிபெற முடியும் என்று நான் சொல்லும்போது, எல்லாருக்கும் உதவி கிடைத்தாக வேண்டும் என்பது அதன் பொருள் அல்ல. ஏனெனில் அது என் பங்கைமட்டும் பொறுத்ததல்ல; உதவிதேவைப்படுகிறவரையும் பொறுத்தது அது. பாதி பொறுப்பு அவருடையதே. ஒரு ஆறு ஓடுகிறது. என்னால் அதிலிருந்து குடிக்க முடியும். ஆனால் அனைவரும் குடித்தாக வேண்டுமா? அது கட்டாயமல்ல. சிலர் போய்விடுவார்கள். அது அவர்களுக்கு சரியான நேரமாக இல்லாதிருக்கலாம். நேரம் சரியில்லை என்றால் யாராலும் அவர்களுக்கு உதவ முடியாது. ஒவ்வொன்றும் அது அதற்கு உரிய நேரத்திலேயே நடக்கிறது.

சிலர் மூடிக்கொண்டு இருக்கலாம். அதனால் அவர்களுக்கு உதவ முடியாமல் போகலாம். அதற்காக நீங்கள் திணிக்க முடியாது. வன் முறையை கையாள முடியாது. ஆன்மீக அனுபவம் என்பது மிக ஆழ மான ஒரு செயலற்ற நிலையிலேயே நிகழ்கிறது. சீடர் செயலற்ற நிலையில் இருக்கும்போது மட்டுமே அது நிகழ்கிறது. உங்களில் நீங்கள்

மிகுந்த செயல் முனைப்புடன் இருப்பதை நான் கண்டால், அல்லது அதிகமாய் நீங்கள் அடைபட்டிருப்பதை நான் கண்டால், அல்லது இது உங்களுக்கு சரியான நேரம் அல்ல என்பதை நான் கண்டால், பின் என்னிடமிருந்து போய்விடுவதே மிகச்சிறந்த நடப்பாக இருக்க முடியும்... ஏனெனில் அப்படி இல்லாவிடில் உங்கள் நேரத்தை வெறு மனே நீங்கள் வீணடித்துக் கொண்டிருக்கிறீர்கள் - என் நேரத்தை அல்ல; ஏனெனில் எனக்கு காலம் என்பது இல்லை - மாறாக உங்கள் நேரத் தையே தேவையின்றி நீங்கள் வீணாக்கிக் கொண்டிருப்பீர்கள்.

இதனிடையில் உங்கள் கவனம் சிதறடிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. இக்காலத்தில் உலகின் வேறு ஒரு இடத்தில், சந்தையில் நீங்கள் இருந் திருக்க வேண்டும். வேறு ஒரு இடத்தில் நீங்கள் இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அங்கு உங்களுக்கு முதிர்ச்சி ஏற்பட்டிருக்கும். இது உங்களுக்கான சரியான நேரம் இல்லை என்றால் இங்கே உங்கள் நேரத்தை நீங்கள் வீணாக்கிக்கொண்டிருக்கிறீர்கள். அதைவிட இங் கிருந்து நீங்கள் போய்விடுவதே மேல். இன்னும் கொஞ்சம் கூடுதலான காலம் துன்பத்தில் நீங்கள் வாழவேண்டி இருக்கிறது. இன்னும் நீங்கள் தயாராகவில்லை. இன்னும் நீங்கள் பக்குவப்படவில்லை. மேலும் பக்குவப்படுதலே முழு வேலையையும் செய்கிறது. ஏனெனில் ஆசா னால் எதையும் செய்ய முடியாது. அவர் ஒரு செயல்படுபவர் அல்ல. நீங்கள் முதிர்ச்சி அடைந்திருந்தால் ஆசானின் முன்னிலையில், முழுமையில் இருந்து ஒன்று ஆசானின் வாயிலாக உங்களுக்குள் பாய் கிறது. கனிந்த கனி தரையில் விழுகிறது. ஆனால் கனியாத காய் விழுவதில்லை. அது விழாதிருப்பதே நல்லது.

எனவே நான் முரண்படுவதாக நான் சொல்லும்போது எல்லாம், குறிப்பிட்ட விதமான சூழ்நிலையே எப்போதும் உருவாக்கப்படுகிறது என்பதையே நான் குறிப்பிடுகிறேன். என்னால் அல்ல, என் வழியாக முழுமையாலேயே அந்த சூழ்நிலை உருவாக்கப்படுகிறது. எனவே ஆயத்தமாகாதவர்கள் எவ்வகையிலும் தம் காலத்தை வீணடிக்க அனுமதிக்கப்படுவதில்லை. அவர்கள் திரும்பிப்போய் தமக்கான பாடத்தை கற்கவேண்டி இருக்கிறது; வாழ்வின் இன்பத்தினூடாக கடந்துவரவும் குறிப்பிட்ட அளவு முதிர்ச்சியை அடையவும் வேண்டி இருக்கிறது; அதன்பிறகே என்னிடம் அவர்கள் வரவேண்டி இருக்கிறது. அப்போது நான் இங்கு இல்லாமல் போகலாம். அப்போது வேறு யாராவது ஒருவர் இங்கு இருப்பார்கள். ஏனெனில் இது என்னைப் பொறுத்ததோ வேறு யாரையாவது பொறுத்ததோ அல்ல. ஞானமடைந்த மனிதர்கள் எல்லாரும் ஒரே மாதிரியானவர்களே. நான் இங்கு இல்லாதிருக்கலாம்; இந்த உடல் இங்கு இல்லாதிருக்கலாம்; வேறொரு

உடல் முழுமையின் ஊடகமாக இயங்கிக் கொண்டிருக்கலாம். எனவே பதட்டம் தேவையில்லை. என்றென்றைக்குமாக காத்திருக்க இருத்தலால் முடியும். ஆனால் பண்படாவிட்டால் உங்களால் உதவி பெற முடியாது.

ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அவர்களை நான் ஆசான்கள் என்று அழைக்க மாட்டேன். ஏனெனில் அவர்கள் ஞானம் அடையவில்லை, அவர்கள் ஆசிரியர்கள். முதிர்ச்சியடைந்திராத ஆளையும்கூட போகவிட மாட்டார்கள் அவர்கள். அந்த ஆள் தப்பித்துச் செல்ல முடியாதபடி எல்லாவிதமான சூழ்நிலைமையையும் அவர்கள் உருவாக்குவார்கள். இவர்கள் ஆபத்தானவர்கள். ஏனெனில் வந்தவர் பக்குவப்பட்டிரா விட்டால் அவரை இவர்கள் திசைதிருப்பிக் கொண்டிருக்கிறார்கள். மேலும் அந்த ஆள் முதிர்ந்திராவிட்டால் – பருவத்துக்கு முன்பே ஒன்று வழங்கப்பட்டால் அது ஆக்கமாக இருக்காது, அழிவாகவே இருக்கும்.

ஒரு சிறு குழந்தைக்கு நீங்கள் காமத்தை கற்றுக் கொடுக்க தொடங்குவதைப் போன்றதாகவே இது இருக்கிறது. அது என்ன என்பதே அதற்கு தெரியாது. அந்த உந்தல் இன்னும் அதனுள் எழுந்திருக்க வில்லை. அந்நிலையில் அந்த மனத்தை நீங்கள் நாசமாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அதற்கான தாகம் அதனிடமே எழட்டும். அதற் கான உந்துதல் எழட்டும். அப்போது அவன் திறந்தவனாகி இருப் பான்; புரிந்துகொள்ள தயாராகி இருப்பான்.

ஆன்மீகமும் பாலியலைப் போன்றதே. காமத்துக்கு ஒரு குறிப் பிட்ட முதிர்ச்சி தேவைப்படுகிறது. பதினான்கு வயதுவாக்கில் குழந்தை தயாராகி இருப்பான். அவனது சொந்த உந்தல் அங்கே இருக்கும். அவன் கேட்க தொடங்குவான். அதைப்பற்றி அதிகமதிகம் அறிந்து கொள்ள அவன் ஆவலாயிருப்பான். அப்போதுமட்டுமே சில செய்தி களை அவனிடம் விளக்க வாய்ப்புள்ளது.

ஆன்மீகத்தின் விசயத்திலும் இதுவே நிகழ்கிறது: குறிப்பிட்ட முதிர்ச்சி நிலையிலேயே அதற்கான உந்துதல் எழுகிறது. கடவுளை நீங்கள் தேடிக் கொண்டிருக்கிறீர்கள். உலகம் ஏற்கனவே அலுத்து விட்டிருக் கிறது. அதில் நீங்கள் போதும் போதும் என்னும் அளவுக்கு வாழ்ந்து விட்டீர்கள். போதும் போதும் என்னும் அளவுக்கு அதை நீங்கள் பார்த்துவிட்டீர்கள். அந்த கட்டம் முடிந்தது. அதில் இப்போது ஈர்ப்பு இல்லை. அதற்கு இப்போது அர்த்தம் இல்லை. இப்போது இருத்தலின் பொருளையே அறிவதற்கான உந்துதல் எழுந்துள்ளது. எல்லா ஆட்டங்களையும் நீங்கள் ஆடிவிட்டீர்கள். அவையெல்லாம் வெறும் ஆட்டங்கள்தான் என்பதை இப்போது நீங்கள் அறிந்து விட்டீகள். இனி எந்த விளையாட்டுகளிலும் உங்களுக்கு நாட்டம் இல்லை. உலகம்

அதன் பொருளை இழந்து விட்டுள்ளது - அந்நிலையில் நீங்கள் பக்குவப்பட்டு இருக்கிறீர்கள்.

இந்நிலையில் உங்களுக்கு ஒரு ஆசான் தேவைப்படுவார். ஆயின் ஆசான்கள் எப்போதுமே இருக்கிறார்கள். எனவே எந்த பதட்டமும் தேவையில்லை. இந்த உருவில் - இந்த உடம்பில் ஆசான் இல்லா திருக்கலாம். இன்னொரு உடம்பில் இருக்கலாம். உருவங்கள் பொருட் டில்லை. உடம்புகள் முக்கியமில்லை. ஆசானின் உள்தன்மையோ எப்போதும் எங்கும் ஒரே - ஒரே - ஒரே மாதிரியாகவே இருக்கிறது. புத்தர் மீண்டும் மீண்டும் சொல்கிறார், ''கடல்நீரை எந்த இடத்திலும் சுவைத்து பாருங்கள். எல்லாமே உப்புகரிக்கவே செய்கிறது.'' அதுபோலவேதான் ஆசான் எப்போதும் ஒரே சுவை உடையவராகவே இருக்கிறார் - அது விழிப்புணர்ச்சி என்னும் சுவை. எப்போதும் ஆசான்கள் இருக்கிறார்கள், எப்போதும் இருப்பார்கள். எனவே எந்த அவசரமும் இல்லை.

இந்த உலகின்மீது உங்களுக்குள்ள கவர்ச்சி இன்னும் தீரவில்லை என்றால்; காமத்தை அறிவதற்கான ஆசை - பணம் எதைக் கொண்டு வர முடியும் என்பதை அறிந்துகொள்ளும் ஆசை - அதிகாரம் உங்க ளுக்கு எதை வழங்க முடியும் என்பதை அறிந்துகொள்ளும் ஆசை இன்னும் உங்களிடம் அடங்கவில்லை என்றால்; நீங்கள் இன்னும் தயாராகவில்லை என்றே ஆகும். ஆன்மீக உந்துதல் என்பது பல உந்துதல்களில் ஒன்று அல்ல; எல்லா உந்தல்களும் தம் பொருளை இழந்துவிட்ட பிறகுமட்டுமே அது எழுகிறது. ஆன்மீக உந்துதலானது மற்ற உந்தல்களுடன் சேர்ந்து இருக்க முடியாது - அதற்கு வாய்ப் பில்லை. உங்களின் முழு உயிரையும் அடியோடு அது எடுத்துக் கொள்கிறது; அதுமட்டுமே ஒரே ஒரு ஆசையாக ஆகிறது. அப்போது மட்டுமே ஒரு ஆசானால் உங்களுக்கு ஏதும் உதவியாக இருக்க முடியும்.

ஆனால் ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அவர்களை நீங்கள் தொற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்றே அவர்கள் விரும்புவார்கள். அவர்களும் உங்களை தொற்றிக் கொண்டிருப்பார்கள். அவர்களிட மிருந்து நீங்கள் தப்பித்துவிட்டால் அதன்பின் எப்போதும் நீங்கள் குற்ற உணர்வு கொள்ளக்கூடிய ஒரு நிலவரத்தை அவர்கள் உருவாக்கு வார்கள். ஒரு ஆசானை சூழ்ந்திருக்கும் சூழலானது, அங்கு நீங்கள் வாழ்ந்தால் உங்கள் சொந்த தீர்மானத்தின்படிதான் அங்கு நீங்கள் வாழ்கிறீர்கள் என்னும் தன்மையிலேயே இருக்கிறது. மேலும் அங்கிருந்து நீங்கள் போகும்போது அதுபற்றி நீங்கள் எவ்விதமான குற்ற உணர்வு கொள்வதையும் ஒரு ஆசான் விரும்பமாட்டார். எனவே, ''இவர் ஒரு குருவே அல்ல'' என்றே ''இந்த குரு நமக்கு ஏற்றவர்

அல்ல'' என்றோ ''மிகவும் முரண்பாடாக - அபத்தமாக இருக்கிறார்'' என்றோ நீங்கள் உணரும்படியாக அந்த நிலைமைக்கு ஒரு நிறத்தை தருகிறார் அவர். நீங்கள் குற்ற உணர்வு கொள்ளாதவாறு பொறுப்பு முழுவதையும் அவர் எடுத்துக் கொள்கிறார். அவரிடமிருந்து சுத்தமாயும் மொத்தமாயும் விடுபட்டு அப்படியே போய்விடுகிறீர்கள் நீங்கள்.

எனவேதான் நான் முரண்பாடாக இருக்கிறேன். மேலும் ''வேண்டுமென்றே'' என்று நான் கூறும்போது அதன் பொருள் அப்படி நான் நடந்துகொள்கிறேன் என்பதல்ல; அப்படித்தான் நானே இருக்கி றேன். ஆனால் ''வேண்டுமென்றே'' என்பதற்குள் ஒரு பொருள் இருக் கிறது. அந்த பொருள்: என்னைவிட்டு நீங்கள் எப்போது நீங்கி னாலும் அதுகுறித்து நீங்கள் குற்ற உணர்வு கொள்வதை நான் விரும்புவதில்லை என்பதுதான். முழு பொறுப்பையும் நானே ஏற்றுக் கொள்ள விரும்புவேன். ''இந்த மனிதர் தவறானவர்'' எனவேதான் நாம் விலகி செல்கிறோம் என உங்களுக்கு தோன்றுவதையே நான் விரும்புவேன். நம்மிடம்தான் தவறு தவறானவர் என உங்களுக்கு தோன்றுவதை நான் விரும்ப மாட்டேன். ஏனென்றால் நம்மிடம் தான் தவறு என்னும் அந்த உணர்வு உங்களுக்குள் வந்து விட்டால் பின் அது மறுபடியும் அழிவுபயப்பதாகவே ஆகும்; அழிவை விளைக் கும் விதை ஒன்று உங்களுக்குள் ஊன்றப்பட்டு விடும்.

ஒரு ஆசான் ஒருபோதும் உங்களை உடைமை கொள்வதில்லை. அவருடன் நீங்கள் இருக்க முடியும், பின் போய்விட முடியும்; ஆனால் அதில் எந்த உடைமை தன்மையும் இல்லை. இருப்பதற்கும் போவதற்கும் முழு சுதந்திரத்தை உங்கள் இருத்தலுக்கு அவர் அனுமதிக்கிறார். இங்கு நீங்கள் இருப்பதற்கு நான் கொள்ளும் பொருள் இதுதான்: என் னுடன் கொண்டாடுங்கள். நான் எப்படி இருந்தாலும் என்னுடன் பகிர்ந்து கொள்ளுங்கள். ஆனால் ஒரு குறிப்பிட்ட கணத்தில் ''போய்விட வேண்டும்'' என நீங்கள் உணர்ந்தால் பின் திரும்பிக் கொள்ளுங்கள். அதன்பின் ஒருபோதும் என்னை திரும்பிப் பார்க்காதீர்கள். என்னைப் பற்றி எண்ணாதீர்கள். அதுகுறித்து குற்ற உணர்வும் கொள்ளாதீர்கள்.

இதில் அடங்கியுள்ள சிக்கல்கள் அதிக ஆழமானவை. குற்ற உணர்வுள்ளவராக உங்களை நீங்கள் உணர்ந்தால், என்னிடமிருந்து நீங்கள் போய்விட்டாலும் அந்த குற்ற உணர்வை சரிக்கட்டுவதற்காக எனக்கு எதிராக நீங்கள் பேசிக்கொண்டே இருப்பீர்கள். இல்லாவிட்டால் வேறு எப்படி உங்களின் குற்ற உணர்வை சரிக்கட்டுவீர்கள்? என்மேல் தான் நீங்கள் பழிகூறிக் கொண்டே இருப்பீர்கள். அப்படியானால் என்னைவிட்டு நீங்கள் போயிருந்தும் போயிருக்கவில்லை என்றே பொருள்படும். எதிரமறையான முறையில் என்னுடனேயே நீங்கள்

இருக்கிறீர்கள். இதுவே அதிக ஆபத்தானதாகும். என்னுடன் நீங்கள் இருந்தாக வேண்டும் என்றால் நேரான முறையில் என்னுடன் இருங்கள். முடியாவிட்டால் என்னை முழுசாக மறந்துவிடுங்கள். இப்படி ஒருவன் இருந்தான் என்பதையே மறந்துவிடுங்கள். ஏன் பழிதூற்றிக்கொண்டே போகிறீர்கள்? ஆனால் நீங்கள் குற்ற உணர்வுடன் இருந்தால் அதை நீங்கள் ஈடுகட்டியே ஆகவேண்டி இருக்கும். நீங்கள் குற்ற உணர்வு கொண்டால் அதுவே ஒரு சுமையாகும், என்னை கண்டனம் செய்யவே நீங்கள் விரும்புவீர்கள். என்னை நீங்கள் கண்டனம் செய்தால் ஒரு சமாதானம் ஏற்படுகிறது. ஆனால் அப்போது எதிர்மறையாக என்னுடனேயே நீங்கள் இருப்பீர்கள். என் நிழலுடனே நீங்கள் இயங்குவீர்கள். அதுவோ மறுபடியும் உங்கள் நேரத்தையும் உங்கள் வாழ்வையும் உங்கள் ஆற்றலையும் வீணாக்குவதாகும். எனவே 'வேண்டுமென்றே' என்று நான் கூறும்போது சூழ்நிலைமையை நான் உருவாக்குகிறேன்... குறிப்பிட்ட ஒருவர் தயாராக இல்லை - குறிப்பிட்ட ஒருவர் முதிர்ச்சி அடையவில்லை - குறிப்பிட்ட ஒருவர் உலகில் இன்னும் கொஞ்சம் கூடுதல் பண்படுவது தேவை என நான் உணரும் போதெல்லாம்; அல்லது குறிப்பிட்ட ஒருவர் அதிக அறிவுரீதியானவராக இருந்தால், விசுவசிக்க அவரால் முடிவதில்லை, அவருக்கு தேவை ஒரு ஆசிரியர்தான், ஆசான் அல்ல, அல்லது குறிப்பிட்ட ஒருவர் தன்பங்குக்கு எந்த தீர்மானத் தன்மையுடனும் என்னிடம் வரவில்லை, மாறாக தற்செயலாகவே இந்த பக்கம் ஒதுங்கி உள்ளார் என நான் உணரும் போதெல்லாம்...

நீங்கள் வெறுமனே திரிய முடியும். என்னைப் பார்க்க ஒரு நண்பர் வந்து கொண்டிருக்கிறார். வரும் வழியில் அவருடன் நீங்களும் சேர்ந்து கொண்டீர்கள். பின் நீங்கள் பிடிபட்டு மாட்டிக் கொண்டீர்கள். ஆனால் இங்கு வரவேண்டும் என்று ஒருபோதும் நீங்கள் நினைத்ததில்லை. எங்கேயோ போய்க் கொண்டிருந்தீர்கள். எதிர்பாராமல் இந்த பக்கம் வந்து விட்டீர்கள். தற்செயலாகவே நீங்கள் இங்கு இருக்கிறீர்கள் என நான் உணரும்போது, இங்கிருந்து நீங்கள் போய்விடுவதையே நான் விரும்புவேன். ஏனெனில் உங்களுக்குரிய சரியான இடம் இதுவல்ல. தன் சொந்த பாதையிலிருந்து எவரும் பிறழ்வதை நான் விரும்புவதில்லை. உங்கள் பாதையில் என்னை நீங்கள் சந்திக்க நேர்ந்தால், நல்லது. அந்த சந்திப்பு இயற்கையாக அமைந்தால், அது நடக்க இருந்தால், அது விதிக்கப்பட்டிருந்தால், நீங்கள் அதிகமதிகமாய் அதற்கு ஆயத்தமாகி, அது நடப்பதற்கு இருந்தால் அப்போது அது ஆழமானது. மற்றபடி உங்கள் நேரத்தை வீணாக்க நான் விரும்ப மாட்டேன். அந்த நேரத்தில் பல விசயங்களை நீங்கள் கற்றுக்கொள்ள முடியும்.

அல்லது சரியான காரணம் அல்லாத ஏதோ ஒரு காரணத்துக்காக ஒருவர் என்னிடம் வந்திருப்பதாக நான் உணர்ந்தால்... பல பேர் தவறான காரணங்களுக்காக வருகிறார்கள். ஒரு புதிய அகந்தை – மதம் தர முடியக்கூடிய அகந்தை - துறவு வழங்க முடியக்கூடிய அகந்தை - தன்னில் எழுவதை உணர்வதற்காகவே ஒருவர் வந்திருக்கலாம். மதத்தின்மூலமாக மிக சிறப்பானவராக - அசாதாரணமானவராக நீங்கள் உணர முடியும். அதற்காகத்தான் ஒருவர் வந்திருக்கிறார் என நான் உணர்ந்தால் பின் என் அருகில் இருப்பதற்கான சரியான காரணம் அதுவல்ல. ஏனெனில் ஆணவங்கள் எனக்கு நெருக்கமாக இருக்க முடியாது.

யாராவது ஒருவருக்கு என் கருத்துகளின்மேல் ஈடுபாடு ஏற்பட்டிருக்கலாம் - இதுவும் ஒரு தவறான காரணம்தான். என் கருத்துகள் உங்கள் அறிவுக்கு பொருத்தமானதாக தெரியலாம். ஆனால் அறிவு என்பது ஒன்றுமில்லை. உங்களின் மொத்த இருத்தலுக்கும் புறம்பான ஒரு அம்சமாகவே அது இருக்கிறது. நான் கூறுவதன் மீதல்லாமல் என்மீது நீங்கள் ஈடுபாடு கொள்ளாதவரை தவறான காரணங்களுக்காகவே நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். நான் ஒரு தத்துவரும் அல்ல; உங்களுக்கு எந்த ஒரு சித்தாந்தத்தையும் நான் போதித்துக் கொண்டும் இருக்கவில்லை.

அதனால்தான் முன்பின் முரண்பாடாக இருப்பதற்கு எனக்கு இவ்வளவு சுதந்திரம் இருக்கிறது. ஏனெனில் ஒரு சித்தாந்தத்தை நீங்கள் போதித்துக் கொண்டிருந்தால் முன்பின் முரண்பாட்டை நீங்கள் அனுமதிக்க முடியாது. எதையும் நான் போதித்துக் கொண்டிருக்கவில்லை. உங்கள்மேல் திணிக்க என்னிடம் எந்த கொள்கையும் இல்லை. உங்களிடம் நான் பேசிக் கொண்டிருப்பது எந்த ஒரு கொள்கையையும் திணிப்பதற்கு அல்ல. எனவேதான் நான் சுதந்திரமாயிருக்கிறேன். எனக்கு நானே முரண்பட முழு சுதந்திரம் உள்ளவனாயிருக்கிறேன். நேற்று நான் சொன்ன எதனுடனும் இன்று நான் முரண்பட முடியும். இன்று நான் சொல்லும் எதிலிருந்தும் நாளை நான் மாறுபட முடியும். ஒரு கவிஞனைப் போன்றவன் நான். என் பாடலை நீங்கள் புரிந்துகொண்டால் சரியான காரணத்துக்காக இங்கு நீங்கள் இருக்கிறீர்கள். என் லயத்தை நீங்கள் விளங்கிக் கொண்டால் பின் சரியான காரணத்துக்காக இங்கு நீங்கள் இருக்கிறீர்கள். நான் சொல்வதை அல்ல, என்னை - என் இருத்தலை - நீங்கள் புரிந்துகொண்டால் அப்போது மட்டுமே இங்கிருப்பது நல்லதாகும்.

இல்லாவிட்டால் கிளம்புங்கள். உலகம் பரந்தது. ஏன் மாட்டிக் கொண்டு இருக்கவேண்டும்? மேலும், ஒன்றை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்: தவறான காரணங்களுக்காக இங்கே நீங்கள் இருந்

தால் எப்படியும் நீங்கள் மாட்டிக் கொண்டிருப்பதாகவே எப்போதும் நீங்கள் உணர்வீர்கள்; நடக்கக்கூடாதது நடந்துவிட்டது போலவே உணர்வீர்கள்; எப்போதும் அசவுகரியமாகவே உணர்வீர்கள். நான் உங்களுக்கு விளங்கமாட்டேன். உங்களுக்கு ஒரு சிறையாக நான் ஆகிவிடுவேன். யாருக்கும் ஒரு சிறையாக நான் ஆவதில் எனக்கு விருப்பமில்லை. உங்களுக்கு எதையாவது - மதிப்புமிக்க எதையாவது நான் தரமுடியும் என்றால் அது சுதந்திரம்தான். எனவேதான் ''வேண்டு மென்றே'' என்கிறேன். ஆனால் என்னை தவறாக புரிந்துகொள்ளா தீர்கள். நான் இயங்கிக் கொண்டிருக்கும் விதத்தைப் பற்றியதல்ல அது; நான் இருக்கும் விதமே அது. நான் விரும்பினாலும் என்னால் அதை நிறுத்தமுடியாது. கிருஷ்ணமூர்த்தி விரும்பினாலும் அவரால் அதை செய்ய முடியாது. தன் சொந்த வழியில் அவர் ஒரு மலர்ச்சியாக இருக்கிறார்; என் சொந்த வழியில் நான் இருக்கிறேன்.

ஒரு தடவை இப்படி நடந்தது: எனக்கு நண்பராக கிருஷ்ண மூர்த்திக்கும் நண்பராக இருக்கும் ஒரு பொது நண்பரிடமிருந்து ஒரு சேதி வந்தது... என்னை கிருஷ்ணமூர்த்தி சந்திக்க விரும்புவதாக அந்த சேதி. அது முற்றிலும் அபத்தமாகும் என அந்த சேதியை கொண்டு வந்த நண்பரிடம் நான் சொன்னேன். நாங்கள் எதிரெதிர் துருவங்கள். நாங்கள் மவுனமாக அமர்ந்திருக்க முடியும் - அது சரியாக இருக்கும். அல்லது எந்த முடிவுக்கும் வராமல் முடிவின்றி நாங்கள் விவாதித்துக் கொண்டே இருக்கவும் முடியும். நாங்கள் ஒருவருக்கொருவர் எதி ரானவர்கள் என்பதல்ல. ஒருவருக்கொருவர் வேறுபட்டவர்கள் என்பதுதான். அத்துடன், இதுவரை பிறந்துள்ள மாபெரும் ஞானிகளில் கிருஷ்ணமூர்த்தியும் ஒருவர் என்பேன் நான். அவருக்கே உரித்தான தனித்தன்மையைப் பெற்றுள்ளார் அவர்.

இந்த அம்சத்தை மிக ஆழமாக புரிந்துகொள்ள வேண்டும். இது சற்று கடினமாகவே இருக்கும். ஞானமடையாத மக்கள் ஏறக்குறைய எப்போதும் ஒரே மாதிரியானவர்களாகவே இருக்கிறார்கள். பெரிய வேறுபாடு இருப்பதில்லை, இருக்கமுடியாது. இருள் அவர்களை ஒரேமாதிரி ஆக்குகிறது. அறியாமை அவர்களை ஏறக்குறைய ஒரே மாதிரி ஆக்குகிறது. ஒருவர் மற்றவரின் நகல்களாக இருக்கிறார்கள் அவர்கள். அசலை உங்களால் கண்டுபிடிக்கவே முடியாது. எல்லாரும் நகல்படிகளாகவே இருக்கிறார்கள். அறியாமையில் இருக்கும் மக்களிடம் அதிக வேறுபாடு தெரிவதில்லை; இருக்கவும் வாய்ப்பில்லை. எல்லா ரையும் ஒருங்கே மூடும் கருப்பு போர்வையாய் அறியாமை உள்ளது. கூஅங்கு என்ன வேறுபாடுகள் இருக்க முடியும்? அளவு வேறுபாடுகள் இருக்கலாம்; பண்பு வேறுபாடுகள் இருக்கமுடியாது. பொதுவாக அறியா மக்கள் ஒட்டுமொத்தமான ஒரு கும்பலாகவே இருக்கி

றார்கள். விழிப்புணர்வுள்ளவராக ஒருவர் ஆனதுமே அவர் முற்றிலும் தனித் தன்மையராக இருக்கிறார். அப்போது அவரைப்போன்ற இன்னொருவரை உங்களால் கண்டுபிடிக்க முடியாது. வரலாற்றின் இக்கணத்தில் மட்டுமல்ல, எப்போதும். கடந்த காலத்திலும் வருங்காலத்திலும், மீண்டும் ஒருபோதும் கிருஷ்ணமூர்த்தி போன்ற ஒரு மனிதர் இருந்ததில்லை, இருக்கப் போவதுமில்லை. நான் திரும்பவும் வரப் போவதில்லை. புத்தர் புத்தர்தான். மகாவீரர் மகாவீரர்தான் - தனித் தன்மையான மலர்ச்சிகள்.

ஞானமடைந்த மனிதர்கள் மலைச் சிகரங்களைப் போன்றவர்கள். சாமானிய அறியா மக்கள் சமவெளியைப் போன்றவர்கள் – எல்லாமே ஒரே மாதிரி இருக்கிறது. வேறுபாடுகள் இருந்தாலும்கூட அவை இதுபோலத்தான் இருக்கின்றன: அதாவது உங்களிடம் ஒரு சிறிய கார் உள்ளது. இன்னொருவரிடம் ஒரு பெரிய கார் உள்ளது. நீங்கள் படிக்காதவர், இன்னொருவர் படித்தவர். நீங்கள் ஏழை, இன்னொருவர் பணக்காரர்... ஒன்றுமில்லை; உண்மையில் இவையெல்லாம் வேறுபாடுகளே அல்ல. நீங்கள் அதிகார நிலையில் இருக்கலாம்; இன்னொருவர் ஏழையாக - தெருவில் பிச்சை எடுத்துக்கொண்டு இருக்கலாம். ஆனால் இவை வேறுபாடுகள் அல்ல. இவை தனிச்சிறப்பான தன்மைகள் அல்ல. உங்கள் செல்வங்கள் யாவும் பறிக்கப்பட்டு விட்டால், உங்கள் கல்வியும் அதிகாரமும் உங்களிடமிருந்து எடுக்கப்பட்டுவிட்டால், அதன்பின் உங்கள் ஜனாதிபதிகளும் பிச்சைக்காரர்களும் ஒன்று போலவே காட்சியளிப்பார்கள்.

மேற்கின் மாபெரும் உளவியலார்களில் ஒருவர் விக்டர் பிராங்கிள். உளவியல் பகுப்பாய்வில் ஒரு புதுப்போக்கை வளர்த்தெடுத்தவர் அவர். அதை **லோகோதெரப்பி** என அவர் அழைக்கிறார். அடால்ஃப் இட்லரின் வதை முகாம்களில் அவர் இருந்தார். தன் நூல்களில் ஒன்றில் அவர் நினைவுகூர்கிறார்: நூற்றுக்கணக்கான பேர்கள் மொத்தமாக ஒரு வதைமுகாமுக்குள் நுழைந்து கொண்டிருந்தபோது வாயிலில் வைத்தே எல்லாமே பறித்துக் கொள்ளப்படுகிறது - உங்கள் கடிகாரம், எல்லாமே. திடீரென பணக்காரர்கள் - ஏழைகள் எல்லாரும் ஒரே மாதிரியாக ஆனார்கள். மேலும் வாயிலை நீங்கள் அடைந்ததும் உங்களை ஒரு சோதனைக்கு உட்படுத்துகிறார்கள். எல்லாரையும் முற்றிலுமாக அம்மணமாக்குகிறார்கள். அதுமட்டுமல்ல, எல்லார் தலைகளையும் முடிகளையும் மழித்தார்கள். ஆயிரக்கணக்கான மனிதர்கள் மொட்டையடிக்கப்பட்டு அம்மணமாக்கப்பட்டதும் - திடீரென எல்லா வேறுபாடுகளும் மறைந்தன என்பதை நினைவுகூர்கிறார் பிராங்கிள்: அது ஒரு பொதுப்படையான திரளாக ஆகியிருந்தது. உங்கள் தனிப்பட்ட சிகையலங்காரம், உங்கள் கார், உங்கள் விலைமிகுந்த துணிகள், அல்லது உங்கள் இப்பி பாணி உடைகள் - இவைதான் 'வேறுபாடுகள்'.

பொதுவான மனிதகுலம் என்பது ஒரு கும்பலாகவே இருக்கிறது. உண்மையில் உங்களிடம் ஆன்மாக்களே இல்லை. கும்பலின் ஒரு பகுதியாக மட்டுமே - ஒரு கூறாக மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். நகல் படிகளின் நகல்படிகளாக - ஒருரை ஒருவர் போலி செய்து கொண்டு இருக்கிறீர்கள். உங்கள் அண்டையரை பார்த்து நீங்கள் நடக்கிறீர்கள், உங்களைப் பார்த்து உங்கள் அண்டையர் நடந்து கொள்கிறார்கள் – இதுவே தொடர்கிறது.

இப்போது மரங்களையும் பூச்சிகளையும் வண்ணத்துப்பூச்சி களையும் ஆராய்ந்து கொண்டிருப்போர், இயற்கையில் ஒரு தொடர்ச்சி யான நகலெடுப்பு நடந்து கொண்டிருக்கிறது என்கிறார்கள். வண்ணத் துப் பூச்சிகளைப் போல் பூ மாறிக் கொள்கிறது. பின் பூவைப்போல் வண்ணத்துப் பூச்சி மாறுகிறது. எனவே தம் நிறத்தை ஒத்த நிற முடைய மரங்களில் மறைந்துகொள்ள பூச்சிகளால் முடிகிறது. மரம் நிறம் மாறும்போது பூச்சிகளும் தம் நிறத்தை மாற்றுகின்றன. முழு இயற்கையிலும் ஒன்றை ஒன்று பார்த்தொழுகுவது தொடர்ச்சியாக நடந்து வருவதாக இன்று கூறுகிறார்கள்.

ஞானமடைந்தவர் ஒரு சிகரமாக - எவரெஸ்ட்டாக இருக்கிறார். இன்னொரு ஞானமும் ஒரு சிகரமாக - இன்னொரு எவரெஸ்ட் டாகவே இருக்கிறது. உள் ஆழத்தில் அவர்கள் ஒரே நிலையையே அடைந்திருக்கிறார்கள்; ஆனாலும் தனித்தன்மையராகவே இருக்கி றார்கள் அவர்கள். ஞானிகளுக்கிடையில் பொதுவான எதுவும் இருப்பதில்லை - இது விசித்திரம்தான். ஒரே முழுமையின் ஊடகங்க ளாகவே அவர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கிடையில் பொதுவானது எதுவும் நிலவுவதில்லை. தனித்தன்மையுள்ள ஊடகங் களாகவே அவர்கள் இருக்கிறார்கள்.

மதவாதிகளுக்கு இது ஒரு பெரும் பிரச்சனையாக இருக்கிறது. ஏனெனில் யேசு யேசுவாகவே இருக்கிறார். அவர் ஒன்றும் புத்தர் போல் இல்லை. புத்தர் புத்தராக இருக்கிறார். அவர் சற்றேனும் கிருஷ்ணரைப்போல் தோன்றுவதில்லை. கிருஷ்ணரால் வசீகரிக்கப்படு கிறவர்கள் புத்தரில் ஏதோ குறைவதாக நினைப்பார்கள். புத்தரால் வசீகரிக்கப்படுகிறவர்கள் கிருஷ்ணரில் ஏதோ குறையுள்ளதாகவே எப்போதும் நினைப்பார்கள். ஏனெனில் அப்போது உங்களிடம் ஒரு லட்சிய உருவம் இருக்கிறது. அதைக் கொண்டு தீர்ப்பிடுகிறீர்கள். ஆனால் ஞானமடைந்த மனிதர்கள் தனிமனிதர்களாகவே இருக்கிறார்கள். அவர்களுக்கான பொது அளவுகோல் எதையும் நீங்கள் உருவாக்க முடியாது. எந்த லட்சிய உருவங்களைக் கொண்டும் அவர்களை நீங்கள் தீர்ப்பிட முடியாது – அப்படி எந்த லட்சிய அளவீடும் இல்லை. அவர் களுக்குள் பொதுவான ஒன்று உள்ளது - அதுதான் இறைத்தன்மை.

முழுமையின் ஒரு ஊடகமாக அது இருக்கிறது - அதோடு முடிந்தது. மற்றபடி தத்தம் வெவ்வேறு ராகங்களிலேயே பாடுகிறார்கள் அவர்கள்.

ஆனால் உங்களால் இதை நினைவுகூற முடிந்தால், விழிப் படைந்த ஞானி என்னும் உயர் பரிணாம உச்சத்தை இன்னும் நன்றாக உங்களால் புரிந்துகொள்ள முடியும். மேலும் அவரிடமிருந்து எதையும் எதிர்பார்க்காதீர்கள். அவரால் எதையும் செய்ய முடியாது. அந்த முறையில் அவர் இருக்கிறார், அவ்வளவே. இயற்கையாகவும் இணக்கமாகவும் அவர் உயிர் வாழ்கிறார். அவருடன் ஏதாவது நெருக்கத்தை நீங்கள் உணர்ந்தால் அவரை நோக்கி இயங்குங்கள்; அவருடைய இருத்தலுடன் சேர்ந்து கொண்டாடுங்கள், அவருடன் இருங்கள். அவருடன் எந்த நெருக்கத்தையும் நீங்கள் உணராவிட்டால் எந்த பகைமையையும் உருவாக்காதீர்கள். பேசாமல் எங்காவது போய்விடுங்கள். வேறு எங் காவது வேறு யாராவது உங்களுக்காக இருந்து கொண்டிருக்க வேண் டும். யாராவது ஒருவருடன் நீங்கள் இசைவாக உணர்வீர்கள்.

ஆகவே முகம்மதுவுடன் நீங்கள் இசைவாக உணராவிட்டால் அதற்காக கவலைப்படாதீர்கள். ஏன் தேவையற்ற கவலைகளை உருவாக்குகிறீர்கள்? முகம்மது முகம்மதுவாகவே இருக்கட்டும்; அவரது பணியை அவர் செய்யட்டும். அதுபற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். புத்தருடன் நீங்கள் இசைவாக உணர்ந்தால் புத்தரே உங்களுக்கானவர். எல்லா யோசனைகளையும் கைவிடுங்கள். என் னுடன் நீங்கள் இசைவாக உணர்ந்தால் பின் நானே உங்களுக்கான ஒரே ஞானியாக இருக்கிறேன். அந்நிலையில் புத்தர், மகாவீரர், கிருஷ் ணர்... எல்லாரையும் குப்பைக் கூடைக்குள் எறிந்து விடுங்கள். என் னுடன் நீங்கள் இசைவாக உணராவிட்டால் என்னையும் குப்பைக் கூடைக்குள் எறிந்து விடுங்கள். உங்கள் இயற்கைக்கு ஏற்ப இயங் குங்கள். எங்காவது யாராவது ஒரு குரு உங்களுக்காக இருந்து கொண்டிருக்க வேண்டும். தாகம் இருக்கும்போது தண்ணீர் இருக்கிறது. பசி இருக்கும்போது உணவு இருக்கிறது. காதலின் ஆழ்ந்த உந்தல் இருக்கும்போது காதலர் இருக்கிறார். ஆன்மீக ஆசை எழுகிறபோது - அதை பூர்த்தி செய்ய முடிகிற யாராவது ஒருவர் இல்லாவிட்டால் உண்மையில் அந்த ஆசை உதிக்கவே முடியாது.

இதுதான் ஆழமான ஒத்திசைவு; ரிதம்பரம். இதுவே மறைந் திருக்கும் ஒத்திசைவு. இப்படிக் கூற என்னை நீங்கள் அனுமதித்தால்: (ஏனெனில் அது அபத்தமாக தோன்றும்): உண்மையில் உங்கள் ஆவலை நிறைவேற்ற முடியக்கூடிய ஞானி ஒருவர் இல்லாவிட்டால் அந்த ஆவலே உங்களுக்கு வந்திருக்க முடியாது. ஏனெனில் முழுமை என்பது ஒன்றுதான். அதன் ஒரு புறத்தில் ஆசை எழுகிறது. மறுபுறத்தில் எங்கோ நிறைவேற்றம் காத்திருக்கிறது. அவை சேர்ந்தே எழுகின்றன.

சீடர் - குரு இருவரின் வளர்ச்சியும் ஏக காலத்ததாகவே இருக்கிறது. இப்படிக்கூறுவது மிகையாக படும்: நான் என் ஞானநிலைபேற்றை தேடிக்கொண்டிருந்தபோது நீங்கள் உங்கள் சீடத்துவத்தை தேடிக் கொண்டிருந்தீர்கள். ஒன்றின் நிறைவேற்றத் துக்கான சூழலையும் அதே நேரத்தில் முழுமை உருவாக்காமல் எதுவுமே நிகழ முடியாது. ஒவ்வொன்றும் பரஸ்பரம் உறவுள்ளதே. எந்த அளவுக்கு அது ஆழமான உறவுடையது என்றால் நீங்கள் இளைப்பாற முடியும்; அலட்டிக் கொள்ளத் தேவையில்லை. உங்கள் உந்தல் நிசமாகவே எழுந்திருக்கிறது என்றால் ஆசானை தேடி நீங்கள் அலையத் தேவையில்லை. ஆசானே உங்களிடம் வந்தாக வேண்டி இருக்கும். ஒன்றா சீடர் போகிறார், அல்லது குரு வருகிறார்.

''மலையால் முகம்மதுவிடம் வர முடியாவிட்டால் பின் முகம்மது மலையிடம் போக வேண்டி இருக்கும்'' என்றார் முகம்மது. ஆனால் அந்த சந்திப்பு உறுதி. விதிக்கப்பட்டது அது.

ஒரு பக்கிரி - ஒரு துறவி - உலகை துறந்திருக்கும் ஒருவர் - மன்னர்களின் அரண்மனைகளுக்கும் அதிகாரம் மிக்கவர்களின் – செல்வர்களின் மாளிகைகளுக்கும் போகக்கூடாது என்று குர் - ஆனில் கூறப்பட்டுள்ளது. ஆனால் மாபெரும் சூபிகளில் ஒருவரான ஜலாலுதீன் ரூமி என்பவர் மாமன்னரின் அரண்மனைக்கு போவது வழக்கம். ஐயம் எழுந்தது. மக்கள் கூடி, ''இது நல்லதல்ல. நீங்கள் ஒரு ஞானி. நீங்கள் ஏன் மகாராசாவின் மாளிகைக்கு போகிறீர்கள்? அதுவும் குர் - ஆனில் இப்படி எழுதியிருக்கிறபோது...?'' என்றார்கள். மேலும் முகம்மதியர்கள் சரியான குர் - ஆன் அடிமைகள். ஒரு புத்தகத்துக்கு இந்தளவுக்கு கட்டுப்பட்டிருக்கிற மக்கள் வேறு எவரையும் நீங்கள் காணமுடியாது. ''இது தவறு என குர் - ஆனில் எழுதப்பட்டுள்ளது. எனவே நீங்கள் ஒரு முசுலீம் அல்ல. இதற்கு உங்கள் பதில் என்ன? என்ன பதிலை நீங்கள் வைத்திருக்கிறீர்கள்? உலகைத் துறந்திருக்கிற ஒருவர் பணம்படைத்த வர்களிடமும் அதிகாரம் படைத்தவர்களிடமும் போகக் கூடாது என குர் - ஆன் கூறுகிறது. அவர்கள் விரும்பினால் அவர்கள்தான் வரவேண்டும் என்கிறது.'' சிரித்துவிட்டு ஜலாலுதீன் சொன்னார், ''உங்களால் புரிந்து கொள்ள முடியுமானால் பின் இதுவே என் புரிதல்: அரண்மனைகளுக்கும் அரசனிடமும் நான் போவதோ என்னிடம் அரசன் வருவதோ எது நடந்தாலும் எப்போதும் அரசனே என்னிடம் வருகிறான். நானே அரண்மனைக்கு போனாலும் எப்போதும் அரசனே என்னிடத்தில் வருகிறான். இதுவே எனது பதில். உங்களால் புரிந்துகொள்ள முடிந் தால் புரிந்துகொள்ளுங்கள். இல்லாவிட்டால் இதை மறந்து விடுங்கள். மேலும், குர் - ஆனைப் பின்பற்றுவதற்காக நான் இங்கு இல்லை. ஆனால் நிலைமை எதுவாயினும், ரூமி அரண்மனைக்கு போனாலும்

அல்லது அரசன் ரூமியிடம் வந்தாலும் எப்போதும் அரசனே ரூமியிடம் வருகிறான் என்று உங்களுக்கு சொல்கிறேன். ஏனென்றால் அவனுக்குத் தான் தாகம் இருக்கிறது; அவனது தாகத்தை தணிக்கும் தண்ணீராகவே நான் இருக்கிறேன்.'' மேலும் அவர் சொன்னார், ''சில நேரங்களில் நோயாளி மிகுந்த நோய்வாய்ப்பட்டிருந்தால் மருத்துவரே போக வேண்டியும் ஏற்படுவதுண்டு. அத்துடன் அரசர்களே மிகப் பெரிய நோயாளிகளாகவும் இருக்கிறார்கள் - ஏறக்குறைய மரணப் படுக்கையில் கிடக்கிறார்கள் அவர்கள்.''

நீங்கள் என்னிடம் வர முடியாவிட்டால் நான் உங்களிடம் வருவேன்; ஆனால் அது நிகழ்ந்தே தீரும், அது தவிர்க்கப்பட முடியாதது. ஏனெனில் நாமிருவரும் ஒரு நுண்மையான - மறைந்துள்ள ஒத்திசைவில் சேர்ந்து வளர்ந்து வந்திருக்கிறோம். ஆக அது நிகழும்போது, ஒரு சீடரும் ஒரு குருவும் சந்திக்கும்போது, இசைவை அவர்கள் உணரும்போது, மொத்த இருத்தலிலும் மிக இனிய கணங்களில் ஒன்றாக அது இருக்கிறது. அப்போது அவர்களின் இதயங்கள் ஒரே லயத்தில் துடிக்கின்றன; அப்போது அவர்களின் உணர்வு ஒரே சீரில் பாய்கிறது; அப்போது அவர்கள் ஒருவர் மற்றவரின் பகுதிகளாக, ஒருவர் மற்றவரின் உறுப்புகளாக ஆகின்றனர்.

இது நிகழாவிட்டால் இங்கு இருக்காதீர்கள். என்னை மறந்து விடுங்கள். இதை ஒரு கனவென நினையுங்கள். உங்களால் முடிந்தவரை விரைவாக இங்கிருந்து தப்பி விடுங்கள். மேலும் நீங்கள் தப்ப எல்லா வழியிலும் நான் உதவுவேன். ஏனெனில் அந்நிலையில் நான் உங்களுக்கானவன் அல்ல. வேறு ஒருவர் வேறு ஓரிடத்தில் உங்களுக்காக காத்துக் கொண்டிருக்கிறார். அவரிடமே நீங்கள் போக வேண்டும் அல்லது அவரே உங்களிடம் வருவார். சீடர் தயாரானதும் ஆசான் தோன்றுகிறார் என்கிறது பழைய எகிப்திய மரபு.

மாபெரும் சூபி மறைஞானிகளில் ஒருவரான கனான் இப்படிக் கூறுவது வழக்கம்: ''இறைமையை நான் அடைந்ததும் அதனிடம் நான் 'உம்மை நான் மிகமிக நீண்ட காலமாக தேடிக் கொண்டிருந்திருக்கிறேன்' என்றேன். அதற்கு இறைமை 'நீ உன் தேடலை தொடங்கும் முன்னமே நீ என்னை அடைந்து இருக்கிறாய் ஏனெனில் என்னை நீ ஏற்கனவே அடைந்திராவிட்டால் தேடலை நீ தொடங்கியிருக்கவே முடியாது' என்று பதிலளித்தது.''

இந்த விசயங்கள் விசித்திரமானவையாக தோன்றுகிறது. ஆனால் அதிக ஆழமாக நீங்கள் போனால் அவற்றில் மிக ஆழமாக மறைந்துள்ள ஒரு உண்மையை நீங்கள் கண்டு கொள்வீர்கள். அது சரியானதே: என்னைப் பற்றி நீங்கள் கேள்விப்படும் முன்பே உங்களை நான் அடைந்து விட்டேன். உங்களை அடைய நான் முயன்று கொண்

டிருந்தேன் என்பதல்ல. இது நிகழ்வதே அப்படித்தான். நீங்கள் இங்கிருப்பது உங்களால் மட்டும் அல்ல. நான் இங்கிருப்பது என்னால் மட்டும் அல்ல. ஒருவித பரஸ்பரம் நிகழ்கிறது. ஒருவித இணக்கம் இருக்கிறது. அந்த ஒத்த தன்மையை ஒருமுறை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால் அதன்பிறகு மட்டுமே ஒரு ஆசான் ஆசானாக இருக்கிறார். இதனால்தான் தேவையில்லாமல் மிகுந்த வெறித்தனம் உருவாக்கப்படுகிறது.

''யேசுவே கடவுளின் ஒரேபேறான மகன்'' என்கிறார் ஒரு கிறித்தவர். அது முற்றிலும் உண்மையே. இசைவு நிகழ்ந்திருந்தால், பின் யேசுவே கடவுளின் ஒரே மகன் – உங்களுக்கு; எல்லாருக்கும் அல்ல.

புத்தர் அடைந்ததைப் போன்ற அத்தனை முழுமையான - உயர்ந்த ஞானநிலையை ஒருவரும் ஒருபோதும் அடைந்ததில்லை என திரும்பத் திரும்ப கூறுகிறார் ஆனந்தர் -**அனுத்தர் சம்யக் சம்போதி:** ஒருவரும் இதற்குமுன் ஒருபோதும் அடைந்ததில்லை என்கிறார். அது முற்றிலும் ச்ரியானதே. அதற்குமுன் எவராலும் அது அடையப்பட்டிருக்கவில்லை என்பதல்ல. அதற்கு முன் கோடிக்கணக்கான பேர் அடைந்திருக்கிறார்கள். ஆனால் ஆனந்தரைப் பொறுத்தவரை அது முற்றிலும் சரியானதே. ஆனந்தருக்கு வேறு ஒரு ஆசான் இல்லை, இந்த புத்தர் மட்டுமே இருக்கிறார்.

அன்புநிலையில் ஒரு பெண்ணே முழு பெண்ணினமும் ஆக ஆகிறாள். ஒரு ஆணே முழு ஆண்இனமுமாக ஆகிறான். அன்பின் உச்ச வடிவமான சரணாகதியில் ஒரு ஆசானே ஒரே கடவுளாக ஆகிறார். எனவேதான் சீடர்களை வெளிஆட்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. இருவர் மொழிகளும் வேறுவேறாக இருக்கின்றன. அவர்களின் மொழிகள் வெவ்வேறாக உள்ளன. அதனால்தான் என்னை நீங்கள் ''பகவான்'' என அழைத்தால் வெளிஆட்களால் அதை புரிந்துகொள்ள முடிவதில்லை. அவர்கள் வெறுமனே நகைப்பார்கள். அவர்களுக்கு நான் ஒரு பகவன் இல்லை. அவர்களுக்கு அது முற்றிலும் சரிதான். உங்களுக்கு நீங்களும் முற்றிலும் சரிதான். என்னுடன் நீங்கள் இசைவாக உணரும்போது அந்த இசைவில் உங்களுக்கு நான் ஒரு பகவனாகி இருக்கிறேன். அது ஒரு அன்பு உறவு; ஆழமான அக - இசைவு.

**இரண்டாவது கேள்வி:**

**அன்பின் கூடுதலான உயர் அம்சங்களின்மேல் தியானிப்பதை சில பக்தி வழி குழுக்கள் போதிக்கின்றன. முதலில் ஒரு சாதாரண ஆளை நேசிப்பது, பின் ஒரு குருவை நேசிப்பது,பின் ஒரு கடவுளை நேசிப்பது - என்ற முறையில். இந்த முறையைப் பற்றி எங்களுக்கு சொல்வீர்களா?**

அன்பு ஒரு முறை அல்ல - இதுதான் மற்ற எல்லா வழிகளுக்கும் அன்பு வழிக்கும் (பக்தி மார்க்கம்) உள்ள வேறுபாடு. சரணாகதி வழிக்கு முறைகள் ஏதுமில்லை. யோகத்துக்கு முறைகள் உள்ளன. பக்திக்கு ஏதுமில்லை. அன்பு ஒரு முறை அல்ல. அதை ஒரு முறைஎன அழைப்பது அதற்கு தவறான பெயரிட்டு அழைப்பதாகும்.

அன்பு இயற்கையானது. ஏற்கனவே உங்கள் இதயத்தில் அது இருக்கிறது; பீறிட்டு வெளிப்பட தயாராக இருக்கிறது. அது நடைபெற அனுமதிப்பதே செயல்பட வேண்டிய ஒரே செயலாக இருக்கிறது; ஆனால் அதற்கு எல்லாவிதமான தடைகளையும் தடங்கல்களையுமே நீங்கள் உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அதை நீங்கள் அனுமதிப்ப தில்லை. ஏற்கனவே அது இருக்கிறது. சற்றே நீங்கள் பேசாமல் இளைப்பாறினாலே அது வரும். அது பீறிடும், பூத்துக்குலுங்கும். மேலும் ஒரு சாமானிய மனிதரில் அது பூத்துக் குலுங்கும்போது உடனே அந்த சாதாரண ஆள் அசாதாரண ஆளாகிவிடுகிறார். அன் பானது ஒவ்வொருவரையும் அசாதாரணமானவராக ஆக்குகிறது. அத்தகைய ஒரு ரசவாதம் அது. ஒரு சாதாரண பெண்மணி - அவளை நீங்கள் காதலிக்கும்போது திடீரென மறுஉருவம் ஆகிறாள். அதன்பின் அவள் சாதாரணமானவள் இல்லை; இதுவரை இருந்துள்ள பெண் களிலேயே மிகுந்த அசாதாரணமான பெண்மணியாக இருக்கிறாள். உங்களுக்கு கண் தெரியவில்லை என்று மற்றவர்கள் சொல்வார்கள். அப்படி அல்ல. உண்மையில் ஒவ்வொரு சாதாரணத்திலும் எப் போதுமே மறைந்திருக்கும் அசாதாரணத்தை நீங்கள் பார்த்திருக் கிறீர்கள். அன்பே ஒரே கண், ஒரே பார்வை, ஒரே தெளிவு. சாதாரண பெண்ணிடம், முக்காலத்தையும் சேர்ந்த முழு பெண்மையை - எல்லா பெண் களும் ஒன்று சேர்ந்த ஒருத்தியை - கண்டிருக்கிறீர்கள். ஒரு பெண்ணை நீங்கள் காதலிக்கும்போது அவளில் இருக்கும் அந்த பெண் உள்ளத்தையே நீங்கள் உணர்கிறீர்கள். திடீரென அவள் அசாதாரணமாக மாறுகிறாள்; அன்பானது ஒவ்வொருவரையும் அசாதாரணமாக ஆக்குகிறது.

உங்கள் காதலுக்குள் நீங்கள் அதிக ஆழமாகப் போனால்... ஏனெனில் காதலுக்குள் அதிக ஆழமாகப் போவதில் சிரமங்கள் உள்ளன. ஏனெனில் அதிக ஆழமாக நீங்கள் போகுமளவுக்கு அதிகமாக உங்களை நீங்கள் இழக்கிறீர்கள். ஒரு அச்சம் தோன்றுகிறது. ஒரு நடுக்கம் உங்களைப் பற்றுகிறது. அன்பின் ஆழத்தை நீங்கள் தவிர்க்கத் தொடங்குகிறீர்கள். ஏனெனில் அன்பின் ஆழம் சாவுக்கு இணையானது. உங்களுக்கும் உங்கள் காதலிக்கும் இடையில் தடை சுவர்களை நீங்கள் எழுப்புகிறீர்கள். ஏனெனில் பெண் ஒரு பாதாளம்போல் தோன்றுகிறாள். அவளால் நீங்கள் விழுங்கப்பட்டுவிட முடியும். அவள் அப்படித்தான். ஒரு பெண்ணி லிருந்தே நீங்கள் வருகிறீர்கள். அவள் உங்களை

ஆட்கொண்டுவிட முடியும் - அதுதான் பயம். கருவறையாக - படுகுழியாக இருக்கிறாள் அவள். மேலும் உங்களைப் பிறப்பிக்க அவளால் முடியும்போது உங்களை சாகடிக்கவும் அவளால் ஏன் முடியாது? உங்களுக்கு பிறப்பை தருவது மட்டுமே உங்களுக்கு இறப்பையும் தரமுடியும். எனவே பயம் இருக்கிறது. பெண் ஆபத்தானவளாக, மிகவும் மர்மமானவளாக இருக்கிறாள். அவள் இல்லாமல் உங்களால் வாழமுடிவதில்லை. அவளுடனும் உங்களால் வாழ முடிவதில்லை. அவளிடமிருந்து அதிக தொலைவுக்கு போக உங்களால் முடிவதில்லை. ஏனெனில் அதிக தொலைவுக்கு நீங்கள் போனால் திடீரென அதிக சாதாரணமாக நீங்கள் ஆகிறீர்கள். மேலும் அதிக அருகிலும் உங்களால் வர முடிவதில்லை. ஏனெனில் அதிக அருகில் நீங்கள் வந்தால்... நீங்கள் மறைந்து விடுகிறீர்கள்.

ஒவ்வொரு காதலிலும் உள்ள சிக்கல் இதுவே. எனவே ஒரு சம ரசத்தை எட்டியாக வேண்டியுள்ளது: மிக தொலைவாகவும் நீங்கள் போவதில்லை, மிக அருகாமையிலும் நீங்கள் வருவதில்லை; இரண் டுக்கும் நடுவில் ஓரிடத்தில் நீங்கள் சமாளித்து நின்றுகொள்கிறீர்கள். ஆனால் அந்நிலையில் அன்பு ஆழமாக செல்லமுடியாது. பயங்கள் எல்லாவற்றையும் கைவிட்டு தலைகுப்புற விழும்போது மட்டுமே ஆழம் அடையப் பெறுகிறது; ஆபத்தும் அதில் இருக்கிறது. அந்த ஆபத்து நிசமானதும்கூட. அன்பானது உங்கள் ஆணவத்தை கொன்றுவிடும். ஆணவத்துக்கு விஷம், காதல். உங்களுக்கு அது வாழ்வு, ஆணவத் துக்கோ அது சாவு. ஒருவர் குதித்தாக வேண்டி உள்ளது. அந்நியோன்னி யம் வளர்வதற்கு நீங்கள் இடம்கொடுத்தால், அதிகமதிகமாய் நீங்கள் நெருங்கி நெருங்கி நெருங்கி வந்து ஒரு பெண்ணின் உயிருடன் கலந் தால், பின் அவள் அசாதாரணமாக இருப்பாள் என்பது மட்டுமல்ல, இறைமையாகவே ஆகி இருப்பாள். ஏனெனில் நித்தியத்துக்கு ஒரு வாயிலாக அவள் ஆவாள். ஒரு பெண்ணை அதிகமாக நீங்கள் நெருங்க நெருங்க அப்பாலில் உள்ள ஒன்றுக்கு அவள் வாயிலாக இருப்பதை அதிகமாக நீங்கள் உணர்கிறீர்கள்.

மேலும் இதுவே ஒரு பெண்ணுக்கும் நேர்கிறது - ஒரு ஆணிடம். அவளுக்கு அவளுக்கே உரிய சிக்கல்கள் உள்ளன. சிக்கல் என்னவென் றால் ஆணை அவள் நெருங்க நெருங்க, நெருங்கி அவள் வரவர, தப்பிக்க ஆரம்பிக்கிறான் ஆண். ஏனெனில் பெண் அதிகம் நெருங்க நெருங்க ஆண் அதிகமதிக அச்சம் கொள்கிறான்; ஒரு பெண் நெருங்கி வரவர அவளிடமிருந்து தப்பிக்க தொடங்குகிறான்; அவளிடமிருந்து விலகிப்போக ஆயிரத்தொரு சாக்குப்போக்குகளை கண்டுபிடிக்கி றான். எனவே பெண் காத்திருக்க வேண்டி இருக்கிறது. மேலும் அவள் காத்திருந்தால் அப்போதும் ஒரு சிக்கல்: அவள் முன்முயற்சி

எடுக்காவிட்டால் அது அலட்சியம் போல் தோன்றுகிறது. ஆனால் அலட்சியமானது அன்பை கொன்றுவிட முடியும். அலட்சியத்தைவிட அன்புக்கு பெரிய ஆபத்து வேறு இல்லை. வெறுப்புகூட பரவாயில்லை. ஏனெனில் குறைந்தது நீங்கள் வெறுக்கும் ஆளுடன் ஒருவித உறவை நீங்கள் கொண்டிருக்கிறீர்கள். வெறுப்பை மீறியும் அன்பு உயிர்தரிக்க முடியும். ஆனால் அலட்சியத்தை மீறி உயிர்பிழைக்க அன்பால் முடியாது. எனவே பெண் எப்போதும் ஒரு சிக்கலில் இருக்கிறாள்... பெண் முன்முயற்சி எடுத்தால் ஆண் அப்படியே நழுவிவிடுகிறான். முன்முயற்சி எடுக்கும் எந்த ஒரு பெண்ணையும் எந்த ஆணாலும் சகித்துக் கொள்ள முடிவதில்லை. அதன் பொருள் படுகுழிதானாக உங்களை நெருங்கி வந்துவிடுகிறது என்பதே! எனவே காலம் கடந்து விடுவதற்குள் நீங்கள் தப்பித்து விடுகிறீர்கள்.

இப்படித்தான் டான் ஜுவான்கள் - பெண் பித்தர்கள் - உருவாகிறார்கள். பின் ஒரு பெண்ணிடமிருந்து இன்னொருத்தியிடம் என அவர்கள் தாவிக் கொண்டிருக்கிறார்கள். தாக்கிவிட்டு ஓடிவிடும் உத்தியை அவர்கள் கடைப்பிடிக்கிறார்கள். ஏனென்றால் மிக அதிக நேரம் அங்கு நீங்கள் இருந்தால் பின் பாதாளம் உங்களை உள்வாங்கி விடும். டான் ஜுவான்கள் காதலர்கள் அல்ல; அல்லவே அல்ல. காதலர்கள் போல் அவர்கள் தோன்றுவது ஏனென்றால், தொடர்ச்சியாக அவர்கள் இடம் மாறிக்கொண்டே இருப்பதால்தான். ஒவ்வொரு நாளும் ஒரு புதிய பெண்ணை தேடுகிறார்கள்; ஆனால் ஆழமான பயம் உள்ளவர்களாகவே இருக்கிறார்கள். ஏனெனில் ஒரு பெண்ணிடமே அதிக காலம் அவர்கள் தங்கி இருந்தால் பின் அன்னியோன்னியம் வளரும். அவர்கள் அதிகம் நெருங்கி வருவார்கள். அதற்குப் பிறகு என்ன நடக்கும் என்பது யாருக்கு தெரியும்? எனவே குறிப்பிட்ட காலம் வரை மட்டுமே அவர்கள் வாழ்கிறார்கள். மிகவும் பிந்துவதற்குள் அவர்கள் தப்பித்து விடுகிறார்கள்.

தன் குறுகிய வாழ்க்கைக் காலத்தில் பைரன் ஏறக்குறைய நூற்றுக்கணக்கான பெண்களை காதலித்தார். அவரே மூலமாதிரி. டான் ஜுவான். காதலை ஒருபோதும் அவர் அறிந்ததில்லை. ஒருவரிடமிருந்து இன்னொருவரிடம் - இன்னொருவரிடம் - இன்னொருவரிடம் என தாவிக் கொண்டிருந்தால் அன்பை எப்படி உங்களால் அறிந்துகொள்ள முடியும்? அன்புக்கு பண்படுவது தேவை. அது நிறைவேற காலம் தேவை. அதற்கு அன்னியோன்னியம் தேவைப்படுகிறது. "என்ன செய்வது?" என்பதில் பெண்ணுக்கு எப்போதுமே சிக்கல்தான். அவள் முன்முயற்சி எடுத்தால் ஆண் நழுவி விடுகிறான். ஆர்வமில்லாதவள்போல் அவள் பேசாமலிருந்தால் அப்போதும் அவன் தப்பித்துவிடுகிறான். எனவே ஒரு நடுவழியை அவள் தேரவேண்டி உள்ளது: சிறிது முன்முயற்சி, சிறிது அலட்சியம் கலந்த போக்கை அவள் தேர்ந்து கொள்கிறாள். ஆயினும் இந்த

கலப்பட நிலையில் இரண்டும் ஒரு மோசமான வடிவிலேயே உள்ளன. ஏனெனில் இத்தகைய சமரசங்கள், உங்களை வளர விடுவதில்லை.

சமரசங்கள் எவரையும் ஒருபோதும் வளர விடுவதில்லை. சமரசம் என்பது ஒரு கணக்கு போடும் காரியம்; சூழ்ச்சியான செயல். அது வியாபாரம் சார்ந்தது; அன்பு சார்ந்தது அல்ல. காதலர்கள் ஒருவரைகுறித்து ஒருவர் உண்மையாகவே பயப்படாதபோது, ஆணவத்தை கைவிட்டிருக்கிறபோது, ஒருவர் மற்றவருக்குள் கண்ணை மூடிக்கொண்டு குதிக்கிறார்கள். எந்த அளவுக்கு ஆழமாக குதிக்கிறார்கள் என்றால் அவர்கள் ஒருவர் மற்றவராகவே மாறுகிறார்கள். உண்மையில் அவர்கள் ஒருவராக ஆகிறார்கள். இந்த ஒருமை நிகழும்போது காதல் / அன்பானது பிரார்த்தனை / வழிபாடாக நிலைமாறுகிறது. இந்த ஒருமை நிகழும்போது திடீரென அன்புக்கு ஒரு சமயத்தன்மை வருகிறது.

முதலில் அன்புக்கு காமத்தன்மை இருந்தது. அது ஆழமற்றதானால் அது காமமாகவே குறுகிநிற்கும். உண்மையில் அது அன்பாகவே இருக்காது. அன்பு அதிக ஆழமாகிறபோது அது ஆன்மீக தன்மையைப் பெற்றிருக்கும்; தெய்வீக தன்மையைப் பெற்றிருக்கும். எனவே அன்பு / காதல் என்பது இவ்வுலகுக்கும் அவ்வுலகுக்கும், காமத்துக்கும் சமாதிக்கும் இடையிலான ஒரு பாலம் போன்றதே. எனவேதான் இந்த பயணத்தை காமத்தில் இருந்து கடவுளுக்கு என நான் சொல்லிக்கொண்டே இருக்கிறேன். அன்பு ஒரு பாலம் போன்றதே. அந்த பாலத்தின் வழியாக நீங்கள் கடக்காவிட்டால் காமமே உங்கள் வாழ்வாக இருக்கும். உங்கள் வாழ்க்கை முழுவதும் மிக சாதாரணமாகவே - மிக அசிங்கமாகவே இருக்கும். காமம் அழகானதாக முடியும்; ஆனால் காதலுடனும் காதலின் பகுதியாகவும் மட்டுமே அது முடியும். தன்னளவில் காமம் அசிங்கமானதே. இது எதைப் போன்றது என்றால்: உங்கள் கண்கள் அழகானவைதான். ஆனால் கண் குழிகளில் இருந்து அவற்றைத் தோண்டி எடுத்துவிட்டால் அவை அசிங்கமாக ஆகிவிடும். மிக அழகான கண்களும்கூட உடலில் இருந்து அகற்றப்பட்டுவிட்டால் அசிங்கமானதாகவே ஆகும்.

வான்கோவுக்கு இது நடந்தது: அவரது உடல் கொஞ்சம்கூட அழகில்லாமல் இருந்ததால் யாரும் அவரை காதலிக்கவில்லை. அப்போது ஒரு விலைமகள் சும்மா அவரை குஷிப்படுத்துவதற்காக, அவர் உடம்பில் மெச்சும்படியாக வேறெதையும் காணாததால், அவரது காதுகளை புகழ்ந்தாள். ''உமது காதுகள் மிகவும் அழகாக உள்ளன'' என தெரிவித்தாள். காதலர்கள் ஒருபோதும் காதுகளைப்பற்றி பேசுவதில்லை. ஏனெனில் பாராட்டுவதற்கு வேறு பல விசயங்கள் உள்ளன. ஆனால் அவரிடம் ஒன்றுமில்லை - உடல் மிகமிக அசிங்கமாக இருந்தது. எனவேதான் அந்த விலைமகள் ''உமது காதுகள் மிகவும் அழகாக உள்ளன'' என்றாள். வீட்டுக்கு வந்தார் வான்கோ. அவரது உடம்பை ஒருவரும் ஒருபோதும்

பாராட்டியதில்லை. ஒருவரும் ஒருபோதும் அவரது உடலை ஏற்றுக் கொண்டதில்லை. இதுதான் முதல் தடவ அதில் அப்படியே சிலிர்த்துப் போன அவர் தன் காதை அறுத்தெடுத்தார். விலைமகளிடம் மீண்டும் சென்று அந்த காதை பரிசளித்தார். இப்போது அந்த காது முற்றிலும் அசிங்கமாக இருந்தது.

காமம் என்பது காதலின் ஒரு பகுதி; அதைவிடப் பெரிய முழுமையின் ஒரு பகுதி. அதற்கு அழகு சேர்ப்பதே காதல்தான் — மற்றபடி மிகவும் அசிங்கமான நடவடிக்கைகளில் ஒன்றாகவே அது இருக்கிறது. எனவே தான் இருட்டுக்குள் உடலுறவு கொள்கிறார்கள் மக்கள். அந்த நட வடிக்கையை பகலில் நடத்துவதை அவர்கள் காண அவர்களுக்கே பிடிப்பதில்லை. எல்லா விலங்குகளும் பகலில் கூடுவதை நீங்கள் காண்கிறீர்கள், மனிதனைத் தவிர. எந்த விலங்கும் இரவில் சிரமப்படுவ தில்லை. இரவு என்பதே ஓய்வுக்குதான். பகலில்தான் எல்லா விலங்கு களும் கூடுகின்றன. மனிதன் மட்டுமே இரவில் கஷ்டப்படுகிறான். கூடல் செய்கை ஓரளவுக்கு அசிங்கமானது என்ற ஒருவித பயம்... மேலும் எந்த பெண்ணும் ஒருபோதும் கண்களை திறந்தபடி கூடலில் ஈடுபடுவ தில்லை. ஏனெனில் ஆணைவிட பெண்களுக்கு அதிக அழல் உணர்வு உள்ளது. எதையும் காணாதபடிக்கு கண்களை மூடிக்கொண்டே எப்போதும் கூடலில் ஈடுபடுகிறார்கள் அவர்கள். பெண்கள் காம விகாரங்கள் கொண்டவர்களாக இல்லை. ஆண்கள்தான் அப்படி இருக்கிறார்கள்.

எனவேதான் பெண்களின் அம்மண படங்கள் - ஓவியங்கள் ஏராளமாக உள்ளன. உடலை பார்ப்பதில் ஆண்மட்டும் ஆவலாக இருக்கிறான். பெண்களுக்கு அந்த ஆவல் இல்லை. அழகியல் உணர்வு அவர்களுக்கு அதிகம். ஏனெனில் உடல் விலங்குடையது. அது இறைமை உடையதாக ஆகாதவரை பார்ப்பதற்கு அதில் ஒன்றுமில்லை. காமத்துக்கு ஒரு புதிய ஆன்மாவை காதலால் வழங்க முடியும். அப்போது காமம் மறுஉருவம் பெறுகிறது, அழகானதாக ஆகிறது. அதன்பின் அது காமம் அல்ல - அப்பாலின் ஒரு தன்மை இப்போது அதில் இருக்கிறது; ஒரு பாலமாக ஆகியிருக்கிறது அது. ஒருவர் உங்கள் காமத்தை நிறை வேற்றி வைக்கிறார் என்பதால் அவரை நீங்கள் விரும்ப முடியும். இதுவோ காதல் / அன்பு அல்ல. இது ஒரு பேரம் மட்டுமே. ஒருவரை நீங்கள் விரும்புவதால் அவருடன் நீங்கள் உறவுகொள்ள முடியும். அப்போது காதலின் / அன்பின் ஒரு பகுதியாகவே - ஒரு நிழல்போலவே தொடர்கிறது காமம். அந்நிலையில் அது அழகானது. அதன் பின்னும் அது விலங்குலகை சேர்ந்ததல்ல. அப்போது அப்பாலிருந்து ஏதோ ஒன்று ஏற்கனவே நுழைந்திருக்கிறது. மேலும் ஒருவரை மேலும் மேலும் ஆழமாக நீங்கள் நேசித்துக்கொண்டே போனால் பைய பைய காமம்

மறைகிறது - அன்னியோன்னியம் மிகுந்த நிறைவளிப்பதாக ஆகிறது. அதன்பின் காமத்துக்கு எந்த தேவையும் இருப்பதில்லை. அன்பே போது மானதாக இருக்கிறது. அந்த கண்ணம் வருகிறபோது பின் வழிபாடு உங்கள் மேல் இறங்கும் வாய்ப்பும் இருக்கிறது.

காதலர் இருவர் ஆழமான அன்பில் இருக்கும் போது அன்பே போதுமானதாக இருக்கிறது. காமம் அப்படியே மறைந்து விட்டிருக்கிறது. அது கைவிடப்படவில்லை, ஒடுக்கப்படவில்லை. உங்கள் உணர்வி லிருந்து தானே அது மறைந்து விட்டிருக்கிறது. ஒரு தடத்தையும் விட்டு சென்றிருக்கவில்லை. அப்போது காதலர் இருவரும் ஒருவராக இருக்கிறார்கள்... ஏனெனில் காமம் பிரிக்கிறது. பிரிவினை என்று பொருள்படும் ஒரு வேர்ச்சொல்லில் இருந்தே 'செக்ஸ்' என்ற சொல்லே வருகிறது. அன்பு இணைக்கிறது. காமம் பிரிக்கிறது. பிரிவினையின் மூல காரணமே காமம்தான்.

ஒருவருடன் நீங்கள் உடலுறவு கொள்ளும்போது, அது ஆணா யினும் பெண்ணாயினும், உங்களை அது ஒன்றாக இணைக்கிறது என நீங்கள் நினைக்கிறீர்கள். ஒரு கணத்துக்கு ஒற்றுமை என்ற மாயையை உங்களுக்கு அது தருகிறதுதான். அதன்பின் ஒரு பரந்து விரிந்த பிளவு திடுமென உள்ளே வருகிறது. எனவேதான் ஒவ்வொரு காமச் செய் கைக்கு பின்னும் ஒரு களைப்பு, ஆயாசம் தலைதூக்குகிறது. காதலியிட மிருந்து மிகவும் தள்ளிப்போய் இருப்பதாக ஒருவர் உணர்கிறார். காமம் பிரிக்கிறது. அன்பு அதிகமதிக ஆழமாக போகப்போக அதிகமதிகம் இணைக்கிறது. அப்போது காமத்துக்கு தேவையில்லை. உங்கள் உள் ளாற்றல்கள் காமமில்லாமலே கூடமுடியும் — அத்தகைய ஒரு ஒருமை யில் நீங்கள் வாழ்கிறீர்கள்.

காதலர் இருவரை அவர்களின் காமம் மறைந்ததும் நீங்கள் காண முடியும். காமம் மறைந்ததும் காதலர் இருவரிலும் தோன்றும் பொலிவை நீங்கள் பார்க்க முடியும்: ஈருடல் ஒருயிராக இருக்கிறார்கள் அவர்கள். உயிர் / ஆன்மா அவர்களை சூழ்ந்திருக்கிறது. அவர்களின் உடல்களைச் சுற்றிலும் அது ஒளிர்கிறது; ஆனால் அரிதாகவே நிகழ்கிறது இது.

காமத்துடனேயே மக்கள் முடி(க்)கிறார்கள். அதிகபட்சம், சேர்ந்து வாழும்போது ஒருவர் ஒருவரிடம் பாசமாக இருப்பதுடன் தொடங்கு கிறார்கள் - இதுவே அதிகம். ஆனால் அன்பு என்பது வெறும் நேசம் மட்டுமல்ல. அது ஆன்மாக்களின் ஒற்றுமை. இரண்டு ஆற்றல்கள் சந்தித்து கூடுகின்றன, ஒரே முழுமையாக மாறுகின்றன — இது நிகழும்போது மட்டுமே வழிபாடு இயல்கிறது. அப்போது காதலர் இருவரும் தம் ஒருமையில் மிகவும் நிறைவடைந்தவர்களாக — மிக செம்மையாக உணர்கிறார்கள். அதில் எழுகிறது ஒரு நன்றியறிதல். பிரார்த்தனையை இசைக்க தொடங்குகிறார்கள் அவர்கள்.

இருத்தல் முழுவதிலும் இருக்கும் மாபெரும் இருப்பு காதல்தான் - அன்புதான். உண்மையில் ஒவ்வொன்றும் பிற ஒவ்வொன்றுடனும் அன்பிலேயே இருக்கிறது. உச்சத்துக்கு நீங்கள் வரும்போதெல்லாம் ஒவ்வொன்றும் பிற ஒவ்வொன்றுடனும் அன்பாயிருப்பதை உங்களால் காண முடியும். அன்பு என்ற ஒன்றை உங்களால் காண முடியாதபோதும் கூட வெறுப்பை நீங்கள் உணர்வீர்கள் - வெறுப்பு என்பதும் திசைமாறிப் போன அன்புதான், வேறொன்றுமில்லை. அலட்சியமாக நீங்கள் உணரும்போது:... அலட்சியம் / அக்கறையின்மை என்பது, பீறிட்டு வெளிப்பட துணிச்சலற்ற அன்பென்றே பொருள்படுகிறது. மூடியிருக்கும் ஒருவரை நீங்கள் காணும்போது அதன் பொருள், அவர் மிகவும் பயப்படுகிறார், மிகுந்த பாதுகாப்பற்றவராக உணர்கிறார், முதல் முன்முயற்சியை எடுக்க அவரால் முடியவில்லை என்பதுதான். ஆனால் அனைத்துமே அன்புதான்.

ஒரு விலங்கு இன்னொரு விலங்கின்மேல் பாய்ந்து அதை தின்னுவதுகூட - சிங்கம் ஒன்று ஒரு மானின்மேல் பாய்ந்து அதை விழுங்குவதுகூட, அன்புதான். வன்முறைபோல அது தெரிகிறது. ஏனென்றால் உங்களுக்கு தெரிவதில்லை. அன்புதான் அது. சிங்கம் மானை தன்னுள் ஏற்றுக்கொள்கிறது... மிகவும் கொடுமையானதுதான். மிகமிக குரூரமானதும் தொன்மையானதும் விலங்குத்தனமானதும் தான், ஆனாலும் அது அன்புதான். காதலர்கள் ஒருவரை ஒருவர் உண்ணுகிறார்கள்; ஒருவரை ஒருவர் உள்வாங்குகிறார்கள். அதையே தான் மிகவும் குரூரமான வழியில் செய்துகொண்டிருக்கிறது மிருகம் - அவ்வளவுதான்.

மொத்த இருத்தலுமே அன்பிலேயே இருக்கிறது. மரங்கள் மண்ணை காதலிக்கின்றன, மண் மரங்களை காதலிக்கிறது. இல்லா விட்டால் அவை இரண்டும் எப்படி ஒன்றாக நிலவமுடியும்? யார் அவற்றை கட்டுப்படுத்துவார்? பொதுவான பிணைப்பு ஒன்று இருந்தாக வேண் டும். அது வேர்கள் மட்டுமல்ல. ஏனெனில் மண், மரத்துடன் ஆழமான அன்புடன் இல்லாவிட்டால் வேர்கள் இருந்தும் பயனிராது. கண்ணுக்கு தெரியாத, ஆழமான ஒரு அன்பு அங்கிருக்கிறது. மொத்த இருத்தலும் முழுப் பேரண்டமும் அன்பை சுற்றியே இயங்குகிறது. அன்பே ரிதம் பரம். எனவேதான் நேற்று நான் சொன்னேன்: உண்மையுடன் அன்பும் சேர்ந்ததே ரிதம்பரம் என்று. உண்மை மட்டும் என்பது மிகவும் வறட்சியானதே.

உங்களால் புரிந்துகொள்ள முடிந்தால் இக்கட்டத்தில் இது ஒரு அறிவுரீதி புரிதலாக மட்டுமே இருக்க முடியும். ஆனாலும் உங்கள் நினைவில் அதை இருத்துங்கள். ஒருநாள் அது ஒரு வாழ்வியல் அனுபவமாக ஆகமுடியும் — இப்படித்தான் உணர்கிறேன் நான்:.

எதிரிகளும் ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்கள். இல்லாவிட்டால் அவர்கள் ஏன் ஒருவரைப்பற்றி ஒருவர் அலட்டிக்கொள்ள வேண்டும்? கடவுள் இல்லை என்று சொல்பவர்கூட கடவுளை நேசிக்கிறார். அதனால் அவர் பீடிக்கப்படுகிறார், கவரப்படுகிறார். அல்லாவிட்டால் வேறு எதற்காக அவர் கவலைப்படுகிறார்? கடவுள் இல்லை என நிரூபிக்க ஒரு நாத்திகர் தன் வாழ்நாள் முழுதும் முயல்கிறார். கடவுள்மேல் அவருக்கிருக்கும் ஈடுபாடு - பயம் எப்பேர்ப்பட்டது என்றால், அதனால் அவர் இருத்தலில் மகத்தான மாற்றம் ஏற்பட்டுவிட முடியும். அதற்குத் தான் அவர் அஞ்சுகிறார். எனவேதான் "கடவுள் இல்லை" என்று சாதித்துக் கொண்டே இருக்கிறார். கடவுள் இல்லை என்று மெய்ப்பிக்கும் அவரது முயற்சியில், கடவுள் அழைக்கிறார் என்னும் ஆழமான அச்சத்தையே அவர் வெளிக்காட்டிக் கொண்டிருக்கிறார். மேலும் கடவுள் இருந்தால் பின் அவர் தான் இருக்கிற மாதிரியே தொடர்ந்து இருக்க முடியாது.

ஒரு துறவி ஒரு நகரின் வீதியில் நடக்கும்போது ஒரு பெண்ணையும் தான் பார்த்துவிடாதவாறு தன் கண்களை முழுவதுமாகவோ பாதியாகவோ மூடிக்கொள்வதைப் போன்றதே இது. தனக்குள் அவர், "பெண் இல்லை, இருப்பதெல்லாம் மாயம், எல்லாம் வெறும் கனவு போன்றது" என்று சொல்லிக்கொண்டே இருக்கிறார். ஆனால் எல்லாம் வெறும் கனவே என அவர் ஏன் சொல்லிக்கொண்டே கிடக்கிறார்? காதலுக்கான ஒரு பொருள் இல்லை என மெய்ப்பிக்க ஏன் முயன்றபடியே இருக்கிறார்? அப்படி முயலாவிட்டால் மடம் மறைந்துவிடும், துறவு மறைந்துவிடும்; அவர் வாழ்க்கைப் பாணி மொத்தமும் கலைந்துபோகும்.

எல்லாம் அன்புதான். அன்புதான் எல்லாம். மிகவும் கரடுமுரடானதில் இருந்து மிகவும் உன்னதமானதுவரை, கல்பாறையில் இருந்து கடவுள் வரை எல்லாமே அன்புதான்... பல அடுக்குகள், பல படிகள், பல படிநிலைகள் - ஆனால் அவை எல்லாமே அன்புதான். ஒரு பெண்ணை உங்களால் காதலிக்க முடியுமானால் ஒரு குருவையும் உங்களால் அன்புசெய்ய முடியும். ஒரு குருவை உங்களால் அன்பு செய்ய முடியுமானால் கடவுளையும் உங்களால் வழிபட முடியும். பெண்ணை காதலிப்பது உடலை நேசிப்பதாகும். உடல் அழகானது. அதில் எந்த தப்பும் இல்லை. உண்மையாகவே அது ஒரு அற்புதம்தான். ஆனால் உங்களால் நேசிக்கமுடிந்தால் பின் உங்கள் நேசமானது வளர முடியும்.

நடந்த நிகழ்ச்சி: இந்தியாவின் சிறந்த பக்தர்களில் ஒருவரான ராமானுசர் ஒரு நகரின் வழியாக சென்று கொண்டிருந்தார். அப்போது ஒரு மனிதன் வந்தான். மதவழியால் எளிதில் கவரப்பட்டுவிடும் விதமான ஆளாகவே அவன் இருந்திருக்க வேண்டும். அவன் ஒரு துறவி; அன்பு

இல்லாமலே வாழ முயலும் மனிதன். இதில் எவரும் ஒருபோதும் வென்றதில்லை. எவரும் ஒருபோதும் வெல்லப்போவதுமில்லை. ஏனெனில் வாழ்வின் - இருத்தலின் அடிப்படையான ஆற்றலே அன்பு தான். அதற்கு எதிராக நின்று எவரும் ஒருபோதும் வெல்ல முடியாது. அந்த மனிதன் ராமானுசரிடம், ''உங்களிடம் தீட்சைபெற வந்திருக்கி றேன். கடவுளை நான் காணமுடிவது எவ்வாறு? என்னை ஒரு சீடனாக தாங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என விரும்புகிறேன்'' என்று கேட்டுக்கொண் டான். ராமானுசர் அந்த மனிதனை பார்த்தார். ஒரு மனிதன் அன்புக்கு எதிராக இருக்கிறான் என்பதை அவனை பார்த்தே சொல்லி விட முடியும். உயிரில்லாத ஒரு கல்பாறை போல அவன் காணப்படு கிறான். முற்றிலும் வறண்டுபோய், இதயமே இல்லாதவனாய் இருக்கி றான். ''முதலில் இதை சொல்லு: யாரையாவது எப்போதாவது நீ காதலித்திருக்கிறாயா?'' என்றார் ராமானுசர். அந்த ஆள் அதிர்ச்சி அடைந்தான். ஏனென்றால் ராமானுசரைப் போன்ற ஒருவர் காதலைப் பற்றி பேசுவதாவது? இவ்வளவு சாமானிய உலகியல் விசயங்களைப் பற்றிப் பேசுவதாவது? அவன்சொன்னான், ''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? நான் ஒரு ஆன்மீகவாதி. எவரையும் ஒருபோதும் நான் காதலித்ததில்லை.'' ராமானுசர் மீண்டும் கேட்டார், ''கண்களை மூடி சற்றே யோசித்துப்பார். காதலுக்கு நீ எதிராக இருந்தாலும், நீ காதலித்திருக்க லாம். நடப்பில் காதலித்திராவிட்டாலும் கற்பனையில் நீ...'' என்றார். அந்த ஆள் சொன்னான், ''நான் காதலுக்கு முற்றிலும் எதிரானவன். ஏனெனில் அன்பு என்பதே முற்றிலும் மாயையானது. இந்த உலகில் இருந்து விடுபட நான் விரும்புகிறேன். உலகிலிருந்து விடுபட அன்பு தான் தடையாக இருக்கிறது. இல்லை, கற்பனையில்கூட கிடையாது!'' ராமானுசர் வலியுறுத்தினார், ''உள்ளே பார். எப்போதாவது கனவில் ஒரு காதல் உருவம் தோன்றியிருக்கலாம்'' என்றார். ''அதனால்தான் நான் சரியாக தூங்குவதுகூட இல்லை! ஆனால் அன்பைப்பற்றி உப தேசம் பெற நான் இங்கு வரவில்லை. வழிபாட்டைப்பற்றிய வழிகாட்டலைப் பெறவே வந்திருக்கிறேன்'' என்றான் அம்மனிதன். ராமானுசர் வேதனை அடைந்தார். ''உனக்கு உதவ என்னால் முடியாது. ஏனென்றால் அன்பை அறிந்திராத ஒருவனால் எப்படி வழிபாட்டை அறியமுடியும்?'' என்றார்.

ஏனெனில் அன்பின் கனிவே வழிபாடு ஆகும். அன்பின் பிழிவே அது. உடல் மறைந்துவிட்டது, ஆன்மா மட்டுமே மிச்சம் உள்ளது என் பதைப் போன்றது இது. விளக்கு இல்லை, சுடர் மட்டுமே உள்ளது என்பதைப் போன்றது அது. மலர் மண்ணில் உதிர்ந்துவிட்டது, அதன் மணம் மட்டுமே காற்றில் தங்கி உள்ளது என்பதை போன்றது அது. அது தான் வழிபாடு. காமம் என்பது அன்பின் உடல்; காதலே அதன்

ஆன்மா. அப்படியே காதல் என்பது வழிபாட்டின் உடல்; வழிபாடோ அதன் ஆன்மா. பொதுமைய வட்டங்களை நீங்கள் வரையமுடியும். முதலில்காம வட்டம். இரண்டாவது அன்புவட்டம். மையத்தில் இருக்கும் மூன்றாவது வட்டம் வழிபாட்டு வட்டம். காமம் வாயிலாக மற்றவரின் உடலை நீங்கள் கண்டுகொள்கிறீர்கள். மற்றவரின் உடலை கண்டுபிடிப்ப தன் வாயிலாக உங்கள் சொந்த உடலை கண்டுபிடிக்கிறீர்கள்.

யாருடனும் ஒருபோதும் கலவிபுரிந்திராத ஒருவருக்கு தன் சொந்த உடம்புபற்றிய உணர்வுகூட இருக்காது. ஏனெனில் அந்த உணர்வை உங்களுக்கு தருபவர் யார்? அன்பான கரங்களால் உங்கள் உடம்பை யாரும் தீண்டியதில்லை. அன்பான கரங்களால் உங்கள் உடலை யாரும் தழுவியதில்லை. அப்படியானால் உங்கள் உடலை எப்படி உங்களால் உணரமுடியும்? ஒரு ஆவி போலவே நீங்கள் நிலவுகிறீர்கள். உங்கள் உடல் எங்கு முடிந்து மற்றவரின் உடல் எங்கு தொடங்குகிறது என்பதை நீங்கள் அறிவதில்லை.

அன்பான ஒரு தழுவுதலில்தான் முதன்முறையாக ஒரு உடல் உருக்கொள்கிறது. உங்கள் உடம்புக்கு உருக்கொடுப்பவள் உங்கள் காதலிதான். அவளே உங்களை உருஆக்குகிறாள். அவளே உங்களை வடிவமைக்கிறாள். உங்களின் எல்லாப்புறமிருந்தும் உங்களை சூழ்ந்து உங்கள் உடலை வரையறுப்பவள் அவளே. காதலி இல்லாவிட்டால் எத்தகைய உடம்பை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள் என்பதையே நீங்கள் அறியமாட்டீர்கள். உங்கள் உடல் என்னும் பாலைவனத்தில் எங்கெல்லாம் சோலை வனங்கள் உள்ளன, எங்கெல்லாம் பூக்கள் பூத்துள்ளன, எந்தெந்த இடங்களில் உங்கள் உடல் மிகுந்த உயிர்ப்புடன் விளங்குகிறது, எங்கெல்லாம் மரத்துப்போய் இருக்கிறது என்பதை நீங்கள் அறிவதில்லை; நீங்கள் அறியமுடியாது. அதைப்பற்றிய பரிச்சயம் இல்லாமலே நீங்கள் இருக்கிறீர்கள். அந்த பரிச்சயத்தை உங்களுக்கு வழங்கப்போவது யார்? உண்மையில் நீங்கள் காதல்வயப்பட்டு உங்கள் உடம்பை ஒருவர் காதலிக்கும்போதுதான் உங்கள்உடம்பை முதன்முறையாக நீங்களே அறிபவராகிறீர்கள்; உங்களுக்கு ஒரு உடல் இருக்கிறது என்பதையே தெரிபவர் ஆகிறீர்கள்.

ஒருவர் ஒருவரின் உடல்களை அறிந்துகொள்ள காதலர்கள் ஒருவருக்கொருவர் உதவுகிறார்கள். மற்றவரின் உடலை புரிந்துகொள்ள காமம் உங்களுக்கு உதவுகிறது; மற்றவர் வாயிலாக உங்கள் சொந்த உடலைப்பற்றிய உணர்வையும் வரையறையையும் பெறவும் உதவுகிறது. காமம் உங்களை பருவடிவினர் ஆக்குகிறது; உடலில் வேர்கொள்ள செய்கிறது. அடுத்து காதல், உங்களை / ஆன்மாவை நீங்களே அறியச் செய்கிறது - இது இரண்டாவது வட்டம். அடுத்து வழிபாடு, தான் - அற்றதை / பிரம்மத்தை / கடவுளை உணர உதவுகிறது.

இவையே மூன்று படிகள்: காமத்திலிருந்து காதலுக்கு / அன்புக்கு. காதல் / அன்பிலிருந்து பிரார்த்தனைக்கு. மேலும் அன்புக்கு பல பரிமாணங்கள் உள்ளன. ஏனெனில் மொத்த ஆற்றலுமே அன்புதான் என்பதால் அன்புக்கு பல்வேறு பரிமாணங்கள் இருக்கவே செய்யும். ஒரு பெண்ணை அல்லது ஆணை நீங்கள் காதலிக்கிறீர்கள் – அதன்மூலம் உங்கள் உடம்புடன் பரிச்சயம் ஆகிறீர்கள். ஒரு ஆசானை நீங்கள் நேசிக்கிறீர்கள் – அதன்மூலம் உங்கள் உயிருடன் பரிச்சயம் ஆகிறீர்கள். அந்த பரிச்சயத்தின் வழியாக திடீரென முழுமையுடன் நீங்கள் காதலில் வீழ்கிறீர்கள். பெண் ஆசானுக்கு வாசலாகிறாள், ஆசான் இறைவனுக்கு வாசலாகிறார். திடீரென இறைமையுடன் நீங்கள் ஒன்றாகிறீர்கள்; அதன்மூலம் இருத்தல் அனைத்தின் உள்ளார்ந்த மையத்தை அறிந்துகொள்கிறீர்கள்.

''அன்பே கடவுள்'' என யேசு சரியாகவே கூறுகிறார். ஏனெனில் அன்பு எனும் ஆற்றலே விண்மீன்களை இயக்குகிறது, மேகங்களை நடத்துகிறது; விதைகளை முளைவிட வைத்துள்ளது, பறவைகளை பாட வைத்துள்ளது; உங்களை இங்கே இருக்கவைத்துள்ளது. மிகவும் புதிரான ஒரு நிகழ்வாகும், இந்த அன்பு. அதுவே ரிதம்பரம்.

**கடைசி கேள்வி:**

**ஆசான்கள் கொட்டாவி விடுகிறார்களா?**

ஆம், கொட்டாவி விடுகிறார்கள்; ஆனால் முழுமையாக விடுகிறார்கள். அதுதான் ஞானமடைந்த மனிதருக்கும் ஞானமடையாத மனிதருக்கும் இடையிலான வேறுபாடு. வேறுபாடு; பண்பு ரீதியானது மட்டுமே.

நீங்கள் எதை செய்தாலும் அரைகுறையாகவே செய்கிறீர்கள். நீங்கள் காதலித்தால் உங்களின் ஒரு பகுதியே காதலிக்கிறது. நீங்கள் தூங்கினால் உங்களின் ஒரு பகுதியே தூங்குகிறது. நீங்கள் உணவு உண்டால் உங்களின் ஒரு பகுதியே உண்கிறது. நீங்கள் கொட்டாவி விட்டால் உங்களின் ஒரு பகுதியே கொட்டாவி விடுகிறது. மறுபகுதி அதற்கு எதிராக இருக்கிறது; அதை கட்டுப்படுத்திக்கொண்டு இருக்கிறது. ஒரு குரு முழுமையாக வாழ்கிறார் - எல்லாவற்றிலும். அவர் சாப்பிட்டால் சாப்பிடுவதில் முழுமையாக இருக்கிறார். சாப்பிடுவதை தவிர வேறுயாரும் இருப்பதில்லை. அவர் நடந்தால்... அவர் நடக்கிறார். நடப்பவர் அங்கு இருப்பதில்லை. நடப்பவர் இல்லை. ஏனெனில் நடப்பவர் எங்கு இருப்பார்? நடையே முழுமையாக இருக்கிறது. நீங்கள் கொட்டாவி விடும்போது நீங்கள் அங்கு இருக்கிறீர்கள். ஒரு ஆசான் கொட்டாவி விடும்போது கொட்டாவி மட்டுமே அங்கு இருக்கிறது.

இந்த பதிலில் உங்களுக்கு திருப்தி இல்லாவிட்டால் விவேக்கை கேட்டுப்பாருங்கள். அதுவே சாட்சியமாகும். ஒரு சாட்சி சொல்வதை நீங்கள் கேட்டுக்கொள்ள முடியும்.

○

# 9. முட்டாள்களின் வீழ்ச்சி

நிர்விசார சமாதி நிலையில் ஒருபொருள் அதன் முழுக் காட்சியில் அனுபவமாகிறது. ஏனெனில் இந்த நிலையில் அறிவானது புலன்களின் துணையின்றி நேரடியாக அடையப்பெறுகிறது.

நிர்விசார சமாதியில் பெறப்படும் காட்சியானது விரிவிலும் செறிவிலும், இயல்பான காட்சிகள் அனைத்தையும் விஞ்சுகிறது.

மற்ற அனைத்து கட்டுகளையும் கட்டுப்படுத்தும் இது கடக்கப்பட்டதும் விதையற்ற சமாதி அடையப் பெறுகிறது; அதனுடன், வாழ்வில் இருந்தும் சாவில் இருந்தும் விடுதலை பெறப்படுகிறது.

அறிவு மறைமுகமானது; அறிதல் நேரடியானது. அறிவானது பல ஊடகங்கள் வாயிலாக அடையப்பெறுகிறது; அது நம்பகமானது அல்ல. அறிதல் உடனடியானது; அதற்கு எந்த ஊடகமும் இல்லை. அறிதல் மட்டுமே நம்பகமானதாக இருக்க முடியும்.

இந்த பாகுபாட்டை நினைவில் கொள்ள வேண்டும். உங்களிடம் ஒரு சேதியை கொண்டுவரும் தூதுவன் போன்றது அறிவு. தூதுவன் சேதியை தவறாக புரிந்துகொண்டிருக்கலாம். தூதுவன் தன் சொந்த கருத்து எதையாவது சேதியுடன் சேர்த்து செருகி விட்டிருக்கலாம். சேதியிலிருந்து எதையாவது தூதுவன் விட்டுவிட்டிருக்கலாம். சேதியில் எதையாவது தூதுவன் மறந்துவிட்டிருக்கலாம். சேதிக்குள் தன் சொந்த விளக்கம் எதையாவது தூதுவன் ஏற்றிவிட்டிருக்கலாம். அல்லது தூதுவனே சூழ்ச்சிக்காரனாகவும், ஏமாற்றுக்காரனாகவும் இருக்கலாம். சேதியின் பிறப்பிடத்துடன் உங்களுக்கு நேரடியான தொடர்பு ஏதும் இருப்பதில்லை —இதுதான் அறிவு.

அறிவு நம்பத் தகுந்தது அல்ல. மேலும் அறிவை கொண்டு வருவதில் தொடர்புடையது ஒரு தூதுவன் மட்டும் அல்ல, நான்கு பேர். மூடப் பட்டுள்ள பல கதவுகளுக்குப் பின்னால் சிறைப்பட்டு இருக்கிறான் மனிதன். அறிவு முதலில் புலன்களுக்கு வருகிறது.பின் புலன்கள் அதை நரம்பு மண்டலத்தின் வழியாக எடுத்து செல்கின்றன. மூளையை அது அடைகிறது. பின் மூளை அதை மனத்திடம் வழங்குகிறது. இது ஒரு முழு நீள நிகழ்முறை. அறிவின் பிறப்பிடத்துடன் உங்களுக்கு எவ்வித நேரடி தொடர்பும் இருப்பதில்லை.

இரண்டாம் உலகப் போரில் இது நடந்தது. ஒரு போர் வீரனுக்கு அவனது காலிலும் கால் பெருவிரலிலும் மிக கடுமையாக காயம் பட்டிருந்தது. பெருவிரல் கடுமையாக வலித்தது. வலிதாங்க முடியாமல் வீரன் மயக்கமடைந்தான். காலை முழுவதுமாக வெட்டி எடுத்தாக வேண்டும் என அறுவை மருத்துவர்கள் முடிவு எடுத்தனர். அதை காப் பாற்ற முடியாத அளவுக்கு அது சேதமடைந்து போயிருந்தது. எனவே அதை அவர்கள் வெட்டி எடுத்துவிட்டார்கள். வீரன் மயக்கநிலையில் இருந்தான். எனவே என்ன நடந்தது என்பது அவனுக்கு தெரிய வில்லை.

மறுநாள் காலை வீரனுக்கு உணர்வு திரும்பியதும் மீண்டும் ஒரு பெருவிரல் வலி பற்றி அவன் புலம்பினான். இப்போது இது கேலிக் குரியதாகிறது: காலே இல்லாத போது - பெருவிரலும், முழுகாலுமே முற்றிலுமாக துண்டிக்கப்பட்டிருக்கிறபோது - இல்லாத காலில் வலி எங்கிருந்து வரும்? சிரித்துவிட்டு தாதி சொன்னாள், ''நீ கற்பனை செய்துகொண்டு இருக்கிறாய். அல்லது ஒரு பிரம்மை பிடித்த நிலையில் நீ இருக்கிறாய்.'' போர்வையை விலக்கி வீரனிடம் காட்டினாள், ''உன் முழுக்காலையும் எடுத்துவிட்டார்கள். எனவே இப்போது பெருவிரலில் வலி இருக்க முடியாது. ஏனென்றால் பெருவிரலே முதலில் இல்லை.'' ஆனால் வீரன் தான் சொன்னதையே திரும்பத் திரும்ப சொன்னான். ''கால் இல்லை என்பதை என்னாலும் பார்க்கமுடிகிறது. நீங்கள் சொல்வதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. நான் சொல்வது கேலிக் குரியதாகத்தான் உள்ளது; ஆனால் இப்போதும் வலி கடுமையாக உள்ளது - தாங்க முடியவில்லை என்றே சொல்கிறேன்'' என்றான்.

மருத்துவர்கள் அழைக்கப்பட்டார்கள். அறுவை மருத்துவர்கள் தமக்குள் கலந்து பேசினார்கள்.இது முற்றிலும் அபத்தமானது! மனம் ஏதோ ஏமாற்றுவேலை செய்து கொண்டிருக்கிறது. எனவே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை புரிந்துகொள்ள அவர்கள் முயன் றார்கள். முழு உடலும் புதிர்கதிப்படம் எடுக்கப்பட்டது. அதன்பின் அவர்கள் கண்ட விடை இதுதான்: பெருவிரல் வலிபற்றிய சேதியைக் கொண்டுசென்ற நரம்பு இன்னும் அந்த சேதியை கொண்டுசென்று கொண்டிருந்தது. ஒரு பெருவிரல் இருந்து அதில் வலியும் இருந்தால் எப்படி துடிக்க வேண்டுமோ அப்படியே இன்னும் அது துடித்துக் கொண்டிருந்தது.

நரம்பு சேதி கொண்டு வரும்போது மூளையும் அதை பொருள் விளக்கவே செய்யும். நரம்பு சரியான தகவலை கொண்டு வருகிறதா அல்லது தவறான தகவலை கொண்டு வருகிறதா, அது நிசமா, பொய்யா என்பதை சோதித்தறிய மூளைக்கு எந்த வழியும் இல்லை. மூளை வெளியே வந்து நரம்பு கொண்டுவரும் சேதியை சோதித்தறிய முடியாது. நரம் பையே மூளை சார்ந்திருக்க வேண்டி உள்ளது. மூளையும் அதை மன துக்கு விளக்கப்படுத்துகிறது. இப்போது மூளையை சோதித்தறிய மன துக்கு எந்த வழியும் கிடையாது - பேசாமல் அதை நம்புவதைத் தவிர. மனம் அந்த அறிவை உணர்விடம் வழங்குகிறது. இப்போது உணர் வானது, இல்லாத ஒரு பெருவிரலுக்காக துன்புறுகிறது.

இதைதத்தான் மாயை என்கிறார்கள் இந்துக்கள். ''உலகம் நிலவுவதில்லை'' என்கிறார்கள் அவர்கள். ''ஆனால் இல்லாத அதற்காக நீங்கள் துன்புறுகிறீர்கள் - அதுவும் கடுமையாக துன்புற்றுக்கொண்டு இருக்கிறீர்கள். இப்படித்தான் வழக்கமாக அறிவு இயங்குகிறது இந்த

முறையில் எந்த கட்டத்தையும் சோதித்தறிவது மிகவும் கடினம். உங்களைவிட்டு நீங்களே வெளியில் வந்தால்தான் அது முடியும். மனத்தால் அதை செய்ய முடியாது. ஏனெனில் உடம்புக்கு வெளியே மனம் நிலவமுடியாது. மூளையையே அது சார்ந்தாக வேண்டும். மூளையிலேயே அது வேர் கொண்டுள்ளது. மூளையாலும் அதை செய்ய முடியாது. ஏனெனில் மொத்த நரம்புமண்டலத்திலும் வேர்கொண்டுள்ளது மூளை. அதைவிட்டு அதனால் வெளியேவர முடியாது. சோதித்தறிவதற்கான வாய்ப்பு ஒரே ஒரு நிலையில் மட்டுமே உள்ளது. அது தான் உணர்வுநிலை.

உணர்வானது உடலில் வேர்கொண்டில்லை. உடல் ஒரு உறைவிடம் மட்டுமே. உங்கள் வீட்டுக்கு வெளியேயும் உள்ளேயும் நீங்கள் போய்வருவது போலவே உணர்வும் வீட்டை விட்டு வெளியே போகவும் உள்ளே வரவும் முடியும். மொத்த இயக்கத்திலிருந்தும் வெளியே வரவும். விசயத்தை - என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை - பார்க்கவும் உணர்வால் மட்டுமே முடியும்.

**நிர்விசார சமாதியல்** இதுநிகழ்கிறது: எண்ணங்கள் மறைகின்றன. மனதுக்கும் உணர்வுக்கும் இடையிலான தொடர்பு துண்டிக்கப்படுகிறது. ஏனெனில் எண்ணமே அந்த தொடர்பு. எண்ணம் இல்லாவிட்டால் உங்களில் மனம் என எதுவும் இருக்காது. மனம் என எதுவும் உங்களிடம் இல்லாவிட்டால் மூளையுடனான தொடர்பு அறுபடுகிறது. மனம் என எதுவும் உங்களிடம் இராத போது, மூளையுடனான தொடர்பு அறுபட்டிருக்கிறபோது, நரம்புமண்டலத்துடனான தொடர்பும் அறுபடுகிறது. இப்போது உங்களின் உணர்வு உள்ளும் புறமுமாக மிதக்க முடியும். எல்லா வாயில்களும் திறந்திருக்கின்றன. **நிர்விசார சமாதியில்** எண்ணங்கள் நின்றுவிட்டதும் உணர்வானது சுதந்திரமாக இயங்கவும் மிதக்கவும் தொடங்குகிறது. வேர்கள் இல்லாத - இருப்பிடம் இல்லாத மேகம்போல் ஆகிறது அது. நீங்கள் வாழ்ந்து வரும் யந்திர அமைப்பிலிருந்து அது விடுபட்டதாகிறது. அதனால் வெளிவர முடிகிறது. உள் செல்ல முடிகிறது. அதன் பாதையில் தடைகளேதும் இருப்பதில்லை.

இந்த நிலையில் நேரடி அறிவு வாய்க்கிறது. நேரடி அறிவே அறிதல் ஆகும். இப்போது உங்களால் நேரடியாக பார்க்க முடிகிறது. உங்களுக்கும் அறிவின் பிறப்பிடத்துக்கும் இடையில் எந்த தூதர்களும் இருப்பதில்லை. உங்கள் உணர்வு வெளியில் வந்து ஒரு மலரை பார்க்கிற போது அது ஒரு மகத்தான நிகழ்வாகும். உங்களால் அதை கற்பனை செய்ய முடியாது. ஏனெனில் கற்பனையின் பகுதியாக அது இல்லை. உங்களால் நம்ப முடியாத நடப்பு அது. உணர்வு நேரடியாக மலரைப் பார்க்க முடிகிற போதுதான் முதல்முறையாக மலர் அறியப்படுகிறது; மலர் மட்டுமல்ல, மலரின் வழியாக இருத்தல் முழுவதும் அறியப்படுகிறது. ஒரு சிறு

கூழாங்கல்லில் முழுமை மறைந்திருக்கிறது. காற்றில் ஆடும் சிறு இலை ஒன்றில் முழுமை நடமிடுகிறது. சாலையோர சிறு பூ ஒன்றில் முழுமை புன்னகைக்கிறது.

உங்கள் புலன்கள் - நரம்புமண்டலம் - மூளை - மனம் ஆகிய அடுக்கடுக்கான சுவர்கள் அமைந்த சிறையிலிருந்து நீங்கள் வெளியே வந்ததுமே திடீரென தனிநபர்கள் மறைகிறார்கள். கோடிக்கணக்கான வடிவங்களில் ஒரு மாபெரும் ஆற்றல்... ஒவ்வொரு வடிவமும் வடிவ மற்றதையே உணர்த்திக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு வடிவமும் மற்ற வடிவங்களுடன் கலந்து கரைந்து கொண்டிருக்கிறது — அழகு - உண்மை - நன்மை ஆகியவற்றின் உருவமற்ற பரந்துவிரிந்த பெருங்கடலாக ஆகிறது. இந்துக்கள் அதை **சத்-சித்-ஆனந்தம்** என்கிறார்கள்; அதுவே உள்ளது. அழகானது எதுவோ, நலமானது எதுவோ, மகிழ்வானது எதுவோ அதுவே அது. இதுவே நேரடி காட்சி, **அப்ரோக்ஷானுபூதி**, அதாவது நேரடி அறிதல்.

மற்றபடி உங்கள் அறிதல் எல்லாமே மறைமுகமானதாகவே இருக்கிறது. பெரிதாக நம்பமுடியாத தூதர்களையே சார்ந்திருக்கிறது. அவற்றை; நம்ப முடியாது. அவற்றின் தன்மையே நம்பகமற்ற தாயிருக்கிறது. ஏன் அப்படி? உங்கள் கை ஒரு பொருளை தொடுகிறது. இங்கு, கை என்பது உணர்வற்ற ஒரு பொருள். சேதி கொண்டு செல்ல தொடக்கத்தில் இருந்தே பயன்படுவது உங்களின் உணர்வற்ற ஒரு பகுதிதான். பின்னணியில் மறைந்திருக்கிறது நுண்ணறிவு. வாசலருகில் உட்கார்ந்திருப்பதோ ஒரு முட்டாள். இந்த முட்டாளே சேதியை கொண்டு செல்கிறது; அதுவே வரவேற்பாளராக இருக்கிறது. கைக்கு உணர்வு கிடையாது. ஒரு பொருளை கை தொடுகிறது, சேதியைப் பெறுகிறது. நரம்புகளின் வழியாக சேதி பயணம் செய்கிறது. நரம்பு களுக்கும் உணர்வு கிடையாது; அவற்றுக்கு சிறிதளவும் நுண்ணறிவு கிடையாது. எனவே ஒரு முட்டாளிடமிருந்து இன்னொரு முட்டாளிடம் சேதி வழங்கப்படுகிறது. முதல் முட்டாளிடமிருந்து இரண்டாவதற்கு சேதி போய்ச் சேரும்போது நிறையவே மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

முதலாவதாக ஒரு முட்டாள் நூற்றுக்கு நூறு சரியாக இருக்க முடியாது. ஏனென்றால் அதனால் புரிந்துகொள்ள முடியாது. புரிதல் என்பது அங்கு இருப்பதில்லை. கைக்கு புரிந்துகொள்ளும் திறன் குறைவு, மிகவும் குறைவு. தன் வேலையை அது யந்திரத்தனமாகவே - தானியங்கித்தனமாகவே நிறைவேற்றுகிறது. சேதி வழங்கப்படுகிறது. அதற்குள் எவ்வளவோ மாறி விடுகிறது. அதை நரம்புகள் மூளைக்கு எடுத்துச் செல்கின்றன. மூளை அதை பொருள் விளக்குகிறது. ஆனால் மூளையும் அதிக நுண்ணறிவு கொண்டதல்ல. ஏனெனில் மூளையும் உடலின் பகுதிதானே. கையின் மறுமுனைதான் மூளை.

உடல்கூறியல் உங்களுக்கு கொஞ்சம் தெரியுமானால் வலது கையானது மூளையின் இடது பாதியுடனும் இடதுகையானது மூளையின் வலது பாதியுடனும் இணைந்துள்ளது என்பது உங்களுக்கு தெரிந் திருக்கும். உங்கள் கைகள் இரண்டும் மூளையின் இரு செயல் முனைகளாக உள்ளன. மூளைக்காக அவை செயல்படுகின்றன. மூளையின் விரிவாக்க மாக அவை உள்ளன. உங்கள் வலது கை இடது மூளைக்கு சேதிகொண்டு செல்கிறது. உங்கள் இடது கை வலது மூளைக்கு சேதி கொண்டு செல் கிறது மூளையும் அவ்வளவு உன்னிப்பாக இருப்பதில்லை. ஒரு கணினியை போன்றதே மூளை: அதற்குள் ஒரு செய்தி ஊட்டப் படுகிறது. அதை அது பொருள் விளக்குகிறது. மூளையானது ஒரு யந்திர அமைப்புதான். விரைவிலேயே நம்மால் பிளாஸ்டிக் மூளைகளை உருவாக்க முடியும். ஏனென்றால் அவை மலிவாக இருக்கும், நீடித்து உழைக்கும், அதிக சிக்கலை உண்டாக்காது. மேலும் அவற்றை கையாளுவதும் மிக எளிதாக இருக்கும். அவற்றின் பாகங்களை மாற்ற முடியும். அவற்றுக்கான உதிரி பாகங்களை எப்போதும் உங்களுடன் எடுத்துச் செல்லவும் முடியும்.

மூளை ஒரு யந்திர அமைப்பாகும். கணினிகளை நாம் கண்டு பிடித்த பிறகு மூளை ஒரு யந்திர அமைப்புதான் என்பது முற்றிலும் தெளிவாகி உள்ளது. அதற்கு நுண்ணறிவு கிடையாது. ஏராளமான தகவல்களை மூளை சேகரிக்கிறது, அவற்றை பொருள் விளக்குகிறது; சேதியை மனத்திடம் தருகிறது. உங்கள் மனத்துக்கு கொஞ்சம் நுண்ணறிவு இருக்கிறது. அதுவும் மிக குறைவாகவே.... ஏனெனில் உங்கள் மனமும் விழிப்பாக இல்லை. உங்கள் கை யந்திரத்தனமானது. உங்கள் மூளை யந்திரத்தனமானது. உங்கள் நரம்பு மண்டலம் யந்திரத்தனமானது. உங்கள் மனம் தூங்கி வழிகிறது; போதையில் இருப்பதுபோல் உள்ளது. எனவே சேதி ஒரு முட்டாளிடம் இருந்து இன்னொரு முட்டாளுக்கு என போய் கடைசியாக ஒரு குடிகாரனை சென்று அடைகிறது!

குருட்ஜீப் தன் சீடர்களுக்கு மிகப்பெரிய விருந்துகளை தருவது வழக்கம்! முதல் வாழ்த்து எப்போதும் முட்டாள்களுக்கே கூறப்பட்டது. இவைதாம் முட்டாள்கள்.

பின் இந்த குடிகாரன் - அரைத்தூக்கத்தில் இருப்பவன், வந்துசேர்ந்த சேதியை கடந்தகாலப் பதிவுக்கு ஏற்ப பொருள் விளக்குகிறான். ஏனென்றால் அவனுக்கும் வேறு வழி இல்லை. கடந்த கால பதிவுக்கு ஏற்பவே நிகழ்கால நடப்பை மனம் பெயர்த்துரைக்கிறது. எல்லாமே தவறாக நடந்து கொண்டிருக்கிறது. ஏனெனில் நிகழ்காலம் எப் போதுமே புதியது. மனமோ எப்போதுமே பழையது. ஆனால் வேறு வழியும் இல்லை. வேறு எதையும் செய்ய மனத்தால் முடியாது. இதே மூடர்களின் மூலம்தான் கடந்த காலத்திலும் நிறைய அறிவை அது

சேகரித்திருக்கிறது. அதுவும் வேறு எதையும்போல நம்பகமற்றதாகவே இருக்கிறது. அந்த கடந்தது நிகழ்வுக்கு கொண்டுவரப்படுகிறது. இறந்ததின் வழியாகவே இருப்பது விளங்கிக்கொள்ளப்படுகிறது. இந்நிலையில் எல்லாமே தவறாகிப் போகிறது. இந்த நடைமுறை வழியாக எதையும் அறிவது ஏறக்குறைய அசாத்தியமாக ஆகிறது.

எனவேதான் இந்த நிகழ்முறை வழியாக அறியப்படுகிற முழு உலகையும் மாயை - கனவு போன்றது என்கிறார்கள் இந்துக்கள். அது அப்படித்தான். மெய் உலகை இன்னும் நீங்கள் அறிந்திருக்கவில்லை. இந்த நான்கு தூதர்களும் அதற்கு உங்களை விடமாட்டார்கள். மேலும் இந்த தூதர்களை தவிர்ப்பது எப்படி, வெளியே வருவது எப்படி என்பதும் உங்களுக்கு தெரிவதில்லை. இந்த நிலைமை எதைப்போல் இருக்கிறது என்றால் ஒரு இருட்டறையில் நீங்கள் அடைபட்டிருக்கிறீர்கள். சாவித்துளை வழியாக மட்டுமே வெளிஉலகை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். அத்துடன் அந்த சாவித்துளையும் சும்மா இருப்பதில்லை, அதுவும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது; அது பொருள் விளக்கம் தந்துகொண்டுள்ளது: ''இல்லை, நீ கூறுவது தவறு, இது இப்படி இல்லை, அப்படி'' என்கிறது. உங்கள் கை பெயர்த்துரைக்கிறது, உங்கள் நரம்பு மண்டலம் பெயர்த்துரைக்கிறது, உங்கள் மூளை பெயர்த்துரைக்கிறது; கடைசியாக குடிகாரனும் பெயர்த்துரைக்கிறது. அந்த பெயர்ப்புரை உங்களுக்கு தரப்படுகிறது. அந்த பெயர்ப்புரையின்படியே நீங்கள் வாழ்கிறீர்கள் – இதுவே அறியாமை நிறைந்த மனதின் நிலை; விழிப்படைந்திராத மனதின் நிலை இதுவே.

நிர்விசார சமாதியில் இந்த மொத்த நிலையும் தகர்க்கப்படுகிறது. இந்த மொத்த இயந்திர அமைப்பிலிருந்தும் திடீரென நீங்கள் வெளிவருகிறீர்கள். அதை நீங்கள் சார்ந்திருப்பதில்லை. மொத்த யந்திர அமைப்பையும் அப்படியே நீங்கள் கைவிடுகிறீர்கள். அறிவின் பிறப்பிடத்துக்கு நேரடியாக நீங்கள் வருகிறீர்கள். மலரை நேருக்குநேராக பார்க்கிறீர்கள்.

இது இயலும். ஆனால் தியானத்தின் மிக உயர்ந்த நிலையில், நிர்விசார நிலையில், எண்ணங்கள் நின்றிருக்கிற போது மட்டுமே இது இயலும். எண்ணமே இணைப்புக் கண்ணி. எண்ணங்கள் நின்றதும் யந்திர அமைப்பு மொத்தமும் நிற்கிறது. நீங்கள் தனியாக இருக்கிறீர்கள். இப்போது நீங்கள் சிறைப்பட்டிருப்பதில்லை. இப்போது நீங்கள் சாவித்துளையின் வழியாக பார்த்துக்கொண்டிருப்பதில்லை. திறந்த வெளிக்கு - வானத்தின் கீழிருக்கும் வெளி உலகத்துக்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள். பொருள்களின் உண்மை நிலையை நீங்கள் பார்க்கிறீர்கள்; பொருள்கள் நிலவவில்லை என்பதை நீங்கள் பார்ப்பீர்கள். பொருள்கள் நிலவுகின்றன என்பது உங்கள் நினைப்பு மட்டுமே. உண்மையில் உயிர்கள் மட்டுமே

நிலவுகின்றன. பொருள்கள் என்பவை உலகில் இல்லை. பாறைகூட ஒரு உயிர்தான் — அது எவ்வளவுதான் அசந்து தூங்கிக்கொண்டிருந்தாலும், குறட்டை விட்டு தூங்கிக் கொண்டிருந்தாலும், பாறையும் ஓர் உயிர்தான். ஏனெனில் எல்லாவற்றுக்கும் அடிப்படையானது ஒரு உயிர்தான்; அதன் பகுதிகள் அனைத்தும் உயிர்கள்தான் - ஆன்மாக்கள்தான். மரம் ஒரு உயிர். பறவை ஒரு உயிர். கல் ஒரு உயிர். பொருள்களின் உலகம் திடுமென மறைகிறது. ''பொருள்'' என்பது முன்னே சொன்ன முட்டாள்களும் குடிகார மனமும் தரும் பெயர்ப்புரைதான் — இந்த நடைமுறையினால்தான் எல்லாமே அறிவுத்திறன் குறைந்ததாக ஆகிறது. இந்த நடைமுறையினால்தான் மேல்பரப்பு மட்டுமே தொடப்படுகிறது. இந்த நடைமுறையினால்தான் மெய்உலகை நீங்கள் தவறவிடுகிறீர்கள்; ஒரு கனவுலகில் நீங்கள் வாழ்கிறீர்கள்.

இந்த முறையில் ஒரு கனவை நீங்கள் உருவாக்க முடியும். என்றாவது ஒருநாளில் சும்மா முயன்று பாருங்கள்: உங்கள் மனைவி தூங்கிக் கொண்டிருக்கிறார்; அல்லது கணவர் அல்லது குழந்தை. தூங்குபவரின் பாதத்தில் ஒரு பனிக்கட்டியை தேயுங்கள். சற்றே தேயுங்கள் - அதிகமாக வேண்டாம்; அதிகமாக தேய்த்தால் அவர் விழித்துக்கொள்ளலாம். சிறிதே தேய்த்துவிட்டு எடுத்துவிடுங்கள். உடனடியாக அவரது இமைகளின் அடியில் கண்கள் விரைவாக அசைவதை நீங்கள் பார்ப்பீர்கள். இதை உளவியலார் (**ஆர்இஎம் ரேப்பிட் ஐ மூவ்மென்ட்** = கண்களின் துரித அசைவு) என்கிறார்கள். கண்கள் துரிதமாக அசைந்துகொண்டிருக்கும் போது ஒரு கனவு தொடங்கி இருக்கிறது. அந்த மனிதர் எதையோ கண்டுகொண்டிருக்கிறார். அதனால்தான் கண்கள் அவ்வளவு விரைவாக அசைந்து கொண்டிருக்கின்றன. பின் கனவின் நடுவில் அவரை எழுப்பி அவர் கண்டது என்ன என கேளுங்கள். மிகவும் குளிரான - பனிக்குளிரான ஒரு ஆற்றை அவர் கடந்து கொண்டிருப்பதாகவோ பனிமேல் நடந்து கொண்டிருப்பதாகவோ கவுரிசங்கரை அடைந்திருப்பதாகவோ அவர் கண்டிருப்பார். இதுபோன்ற ஒன்றை அவர் கனவு காண்பார். முதல் முட்டாளை ஏமாற்றியதன் மூலம் - பாதத்தை பனிக்கட்டியால் தொட்டதன் மூலம் - ஒரு கனவை நீங்கள் உருவாக்கி இருக்கிறீர்கள். முட்டாள் உடனே கனவு காண தொடங்கிவிட்டது. இரண்டாவது முட்டாள் சேதியை தந்திருக்கிறது. மூன்றாவது முட்டாள் பொருள் தந்திருக்கிறது. நான் காவதான குடிகாரன் - இப்போது அது தூக்கத்தில் வேறு இருக்கிறது - உடனடியாக ஒரு கனவை தொடங்கிவிட்டது.

கனவுகளை நீங்கள் உருவாக்க முடியும். பல தடவைகளில் உங் களை அறியாமலே அவற்றை உருவாக்குகிறீர்கள். உங்கள் இரு கைகளையும் நெஞ்சின்மேல் வைத்தபடி உங்கள் படுக்கையில் நீங்கள்

தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள். அப்போது யாரோ ஒருவர் - ஒரு அரக்கன் - உங்கள் மார்பின் மேல் உட்கார்ந்து அழுத்திக் கொண்டிருப்பது போல் உணர்கிறீர்கள். கண்களை திறந்து பார்த்தால் யாரும் அங்கு இருப்பதில்லை - உங்கள் சொந்த கைகள்தான். அல்லது ஒரு தலையணை.

நீங்கள் விழித்திருக்கும்போதும் இதுவேதான் நடந்து கொண்டிருக்கிறது. இரண்டுக்கும் இடையில் எந்த வேறுபாடும் இருப்பதில்லை. ஏனெனில் யந்திரம் முற்றிலும் அதேதானே - கண்கள் திறந்திருப்பதாலோ மூடியிருப்பதாலோ பெரிய வேறுபாடு எதுவும் ஏற்படுவதில்லை. ஏனெனில் அந்த நிகழ்முறையை சோதித்தறிய எதுவும் இருக்க முடியாது. அதை சோதித்தறிய நீங்கள் விரும்பினால் முழு நிகழ்முறையின் ஊடாகவும் நீங்கள் போயாக வேண்டி இருக்கும். நீங்கள் வெளியே வந்து, நிகழ்ந்து கொண்டிருப்பது என்ன என்பதை காண முடியாதவரை எப்படி உங்களால் சோதித்தறிய முடியும்?

இந்த வாய்ப்பே - இறுதியில் இருக்கும் உணர்வு வெளியே வர முடிவதுவே - முழு ஆன்மீக உலகமுமாக இருக்கிறது. மொத்த யந்திர போக்கையும் கைவிடுங்கள் - பொருளை நேரடியாக பாருங்கள்; ''பொருள்கள்'' மறைகின்றன. எனவேதான் இந்துக்கள் இந்த உலகம் உண்மையல்ல, உண்மையிலேயே அறிந்தவருக்கு அது மறைந்து விடுகிறது என்கிறார்கள். இதன்பொருள், வெளியில் பாறைகள் இல்லை, மரங்கள் இல்லை என்பதல்ல. இன்னும் அதிக உறுதியாகவே அவை அங்கு உள்ளன. ஆனால் இனி அவை மரங்களாக இருக்காது. பாறைகளாக இருக்காது. உயிர்களாக இருக்கும். உயிர்களை உங்கள் மனம் பொருள்களாக மாற்றுகிறது: உங்களின் மனைவி, நுகர்வதற்கான ஒரு பொருள். உங்களின் கணவன், உடமை கொள்வதற்கான ஒரு பொருள். உங்களின் தொழிலாளி, சுரண்டுவதற்கான ஒரு பொருள். உங்களின் முதலாளி, ஏமாற்றுவதற்கான ஒருபொருள். இந்த மடத்தனமான நடைமுறைகள் அனைத்தையும் கொண்டு மனமானது ஒவ்வொரு உயிரையும் ஒரு பொருளாக மாற்றுகிறது. மனதிலிருந்து நீங்கள் வெளியேறி திறந்த வானத்தின் கீழ்வந்து பார்க்கும்போது திடீரென அங்கு எதுவுமே இருப்பதில்லை — ''பொருள்தன்மை'' மறைகிறது.

எண்ணங்கள் நீங்கியதும், நீங்கவேண்டிய இரண்டாவது விசயம், பொருள். திடீரென உலகம் முழுவதும் உயிர்களால் நிரம்பி இருக்கிறது: அழகான உயிர்கள்; அருமையான உயிர்கள். ஏனென்றால் அவை அனைத்தும் இறைமை என்னும் அறுதி உயிரில் பங்குபெறுகின்றன. வரையறைகள் மாறுகின்றன. உங்களால் பிரிக்க முடிவதில்லை. யாந்திரிக அமைப்பின் காரணமாகவே எல்லா பிரிவினையும் இருக்கிறது. பிரிவுபடாத மண்ணில் இருந்து ஒரு மரம் வெளிவந்து பிரிவுபடாத வானத்தை

சந்திப்பதை திடீரென நீங்கள் பார்க்கிறீர்கள். ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றுடனும் இணைந்துள்ளது. ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றினதும் உறுப்பாயுள்ளது. உள்ளிருந்தே ஒளிர்கிற கோடிக் கோடிக் கணக்கான உணர்வுகளின் வலைப்பின்னலாக முழு உலகமும் மாறுகிறது. அங்குள்ள ஒவ்வொரு வீடும் வெளிச்சமாக இருக்கிறது. உடல்கள் மறைகின்றன. ஏனெனில் உடல்கள் பொருள்களின் உலகைச் சேர்ந்தவை. உருவங்கள் நிலவும். ஆனால் இனி அவை பொருள்வகைப்பட்டதல்ல. இயங்கும் வடிவங்களே - இயக்க ஆற்றலின் வடிவங்களே அவை. மாறிக்கொண்டே இருக்கின்றன அவை. நடந்து கொண்டிருப்பது அதுதான்.

நீங்கள் ஒரு குழந்தையாக இருந்தீர்கள். பின் ஒரு இளையவராக இருக்கிறீர்கள். இப்போது ஒரு முதியவராக இருக்கிறீர்கள். என்ன நடந்துகொண்டிருக்கிறது? திட்டவட்டமான ஒரு வடிவம் என்பது உங்களுக்கு இல்லை. உருவம் தொடர்ச்சியாக இயங்கிக் கொண்டும் மாறிக்கொண்டும் உள்ளது. குழந்தை இளையவராக மாறிக்கொண்டிருக்கிறது. இளையவர் முதியவராக மாறிக்கொண்டிருக்கிறார். முதியவர் இறப்பை நோக்கி சென்று கொண்டிருக்கிறார்.

அப்போது திடீரென நீங்கள் காண்கிறீர்கள்: பிறப்பு பிறப்பு அல்ல; இறப்பு இறப்புமல்ல. உருவங்கள்தான் மாறிக் கொண்டிருக்கிறது. உருவமற்றது மாறாமலே இருக்கிறது. ஒளிரும் அருவம் எப்போதும் ஒரே மாதிரியாகவே இருப்பதை நீங்கள் பார்க்க முடியும். கோடிக்கணக்கான உருவங்களின் இடையில் அது இயங்கிக் கொண்டிருக்கிறது. மாற்றங்களின் மத்தியில் அது மாறாமல் இருக்கிறது. இயங்கிக் கொண்டிருந்தாலும் அது இயங்காமலே இருக்கிறது. மற்ற ஒவ்வொன்றாக மாறியும் தன் நிலையின் திரியாத ஒன்றாகவே எப்போதும் அது இருக்கிறது. அதுதான் அதன் அழகும் மறைஉண்மையும். அந்நிலையில் வாழ்க்கையானது ஒன்றாக - உயிர்களின் மாபெரும் சமுத்திரமாக இருக்கிறது. அந்நிலையில் நீங்கள் உயிருள்ள பொருள்களையும் உயிரற்ற பொருள்களையும் பார்ப்பதில்லை. ஏனெனில் அவை இருப்பதில்லை. யந்திர அமைப்பின் - தவறான மொழி பெயர்ப்பின் - காரணமாகவே அது இருக்கிறது.

பிறப்பு - இறப்பு இரண்டுமே இல்லை. இருப்பது, பிறப்பும் இறப்பும் இல்லாதது; நித்தியமானது. ஆனால் மனத்திலிருந்து நீங்கள் வெளியே வந்ததும்தான் இப்படிதான் அது தெரிகிறது.

இப்போது பதஞ்சலியின் சூத்திரங்களை ஊடுருவ முயலுங்கள்.

**நிர்விசார சமாதி நிலையில் ஒரு பொருள் அதன் முழுக் காட்சியில் அனுபவமாகிறது. ஏனெனில் இந்த நிலையில் அறிவானது புலன்களின் துணையின்றி நேரடியாக அடையப் பெறுகிறது.**

புலன்கள் பயன்படுத்தப்படாதபோது, வானத்தைப் பார்ப்பதற்கு சாவித் துவாரம் பயன்படுத்தப்படாத போது – ஏனெனில் சாவித் துவார மானது வானத்துக்கு தன் சொந்த வரம்பை - சட்டத்தை இட்டு எல்லா வற்றையும் பாழாக்கிவிடுகிறது. வானம் சாவித்துளையைவிட பெரிதாக இருக்காது, இருக்க முடியாது. நீங்கள் காணும் காட்சியின் அளவானது உங்கள் கண்களைவிட எப்படி பெரிதாக இருக்க முடியும்? உங்கள் தொடுகையானது உங்கள் கைகளைவிட எப்படி பெரிதாக இருக்க முடியும்? ஒரு ஒலி எவ்வாறு உங்கள் காதுகளைவிடவும் ஆழமான தாக இருக்கமுடியும்? - வாய்ப்பே இல்லை! கண்கள், காதுகள், மூக்கு - இவை எல்லாம் சாவித்துளைகள். அவற்றின் வாயிலாக மெய் உலகை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நிர்விசாரத்தில் நீங்கள் திடீரென உங்களுக்கு வெளியே குதிக்கிறீர்கள். பரந்த தன்மையை – எல்லையின்மையை முதல் தடவையாக அறிந்துகொள்கிறீர்கள். இப் போது முழுக் காட்சி கிடைக்கிறது. அங்கு தொடக்கம் இருப்பதில்லை; முடிவும் இருப்பதில்லை. இருத்தலுக்கு எல்லைகள் இல்லை. அது எல்லையற்றது. வரம்புகள் அதற்கு கிடையாது. எல்லா வரம்புகளும் உங்கள் புலன்களி னுடையவை, புலன்களால் ஏற்பட்டவை. உலகமோ வரம்பற்றது. எல்லா திசைகளிலும் நீங்கள் போய்க்கொண்டே போய் கொண்டே போய்க் கொண்டே இருக்கிறீர்கள். அதற்கு முடிவு என்பதில்லை.

முழுப்பார்வை கைகூடியதும்தான் அதுவரை உங்களை பீடித்துக் கொண்டிருந்த மிக நுட்பமான அகங்காரம் முதல் தடவையாக மறை கிறது. ஏனெனில் இருத்தலானது மிகவும் விரிந்துபரந்தது. எனவே ஒரு சிறிய அற்பமான ஆங்காரத்தை எப்படி நீங்கள் தொற்றி இருக்க முடியும்?

நடந்தகதை: மிகப் பெரிய தற்பெருமைக்காரனும் மிகப்பெரிய பணக்காரனுமான ஒரு அரசியல்வாதி சாக்ரட்டீசிடம் வந்தான். ஏதென் சிலேயே - உண்மையை சொன்னால் கிரீசிலேயே - மிகப்பெரிய அழ கான ஒரு அரண்மனையில் அவன் வாழ்ந்து வந்தான். ஒரு தற்பெருமைக் காரன் - அகங்காரன் - நடக்கும்போது நீங்கள் பார்க்க முடியும், தற் பெருமைக்காரன் ஒன்றை செய்யும்போது நீங்கள் பார்க்கமுடியும்: எப்போதும் அவனிடம் ஆணவம் இருக்கிறது. அவனுடைய எல்லாவற் றிலும் அது கலந்திருக்கிறது. அவன் நடக்கும்போது திமிராக நடந்தான். சாக்ரட்டீசிடம் அவன் வந்தான். அவரிடம் திமிராக பேசினான்.

சாக்ரட்டீஸ் சில நிமிடங்கள் பேசினார். பின்னர் சொன்னார், ''பொறு. இப்போது முதலில் தீர்க்கப்பட்டாக வேண்டிய அவசரமான காரியம் ஒன்று உள்ளது. பிறகு நாம் பேசலாம்.'' உலகப் படத்தை கொண்டுவரு மாறு தன் சீடர் ஒருவரிடம் அவர் சொன்னார். அந்த பணக்காரனுக்கு - அரசியல் காரனுக்கு - ஆணவக்காரனுக்கு, திடீரென எழுந்துவிட்ட அந்த அவ சியத்தின் அவசரத்தை புரிந்துகொள்ள முடியவில்லை. உலகப்படத்தை கொண்டுவர சொன்னதன் அர்த்தத்தை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் விரைவிலேயே அதன் பொருளை அவன் கண்டுகொண்டான்.

''இந்த பெரிய உலகப்படத்தில் கிரீஸ் எங்கே இருக்கிறது?'' என்று கேட்டார் சாக்ரட்டீஸ். ஒரு சிறு இடம். ஏதென்சு எங்கே இருக்கிறது? ஒரு புள்ளி மட்டுமே. பின் சாக்ரட்டீஸ் கேட்டார், ''உன் அரண்மனை எங்கே? ஏதென்சே ஒரு புள்ளி. அதில் உன் அரண்மனை எங்கே? அதில் நீ எங்கே? இந்த படமோ புவியினுடையது மட்டுமே. புவியோ ஒன்றுமில்லை. பூமியைப்போல் 60,000 மடங்கு பெரியது சூரியன். இத்தனைக்கும் நமது சூரியன் நடுத்தரமான சூரியன்தான். இதைப்போல் கோடிக்கணக்கான மடங்கு பெரியதான சூரியன்கள் பேரண்டத்தில் உள்ளன. சூரிய மண்டலத்தின் ஒரு விண்படத்தை நாம் தயாரித்தால் நம் பூமி அதில் எங்கே இருக்கும்? இத்தனைக்கும் நம் சூரியமண்டலம் மிகவும் நடுத் தரமான ஒரு சூரிய மண்டலம்தான். கோடிக்கணக்கான சூரிய மண்ட லங்கள் உள்ளன. ஒரு பால்வீதி / விண்மீன் மண்டலத்திலேயே கோடிக் கணக்கான சூரியன்களும் கோடிக்கணக்கான சூரிய மண்டலங்களும் உள்ளன. நாம் சார்ந்துள்ள பால் வீதி / விண்மீன் மண்டலத்தின் ஒரு விண்படத்தை தயாரித்தால் அதில் நம் பூமி எங்கிருக்கும்? இப்படி பால்வீதி போன்ற விண்மீன் மண்டலங்கள் பல கோடிக்கணக்கில் உள்ளன. அதில் நம் சூரிய மண்டலம் எங்கிருக்கும்? நமது சூரியன் எங்கிருக்கும்?''

இப்போது இதற்கு ஒரு முடிவே இல்லை என்கிறார்கள் அறிவிய லார். பால்வீதிகளுக்கு அப்பால் பால்வீதிகளாக தொடர்கின்றன. எந்த திசையில் நாம் போவதானாலும் அதற்கு ஒரு முடிவே இராதுபோல் தோன்றுகிறது. அப்பேர்ப்பட்ட விசாலத்தில் நீங்கள் எப்படி உங்கள் அகந்தையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்க முடியும்? காலை யில் சூரியன் உதித்ததும் பனித்துளி மறைவதுபோல் அப்படியே மறை கிறது அது. விரிவு எழுந்ததும், காட்சி/பார்வை முழுமை அடைந்ததும், உங்கள் ஆணவம் ஒரு பனித்துளி போலவே அப்படியே காணாமல் போகிறது. அந்த அளவுக்குக்கூட அது பெரியதல்ல முட்டாள் தூதர்கள் தந்த தவறான கருத்துதான் அது. புலன்களின்; துவாரங்களின் குறுகிய தன்மை காரணமாக ஒப்பீட்டில் நீங்கள் மிகப் பெரியதாக தெரிகிறீர்கள்.

வானின்கீழ் நீங்கள் வந்துவிட்டால் திடீரென ஆணவம் மறைகிறது - சாவித் துளையால் உருவானதே அது. ஏனெனில் சாவித்துளை மிகவும் சிறியது. அதன் வழியாகப் பார்த்தால் முழு உலகமும் மிகவும் சிறியதாக தெரிகிறது. அதன்பின்னால் இருக்கும் நீங்களே மிகவும் பெரியதாக தெரிகிறீர்கள். வானின்கீழ் வந்ததும் தன்னைப்போல் அது மறைகிறது.

சாக்ரட்டீஸ் சொன்னார், ''இந்த நிலப்படத்தில் உன் அரண்மனை எங்கே இருக்கிறது? நீ எங்கே இருக்கிறாய்?'' அதன் பொருளை அம் மனிதனால் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனாலும், ''அதற்கு என்ன இப்போது?'' என்று கேட்டான். சாக்ரட்டீஸ் கூறுகிறார், ''தேவை இருக்கிறது. ஏனெனில் இதை நீ புரிந்துகொள்ளாவிட்டால் எவ்வித விவாதத்துக்கும் வாய்ப்பு இல்லை. என் நேரத்தையும் உன் நேரத்தையும் வீணடித்தவன் ஆவாய். இப்போது இதன் கருத்தை நீ விளங்கிக் கொண்டிருந்தால் உரையாடலுக்கு வாய்ப்பு உள்ளது. உன் ஆணவத்தை விலக்கிவிட உன்னால் முடியும். அதனால் ஒன்றும் குறைந்து விடாது.''

பரந்துவிரிந்த வானத்தின்கீழ் உங்கள் அகங்காரம் முற்றிலும் முக்கியமற்றதாக ஆகிறது. தானாகவே அது விட்டுவிடுகிறது. இப்படி சொல்வதுகூட மடத்தனமாக தோன்றுகிறது; அதற்குக்கூட தகுதியற்றது அது. காட்சி முழுமைபெற்றதும் நீங்கள் மறைந்து விடுகிறீர்கள்; புரிந்துகொள்ளப்படவேண்டிய விசயம் இதுதான். பார்வை குறுகலாக இருப்பதால்தான் நீங்களே இருக்கிறீர்கள். பார்வை எந்தளவுக்கு குறுக லாக உள்ளதோ அந்தளவுக்கு ஆணவம் அதிகமாக உள்ளது. எந்த அளவுக்கு ஒருவர் பார்வை/காட்சி இல்லாதவராக இருக்கிறாரோ அந்த அளவுக்கு அவரில் ஆணவம் முழுமை பெறுகிறது. காட்சித்திறன் வளர வளர ஆணவம் குறைந்து குறைந்து போகிறது. பார்வை முழுமை பெற்றதும் ஆணவம் அங்கு அறவே இருப்பதில்லை.

இங்கே என் முழு முயற்சியும் இதற்குத்தான் – பார்வை முழுமை பெற வேண்டும். அதன்வழி ஆணவம் முழுமையாக ஒழியவேண் டும். எனவேதான் பல திசைகளில் இருந்தும் உங்கள் அகம் என்னும் சுவரை நான் தாக்கிக்கொண்டே இருக்கிறேன். அதன்மூலம் தொடக் கத்தில் குறைந்தது மேலும் சில துளைகளையாவது போடமுடியும். புத்தர்மூலமாக ஒரு புது துளை விழுகிறது. பதஞ்சலிமூலமாக இன் னொன்று. திலோப்பா மூலமாக இன்னுமொன்று. இதைத்தான் நான் செய்துகொண்டிருக்கிறேன். புத்தர், திலோப்பா அல்லது பதஞ்சலியை வழிபடுபவராக நீங்கள் ஆவதை நான் விரும்பவில்லை. ஏனெனில் ஒரு வழிபாட்டாளரால் ஒரு பரந்துவிரிந்த பார்வையை ஒரு போதும் பெற முடியாது. அவரது கோட்பாடே அவரது சாவித்துவாரமாகிறது.

பலவிதமான நிலைபாடுகளைப் பற்றியும் பேசிக்கொண்டிருப்பதன் மூலம் நாம் என்ன செய்ய முயன்றுகொண்டிருக்கிறோம்? - இதைத்தான் செய்ய முயன்றுகொண்டிருக்கிறேன்: அதாவது உங்களுக்கு ஒரு பரந்த காட்சியை வழங்கவே முயன்று கொண்டிருக்கிறேன். சுவர்களில் பல துளைகள் விழுந்ததும் உங்களால் கிழக்கில் பார்க்க முடிகிறது. மேற்கில் பார்க்க முடிகிறது. தெற்கில் பார்க்க முடிகிறது. வடக்கில் பார்க்க முடிகிறது. எனவே கிழக்கைப் பார்க்கும்போது "இது மட்டுமே ஒரே திசை" என நீங்கள் சொல்வதில்லை. வேறு திசைகளும் இருப்பதை நீங்கள் அறிகிறீர்கள். கிழக்கைப் பார்த்ததும் "இதுவே ஒரே சரியான கோட்பாடு" என நீங்கள் கூறுவதில்லை. ஏனெனில் அந்நிலையில் பார்வை குறுகிப் போகிறது. எல்லா திசைகளில் இருந்தும் எல்லா கொள்கைகளில் இருந்தும் நீங்கள் விடுபட முடிவதற்காகவே பலவிதமான கொள்கைகளைப்பற்றியும் நான் பேசிக்கொண்டிருக்கிறேன்.

புரிதல்மூலமே விடுதலை வருகிறது. எந்த அளவுக்கு அதிகமதிகமாய் நீங்கள் புரிந்துகொள்கிறீர்களோ அந்த அளவுக்கு அதிகமாய் நீங்கள் விடுபட்டவராக ஆகிறீர்கள். பையப்பைய ஏராளமான ஓட்டைகள் வழியாக உங்கள் பழைய ஓட்டை தானே காலாவதியானதும், அதற்கு என்று எந்த தனிச்சிறப்பும் இல்லை என்பதை நீங்கள் அறியவந்ததும், உங்களுக்குள் ஒரு உந்தல் எழுகிறது: அந்த சுவர்கள் அனைத்தையும் உடைத்து நொறுக்கிவிட்டு அப்படியே பேசாமல் வெளியே ஓடிவிட்டால் என்ன ஆகும்? ஒரே ஒரு புதிய துளையுடன்கூட முழுகாட்சியும் மாறுகிறது. ஏற்கனவே நீங்கள் அறிந்தே இராத - கற்பனைகூட செய்திராத – கனவுகூட கண்டிராத விசயங்களையும் நீங்கள் அறியவருகிறீர்கள் அப்படியானால் எல்லா சுவர்களும் மறைந்து, திறந்த வானத்தின்கீழ் மெய் உலகத்தை நேருக்குநேர் நீங்கள் தரிசித்தால் என்ன நேரும்?

மேலும், திறந்த வானத்தின்கீழ் என நான் சொல்லும்போது, வானம் என்பது ஒரு பொருள் அல்ல, ஒரு வெறுமையே என்பதை நினைவில் கொள்ளுங்கள். எல்லா இடத்திலும் அது இருக்கிறது. ஆனால் எங்கேயும் அதை நீங்கள் கண்டுபிடிக்க முடியாது. ஒரு இன்மையே அது. வெறும் ஒரு பரந்த தன்மையே அது. எனவேதான் கடவுள் பரந்தவர் என நான் ஒருபோதும் சொல்வதில்லை. பரந்த தன்மைதான் கடவுள் என்றே எப்போதும் நான் சொல்கிறேன். இருத்தல் பரந்தது அல்ல. ஏனெனில் பரந்து விரிந்த இருத்தலும்கூட வரம்புகளைக் கொண்டிருக்கும். எவ்வளவு தான் பரந்ததாய் இருந்தாலும் ஓரிடத்தில் அதற்கு எல்லை இருந்தே தீரவேண்டும். பரந்த தன்மைதான் இருத்தல்.

அதைக் குறிப்பதுதான் பிரம்மம் என்னும் இந்துக் கருத்தாக்கம். பிரம்மம் என்றால், விரிவடைந்து கொண்டே இருப்பது எதுவோ அது.

**பிரம்மம்** என்ற சொல்லுக்கே விரிவடைந்துகொண்டே இருப்பது என்பதுதான் நேர்பொருள். விரிவே **பிரம்மம்**. ஆங்கிலத்தில் இதைக் குறிக்கும் சொல் இல்லை. **பிரம்மத்தை** நீங்கள் கடவுள் என முடியாது. ஏனெனில் கடவுள் மிகவும் வரம்புடையது. அது ஒரு கருத்து. **பிரம்மம்** என்பது கடவுள் அல்ல. அதனால்தான் இந்தியாவில் எங்களிடம் ஒரே கடவுள் என்ற கருத்து இல்லை. பல கடவுள் என்ற கருத்தே உள்ளது. கடவுளர் பலர். **பிரம்மம்** ஒன்றே. மேலும் **பிரம்மம்** என்பதன் மூலம்... அந்த சொல்லே பரந்து விரிந்த தன்மையைத்தான் குறிக்கிறது. அதன் அடிமுடியைக் காண உங்களால் முடியாது.

வானத்தின்கீழ் - திறந்த வானத்தின்கீழ் - என்று நான் சொல்லும்போது அதற்கு பொருள் இதுதான்: அதைச் சுற்றிலும் சுவர்கள் இல்லை, கோட்பாடுகள் இல்லை, புலன்கள் இல்லை, எண்ணங்கள் இல்லை, மனம் இல்லை; யந்திரஅமைப்புக்கு முற்றிலும் வெளியே இருக்கிறீர்கள் நீங்கள். முதல் தடவையாக அம்மணமாக இருக்கிறீர்கள். மெய் உலகை நேருக்கு நேர் சந்திக்கிறீர்கள். பின் அதன் முழு காட்சியும்... ஒருபொருள் அதன் முழு காட்சியில் அனுபவமாகிறது. ஆயின் ஒரு பொருளை அதன் முழு காட்சியில் அறிவது என்பதன் பொருள், அந்த பொருள் அப்படியே மறைந்துவிடுகிறது - பரந்த தன்மையாக ஆகி விடுகிறது என்பதே ஆகும். ஆற்றலின் ஒருமுகப்படுத்தலாக அது இருக்கலாம்.

இது எதைப் போன்றதென்றால் ஒரு கிணற்றுக்குப் போய் பாருங்கள். கிணற்றில் குறிப்பிட்ட அளவு நீர் இருக்கிறது. அந்த நீரை நீங்கள் இறைத்துவிட்டால் மறைந்துள்ள ஊற்றுகள் வாயிலாகமேலும் நீர் வழங்கப்படுகிறது. அந்த ஊற்றுகள் உங்களுக்கு தென்படுவதில்லை. நீரை நீங்கள் எடுத்துக்கொண்டே இருக்கிறீர்கள். தொடர்ச்சியாக புதுநீர் ஊறிக்கொண்டே இருக்கிறது.

கிணறு என்பது சமுத்திரத்திற்கு போடப்பட்டுள்ள ஒரு துளைதான். எல்லா புறங்களிலும் மறைவாக உள்ள பல ஊற்றுகள் நீரை வழங்கிக் கொண்டு இருக்கின்றன. கிணற்றுக்குள் நீங்கள் இறங்கினால் கிணறு என்று ஒன்றுமிருப்பதில்லை. உண்மையில் அந்த ஊற்றுகள்தான் கிணறு; நிசமான கிணறு. கிணறு என்பது ஒரு நீர்த்தேக்கம் அல்ல. ஏனெனில் ஒரு நீர்த்தேக்கத்தில் ஊற்றுகள் இருப்பதில்லை. தேக்கம் என்பது இறந்தது. கிணறு உயிருள்ளது. தேக்கம் ஒரு பொருள். கிணறு ஓர் உயிர். இப்போது ஊற்றுகளுடன் சேர்ந்துபோனால் ஊற்றுகளுக்குள் அதிக மதிக ஆழமாக போனால் இறுதியாக நீங்கள் சமுத்திரத்தை அடைவீர்கள். மேலும் எல்லா ஊற்றுகளின் வழியாகவும் நீங்கள் இயங்கினால், பின் எல்லா திசைகளில் இருந்தும் சமுத்திரமானது கிணற்றுக்குள் பாய்ந்து கொண்டு இருக்கிறது. எல்லாம் ஒன்றே.

முழு பார்வையுடன் ஒரு பொருளை நீங்கள் பார்த்தால் பொருள் அதன் எல்லா பக்கத்திலிருந்தும் முடிவற்றதுடன் இணைகிறது. அஃதில்லாமல் அது நிலவவே முடியாது. எந்த பொருளும் தனியாக நிலவுவதில்லை. தனித்தன்மை என்று ஒன்று இல்லை. தனித்தன்மை என்பது வெறும் பெயர்ப்புரை மட்டுமே; எங்கும் இருப்பதோ முழுமையே. பகுதியை முழுமையாக நீங்கள் ஆக்கினால் நீங்கள் தவறு செய்கிறீர்கள். அறியாமையின் நிலைபாடு அது - அந்நிலையில் பகுதியை, அது தான் முழுமை என்பதுபோல் ஆக்குகிறீர்கள் நீங்கள். பகுதியை நீங்கள் பார்க்கும்போது முழுமை அதில் தோன்றினால் அதுவே விழிப்படைந்த உணர்வின் நிலையாகும்.

**நிர்விசார சமாதி நிலையில் ஒரு பொருள் அதன் முழுக்காட்சியில் அனுபவமாகிறது. ஏனெனில் இந்த நிலையில் அறிவானது புலன்களின் துணையின்றி நேரடியாக அடையப்பெறுகிறது.**

எவ்வித ஊடகங்களும் பயன்படுத்தப்படுவதில்லை. அந்நிலையில் புதிய பல விசயங்கள் திடீரென சாத்தியமாக ஆகின்றன. இந்த புதிய விசயங்களே சித்திகள்; சக்திகள். புலன்களை நீங்கள் சாராதிருக்கும்போது, தொலை உணர்வு என்பது தானாக வாய்க்கிறது — புலன்களின் காரணமாகத்தான் தொலை உணர்வு இயல்வதில்லை. தொலை பார்வை இயல்வதில்லை. அற்புதங்கள் என்பவை வெகு சாதாரணமானவையாக ஆகின்றன. எந்த ஒருவரின் எண்ணத்தையும் அறிந்துகொள்ள உங்களால் முடிகிறது - அதை அவர் சொல்லத் தேவையில்லை; வெளிப்படுத்த தேவையில்லை. முழு பார்வையுடன், எல்லாமே வெளிப்பட்டதாகிறது. எல்லா திரைகளும் விலகுகின்றன. இனிமுதல் திரைகள் ஏதும் இருப்பதில்லை. மெய்யுலகு முழுமையும் உங்கள் முன் இருக்கிறது. வெறுமையிலிருந்து பொருள்கள் தோன்றுவது சாத்தியமாகிறது. எது நடக்கவேண்டும் என நீங்கள் நினைத்தாலும் உடனடியாக அது நடக்கிறது. செயல் தேவைப்படுவதில்லை. உடல் இருப்பதால்தான் செயல் தேவைப்பட்டது.

''செயலற்ற தன்மையில் சாது வாழ்கிறார், எல்லாம் தானே நிறைவேறுகிறது'' என்று லாவோ சு கூறும்போது அவர் கூறுவதன் பொருள் இதுதான். ஒரு சாது எதையும் செய்யாமலே அவரை சூழவும் கோடிக்கணக்கான செயல்கள் நடக்கின்றன. உங்களை அவர் பார்க்கிறார். உடனடியாக ஒரு நிலைமாற்றம் — திடீரென நீங்கள் உடம்பாக இருப்பதில்லை. உங்களை அவர் பார்க்கும்போது நீங்கள் உணர்வாக ஆகிவிடுகிறீர்கள்.

இந்த உணர்வு உங்களிடம் நிரந்தரமாக தங்கி இருக்க முடியாது என்பது உண்மைதான். ஏனெனில் அவரது பார்வை அகன்றதும் மறு படியும் நீங்கள் உடம்பாகவே இருக்கிறீர்கள். அவர் அருகில் இருப்பதன் மூலமே, அறிந்திராத ஒரு உலகின் குடிகளாக ஆகிறீர்கள். அவர் வழி யாக, முன் அறிந்திராததை கொஞ்சம் சுவை பார்க்கிறீர்கள். ஏனெனில் இப்போது அவரே பரந்த வெளியாகி இருக்கிறார். எதையும் அவர் செய்யாமலே பல விசயங்கள் நிகழ்கின்றன. ஆனால் இந்த விசயங்கள் எல்லாம் நடைமுறையாக ஆகும்போது... இந்த விசயங்கள் எல்லாம் நடைமுறையாக ஆகும் முன்பே சாதுவின் ஆசைகள் மறைந்துவிடு கின்றன. எனவே ஒரு சாதுவானவர் ஒருபோதும் எந்த அதிசயத்தையும் செய்வதில்லை. அதிசயங்களை செய்பவர்கள் சாதுக்களும் அல்லர். ஏனெனில் செய்பவர் அங்கே இருக்கிறார். அவர்களின் அதிசயங்கள் எல்லாம் அற்புதங்கள் ஆக முடியாது. அவை எல்லாம் சாதாரண மாயா சால வித்தைகள்தான். மக்களை அவர்கள் மடையர்களாக்கி ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

அற்புதம் நிகழ்கிறது; அதை செய்ய முடியாது. ஒரு ஞானியின் அருகில் அது நிகழ்கிறது. சுவிஸ் நாட்டில் செய்த கடிகாரங்களை அவர் தோற்றுவிப்பார் என்பதல்ல, சுவிஸ் கடிகாரங்களை வருவித்துக் காட்டும் சாது ஒரு மூடன். என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ? மேலும் உண்மையில் அதில் எந்த அற்புதமும் இல்லை. ஏனெனில் அறிவியல் ஆய்வுக்கு உட்பட்டு தன் அற்புதங்களை நடத்த எந்த சத்திய சாயி பாபாவும் தயாராக இல்லை. அது அவரால் முடியாது. ஏனெனில் சுவிஸ் கடிகாரங்களை கடையிலிருந்து விலைக்கு வாங்கவேண்டும். நீண்ட அங்கிக்குள்ளோ நீக்ரோ பாணி முடி அலங்காரத்துக்குள்ளோ அதை மறைத்து வைக்க வேண்டும்! அறிவியல் ஆய்வுக்கு உட்பட்டு எதையும் செய்துகாட்ட எந்த சத்திய சாயிபாபாவும் தயாராக இல்லை. இந்த ஆள்கள் நிசமாகவே உண்மையானவர்கள் என்றால் முதலில் அறிவியல் ஆய்வுக்குட்பட்டு அதை அவர்கள் செய்தாக வேண்டும். இவை சாதாரணமான சாலவித்தைகள்தான். ஒரு சாலக்காரன் அதை செய்யும்போது ''வெறும் தந்திரம்'' என்று நீங்கள் நினைக்கிறீர்கள். அதையே ஒரு பாபா செய்யும்போது திடீரென அது ஒரு 'அற்புதம்' ஆகிவிடுகிறது! அதே தந்திரம்தான அது.

**நிர்விசார சமாதி** அடையப்பட்டு உங்கள் உடம்பிலிருந்து நீங்கள் வெளியேறிய பிறகு மட்டுமே அற்புதங்கள் நிகழ்கின்றன. ஆனால் ஒருபோதும் அவை நிகழ்த்தப்படுவதில்லை. இதுதான் ஒரு அற்புதத்தின் அடிப்படைத் தன்மை. ஒருபோதும் அது நிகழ்த்தப்படுவதில்லை, அதுவாகவே நிகழ்கிறது. அது நிகழும்போது ஒருபோதும் அது சுவிஸ்

கடிகாரங்களை தோற்றுவிப்பதில்லை. நிர்விசார சமாதியை அடைந்து அதன்பின் சுவிஸ் கடிகாரங்களை தோற்றுவிப்பது என்பது விளங்கக் கூடியதாக இல்லை! உயிர்களை நிலைமாற்றுவது அது. மற்றவர்களும் உச்சத்தை அடைய உதவுகிறது அது.

ஒரு ஞானிமூலம் அதிக விழிப்பானவராக (வாட்ச்ஃபுல்) நீங்கள் ஆக முடியும். ஆனால் அவர் மூலம் ஒருபோதும் ஒரு சுவிஸ் வாட்ச்சை நீங்கள் அடைய முடியாது! விழிப்புத்தன்மை நிகழ்கிறது. உங்களை அதிக விழிப்பானவராக - உன்னிப்பானவராக ஆக்க அவ ரால் முடியும். அவர் உங்களுக்கு காலத்தை தருவதில்லை. காலமற்ற தையே அவர் உங்களுக்கு தருகிறார். ஆனால் இவை நிகழ்வன. யாரும் அதை செய்வதில்லை. ஏனெனில் செய்பவர் போய்விட்டார். அதன் பிறகு தான் நிர்விசார சமாதியே சாத்தியமாகிறது. செய்பவர் இருக்கும் போது நீங்கள் எப்படி சிந்திப்பதை நிறுத்தமுடியும்? செய்பவர் சிந்திப் பவருமாவார். உண்மையில் எதையும் நீங்கள் செய்வதற்கு முன் நீங்கள் சிந்திக்க வேண்டி உள்ளது. சிந்திப்பவரே முதலில் வருகிறார். செய்பவர் பின்தொடர்கிறார். சிந்திப்பவரும் செய்பவரும் போனபின் ஒரு சாட்சி யாயிருக்கும் தன்மை மட்டுமே - ஒரு விழிப்புணர்வு மட்டுமே எஞ்சி யிருக்கிறது; அந்நிலையில் பல விசயங்கள் தாமாக சாத்திய மாகின்றன, தாமாக நடைபெறுகின்றன.

புத்தர் இருக்கும்போது பல விசயங்கள் நிகழ்கின்றன. ஆனால் வெளிப்படையாக அவை தெரிவதில்லை. நடப்பது என்ன என்பதை ஒரு சிலர் மட்டுமே புரிந்துகொள்ள முடிந்தது. ஏனெனில் அவர்கள், முற்றிலும் அறியப்படாத ஒரு உலகை சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். அதை தெரியப்படுத்த உங்களிடம் எந்த வழியும் இல்லை. அதற்கு எந்த கருத்தாக்கமும் இல்லை. உங்களுக்கு அது நிகழ்ந்தால் ஒழிய உங்களால் அதை பார்க்கமுடியாது.

> **...இந்த நிலையில் அறிவானது புலன்களின் துணை யின்றி நேரடியாக அடையப் பெறுகிறது.**

மனம் போய்விட்டது. மனத்துடன் அதன் தூதுவர்கள் அனைத்தும் – மூடர்கள் அனைத்தும் போய்விட்டன. அவை செயல்படுவதில்லை. உங்களை அவை திசைதிருப்புவது இல்லை. உங்கள் காட்சியை அவை குலைப்பது இல்லை. எந்த விதமான தடைகளையும் அவை உருவாக்குவது இல்லை. தங்களை அவை முன்னுக்கு துருத்துவதில்லை. எவ்வித பொருள் விளக்கமும் தருவதில்லை. அந்த மொத்த செயல்பாடும் இப்போது இருப்பதில்லை. மெய்உலகின் முன்னிலையில் உணர்வு மட்டுமே இருக்கிறது. இது நிகழும்போது உணர்வு உணர்வை எதிர்கொள்கிறது; ஏனெனில் அப்போது அங்கு சடப்பொருள் இருப்பதில்லை.

என் பார்வையில் தட்டுப்பட்ட மிக அழகான உருவகம், ஒரு கண்ணாடி இன்னொரு கண்ணாடியை பார்த்திருப்பதாகும். ஒரு ஆடியை இன்னொரு ஆடி எதிர்கொள்ளும்போது என்ன நிகழும்? ஒரு ஆடி மற்றொரு ஆடியை பிரதிபலிக்கிறது. மற்ற ஆடி இந்த ஆடியை பிரதி பலிக்கிறது. ஆடியில் எதுவும் இருப்பதில்லை. எதிரொளிப்பு மட்டுமே ஒவ்வொன்றுக்குள்ளும் பல கோடி தடவைகள் எதிரொளிக்கிறது. உலகம் முழுவதுமே கோடிக்கணக்கான ஆடிகளாக ஆகிறது - அதில் ஒரு ஆடியாகவே நீங்களும் இருக்கிறீர்கள். எல்லா ஆடிகளும் வெறுமையாக இருக்கின்றன. ஏனெனில் எதிரொளிப்பதற்கு அங்கு எதுவும் இருப்பதி ல்லை. ஆடியின் சட்டம் கூட இல்லை. ஆடிமட்டும் இருக்கிறது. இரண்டு ஆடிகள் ஒன்றை ஒன்று பார்த்தபடி உள்ளன. அதுவே மிகவும் அருள் நிறைந்த.கணம், மிகவும் ஆனந்த மயமான கணம். அருள் இறங்குகிறது. மலர்கள் பொழிகின்றன; மேலுமொருவர் அடைந்துவிட்டார், மேலு மொரு பயணி வீடு சேர்ந்துவிட்டார் என்று கொண்டாடுகிறது முழுமை.

நிர்விசார சமாதியில் பெறப்படும் காட்சியானது விரிவிலும் செறிவிலும், இயல்பான காட்சிகள் அனைத்தையும் விஞ்சி நிற்கிறது.

'விரிவு', 'செறிவு' – இந்த இரண்டு சொற்களும் மிகுந்த பொரு ளுடையவை. புலன்கள், மூளை, மனம் ஆகியவற்றின் வாயிலாக உலகை நீங்கள் பார்க்கும்போது உலகம் மிகவும் மங்கலாக தோன்று கிறது. அதில் எந்த ஒளியும் இருப்பதில்லை. விரைவிலேயே அது அலுப்பூட்டுவதாக ஆகிறது. ஒருவர் சலித்துப் போகிறார்; அதே மரங்கள், அதே மனிதர்கள், அதே நடைமுறைகள் – எல்லாமே வெறும் செக்கு மாட்டுத்தனமாக இருக்கிறது. உண்மையிலோ அது அப்படி இல்லை.

சில நேரங்களில் எல்எஸ்டி.யிலோ கஞ்சாவிலோ அல்லது அபினியிலோ திடீரென மரம் அதிக பசுமையாக ஆகிறது. மரம் அவ்வ ளவு பசுமையாக இருப்பதை அல்லது ரோசா அவ்வளவு ரோசாக இருப்பதை அதற்கு முன் நீங்கள் பார்த்ததே இல்லை.

ஆல்டஸ் அக்ஸ்லி முதல் தடவையாக எல்எஸ்டி.யை எடுத்த போது ஒரு நாற்காலிமுன் அவர் உட்கார்ந்திருந்தார். திடீரென நாற் காலி மிகவும் அழகிய பொருள்களில் ஒன்றாக ஆனது. இத்தனைக்கும் அந்த நாற்காலி அவர் அறையில் பல ஆண்டுகளாக இருந்து வந்தது தான். ஆனால் அதை அவர் ஒருபோதும் கவனித்ததில்லை. அது ஒரு பளிங்குப்படிகம் போல் தோன்றியது. பல வண்ணங்கள் - பல வண்ணச் சாயல்கள் அதிலிருந்து வெளிவந்து கொண்டிருந்தன. ஒரு வைரம்போல் அது ஒளிவீசியது. நாற்காலி அந்த பழைய நாற்காலியாக இல்லை. அந்த நாற்காலி அக்ஸ்லியை கவர்ந்து இழுத்தது. ஒரு போதைப்பொருளை

ஒருவர் உட்கொண்டதும் இந்த அளவு நிகழும் என்பதை அவரால் நம்ப முடியவில்லை.

முட்டாள்களை தூக்கத்தில் இருந்து எழுப்பிவிடும் ஒரு முயற்சியாக போதைப்பொருள் இருக்கிறது. அதைக்கொண்டு அவற்றுக்கு நீங்கள் அதிர்ச்சி ஊட்டுகிறீர்கள். அதனால் அவையும் தம் கண்களை லேசாக திறந்து பார்க்கின்றன... ''ஆம்!'' அதற்கே உலகம் மிக அழகாக ஆகிறது; நம்ப முடியாத அளவுக்கு அழகாக ஆகிறது. பிறகு அதில் நீங்கள் சிக்கிக்கொள்கிறீர்கள். ஏனெனில் போதைப்பொருளால்தான் உலகம் அவ்வளவு அழகாக உள்ளது என நினைக்கிறீர்கள். இப்போது போதை தீர்ந்து நீங்கள் திரும்பி வந்ததும் உலகம் முன்னைவிட அதிக அசிங்கமானதாக - முன் எப்போதையும் விட அதிக சோர்வளிப்பதாக தெரியும். ஏனெனில் இப்போது உங்கள் மனதில் ஒரு ஒப்பீடு இருக்கிறது. கொஞ்ச நேரத்துக்கு அது ஒரு அழகான அனுபவமாக இருக்கிறது; சொர்க்கமாகவே ஆகியிருக்கிறது. ஆனானப்பட்ட ஆல்டஸ் அக்ஸ்லியே குழம்பிப்போனார்: பதஞ்சலி சொல்லிக்கொண்டிருப்பதும், கபீரும் புத்தரும் உலகின் ஞானியர் அனைவரும் அடைந்து கொண்டதும் ஆன சமாதியே அது. இதுதான் சமாதி என எண்ணத் தொடங்கிவிட்டார்.

போலியாக சமாதி உணர்வை போதை மருந்துகள் தரமுடியும். ஆனால் அப்போதும் நீங்கள் சிறையிலேயே இருக்கிறீர்கள். மருந்தின் உலுக்குதலால் மட்டுமே உங்கள் யந்திரம் உசாராக இயங்குகிறது. ஆனால் இந்த கவனத்தன்மை நீண்ட நேரத்துக்கு நிலைப்பதில்லை. அதிகமதிக மாய் அதை நீங்கள் பயன்படுத்த பயன்படுத்த போதைப்பொருளின் அளவை கூட்டிக்கொண்டே போகவேண்டி இருக்கிறது. ஏனெனில் பழைய அளவைக் கொண்டே முட்டாள்களை மறுபடியும் உலுக்கி எழுப்ப முடிவதில்லை. அதற்கு அவை பழகிப்போய் விட்டன. அதன் பின் மென்மேலும் கூடுதலான அளவுகள் தேவையாகின்றன. இந்த முறையில் மட்டுமே போதைப்பொருள்கள் வேலை செய்கின்றன.

ஒருமுறை முல்லா நசருதீன் ஒரு கோவேறு கழுதையை விலைக்கு வாங்கினார். அது நகரவில்லை. செய்யக்கூடியதை எல்லாம் அவர் செய்து பார்த்தார்... மேலும் அதை அவரிடம் விற்றவன், அந்த கழுதையை அடிக்கக் கூடாதென்றும் ஏனெனில் அது மிகுந்த சுரணை உள்ளது என்றும் அவரிடம் சொல்லி இருக்கிறான். எனவே அவர் மன்றாடிப் பார்த்தார். அதுவோ அதை பின்தொடர்ந்து சென்று தன்னால் முடிவதைஎல்லாம் செய்தார். அதுவோ நகரவில்லை. அவர் சொன்ன படி கேட்கவில்லை. எனவே அதை விற்றவனை அழைத்தார் அவர். ''நீ எனக்கு தந்த கழுதை என்ன கழுதை கருமம்?'' என்று அவனிடம் சொன்னார். அவன் ஒரு பிரம்புடன் வந்து கழுதையின் மண்டைமேல்

ஓங்கி சாத்தினான். ''இது ரொம்ப அதிகம். தவிர அதை அடிக்கக்கூடாது என்று நீதானே என்னிடம் சொன்னாய்?'' என்றார் நசுருதீன். அந்த மனிதன் சொன்னான், ''அதை நான் அடிக்கவில்லை, அதன் கவனத்தை ஈர்க்க மட்டுமே...'' உடனே கோவேறு கழுதை நகரத் தொடங்கியது.

முட்டாள்களை எல்எஸ்டி தடிகொண்டு தாக்குவதுபோல் தாக்கு கிறது. இதனால் சில நிமிடங்களுக்கு நீங்கள் சொல்வதை அவை கேட்கின்றன. அவற்றுக்கு நீங்கள் அதிர்ச்சி அளித்திருக்கிறீர்கள். அகிலம் முழுவதும் அழகானதாக ஆகிறது. ஆனால் இது ஒன்றுமில்லை. சுத்தமாக ஒன்று மில்லை. ஒரேஒரு நிமிடமேனும் நிர்விசாரத்தை நீங்கள் அடைய முடிந்தால் அப்போது இதை உங்களால் புரிந்துகொள்ள முடியும். எப்பேர்ப்பட்ட எல்எஸ்டி.யும் உங்களுக்கு தரமுடிகிற கணநேரக் காட்சியினும் கோடிக்கணக்கான தடவைகள் அதிக அழகானதாக உலகம் மாறுகிறது. மேலும் இது கழுதைகளின் மண்டைகளில் நீங்கள் சாத்துவ தால் அல்ல; கழுதைகளுக்குள்ளேயே இப்போது நீங்கள் இருப்ப தில்லை – அவ்வளவுதான். நீங்கள் வெளியேறிவிட்டீர்கள். முட்டாள் களை நீங்கள் விட்டுவிட்டீர்கள். உங்கள் முழு நிர்வாணத்துடன் மெய் உலகை நீங்கள் எதிர்கொள்கிறீர்கள்.

எண்ணங்கள் இல்லாத நிலையில் நீங்கள் நிர்வாணமாக இருக்கிறீர்கள். எண்ணங்கள் இல்லாத நிலையில் நீங்கள் யார் - இந்துவா? முசுலீமா? கிறிஸ்தவரா? கம்யூனிஸ்டா? எண்ணங்கள் இல்லாத நிலையில் நீங்கள் யார் - ஆணா? பெண்ணா? எண்ணங்கள் இல்லாத நிலையில் நீங்கள் யார் – ஆத்திகரா? நாத்திகரா? எண்ணங்கள் இல்லாத நிலையில் நீங்கள் யாருமில்லை. எல்லா ஆடைகளும் கழண்டுவிட்டன. ஒரு அம்மணமாய் - தூய்மையாய் - வெறுமையாய் மட்டுமே நீங்கள் இருக்கிறீர்கள். அந்நிலையில் பார்வை / காட்சி தெளிவாக இருக்கிறது. அந்த தெளிவுடன், விரிவும் செறிவும் வருகிறது. இப்போது இருத்தலின் பரந்த விரிவையும் நீங்கள் பார்க்க முடிகிறது. இப்போது உங்கள் பார்வைக்கு தடையேதும் இல்லை. உங்கள் கண்கள் எல்லை அற்றனவாகி இருக்கின்றன.

அடுத்தது செறிவு: எந்த ஒரு நிகழ்ச்சிக்குள்ளும் மனிதருக்குள்ளும் ஊடுருவிப் பார்க்க உங்களால் முடிகிறது. ஏனெனில் இனி பொருள்கள் இருப்பதில்லை. மலர்கள்கூட இப்போது மனிதர்கள்தான். மரங்கள் இப்போது நண்பர்கள். கற்பாறைகள் எல்லாம் உறங்கிக் கொண்டிருக்கும் ஆன்மாக்களே. இந்நிலையில் செறிவு - ஆழ்ந்த தன்மை நிகழ்கிறது: முழுமையாக ஊடுருவிப் பார்க்க உங்களால் முடிகிறது. ஒரு மலரை முழுமையாக ஊடுருவிப் பார்க்க உங்களால் முடியும்போது, ஞானி களும் கவிஞர்களும் சொல்லியிருப்பதை புரிந்துகொள்ளவும் உங்களால் முடியும்.

''ஒரு பூவை - சிறு பூவை அதன் முழுமையில் நான் அறிந்துகொள்ள முடியும்போது, அனைத்தையும் நான் அறிந்து கொண்டிருப்பேன்'' என்கிறார் டெனிசன். சரியானது - முற்றிலும் சரியானது! பகுதிகளை உங்களால் புரிந்துகொள்ள முடிந்தால் முழுமையையும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஏனெனில் 'பகுதிதான் முழுமை. மேலும் பகுதியை புரிந்துகொள்ள நீங்கள் முயலும்போது மெல்ல மெல்ல உங்களுக்குத் தெரியாமலே முழுமையை நோக்கி நீங்கள் சென்றிருப்பீர்கள். ஏனெனில் பகுதியானது முழுமையின் 'பகுதிதான்.

ஒருமுறை ஒரு மாபெரும் ஞானியாகிய ஏக்கார்ட்டிடம் ''ஏன் உங்கள் வாழ்க்கை வரலாற்றை நீங்கள் எழுதக்கூடாது? உங்கள் சுயசரிதமானது மக்களுக்கு மிகமிக உதவியாக இருக்குமே'' என்றார்கள். அதற்கு அவர், ''இது கடினமானது, நடக்க முடியாதது. ஏனென்றால் என் வாழ்க்கை வரலாற்றை நான் எழுதினால் அது முழுமையின் சுயசரிதையாக இருக்கும். ஏனென்றால் எல்லாமே ஒன்றுடன் ஒன்று தொடர்புடையது. ஆனால் அதுவோ சக்திக்கு மீறியதாக இருக்கும். ஏனெனில் முழுமையின் சுயசரிதத்தை எப்படி ஒருவர் எழுத முடியும்?'' என்றார்.

எனவேதான், அறிந்திருக்கிறவர்கள் எப்போதும் தயங்கியிருக்கிறார்கள். ஒருபோதும் அவர்கள் சுயசரிதைகளை எழுதவில்லை இந்த பரமஹம்ச யோகானந்தர் என்ற மனிதரைத் தவிர. இவர் **'அன் ஆட்டோ பயாகிரபி ஆவ் ய யோகி'** (= ஒரு யோகியின் சுயசரிதம்) என்ற நூலை எழுதியிருக்கிறார். அவர் ஒரு யோகியே அல்ல. யோகியாயிருந்தால் அவரால் ஒரு சுயசரிதத்தை எழுத முடியாது – இயலாத செயல் அது; அறவே இயலாத செயலாகும். ஏனென்றால் நிர்விசார சமாதியை ஒருவர் அடைந்துவிட்டால் அப்போது அவர் ஒரு யோகி. அந்நிலையில் முழு விரிவு... இப்போது அவர் எல்லாமாக ஆகி இருக்கிறார். உங்கள் சுயசரிதத்தை எழுத உண்மையாகவே நீங்கள் விரும்பினால் நீங்கள் முழுமையின் சுயசரிதையை தொடக்கத்திலிருந்து முடிவுவரை எழுத வேண்டியதாக இருக்கும் – ஆனால் அதற்கு தொடக்கமும் இல்லை, முடிவும் இல்லை.

நான் விழிப்பானவனாக ஆனால் என்னில் முழுமை நிறைவு பெறுகிறது. அப்போது என் பிறப்பிலிருந்து ஆரம்பிக்கமாட்டேன், ஆதியில் இருந்தே ஆரம்பிக்கிறேன், ஆனால் ஆதி என்பது இல்லை. அப்படியே அந்தம் வரை போவேன், ஆனால் அந்தம் என்பது இல்லை. முழுமையுடன் ஆழமாக நான் சம்பந்தப்பட்டிருக்கிறேன். நான் இங்கிருக்கும் இந்த சில ஆண்டுகளே முழுமை அல்ல. நான் பிறக்கும் முன்பே நான் இருக்கிறேன். நான் இறந்த பிறகும் நான் இருப்பேன். எனவே எப்படி எழுதுவது? அது ஒரு பகுதியாக ஒரு பக்கமாக மட்டுமே

இருக்கும்; ஒரு சுயசரிதமாக இராது. ஒரு பக்கம் என்பது முற்றிலும் அபத்தமாகவும் சூழ்நிலைப் பொருத்தம் அற்றதாகவுமே இருக்கும். ஏனெனில் மற்ற பக்கங்கள் விடுபட்டிருக்கின்றன.

நண்பர்கள் சிலர் என்னிடம் வந்து, ''ஏன் உங்களைப்பற்றி நீங்கள் ஏதாவது எழுதக்கூடாது? நீங்கள் எழுத வேண்டும்'' என்கிறார்கள். ஏக்கார்ட் ஆசானுக்கிருந்த சிக்கலை நான் அறிவேன். அதற்கு வாய்ப் பில்லை. ஏனெனில் எங்கிருந்து தொடங்குவது? ஒவ்வொரு தொடக்க மும் தன்னிச்சையாகவும் தவறாகவுமே இருக்கும். எங்குபோய் முடிப்பது? ஒவ்வொரு முடிவும் தன்னிச்சையாகவும் தவறாகவுமே இருக்கும். இரண்டு தவறுகளுக்கு இடையில் – தவறான தொடக்கத் துக்கும் தவறான முடிவுக்கும் இடையில் – நிசமானதை எவ்வாறு வெளிப்படுத்த முடியும்? வாய்ப்பில்லை. இயலாத ஒன்றை யோகா னந்தர் செய்திருக்கிறார். ஒரு அரசியல்வாதி செய்யக்கூடியதையே அவர் செய்திருக்கிறார்; ஒரு யோகி செய்யக்கூடியதை அல்ல.

செறிவு எவ்வளவு மிகுதியாகிறது என்றால் ஒரு கூழாங்கல்லை நீங்கள் பார்த்தால், அதன் வழியாக சாலைகள் முழுமைக்குள் இட்டுச் செல்கின்றன. கூழாங்கல் வழியாகவே மிக உயர்ந்த மறைவான புதிர்களுக்குள்ளும் நீங்கள் புகமுடியும். எல்லா இடத்திலும் வாசல் உள்ளது. நீங்கள் தட்டினால் எந்த இடத்திலிருந்தும் நீங்கள் ஏற்றுக் கொள்ளப்படுகிறீர்கள்; வரவேற்கப்படுகிறீர்கள். எங்கெங்கிருந்து நீங்கள் நுழைந்தாலும் எல்லையற்றதற்குள்ளேயே நீங்கள் நுழைகிறீர்கள். ஏனெனில் எல்லா வாசல்களும் முழுமையின் வாசல்கள்தான். தனியாள் களே கூட வாசல்களாக இருக்கலாம். ஒருவரை காதலித்தால் - அன்பு செய்தால் - எல்லையற்றதற்குள் நீங்கள் நுழைகிறீர்கள். ஒரு பூவை பாருங்கள் - ஒரு கோயில் திறக்கிறது. மணலில் படுக்கிறீர்கள். மணலின் ஒவ்வொரு துகளும் முழுமையைப் போலவே பரந்து விரிந்ததாக இருக்கிறது. சமயத்தின் உயர்நிலை கணிதம் இதுதான்.

பகுதி ஒருபோதும் முழுமையாக முடியாது என்று சாதாரண கணிதம் கூறுகிறது. பல்கலைக்கழகங்களில் தொடங்கும் சாதாரண கணிதத்தின் அடிப்படைக் கூற்றுகளில் ஒன்று இது: பகுதி ஒருபோதும் முழுமையாக முடியாது; பகுதி எப்போதும் முழுமையைவிட சிறியது; பகுதி ஒருபோதும் முழுமையைவிடவும் பெரிதாக இருக்க முடியாது. இவை சாதாரண கணிதத்தின் எளிய உண்மைகள். இவை சரிதான் என் பதை எல்லாரும் ஏற்றுக்கொள்வார்கள்.

ஆனால் உயர்நிலைக் கணிதம் ஒன்று இருக்கிறது. புலன்களை விட்டுவெளியே நீங்கள் வந்துவிட்டால், உயர்நிலை கணிதத்தின்

உலகுக்குள் வந்துவிட்டால், இங்கும் அடிப்படைக் கூற்றுகள் உள்ளன: பகுதி எப்போதும் முழுமைக்கு சமம்; பகுதி ஒருபோதும், ஒரு போதும் முழுமையைவிட சிறியதாக இருக்க முடியாது; மேலும் அபத்தங்களில் எல்லாம் மீறிய அபத்தமாக, சில வேளைகளில் பகுதி யானது முழுமையைவிடவும் பெரியதாக இருக்கிறது.

இப்போது இதை என்னால் உங்களுக்கு விளக்கி கூறமுடியாது; எவராலும் முடியாது. ஆனால் இவைதாம் அடிப்படைக் கூற்றுகள். உங்கள் சிறையிலிருந்து நீங்கள் விடுபட்டதுமே, நிலைமைகள் இப்படித்தான் இருக்கின்றன என்பதை நீங்களே காண்பீர்கள். கூழாங்கல் என்பது பகுதி; மிகச்சிறு பகுதி. ஆனால் எண்ணமற்ற மனதுடன் - தூய உணர்வுடன் - நேரடியாக அதை நீங்கள் பார்த்தால் அந்த சிறு கல்லே முழுமையாக இருக்கிறது. ஏனெனில் நிலவுவது ஒன்றே ஒன்றுதான். ஏனென்றால் பகுதி எதுவும் உண்மையில் ஒரு பகுதி அல்ல, தனித்தது அல்ல. பகுதி முழுமையை சார்ந்துள்ளது; முழுமை பகுதியை சார்ந்துள்ளது. சூரியன் உதிக்கும்போது பூக்கள் திறக்கின்றன என்பது மட்டுமல்ல, மறுபுறமிருந்து கூறுவதும் உண்மையே - பூக்கள் திறக்கும்போது சூரியன் உதிக்கிறான். பூக்கள் இல்லாவிட்டால் சூரியன் யாருக்காக உதிப்பான்? சூரியன் எழுந்ததும் பறவைகள் பாடுகின்றன என்பது மட்டுமல்ல, மறுபுறமிருந்து கூறுவதும் உண்மையே - அதாவது பறவைகள் பாடியதும் சூரியன் எழுகிறான். இல்லாவிட்டால் யாருக்காக...? ஒவ்வொன்றும் இருசார் உறவுடையதாக இருக்கிறது. ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றுடனும் தொடர்புடையதாக உள்ளது. ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றுடனும் பின்னிப் பிணைந்துள்ளது. ஒரே ஒரு இலை மறைந்தாலும் அதனால் ஒன்றை முழுமை இழக்கிறது; முழுமை அதன்பின் முழுமையாக இருக்காது.

தன் ஒரு செபத்தில் ஏக்கார்ட் ஆசான் கூறியிருக்கிறார்... கிறித்தவம் உருவாக்கியுள்ள மிக அரிதான மனிதர்களில் ஒருவர் இவர். உண்மையில் கிறித்தவர்களின் உலகில் அவர் ஒரு அந்நியர் போலவே தெரிகிறார். அவர் ஒரு ஸென் ஆசானாக ஜப்பானில் பிறந்திருக்க வேண்டியவர். அவரது புரிதல் மிக ஆழமானது, மிக தெளிவானது; கோட்பாடுகளைக் கடந்தது.

தன் பிரார்த்தனைகளில் ஒன்றில் அவர் கூறுகிறார், ''ஆம் கடவுளே, நான் உம்மையே சார்ந்திருக்கிறேன். ஆனால் நீரும் என்னை சார்ந்திருக்கிறீர். நான் இங்கு இல்லாவிட்டால் உம்மை யார் வழிபடுவார்? உம்மை யார் வேண்டுவார்? என்னை நீர் இழந்தே இருப்பீர்.'' அவர் கூறுவது சரிதான்: இது எவ்வித ஆணவத்தினாலும் அல்ல; ஒரு எளிய உண்மைதான் இது. அந்த நேரத்தில் கடவுளும் அதற்கு ஆம் என்று

தலையாட்டி இருக்கவே வேண்டும் என்பதை நான் அறிவேன். ''நீ சொல்வது சரிதான், ஏக்கார்ட். ஏனெனில் நீ அங்கு இல்லாவிட்டால் நான் இங்கு இருந்திருக்க மாட்டேன்.''

வழிபடுபவரும் வழிபடப்படுவதும் சேர்ந்தே நிலவுகிறார்கள். காதலரும் காதலியும் சேர்ந்தே நிலவுகிறார்கள். ஒருவர் இல்லாவிட்டால் மற்றவர் இருக்க முடியாது. ஆயின் இதுதான் இருத்தலின் ரகசியம்: எல்லாம் ஒருசேர நிலவுகிறது. இந்த ஒன்று சேர்ந்த தன்மைதான் கடவுள். கடவுள் என்று ஒரு ஆள் இல்லை. எல்லாமே ஒன்று சேர்ந்திருக்கும் இந்த தன்மைதான் கடவுள்.

நிர்விசார சமாதியில் பெறப்படும் காட்சியானது விரிவிலும் செறிவிலும், இயல்பான காட்சிகள் அனைத்தையும் விஞ்சி நிற்கிறது.

ஒவ்வொரு புறமிருந்தும் விரிவான தன்மை திறக்கிறது. ஒவ்வொரு புறமிருந்தும் ஆழம்... பூ ஒன்றுக்குள் பாருங்கள்; முடிவற்ற ஆழம் அங்கே இருக்கிறது. ஒரு பூவுக்குள் விழுந்து நீங்கள் மறைந்துபோக முடியும். இது நடந்திருக்கிறது. இது அபத்தமாக தோன்றும்; ஆனால் உண்மை. இதை நம்புவதும் நம்பாததும் உங்களைப்பொறுத்தது.

சீனாவில் ஒரு பேரரசன் ஒரு மாபெரும் ஓவியரிடம், அரண்மனைக்கு வந்து அங்கு ஒரு ஓவியம் வரையுமாறு கேட்டுக்கொண்டான். ஓவியரும் வந்து இமயமலையின் ஒரு காட்சியை மிகவும் அழகாக தீட்டினார். அதற்கு பல ஆண்டுகள் அவர் எடுத்துக்கொண்டார். அது முற்றுப் பெறும் வரை அதைப் பார்க்க யாரையும் அவர் அனுமதிக்கவில்லை. பின் ஒருநாள் பேரரசனிடம், ''இப்போது அது முற்றுப் பெற்றுவிட்டது, நீங்கள் வரலாம்'' என்றார் அவர்.

பேரரசன் தன் அமைச்சர்களுடனும் படைத்தலைவர்களுடனும் அரசவை பரிவாரத்துடனும் வந்தான். அவர்கள் வியப்பினால் அப்படியே சிலையாகி விட்டார்கள். அதுபோன்ற ஒன்றை அதற்குமுன் அவர்கள் கண்டதே இல்லை — அவ்வளவு யதார்த்தமாக இருந்தது. சிகரங்கள் நிசமான சிகரங்கள்போலவே இருந்தன. சிகரங்களை சுற்றிக்கொண்டு ஒரு பாதை சென்று ஓரிடத்தில் மறைந்துவிட்டிருந்தது. ''இந்த பாதை எங்கு போகிறது?'' என்று கேட்டான் பேரரசன். ''இதில் நான் போய் பார்த்ததில்லை, எனவே எனக்கு அது எப்படி தெரியும்?'' என்றார் ஓவியர். ஆனால் அரசன் வற்புறுத்தினான்; பயணம் செய்வது என்ற பிரச்சனையே இதில் இல்லை என்றான். ''நீர்தானே இதை வரைந்தீர்?'' என்றான். ''அப்படியானால் பொறுங்கள், அந்த பாதையில் நான் போய் பார்த்து வருகிறேன்'' என்றார் ஓவியர். அந்த படத்துக்குள் அவர் போய் மறைந்து விட்டாராம். அது எங்கே போகிறது என்ற விவரத்தை தெரிவிக்க அவர் திரும்பி வரவே இல்லையாம்.

இப்படி நிகழ முடியாது என்பதை நான் அறிவேன் - ஆனால் நிர்விசாரத்தில் இது நிகழ்கிறது. ஒரு மலரில் இருக்கிறது பாதாளம். உங்கள் செறிவின் காரணமாக, நீங்கள் பூவுக்குள் பார்த்தால் அங்கே ஆழம் இருக்கிறது. நீங்களும் ஒரு பூவுக்குள் ஒரேயடியாக விழுந்து என்றென்றைக்குமாக மறைந்து போக முடியும். ஒரு அழகிய முகத்தை நிர்விசாரமாக நீங்கள் பார்த்தால் அந்த அழகில் பாதாளம் இருக்கிறது. என்றென்றைக்கும் என்றென்றைக்குமாக நீங்கள் அதில் தொடர்ந்து வீழ முடியும். அதற்குள் நீங்கள் போக முடியும். ஒவ்வொன்றும் ஒரு வாயிலாக ஆகிறது. ஒவ்வொன்றும்! உங்கள் பார்வையின் செறிவால் அனைத்து வாயில்களும் உங்களுக்குத் திறக்கின்றன.

**மற்ற அனைத்துக் கட்டுகளையும் கட்டுப்படுத்தும் இது கடக்கப்பட்டதும் விதையற்ற சமாதி அடையப் பெறுகிறது; அதனுடன், வாழ்வில் இருந்தும் சாவில் இருந்தும் விடுதலை பெறப்படுகிறது**

இங்குதான் எல்லா பாதைகளும் முடிகின்றன; எல்லா புத்தர்களும் சந்திக்கிறார்கள். தந்திரமும் யோகமும், ஸென்னும் ஹசீதும், சூபியும் பாலும் - எல்லா பாதைகளும் கூடுகின்றன. பாதைகள் வெவ்வேறாக லாம் - வெவ்வேறுதான். ஆனால் இப்போது இது வருகிறது - சிகரம் வருகிறது. பாதைகள் இங்கே மறைகின்றன. **மற்ற அனைத்து கட்டு களையும் கட்டுப்படுத்தும் இது கடக்கப்பட்டதும்...** ஏனெனில் இன்னும் இது ஒரு கட்டுண்ட நிலையாகவே இருக்கிறது என்கிறார் பதஞ்சலி. எண்ணங்கள் மறைந்துள்ளன; இப்போது உங்களால் இயல்உலகை காண முடிகிறது. ஆயினும் இன்னமும் காண்பவரும் காட்சியும், பொருளும் அகமும்... உடல் இருந்தபோது அறிவு மறை முகமாகவே இருந்தது. இப்போதோ நேரடியாக இருக்கிறது. இருந்தா லும் இன்னமும் அறிபவர் அறியப்படுவதில் இருந்து வேறாகவே இருக்கிறார். கடைசித் தடங்கல் - கடைசி பிரிவினை இருக்கிறது. இதுவும் கைவிடப்பட்டதும், இந்த கட்டும் கடக்கப்பட்டதும், ஓவியத்தில் ஓவியர் மறைந்ததும், காதலில் காதலர் மறைந்ததும், பொருளும் அகமும் மறைகின்றன. அதன்பின் அறிபவருமில்லை, அறியப்படுவதும் இல்லை.

**மற்ற அனைத்து கட்டுகளையும் கட்டுப்படுத்தும் இது கடக்கப்பட்டதும்...**

இதுதான் கடைசி கட்டு. நிர்விசார சமாதி — இதில் எண்ணங்கள் நின்றுள்ளன. இதுவே கடைசி கட்டு. இன்னும் நீங்கள் இருக்கிறீர்கள்: ஆணவமாக இல்லை, மாறாக ஆன்மாவாக இருக்கிறீர்கள். அறியப் படுவதி லிருந்து இன்னும் நீங்கள் தனியாக பிரிந்தே இருக்கிறீர்கள். கண்ணாடி போன்ற ஒளிபுகக் கூடிய ஒரு திரைதான் - ஆனாலும் அது இருக்

கிறது. அதை நீங்கள் தொற்றிக் கொண்டிருந்தால் திரும்பவும் நீங்கள் பிறப்பீர்கள். ஏனெனில் பிரிவினை கடக்கப்படவில்லை. இருமையற்ற நிலையை இன்னும் நீங்கள் அடையவில்லை. இருமையின் விதை இன்னமும் இருக்கிறது. அந்த விதை புதுப்பிறவிகளாக முளைவிடும். வாழ்வு-சாவுச் சக்கரம் தொடர்ந்து சுழன்று கொண்டே இருக்கும்.

**மற்ற அனைத்து கட்டுகளையும் கட்டுப்படுத்தும் இது கடக்கப்பட்டதும் விதையற்ற சமாதி அடையப் பெறுகிறது: அதனுடன், வாழ்வில் இருந்தும் சாவில் இருந்தும் விடுதலை பெறப்படுகிறது.**

அதன்பின் உங்களைப் பொறுத்தவரை சக்கரம் நின்று விடுகிறது. அதன்பின் காலம் இருப்பதில்லை, வெளி இருப்பதில்லை. வாழ்வு - சாவு இரண்டும் ஒரு கனவுபோல் மறைந்துவிட்டன. இந்த கடைசி கட்டை அறுப்பது எவ்வாறு? - அது தான் மிகவும் கடினமானது. நிர்விசாரத்தை அடைவதே மிகவும் கடினம்தான். ஆனால் இந்த கடைசி கட்டை கைவிடுவதற்கு ஈடானது எதுவுமில்லை. ஏனெனில் மிகவும் நுண்மை யானது அது. அதை எப்படி கைவிடுவது? இந்த கட்டத்தில் 'எப்படி' என்பதற்கே இடமில்லை. ஒருவர் வெறுமனே வாழவும், விழிப்பாக இருக்கவும், இன்பம் காணவும், இயல்பாகவும் இணக்கமாகவும் இருக்க வும் வேண்டியதே. இங்குதான் திலோப்பா பொருத்தமானவராகிறார்.

ஏனெனில் திலோப்பா போன்றவர்கள் ஸென் ஆசான்கள் ஆவார் கள். குறிக்கோளைப்பற்றி பேசுகிறார்கள் அவர்கள்: இயல்பாகவும் இளக்கமாகவும் ஒருவர் வாழ்கிறார். எதையும் செய்வதில்லை – கட்டுப்பாட்டை கடக்க எதையும் செய்வதில்லை. ஏனெனில் எதை யாவது நீங்கள் செய்தால் அதுவே மறுபடியும் ஒரு கட்டாகிவிடும். செயலறுப்பதே உங்கள் செயலாக இருக்கும். இயல்பாகவும் இளக்க மாகவும் — அந்த நிலையில்தான் எருதுமேய்ப்புகுறித்த பத்து சித்திரத் தொடரின் பத்தாவது படம் பொருள்பொதிந்ததாகிறது: மீண்டும் உல குக்கு திரும்புதல். மீண்டும் உலகுக்கு திரும்புவது மட்டுமல்ல, ஒரு மது குப்பியை ஏந்திக்கொண்டு... இன்பம் அனுபவித்தல், கொண்டாடுதல், சாதாரணமாக இருத்தல் - அதுவே பொருள். இப்போது ஒன்றும் செய்ய முடியாது. செய்ய முடிந்ததை எல்லாம் செய்து விட்டிருக்கிறீர்கள். இப் போது நீங்கள் பேசாமல் இயல்பாகவும் இணக்கமாகவும் இருக்கிறீர்கள். மேலும் கட்டுப்பாடு - சாதனை - தேடல் - முயற்சி எல்லாவற்றையும் மறந் திருக்கிறீர்கள், அதுபற்றிய ஒவ்வொன் றையும் மறந்துவிடுங்கள். ஏனெனில் இப்போது நீங்கள் ஏதாவது செய்தால் கட்டு தொடரும். கட்டுகள் உள்ளவரை சுதந்திரம் இல்லை. நீங்கள் பொறுமையாக இருக்க வேண்டி உள்ளது. வெறுமனே இயல்பாகவும் இளக்கமாகவும் இருக்க வேண்டி உள்ளது.

''இப்போதெல்லாம் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று யாரோ ஒருவர் லின் ச்சியிடம் கேட்டார்கள். அவர் சொன்னார், ''விறகு பிளக்கிறேன், கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருகிறேன் - வேறொன்றுமில்லை.'விறகு பிளப்பதும் கிணற்றில் இருந்து நீர் சேந்தி வருவதும்....

லின் ச்சி இந்த பதிலை அளித்தபோது அவர் இந்த கட்டத்தில் இருந்திருக்க வேண்டும். இப்போது செய்வதற்கு வேறு எதுவும் இல்லை. எனவே அவர் விறகு பிளக்கிறார். பனிக்காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. விறகு தேவைப்படும். இந்த பனிக்காலம் மிகவும் குளிராக இருக்கப்போகிறது என மக்கள் சொல்கிறார்கள். எனவே அவர் விறகு வெட்டுகிறார். மேலும் அவருக்கு தாகம் எடுக்குமல்லவா. அதற்கு தண்ணீர் எடுக்கிறார். தோட்டத்துக்கு - காய்கறிச் செடிகளுக்கு நீர் ஊற்றுகிறார். முற்றிலும் சாதாரணமானவை... எந்த தேடலும் இல்லை, அறவே இல்லை, எங்கும் போவதுமில்லை.

இந்த நிலையில்தான், ''சும்மா இருந்தாலே, அமைதியாக அமர்ந்தாலே, ஒன்றும் செய்யாதிருந்தாலே வசந்தம் வருகிறது, புல் தானே வளர்கிறது'' என்கிறார் ஸெனரின். இதற்குமேல் சொற்களால் விளக்க முடியாது. நிர்விசாரத்தை அடைந்து பின்பு விதையற்ற சமாதிக்காக ஒருவர் காத்திருக்க வேண்டி இருக்கிறது. அது தானாகவே வருகிறது - புல் தானாக வளர்வதைப் போல. அப்போது கடைசி கட்டும் கடக்கப் படுகிறது. அதைக் கடப்பவர் யாருமில்லை. தானாக அது கடக்கப் படுகிறது. அதை கடப்பவர் என்று யாரும் இல்லை. ஏனெனில் அதை கடக்க என்று ஒருவர் இருந்தால் திரும்பவும் கட்டு ஏற்படுகிறது. எனவே அதற்காக நீங்கள் எதுவும் செய்வதற்கில்லை.

எனவேதான் பதஞ்சலி வெறுமனே அது இரண்டுமே சமாதி என்று சொல்லி முடித்து விடுகிறார். சமாதிகள் பற்றிய அத்தியாயம் இத்துடன் முடிகிறது - இதற்குமேல் செய்வதற்கு ஒன்றுமில்லை. அதை செய்வது எப்படி என்று எதையும் அவர் கூறுவதில்லை. அதற்கு எந்த முறையும் இந்த இடத்தில் இல்லை. ''எப்படி?'' என்று மக்கள் கேட்கும் போது தான் கிருஷ்ணமூர்த்தி மிகுந்த கோபம் கொள்கிறார். அதற்கு எந்த முறையோ உத்தியோ இல்லை. ஏனெனில் இந்த இடத்தில் உத்தி ஏதேனும் இருக்க - உதவ இயலுமானால் பின்பு கட்டு அப்படியே இருக்கும். கட்டுப்பாடு கடக்கப்படுகிறது - ஆனால் அதை கடப்பவர் அங்கு இருப்பதில்லை. இயல்பாகவும் இளக்கமாகவும் இருந்து வருவதிலேயே, விறகு பிளந்துகொண்டும் நீர் சுமந்துகொண்டும் சும்மா இருந்தாலே, வசந்தம் வருகிறது; புல் தானாக வளர்கிறது.

எனவே விதையற்ற சமாதிபற்றி நீங்கள் அலட்டிக் கொள்வதில்லை. நிர்விசார சமாதிபற்றி மட்டுமே நீங்கள் சிந்திக்கிறீர்கள் எண்ணங்கள் நின்றுபோகும் சமாதி இது. அதுவரை தேடல் தொடர்கிறது. அதற்கு அப்பால்பட்ட பிரதேசம் தேடலற்றது. நிர்விசாரமாக நீங்கள் மாறி யிருக்கும்போதே - அப்போது மட்டுமே அடுத்து என்ன செய்வது என்பதை நீங்கள் தெரிந்து கொள்கிறீர்கள்; அதற்குமுன் செய்ய முடிவதை எல்லாம் நீங்கள் செய்து முடித்திருக்கிறீர்கள்.

கடைசி தடை உள்ளது. அந்த தடையை உருவாக்குவது உங்கள் செயல்பாடே. கடைசி தடை உருவாக்கப்படுகிறது. அது கண்ணாடி போன்ற - ஒளிபுகக்கூடிய ஒரு திரைதான். ஒரு கண்ணாடி சுவரின் பின் புறம் - மிக அழகான தூய்மையான கண்ணாடியின் பின்புறம் நீங்கள் உட்கார்ந்து கொண்டிருப்பதைப் போன்றது அது. அந்த சுவர் அங்கு இல்லாதிருந்தால், ஒவ்வொன்றையும் எவ்வளவு தெளிவாக உங்க ளால் காண முடியுமோ அவ்வளவு தெளிவாக உங்களால் காண முடியும். ஆனால் அந்த சுவர் அங்கு இருக்கிறது. அதை நீங்கள் கடக்க முயன்றால் பலமாக மோதுண்டு திருப்பி எறியப்படுவீர்கள்.

எனவே நிர்விசார சமாதி என்பது கடைசி அல்ல; கடைசிக்கு முந்தி யது அது. அந்த ''கடைசிக்கு முந்தியது'' தான் இலக்கு. அதற்கு அப்பால் ஸெனரினை - திலோப்பாவை - லின் ச்சியை படியுங்கள், அமைதியாக அமருங்கள்; புல் தானாக வளர அனுமதியுங்கள். அதன்பின் சந்தையில் நீங்கள் வாழமுடியும். ஏனெனில் மடத்தைப் போலவே சந்தையும் அழகானதுதான். அதன்பின் உங்களுக்கு தோன்றும் எதை வேண்டு மானாலும் நீங்கள் செய்ய முடியும் - உங்கள் சொந்த வேலையை நீங்கள் செய்யமுடியும்; ஆனால் அதற்குமுன் அல்ல. நீங்கள் இளைப் பாற முடியும். தேடல் முற்றுப்பெற்று விட்டது. அந்த இளைப்பாறு தலில், பேரண்டத்துடன் உள்ளம் ஒத்திசையும் கணம் வருகிறது - தடைச் சுவர் மறைகிறது. ஏனெனில் உங்கள் செயல்பாடுகளாலேயே அது உருவாக்கப்படுகிறது. நீங்கள் செயல்படாவிடில் அது மறைகிறது. உங்கள் செய்கைகளாலேயே அது ஊட்டம் பெறுகிறது. நீங்கள் செயல் படாவிட்டால் அது மறைகிறது. செயல் மறைந்ததும் எல்லா கட்டுகளை யும் நீங்கள் தாண்டி இருக்கிறீர்கள். அதன்பின் வாழ்வுமில்லை சாவு மில்லை. ஏனெனில் செய்பவரதே வாழ்வு; செய்பவரதே சாவு.

இப்போது நீங்கள் இருப்பதில்லை. நீங்கள் கரைந்திருக்கிறீர்கள். கடலுக்குள் எறியப்படும் ஒரு உப்புக்கட்டி கரைவதுபோல நீங்கள் கரைந்து போய் இருக்கிறீர்கள். அது எங்கே போனது என்பதை உங்க ளால் கண்டுபிடிக்க முடியாது. கடலில் கரைந்துவிட்ட உப்புக்கட்டியை கண்டுபிடிக்க உங்களால் முடியுமா? கடலுடன் அது ஒன்றாகி இருக்கிறது.

கடலை நீங்கள் சுவைக்க முடியும். ஆனால் கட்டியை உங்களால் கண்டுபிடிக்க முடியாது.

எனவேதான் மக்கள் புத்தரிடம், ''ஒரு புத்தர் இறந்ததும் என்ன நிகழும்? ஒரு புத்தர் இறந்ததும் என்ன ஆகிறது?'' என்று திரும்பத் திரும்ப கேட்கிறபோது மவுனமாகவே இருக்கிறார் புத்தர். ஒருபோதும் அதற்கு அவர் விடையளிப்பதில்லை. ''அதன்பின் புத்தருக்கு என்ன நேர்கிறது?'' என்பது மிக விடாப்பிடியாக கேட்கப்பட்டு வந்த கேள்வி. புத்தர் மவுனம் சாதித்ததன் காரணம், உங்களைப் பொறுத்தவரை தான் புத்தர் இருப்பதாக தோன்றுகிறார்; அவரைப் பொறுத்த வரை அவர் இருப்பதில்லை. உள்ளுக்குள் அவர் இல்லை. உள்பக்கம் - வெளிப்பக்கம் இரண்டும் ஒன்றாகி இருக்கிறது. பகுதியும் முழுமையும் ஒன்றாகி இருக்கிறது. பக்தரும் கடவுளும் ஒன்றாகி இருக்கிறார்கள். காதலிக்குள் காதலர் கரைந்துவிடுகிறார்.

பிறகு எஞ்சியிருப்பது என்ன? அன்பே எஞ்சியிருக்கிறது. அதன்பின் காதலரும் இல்லை, காதலியும் இல்லை; அறிபவரும் இல்லை, அறியப்படுவதும் இல்லை - அறிதலே எஞ்சியிருக்கிறது. தூய உணர்வே தங்கி இருக்கிறது. எந்த மையமும் இருப்பதில்லை. இருத்தலைப் போல் விரிவாக - இருத்தலைப்போல் ஆழமாக - இருத்தலைப்போல் மர்மமாக அது இருக்கிறது. ஆனால் ஒன்றும் செய்வதற்கில்லை.

என்றாவது ஒருநாள் இந்த நிலைக்கு நீங்கள் வரும் போது – தீவிர மாக தேடினால் நீங்கள் வருவீர்கள்; தீவிரமாக தேடினால் நிர்விசார சமாதியை நீங்கள் அடைவீர்கள் - செயல்படுவதில் பழைய பழக்கத்தை நீங்கள் சுமந்து திரிவதில்லை; செயல்படுவதில் பழைய வழக்கத்தை நீங்கள் கடைப் பிடிப்பதில்லை; அந்த நிலையில் ''எப்படி?'' என்னும் கேள்வியை நீங்கள் கேட்பதில்லை. அந்நிலையில் நீங்கள் இயல் பாகவும் இளக்கமாகவும் இருக்கிறீர்கள். இருக்கிறபடி இருக்கிறீர்கள். நிகழ்வது எதுவானாலும் ஏற்றுக் கொள்கிறீர்கள். எது நடந்தாலும் கொண்டாடுகிறீர்கள். விறகு வெட்டு கிறீர்கள், தண்ணீர் சுமக்கிறீர்கள், அமைதியாக அமர்ந்திருக்கிறீர்கள்; புல் வளர இடமளிக்கிறீர்கள்.

○

# 10. இருத்தலின் மாறாத்தன்மை

*முதல் கேள்வி:*

*அந்த மார்ச் 21 அன்று ரஜனீசுக்கு என்ன நேர்ந்தது? அன்று அவர் அடைந்தது விதையுடன் கூடிய சமாதியா விதையற்ற சமாதியா?*

இந்த கேள்வி உங்களுடையது மட்டுமல்ல; என்னுடைய கேள்வியும் இதுதான்! அந்த ரஜனீஷ் என்ற பேர்வழிக்கு அன்று என்ன நேர்ந்தது என்று அன்றிலிருந்தே நானும் எனக்குள் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறேன். அன்று இரவு ஒரு குறிப்பிட்ட கணம்வரை அங்கு இருந்த அவனை அதற்கு அடுத்த கணத்தில் இருந்து காணவில்லை.

அன்றிலிருந்தே நானும் அவனை உள்ளும் புறமும் தேடிக்கொண்டுதான் இருக்கிறேன். ஒரு தடயம்கூட அகப்படவில்லை. ஒரு காலடித்தடத்தைக்கூட காணவில்லை. என்றாவது அவனை நான் சந்திக்க நேர்ந்தால் உங்கள் கேள்வியை நினைத்துக்கொள்கிறேன். அல்லது நீங்களே எங்காவது அவனை சந்திக்க நேர்ந்தால் இந்த கேள்வியை அவனிடம் நீங்கள் என் சார்பாகவும் கேட்கலாம்.

அது ஒரு கனவைப் போலவே இருக்கிறது. காலையில் நீங்கள் கண்விழித்ததும் சுற்றிலும் பார்க்கிறீர்கள். உங்கள் கனவை படுக்கை விரிப்பிலும் படுக்கைக்கு அடியிலும் தேடித் துளாவுகிறீர்கள். அது அங்கே இருப்பதில்லை. உங்களால் நம்ப முடிவதில்லை — வெறும் ஒரு கணத்துக்கு முன்புகூட அது அங்கே இருந்தது; அவ்வளவு தெளிவாக - அவ்வளவு நிசமாக இருந்தது. திடீரென அதை அங்கே அடியோடு காணவில்லை. அதை கண்டுபிடிக்க எந்த வழியுமில்லை. அது ஒரு தோற்றம்தான், யதார்த்தம் அல்ல; ஒரு கனவுதான். நீங்கள் கண்விழித்ததும் கனவுக்கு ஒன்றும் ஆவதில்லை, அது மறைந்து விடுகிறது - அவ்வளவுதான்.

ரஜனீசுக்கும் ஒன்றும் ஆகவில்லை. முதலில் அவன் உண்மையில் இருந்ததே இல்லை. நான் தூங்கிக்கொண்டிருந்தேன், அதனால் அவன் இருந்தான். நான் கண்விழித்தேன், அவனைக் காணவில்லை. மேலும், மிகவும் எதிர்பாராத முறையில் அது நடந்துவிட்டதால் அந்த கேள்வியை கேட்பதற்குக்கூட நேரம் இருக்கவில்லை. அதற்குள் சட்டென்று மறைந்துவிட்டான் அவன். மேலும் மறுபடியும் அவனை காண்பதற்கு எந்த வாய்ப்பும் இருப்பதாகவும் தெரியவில்லை. ஏனென்றால் ஒரேஒரு வாய்ப்பு மட்டும்தான் இருக்கிறது: மறுபடியும் நான் உறக்கத்தில் வீழ்ந்தால் மட்டுமே அவனை நான் காண முடியும் — இதுவோ இனி நடக்க முடியாது.

முழு உணர்வுடன் நீங்கள் இருந்தால் உணர்வின்மையானது வேரோடு அறுபடுகிறது. விதை எரிக்கப்படுகிறது. உணர்வின்மைக்குள் மறுபடியும் நீங்கள் விழமுடியாது.

ஒவ்வொரு நாளும் இரவில் நீங்கள் உணர்வின்மைக்குள் விழ முடிகிறது; ஏனெனில் உணர்வற்ற மனம் இருக்கிறது. ஆனால் பிறகு உங்களின் முழு இருத்தலும் உணர்வுடையதாக ஆகிறது. எனவே நீங்கள் தூங்க முடியும்படியாக உங்களுக்குள் எந்த இடமும், எந்த இருண்ட மூலையும் இருப்பதில்லை. தூக்கமில்லாதபோது கனவும் இருப்பதில்லை.

ரஜனீஷ் என்பது எனக்கு நேர்ந்த ஒரு கனவு. ரஜனீசுக்கு எதுவும் நேரமுடியாது. ஒரு கனவுக்கு என்ன நேரமுடியும்? நீங்கள் தூங்கிக் கொண்டிருந்தால் அது இருக்கிறது; நீங்கள் விழித்துக் கொண்டால் அது இருப்பதில்லை, அவ்வளவுதான். ஒரு கனவுக்கு ஒன்றும் நேரிட முடியாது. யதார்த்தமே கனவுகாண முடியும். கனவு யதார்த்தத்தை காண முடியாது. நான் கண்ட ஒரு கனவுக்குப் பெயர்தான் ரஜனீஷ்.

ஆகவே இது என் கேள்வியும்தான். உங்களுக்கு காதுகள் இருந் தால் கவனியுங்கள். உங்களுக்கு கண்கள் இருந்தால் உங்களால் பார்க்க முடியும். வீட்டில் இருந்த பழைய ஆள் திடீரென ஒருநாள் காணாமல் போகிறார், வெறுமை மட்டுமே இருக்கிறது. வேறு யாரும் இல்லை. நீங்கள் தேடுகிறீர்கள், துளாவுகிறீர்கள்; யாரையும் காணோம். மையம் அற்ற - எல்லை கடந்த - மிகப் பரந்து விரிந்த விழிப்புணர்வு மட்டுமே இருக்கிறது. மேலும், எல்லா பெயர்களும் ஆளுமையை சேர்ந்தனவே என்பதால், ஆளுமை மறைகிற போதுதான் முதன்முதலாக ஆதிமூல மானது உங்களுக்குள் எழுந்திருக்கிறது. பெயர்களாலும் உருவங்களா லும் ஆன உலகம் மறைகிறது; உருவமற்றது திடீரென அங்கு இருக்கிறது.

உங்களுக்கும் இது நிகழத்தான் போகிறது. அது நிகழுமுன்பே, நீங்கள் கேட்பதற்கு ஏதாவது கேள்விகள் இருந்தால், உங்கள் ஆளுமை யிடம் கேட்டு விடுங்கள். ஏனென்றால் ஒரு தடவை அது நேர்ந்துவிட் டால் பின் உங்களால் கேட்க முடியாது. கேட்பதற்கு அங்கு யாரும் இருப்பதில்லை. திடுமென ஒருநாள் நீங்கள் மறைந்து போவீர்கள். அது நிகழும்முன் உங்களால் கேட்க முடியும். ஆனால் அதுவும் கடினம் தான். ஏனென்றால் அது நிகழும்முன் நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறீர்கள் - அந்நிலையில் கேட்பார் யார்? அது நிகழும்முன் கேள்விகேட்க ஆள் இருப்பதில்லை; அது நிகழ்ந்த பின்போ பதில் சொல்ல யாருமிருப்பதில்லை.

**இரண்டாவது கேள்வி:**

**இறுதி சமாதியில் விதை எவ்வாறு எரிக்கப்படுகிறது என்பதை தயவு செய்து விளக்குவீர்களா.**

எப்போதுமே நீங்கள் சொற்களைப் பிடித்துக் கொள்கிறீர்கள். ஆனால் அது இயல்பே என்பதை நான் அறிவேன். 'சமாதி', 'விதையற்ற சமாதி', 'விதை எரிக்கப்பட்டுவிட்டது, இனிமேல் விதை இருப்ப தில்லை' என்பது போன்ற சொற்களை நீங்கள் கேட்டதுமே, உங்கள் மனதில் கேள்விகள் எழுகின்றன. ஆனால் நான் சொன்னதை நீங்கள் புரிந்துகொண்டால் அப்போது இந்த கேள்விகள் பொருத்தமற்றவை ஆகும். ''விதை எரிக்கப்பட்டுவிட்டது' என்றால் நிசமாகவே அது போன்ற ஒன்று நிகழ்கிறது என்று பொருளல்ல. நிகழ்வது மிகவும் எளியது. இதுதான் நிகழ்கிறது: அதாவது நிர்விசார சமாதி அடையப் பட்டதும் எண்ணங்கள் மறைகின்றன. எரிப்பதற்கான விதை திடீரென இல்லாமல் போகிறது. ஏற்கனவேயும் அது அங்கு ஒருபோதும் இருந்த தில்லை. இதுவரை நீங்கள் ஒரு பிரம்மையில் த்தான் இருந்திருக்கிறீர்கள்.

இது ஒரு உருவகம். மேலும் சமயமானது உருவகங்களைக் கொண்டே பேசுகிறது. ஏனெனில் அறிவதற்கு அரிய விசயங்களைப் பற்றி சொல்வதற்கு அதைவிட வேறு வழியுமில்லை. அது ஒரு உருவகம். 'விதை எரிக்கப்பட்டிருக்கிறது' என்று சொல்லும்போது அதன் ஒரே பொருள்: இனி பிறப்பதற்கு ஆசையில்லை, இறப்பதற்கு ஆசையில்லை; இறவா திருப்பதற்கும் ஆசையில்லை - ஆசை என்பதே இல்லை என்பதே. ஆசைதான் விதை. ஆனால் எண்ணங்கள் மறைந்துவிடும்போது ஆசைகள் எப்படி நிலவமுடியும்? சிந்திப்பதன் வழியாக மட்டுமே — எண்ணத்தின் வடிவில் மட்டுமே ஆசையால் நிலவமுடியும். எண்ணங் கள் இல்லாதபோது நீங்கள் ஆசையற்று இருக்கிறீர்கள். ஆசையற்று இருக்கும்போது பிறப்பும் இறப்பும் மறைகின்றன. உங்கள் ஆசையின் மறைவுடன் விதை எரிக்கப்பட்டுவிட்டது. விதையை நீங்கள் எரிப்ப தற்கு என்று ஒரு நெருப்பு இருக்கிறது என்பதில்லை... மடத்தனமாக சிந்திக்காதீர்கள். உருவகங்களுக்கு பலபேர் பலியாகி இருக்கிறார்கள். சில விசயங்களை கவிதா முறையில் சொல்வதற்கே உருவகங்கள்.

சாரமானதை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். சாரமானது என்னவென்றால், ஆசை உங்களை காலத்துக்குள் - உலகத்துக்குள் செலுத்துகிறது. எப்படி எப்படியோ இருக்க நீங்கள் விரும்புவீர்கள். எதை எதையோ சாதிக்க நீங்கள் விரும்புவீர்கள். இதில்தான் எதிர்காலம் உருவாக்கப்படுகிறது. ஆசையால்தான் காலம் உண்டாக்கப்படுகிறது. காலம்என்பது ஆசையின் ஒரு நிழல்தானே தவிர வேறில்லை. இருத்த லுக்கு காலம் கிடையாது. இருத்தல் நித்தியமானது; ஒரு போதும் அது எவ்வித காலத்தையும் அறிந்திருப்பதில்லை. உங்கள் ஆசையால்தான் காலம் உருவாக்கப்படுகிறது. ஏனென்றால் ஆசை இயங்குவதற்கு இடம் தேவைப்படுகிறது. எதிர்காலம் என ஒன்று இல்லாவிட்டால் ஆசை எந்த

பக்கமாக இயங்கும்? எப்போதும் ஒரு சுவரில்தான் போய் முட்டுவீர்கள். அதனால்தான் எதிர்காலத்தை உருவாக்குகிறீர்கள். காலம் என்னும் பரிமாணத்தை உங்கள் மனம் உருவாக்குகிறது. அதனால் ஆசை என்னும் குதிரைகள் விரைவாக தாவிச்செல்ல முடிகிறது. ஆசையின் காரணமாகவே வருங்காலத்தை நீங்கள் உருவாக்குகிறீர்கள். இந்த பிற விக்கு மட்டுமல்ல, இனிவரும் பிறவிகளுக்கும் சேர்த்து உருவாக்கு கிறீர்கள். ஏனெனில் ஆசைகள் அளவின்றி இருப்பதை நீங்கள் அறிகிறீர்கள்.... மேலும் ஆசைகளின் தன்மையே அவற்றை நிறைவேற்ற முடியாதபடிதான் உள்ளது. இந்த பிறவி போதாது. இன்னும் பல பிறவி கள் தேவைப் படுகின்றன. இதுமட்டுமே ஒரே வாழ்க்கை என்றால் பின், காலம் மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது. செய்வதற்கு எத்த னையோ விசயங்கள் உள்ளன. அவற்றை எல்லாம் இவ்வளவு குறுகிய காலத்தில் செய்வ தென்றால் - ஒன்றையுமே செய்ய முடியாது. அந்த நிலையில் வருங்காலத்தில் பல பிறவிகளை நீங்கள் உருவாக்குகிறீர்கள்.

உங்கள் ஆசைதான் விதையாக ஆகிறது. ஆசையின் வழியாகவே ஒரு கனவிலிருந்து மற்றதற்கு நீங்கள் போய்க்கொண்டே இருக்கிறீர்கள். ஒரு பிறவியிலிருந்து மற்றதற்கு நீங்கள் போவது என்பது, ஒரு கனவிலிருந்து மற்றதற்கு நீங்கள் போவதே தவிர வேறு ஒன்று மில்லை. எல்லை அற்றவராக நீங்கள் ஆகிறபோது, எல்லாவித சிந்தனைகளையும் கைவிட்டு நிகழ்கணத்தில் பேசாமல் நீங்கள் தங்கி இருக்கிறபோது, திடீரென காலம் மறைந்துவிடுகிறது.

நிகழ் என்பது ஒரு காலமே அல்ல. காலத்தை நீங்கள் கடந்த காலம் - நிகழ்காலம் - வருங்காலம் என மூன்று பகுதிகளாக பிரிக்கிறீர்கள். இது தவறாகும். கடந்த காலமும் வருங்காலமுமே காலங்கள். ஆனால் நிகழ்காலம் என்பது காலத்தின் பகுதியல்ல; நிகழ்காலம் என்பது இருத்த லின் பகுதியாகும். கடந்த காலம் மனதில் இருக்கிறது; நினைவு என்பது உங்களிடம் இல்லாமல் போய்விட்டால் அதன்பின் கடந்தகாலம் என்பது எங்கே இருக்கும்? வருங்காலமும் மனதில்தான் இருக்கிறது; உங்கள் கற்பனைகளை நீங்கள் கை விட்டுவிட்டால் வருங்காலம் என்பது எப்படி இருக்கும்? ஆனால் நிகழ்காலம் இருக்கும். உங்க ளையோ உங்களின் மனத்தையோ சார்ந்தது அல்ல அது. நிகழ்காலம் என்பது இருத்தலி னுடையது. நிகழ்கணம் மட்டுமே நிசம். மற்ற கணங்கள் எல்லாமே கடந்த காலத்தையோ வருங்காலத்தையோதான் சேர்ந் தவை. கடந்தகாலம் கடந்துவிட்டது. இந்த கணத்தில் அது இல்லை. வருங்காலமோ இன்னும் வரவில்லை. இரண்டுமே இருத்தலில் இல்லா தவை. நிகழ் மட்டுமே நிசம் — நிகழ்வின் ஒரே ஒரு கணம் மட்டுமே நிசம். ஆசை மறையும் போது - எண்ணம் மறையும்போது, திடீரென நீங்கள்

நிகழ்கணத்துக்குள் தூக்கிவீசப்படுகிறீர்கள். அந்த நிகழ்கணத்தில் இருந்துதான் நித்தியத்துக்கான வாசல் திறக்கிறது. விதை எரிக்கப் படுகிறது. ஆசையை துறந்ததும் விதை தானே மறைகிது. ஏனெனில் விதையை முதலில் உருவாக்கியதே ஆசைதான்.

**மூன்றாவது கேள்வி:**

**அண்மையில்தான் சந்நியாசம் வாங்கியவர்களில் ஒருவன் என்னும் முறையில் நான்; உங்களைச் சுற்றிலும் மிகவும் இறுகிய தன்மையுடனும் வருத்தம்தோய்ந்த முகங்களுடனும் காணப்படும் சந்நியாசிகளின் எண் ணிக்கை குறித்து சற்றே அச்சப்படுகிறேன். என் இந்த அச்சத்தை தயவுசெய்து தாங்கள் போக்க முடியுமா?**

ஆம், புரிந்துகொள்ள வேண்டிய பல விசயங்கள் இதில் உள்ளன: முதலாவதாக, ஆன்மீகவாதிகள் எப்போதும் இறுக்கமானவர்களாகவே இருக்கிறார்கள். நானோ ஒரு ஆன்மீகவாதி அல்ல. ஆனால் என்னை தவறாக கருதிக்கொண்ட பல ஆன்மீகவாதிகள் என்னிடம் வருகிறார்கள். ஆன்மீகவாதிகள் எப்போதும் இறுக்கமானவர்களாகவே இருக்கிறார் கள்; நோயாளிகளாகவே இருக்கிறார்கள். வாழ்வில் அவர்கள் வெறுப் படைந்து இருக்கிறார்கள்; ஒரேயடியாக வெறுத்துப் போயிருக்கி றார்கள். முற்றிலுமாக தோற்றுப்போயிருக்கிறார்கள். எனவே இன்பம் காணும் பண்பை அவர்கள் இழந்துவிட்டிருக்கிறார்கள். வாழ்க்கையில் துய ரத்தைத் தவிர வேறெதையும் அவர்கள் காண்பதில்லை. வாழ்க்கையை ஒருபோதும் அவர்கள் கொண்டாடியதில்லை. வாழ்வின் மீதான நிராசை களின் காரணமாகவே அவர்கள் ஆன்மீகவாதிகளாக ஆகியிருக்கிறார் கள். அந்நிலையில் அவர்கள் இறுக்கமானவர்களாகவே இருக்கிறார்கள். தாம் ஏதோ மாபெரும் சாதனையை செய்துகொண்டிருப்பதான மனப் பான்மையுடன் இருக்கிறார்கள். தம் அகங்காரங்களுக்கு ஆறுதல்கூற அவர்கள் முயன்று கொண்டிருக்கிறார்கள்: அதாவது வாழ்க்கையில் நீ தோல்வி அடைந்திருக்கலாம், ஆனால் ஆன்மீகத்தில் நீ வெற்றிபெற்றுக் கொண்டிருக்கிறாய். புற உலகில் நீ தோற்றுப்போயிருக்கலாம், ஆனால் அகஉலகில் நீ ஒரு முன்மாதிரியாக ஆகி இருக்கிறாய். பொருள் உலகில் நீ தோற்றுப் போயிருக்கலாம்; ஆனால் உன் குண்டலினி எழுந்து கொண்டிருக்கிறது, உன் சக்கரங்கள் திறந்து கொண்டிருக்கின்றன. இப்போது அவர்கள் ஈடுகட்டுகிறார்கள்; மற்றவர்களை ஒரு கண்டன பார்வையுடன் பார்க்க ஆரம்பிக்கிறார்கள். ''உங்களைவிட நான் யோக்கியன்'' என்பதே அவர்களின் மனப்பான்மையாக இருக்கிறது. மற்ற எல்லாரும் பாவிகள். இவர்கள் மட்டுமே மீட்படையப் போகிறவர் கள். மற்ற ஒவ்வொருவரும் நரகத்துக்குள் தூக்கி எறியப்படப் போகி றார். ஆனால் மற்றவர்களுக்கு நரகத்தை உருவாக்கி வைத்தவர்களே

இந்த மதவாதிகள்தான். தமக்கோ சொர்க்கத்தை படைத்துக் கொள்கிறார்கள். ஒரு ஈடுகட்டும் வாழ்வையே அவர்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள் – அதுவும் நிசமான வாழ்க்கை அல்ல, கற்பனை வாழ்க்கைதான். இவ்வகையான மக்களே இறுக்கமானவர்களாக இருக்கிறார்கள்.

அவர்களுடன் எனக்கு எவ்வித உறவும் கிடையாது. ஆனால் நானும் அவர்களைப்போன்ற ஒரு ஆன்மீகவாதிதான் என நினைத்துக் கொண்ட சில நேரங்களில் அவர்கள் என்னிடம் சிக்கிக் கொள்கிறார்கள். நானோ முற்றிலும் மாறுபட்ட விதமான ஒரு ஆன்மீகவாதி – அதாவது முதலில் என்னை ஒரு ஆன்மீகவாதி என்றே நீங்கள் அழைக்க முடியுமானால். என்னைப் பொறுத்தவரை சமயம் என்பது கேளிக்கையானது. என்னைப் பொறுத்தவரை சமயத்தன்மை என்பது கொண்டாட்டமானது. என்னைப் பொறுத்தவரை சமயம் என்பது கோலாகலமானது. சமயத்தை நான் 'திருவிழாப் பரிமாணம்' என அழைக்கிறேன். அந்த பரிமாணம் மதவாதிகளிடம் இல்லை; இறுகியமனிதர்களிடம் அது இல்லை. இறுக்கமான மனிதர்களுக்கு உளவியல் சிகிச்சைதான் இருக்கிறது. அவர்கள் நோய்பிடித்தவர்கள். அவர்கள் ஏமாற்றிக் கொண்டிருப்பது வேறு யாரையும் அல்ல; தங்களைத்தான் அவர்கள் ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

என்னைப் பொறுத்தவரை சமயத்தின் பண்பு முற்றிலும் வேறானது. வாழ்க்கையில் நீங்கள் தோற்றுவிட்டீர்கள், எனவேதான் நீங்கள் மதத்துக்கு மாறிவிட்டீர்கள் என்பதல்ல. மாறாக வாழ்க்கையில் நீங்கள் முழு முதிர்ச்சி அடைந்திருக்கிறீர்கள், அதனால்தான் சமயத்துக்குள் வந்திருக்கிறீர்கள். உங்கள் தோல்விகள்கூட.... தோல்விகள் ஏற்படுகின்றன – ஆனால் தோல்விகள் ஏற்பட காரணம் வாழ்க்கை அல்ல. தோல்விகள் ஏற்பட காரணம் உங்கள் ஆசைகள்தான். ஊக்கமிழந்தவர்களாக ஆகி இருக்கிறீர்கள் நீங்கள் - உங்களின் ஊக்கத்தை கெடுத்தது வாழ்க்கை அல்ல. மாறாக அதற்கு காரணம், அளவுக்கு அதிகமாக நீங்கள் எதிர்பார்த்தீர்கள் என்பதுதான். வாழ்க்கை அழகானது. அதில் சிக்கலை உண்டாக்குவது உங்கள் மனம்தான். உங்களின் பேராசை அளவு கடந்ததாக இருக்கிறது இந்த அழகான பரந்து விரிந்த வாழ்க்கையால்கூட அதை நிறைவேற்ற முடியாது.

சாதாரண மதவாதி உலகை துறக்கிறான். மெய்யான ஆன்மீக மனிதர் பேராசையை துறக்கிறார்; எதிர்பார்ப்பை துறக்கிறார்; கற்பனையை துறக்கிறார். ஒவ்வொரு நம்பிக்கையும் அவநம்பிக்கையாக மாறும் ஒரு கட்டம் வருகிறது என்பதை - ஒவ்வொரு ஆசையும் நிராசையாகவே ஆகும் ஒரு கட்டம் வருகிறது என்பதை - அனுபவத்தின்மூலம் அவர் அறிகிறார். அனுபவத்தின் வழியாக இதை அறிவதன்மூலம் பக்குவப்பட்டவராக - முதிர்ச்சியடைந்தவராக

ஆகிறார் அவர். உண்மையில் ஒரு வளர்ச்சி நிகழ்கிறது. இந்த வளர்ச்சியினால் அவர் பேராசையை கைவிடுகிறார். அல்லது இந்த வளர்ச்சியின் விளைவாக பேராசை தானே உதிர்கிறது. அந்த நிலையில் தான் ஒரு மனிதர் ஆன்மீக மனிதராக ஆகிறார்.

உலகை அவர் துறப்பதில்லை - உலகம் அழகானது! அதை துறப்பதற்கு எந்த காரணமும் இல்லை. மாறாக எல்லாவிதமான எதிர் பார்ப்புகளையும் அவர் துறக்கிறார். எதிர்பார்ப்பே இல்லாத போது ஏமாற்றம் எப்படி வரமுடியும்? கோரிக்கையே இல்லாத நிலையில் நிறைவேறவில்லை என்ற நிலை எப்படி ஏற்படமுடியும்? பேராசையே இல்லாத போது கசப்பான அனுபவம் எப்படி ஏற்பட ம்டியும் ஒருவர் வெறுமனே இயல்பாகவும் இளக்கமாகவும் ஆகிறார் - நிகழ்கணத்தில் அவர் வாழ்கிறார் - நாளையைப்பற்றி கவலைப்படுவதில்லை; நிகழ் கணத்தை அவர் வாழ்கிறார் - முற்ற முழுமையாக வாழ்கிறார். அத னால் வருங்காலம் பற்றிய ஆசையோ எதிர்பார்ப்போ இருப்பதில்லை. தன் முழு இருப்பையும் நிகழ்கணத்துக்கு அவர் கொணர்கிறார். அந்நிலையில் முழு வாழ்வும் மாற்றமடைகிறது. அது ஒரு வேடிக்கை யாக - விருந்தோம்பலாக - கொண்டாட்டமாக ஆகிறது. அந்நிலையில் உங்களால் ஆட முடியும், பாட முடியும், சிரிக்க முடியும். என்னைப் பொறுத்தவரை ஒரு ஆன்மீக உணர்வு எப்படி இருக்கவேண்டும் என் றால் அது ஒரு ஆடல்பாடலான உணர்வாக இருக்கவேண்டும். அதிக மும் குழந்தைகளைப் போல அது இருக்க வேண்டும், சவங்களைப் போல இருக்கக்கூடாது. உங்களின் கோயில்களும் சர்ச்சுகளும் மசூதி களும் சுடுகாடுகளைப் போலத்தான் உள்ளன — அளவுகடந்த இறுக்கம் அவற்றில் காணப்படுகிறது.

ஆக, இறுக்கமான பலபேர் என்னை சுற்றி இருக்கிறார்கள்; தான் அவர்கள் என்னை அறவே விளங்கிக்கொள்ளாதவர்கள். அவர்கள் தம் மனதின் கருத்துகளை என்மேல் ஏற்றிப் பார்த்துக் கொண்டிருக்க லாம். நான் சொல்வதை எல்லாம் தம் சொந்த மனங்கள் சொல்வதன் படி அவர்கள் பெயர்த்துரைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் என்னை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. இவர்கள் தவறான ஆட்கள். ஒன்று, இவர்கள் தங்களை திருத்திக்கொள்ள வேண்டி இருக்கும். அல்லது இவர்கள் விலகிச் செல்ல வேண்டி இருக்கும். எந்த விதமான புகாரும் முணுமுணுப்பும் இல்லாமல் வாழ்வை முழுமையாக கொண்டாட முடிகிற மனிதர்கள் மட்டுமே இறுதியில் என்னுடன் இருப்பார்கள். மற்றவர்கள் போய் விடுவார்கள். எவ்வளவு விரைவில் அவர்கள் போய்விடுகிறார்களோ அவ்வளவுக்கு நல்லது. ஆனால் இப்படி நடக்கத்தான் செய்கிறது. என்னை ஒரு ஆன்மீகவாதி என்று எண்ணிக்கொண்டு பழைய பாணி மதவாதிகளும் சில நேரங்களில்

என்னிடம் வருகிறார்கள். அப்படி அவர்கள் வரும்போது தம் சொந்த மனங்களையும் தம்முடன் அவர்கள் கொண்டு வருகிறார்கள். இங்கேயும் தம் இறுகிய தன்மையுடன் இருக்கவே அவர்கள் முயல்கிறார்கள்.

ஒரு ஆள் என்னிடம் வந்தார் - வயதான ஆள். மிகவும் பெயர் பெற்ற இந்திய தலைவர் அவர். ஒருதடவை ஒரு தியான முகாமில் அவர் கலந்துகொண்டார். சந்நியாசிகள் சிலர் சீட்டு விளையாடுவதை அவர் பார்த்தார். உடனடியாக அவர் என்னிடம் வந்து, ''ரொம்பவும் அநியாயம் இது! சந்நியாசிகள் போய் சீட்டு விளையாடலாமா?'' என்றார். நான் சொன்னேன், ''அதில் என்ன தவறு இருக்கிறது? சீட்டு விளையாட்டு அழகானது. யாருக்கும் அவர்கள் எந்த கெடுதலும் செய்துகொண்டு இருக்கவில்லை. வெறுமனே சீட்டாட்டத்தில் மகிழ்ச்சி அடைகிறார்கள் - அவ்வளவுதானே'' என்றேன். இந்த மனிதனோ ஒரு அரசியல்வாதி. அரசியலிலும் வியாபாரத்திலும் சூதாடிக் கொண்டிருக்கிறவர். ஆனால் அதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. மக்கள் வெறும் சீட்டுகளை வைத்து ஆடுவது விளையாட்டான விசயம் - அந்த நேரத்தை அவர்கள் கொண்டாடிக்கொண்டு இருக்கிறார்கள் - அவ்வளவுதான். இந்த ஆளோ தன் வாழ்நாள் முழுவதும் சூதாடி வந்தார் - மிகவும் அபாயகரமான ஆட்டம், மூர்க்கத்தனமான ஆட்டம். மக்களின் தலைகளின் மேல் ஏறி மிதித்துக் கொண்டு, ஒரு அரசியல்வாதி செய்தாக வேண்டிய எல்லாவற்றையும் செய்துகொண்டு இருந்தார். ஆனால் தன்னை ஒரு ஆன்மீகவாதி என்று அவர் நினைத்துக்கொண்டிருந்தார். அந்த சந்நியாசிகளோ பாவம் சாதாரண சீட்டு விளையாட்டைத்தான் ஆடிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களை அவர் கண்டனம் செய்தார். ''இதை நான் ஒரு போதும் எதிர்பார்க்கவில்லை'' என்றார். என்னைப் பொறுத்தவரை அதில் எந்த தவறும் இல்லை என நான் அவரிடம் சொன்னேன்.

யாருக்கும் நீங்கள் எந்த தீங்கும் செய்யாதிருக்கும்போது எதுவுமே தவறில்லை. யாருக்காவது நீங்கள் கெடுதல் செய்தால் அப்போது அது தவறுதான். தவறானவையாக கருதப்பட்டுவரும் சில விசயங்கள் சிலநேரங்களில் அவ்வளவு தவறானவையாக இருப்பதில்லை.

எடுத்துக்காட்டாக: ஒரு ஆளிடம் நீங்கள் அறிவுகெட்டதனமாக பேசுகிறீர்கள். அவனுடைய தலைக்குள் குப்பையை கொட்டிக்கொண்டு இருக்கிறீர்கள். உங்களால் குப்பையைத்தான் கொட்டமுடியும். ஏனெனில் வேறு எதுவும் உங்களிடம் இல்லை. ஆனால் இன்னொரு ஆள் ஒரு மூலையில் உட்கார்ந்து சிகரெட் குடித்துக் கொண்டிருக்கிறார். அது தவறா? குறைந்தது யார் தலையின்மேலோ தலைக்குள்ளோ அவர் குப்பைகொட்டிக் கொண்டு இருக்கவில்லை. உதட்டுக்கு ஒரு மாற்று பணியை அவர் கண்டு பிடித்திருக்கிறார்: அவர் பேசுவதில்லை, புகை பிடிக்கிறார். தனக்குத் தானே அவர் தீங்கு செய்து கொண்டிருக்கலாம்;

ஆனால் வேறு யாருக்கும் அவர் கேடு செய்வதில்லை. அவர் முட்டா ளாக இருக்கலாம், ஆனால் அவர் ஒரு கெட்ட ஆளாக இல்லை.

யாருக்காவது நீங்கள் தீங்கு செய்தால் மட்டுமே அது தவறானது - இந்த ரீதியிலேயே எப்போதும் சிந்திக்க முயலுங்கள். யாருக்கும் நீங்கள் எவ்வித கெடுதலும் செய்யவில்லை என்றால், அத்துடன் கொஞ்ச மாவது உணர்வுள்ளவராக நீங்கள் இருந்தால், அந்த ''யாருக்கும்'' என்பதில் நீங்களும் சேர்ந்துவிடுவீர்கள். உங்களுக்கு உட்பட யாருக்கும் நீங்கள் எவ்வித தீங்கும் செய்யாதிருந்தால் எல்லாமே அழகாக இருக்கும். அந்நிலையில் நீங்கள் செய்வதை நீங்கள் செய்துகொண்டிருக்க முடியும்.

என்னைப் பொறுத்தவரை சந்நியாசம் என்பது இறுக்கமான ஒரு காரியம் அல்ல. உண்மையில் அதற்கு நேர் எதிரானதே அது. விளையாட்டுத் தன்மைக்குள் குதித்துவிடுவதே அது. பல பிறவிகளாக நீங்கள் இறுக்கமானவராகவே இருந்திருக்கிறீர்கள். அதில் நீங்கள் என்ன கண்டீர்கள்? இறுக்கமாக இருக்கும்படிதான் உலகம் உங்களுக்கு சொல்லித்தருகிறது: உங்கள் கடமையை செய்யுங்கள், ஒழுக்கமாக நடங்கள், இப்படி இருங்கள், அப்படி இருங்கள் என்கிறது. நானோ உங்களுக்கு வேடிக்கைத் தன்மையைப் போதிக்கிறேன். திருவிழாக் குதூகலத்துடன் இருக்குமாறு கூறுகிறேன். கொண்டாட்டத்தைத் தவிர வேறெதையும் உங்களுக்கு நான் போதிப்பதில்லை. ஆனால் ஒரே ஒரு விசயத்தைமட்டும் நினைவில் கொள்ளுங்கள்: உங்கள் கொண்டாட்டம் யாருக்கும் எந்த கெடுதலும் செய்வதாக இருக்கக்கூடாது- அவ்வளவுதான்.

ஆனால் ஆணவம்தான் பெரிய சிக்கல். வாழ்வை வேடிக்கையாக நீங்கள் எடுத்துக்கொண்டால், அதை ஒரு திருவிழாவாக நீங்கள் கொண்டாட முடியும்; உங்கள் ஆணவம் மறைந்துவிடும். நீங்கள் இறுக்கமானவராக இருந்தால் மட்டுமே ஆணவம் தலைதூக்க முடியும். குழந்தைபோல் இருந்தால் ஆணவம் மறைந்துவிடுகிறது. எனவே தான் திமிராக பார்க்கிறீர்கள், விரைப்பாக நடக்கிறீர்கள். வேறு யாரும் செய்யாத மிகவும் சீரிய ஒரு செயலை நீங்கள் செய்துகொண்டிருக்கிறீர்கள். முழு உலகுக்கும் உதவவும் அதை உயர்த்தவும் நீங்கள் முயன்று கொண்டு இருக்கிறீர்கள். அகில உலகத்தின் பாரத்தையும் உங்கள் தோள்கள்மேல் நீங்கள் போட்டுக்கொண்டு இருக்கிறீர்கள். எல்லாரும் ஒழுக்கம் கெட்டவர்களாக இருக்கிறார்கள். நீங்கள் மட்டுமே ஒழுக்க சீலர். மற்ற ஒவ்வொருவரும் பாவிகளாகவே இருக்கிறார்கள். நீங்கள் மட்டுமே உத்தமபுருஷர். அந்நிலையில் ஆங்காரம் மிக நன்றாக உணர்கிறது.

கொண்டாட்டமான ஒரு மனநிலையில் அகங்காரம் நிலவ முடியாது. கொண்டாட்டமே உங்கள் உயிரின் சொந்த சூழலாக ஆகிற போது

ஆணவம் மறையும். சிரித்துக்கொண்டும் ஆடிக்கொண்டும் மகிழ்ந்து கொண்டும் இருக்கும்போது உங்கள் ஆணவத்தை எப்படி உங்களால் நிலைநிறுத்த முடியும்? - அது கடினம். சிரசாசனம் செய்து கொண்டிருக்கும் போதோ அல்லது அதனைப் போன்ற கடினமான - மடத்தனமான ஆசனங்களை செய்து கொண்டிருக்கும்போதோ வேண்டுமானால் உங்கள் ஆணவத்தை உங்களால் தக்கவைத்துக் கொள்ளமுடியும். அந்நிலையில் உங்கள் அகங்காரத்தை உங்களால் காப்பாற்ற முடியும்: ஏனெனில் ஒரு மாபெரும் யோகி நீங்கள்! அல்லது ஒரு கோயிலுக்குள் அல்லது சர்ச்சுக்குள் அமர்ந்திருக்கும் பிணங்களின் நடுவில் நீங்களும் அமர்ந்துகொண்டு உங்களைப்பற்றி மிகமிகப் பெரிதாக - பெருமையாக - உசத்தியாக எண்ணிக்கொள்ள முடியும்.

இவ்விதமானவர்களுக்கு அல்ல எனது சந்நியாசம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆனாலும் அவர்கள் வருகிறார்கள். வருவதில் எந்த தவறும் இல்லை. ஒன்று, அவர்கள் மாறவேண்டும். அல்லது அவர்கள் போய்விடவேண்டியிருக்கும். அவர்களைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் இறுக்கமானவன் அல்லன் என்று உங்களுக்கு நான் உறுதி கூறுகிறேன்.

நான் நேர்மையானவன்; இறுக்கமானவன் அல்ல. நேர்மை என்பது முற்றிலும் வேறு விதமான ஒரு பண்பு ஆகும். இறுக்கம் என்பது ஆணவத்தின் நோய் ஆகும். நேர்மையோ இதயத்தின் தன்மை ஆகும். நேர்மையாக இருத்தல் என்றால் நிசமானவராக இருத்தல், இறுக்கமானவராக இருத்தல் அல்ல. நேர்மையாக இருத்தல் என்றால் நம்பகமானவராக இருத்தல்: எதை நீங்கள் செய்து கொண்டிருந்தாலும் அதை உங்கள் முழு இதயத்துடன் செய்து கொண்டிருக்கிறீர்கள். எதை நீங்கள் செய்து கொண்டிருந்தாலும் அதை ஒரு கடமையாக நீங்கள் செய்வதில்லை, அன்பாக செய்கிறீர்கள். சந்நியாசம் ஒரு கடமை அல்ல. அது உங்கள் அன்பு. அதில் நீங்கள் குதித்தால் உங்கள் அன்பினால் குதிக்கிறீர்கள். உங்கள் நம்பிக்கையினால் குதிக்கிறீர்கள். அதற்கு நீங்கள் நேர்மையாக இருப்பீர்கள், இறுகிப்போய் இருப்பதில்லை. இறுக்கம் என்பது அழுதுவடிவது. நேர்மைத் தன்மையோ கலகலப்பானது. நேரிய மனிதர் எப்போதுமே களிப்பாகவே இருக்கிறார். பொய்யான ஒரு மனிதன் மட்டுமே வருத்தமாக இருக்கிறான். ஏனெனில் அவன்தான் குழப்பத்துக்குள் சிக்கிக் கொள்கிறான். நீங்கள் பொய்யானவராக இருந்தால், ஒவ்வொரு பொய்மையும் உங்களை இன்னுமொரு பொய்மைக்கே இட்டுச்செல்லும். பொய்களை நீங்கள் சார்ந்திருந்தால் இன்னுமதிக பொய்களையே நீங்கள் சார்ந்திருக்க வேண்டி வரும். பையப்பைய பொய்களின் ஒரு குவியல் உங்களை சூழ்ந்திருக்கும். உங்கள் சொந்த பொய்முகங்களுக்குள் சிக்கி நீங்கள் மூச்சு திணறுகிறீர்கள். அதனால் நீங்கள்

வருத்தமடைகிறீர்கள். அதனால் வாழ்க்கை ஒரு குழப்பமாக தெரிகிறது. அதன்பின் உங்களால் வாழ்வில் இன்பம் காண முடியாது. ஏனெனில் வாழ்வின் அழகு முழுவதையும் நீங்கள் அழித்துவிட்டீர்கள். உங்கள் பொய்யான மனத்தைத் தவிர இருத்தலில் எதுவும் அசிங்கம் அல்ல. எல்லாமே அழகானதுதான்.

நேர்மையாக இருங்கள், நம்பகமாக இருங்கள், நிசமாக இருங் கள், எதை செய்தாலும் அன்பினால் செய்யுங்கள். இல்லாவிட்டால் அதை செய்யாதீர்கள். ஒரு சந்நியாசி ஆவதற்கு நீங்கள் விரும்பினால் அன்பினால் ஆகுங்கள். இல்லாவிட்டால் அதற்குள் குதிக்காதீர்கள் - பொறுங்கள். சரியான தருணம் வரட்டும். ஆனால் அதுகுறித்து இறுக்க உணர்வு கொள்ளாதீர்கள். அது ஒன்றுமில்லை. இறுக்கத் தன்மை போன் றது ஒன்றுமில்லை. என்னைப் பொறுத்தவரை இறுகியதன்மை என்பது ஒரு நோய்தான். வாழ்வில் தோற்றுப்போன சராசரி மனத்தின் ஒரு நோய் அது. சராசரியாக இருப்பதால்தான் தோற்றுப்போய்விட்டான் அவன். சந்நியாசம் என்பது உங்கள் முதிர்ச்சியின் உச்சபயனாக இருக்கவேண்டும். நீங்கள் பார்த்ததும் அனுபவித்ததும் ஆன அனைத்து வெற்றிதோல்வி களின் உச்ச பயனாக அது இருக்கவேண்டும். அவற்றின் வழியாக நீங்கள் வளர்ச்சிபெற்று இருக்கிறீர்கள். உங்களின் புரிதல் இப்போது அதிகரித்து இருக்கிறது. இன்னும் அதிகமாக புரிந்துகொள்ள உங்க ளால் முடியும்போது அதிகமான இன்பம் காணவும் உங்களால் முடிகிறது.

யேசு விழிப்புத் தன்மையுடன் இருக்கிறார்; கிறிஸ்தவர்கள் அப்படி இல்லை. யேசு களிப்புத்தன்மையில் இருக்க முடியும்; கிறிஸ்தவர்களால் முடியாது. மாதாகோயிலுக்குள் மிகவும் இறுகிய ஒரு முகத்தை —துயர்படிந்த முகத்தை பொருத்திக்கொண்டே நீங்கள் போகவேண்டி உள்ளது. ஏன்? ஏனெனில் சிலுவையே அந்த மதத்தின் சின்னமாகி உள்ளது. சிலுவை ஒரு சின்னமாக இருக்கக்கூடாது. சாவு கரிசனத்துக்குரியதாக இருக்கக்கூடாது. சமய மனிதர் ஒருவர் மிகவும் ஆழமான ஒரு முறையில் வாழ்கிறார் - இறப்பையே அவர் அறிவதில்லை. இறப்பை அறிவதற்காக ஆற்றல் எதுவும் அவரிடம் மிச்சமிருப்பதில்லை. இறப்பை அறிவதற்கு அங்கு யாரும் இருப்பதில்லை. வாழ்வை மிக ஆழமாக நீங்கள் வாழும்போது சாவு மறைகிறது. மேலோட்டமாக நீங்கள் வாழும் போது மட்டுமே சாவு வருகிறது. ஈடுபாட்டோடு நீங்கள் வாழும்போது சாவுகூட வாழ்வாக ஆகிறது; ஏனோதானோவென்று நீங்கள் வாழும்போது வாழ்வுகூட சாவாக ஆகிறது. சிலுவை ஒரு சமயச் சின்னமாக இருக்கக்கூடாது.

இந்தியாவில் நாங்கள் ஒருபோதும் சிலுவை போன்ற பொருள் களை சமய அடையாளங்களாக ஆக்கியதில்லை. கண்ணனின் குழல் அல்லது சிவனின் நடனம் போன்றவைதாம் எங்களிடமிருக்கும் சின்னங்கள். ஒரு சமய உணர்வு எப்படி வளரவேண்டும் என்பதை

புரிந்துகொள்ள எப்போதாவது நீங்கள் விரும்பினால், கிருஷ்ணனைப் புரிந்துகொள்ளப் பாருங்கள். அவன் கோலாகலமாக இருக்கிறான், கொண்டாட்டமாக இருக்கிறான், ஆடல்பாடலாக இருக்கிறான். வாழ்வை காதலிப்பவன் அவன். தன் உதடுகளில் இசைக்குழலோடும் ஒரு பாட்டோடும் இருக்கிறவன். கிறிஸ்துவும் உண்மையில் கிருஷ்ணனைப் போன்றவர்தான். உண்மையில் கிறிஸ்து என்னும் சொல்லே கிருஷ் ணரில் இருந்து வந்ததுதான். யேசு என்பது அவர் பெயர். யேசு என்னும் கிருஷ்ணர். யேசு என்ற கிறிஸ்து. கிருஷ்ணனுக்கு பல அம்சங்கள் உண்டு. இந்தியாவில் உள்ள வங்கத்தில் அவன் கிறிஸ்தோ. கிறிஸ்தோ என்பது கிரேக்கத்தில் கிறிஸ்தோஸ் ஆகிறது. அங்கிருந்து போய் கிறிஸ்து ஆகியது. யேசுவும் கண்ணனைப் போன்ற ஒரு ஆளாகவே இருந்திருக்க வேண்டும். ஆனால் அவர் ஒரு தடவைகூட சிரித்தது இல்லை என்று கிறிஸ்தவர்கள் சொல்கிறார்கள். இது அபத்தமாகவே தோன்றுகிறது. யேசுவால் சிரிக்க முடியாவிட்டால் பின் வேறு யாரால் முடியும்? அவரை கடுமையான இறுக்கமான முகபாவனையுடன் அவர்கள் வரைந்திருக்கி றார்கள். அவர் சிரித்தே இருக்கவேண்டும்! உண்மையில் பெண்களையும் மதுபானங்களையும் அவர் விரும்பினார்; அதுவே பிரச்சனையாகிவிட்டது. அதனால்தான் யூதர்கள் அவரை சிலுவையில் அறைந்தார்கள். மரிய மதலேனா முதலான பல பெண்களை அவர் நேசித்தார். அவர்களில் மரிய மதலேனாள் ஒரு விலைமகள். அரிதான – மிகவும் அபூர்வமான ஒரு ஆன்மீகராகத்தான் யேசு இருந்திருக்க வேண்டும். உணவு உண்பது அவ ருக்கு மிகவும் பிடித்தமானது. விருந்துகளை அவர் எப்போதும் விரும்பி சுவைத்திருக்கிறார். மேலும் கிறிஸ்துவுடன் சேர்ந்து சாப்பிடுவது மறு உலகின் ஒரு சுவையை வழங்குவதாகவே இருந்திருக்க வேண்டும்.

இப்படி நடந்தது: சிலுவையில் யேசு இறந்துவிட்டார், மூன்று நாட்களுக்குப் பின் அவர் உயிரோடு வந்துவிட்டார் என்று சொல்கிறார்கள் – மிகவும் அழகான ஒரு கதை அது. அவர் உயிர்த்துவிட்டார். மரிய மதலேனாதான் அவரை முதலில் பார்க்கிறாள். ஏன்? ஏனெனில் அன்பின் கண்களால் மட்டுமே உயிர்ப்பை விளங்கிக்கொள்ள முடியும். ஏனெனில் அன்பான கண்கள்தான், உள்ளே இருப்பதை - அழியாத பொருளை காணமுடியும். ஆண் சீடர்கள் அங்கே அருகில் நின்று கொண்டிருந்த யேசுவை தாண்டிச் சென்றார்கள். அவர்கள் பார்ப்பதில்லை. இந்த குறியீடு அழகானது: அழிவில்லாத அந்தராத்மாவை அன்பால் மட் டுமே பார்க்கமுடியும். அப்படியே மரியமதலேனா ஊருக்குள் வந்து சனங்களிடம் சொன்னபோது, அவளுக்கு மூளை கலங்கிவிட்டது என்றே அவர்கள் நினைத்தார்கள். ஒரு பெண்ணை யார் நம்புவார்? அன்புக்கு அறிவில்லை, காதலுக்கு கண்ணில்லை என்பார்கள் மக்கள். யாரும் நம்ப மாட்டார்கள். யேசுவின் நெருங்கிய சீடர்களான

அப்போஸ்தலர்களும்கூட அவள் சொன்னதைக் கேட்டு சிரித்தார்கள். ''உனக்கு என்ன கிறுக்கு பிடித்து விட்டதா? நாங்களே பார்த்தால் மட்டுமே நம்புவோம்.''

அதன்பின் இரண்டு சீடர்கள் பக்கத்து ஊருக்கு போய்க் கொண்டிருந்தார்கள். அப்போது யேசு அவர்களைப் பின்தொடர்ந்தார். அவர்களுடன் பேசினார். அவர்களும் யேசுவின் சிலுவை மரணத்தைப்பற்றியும் அதன்பின் நடந்ததைப்பற்றியும் அவருடன் பேசினார்கள். அவர்கள் மிகவும் கலக்கமடைந்து இருந்தார்கள். யேசு அவர்களுடன் நடந்து வந்தார். அவர்களுடன் பேசிக்கொண்டு வந்தார். ஆனால் அவர்களால் அவரை கண்டு கொள்ள முடியவில்லை. பின் அவர்கள் நகரை அடைந்தார்கள். புதியவரை தம்முடன் உணவு கொள்ள அழைத்தார்கள். யேசு ரொட்டியை பகிர்ந்த போதுதான் திடீரென அவரை அவர்கள் அடையாளம் கண்டுகொண்டார்கள். ஏனெனில் வேறுயாரும் ரொட்டியை அந்த முறையில் பிட்டிருக்க முடியாது - அது யேசுவால் மட்டுமே முடியும்.

எனக்கு மிகமிகப் பிடித்த ஒரு கதை இது. அவர்கள் பேசினார்கள், ஆனாலும் கண்டுபிடிக்க முடியவில்லை. பல மைல் தூரம் ஒன்றாக நடந்தார்கள், அப்போதும் தெரியவில்லை. ஆனால் யேசு அப்பத்தைப் பங்கும் அந்த பாங்கே திடீரென.. ஏனெனில் அந்த அளவு நன்றி கலந்த பிரியத்தோடு அப்பத்தை பங்கிடும் - உணவை உட்கொள்ளும் - வேறு எவரையும் ஒருபோதும் அவர்கள் கண்டதில்லை. திடீரென அவர்கள் அடையாளம் கண்டு விட்டார்கள். ''நீர்தான் உயிர்த்த யேசு என்பதை ஏன் எங்களுக்கு முன்னமே சொல்லவில்லை?'' என்றார்கள். அந்த பாங்கே....

ஆனால் இந்த மனிதர்தான் ஒருதரம்கூட சிரித்ததில்லை என்கிறார்கள் கிறிஸ்தவர்கள். யேசுவை முற்றிலுமாக சிதைத்து - திரித்து விட்டிருக்கிறார்கள் கிறிஸ்தவர்கள். மேலும் எப்போதாவது அவர் திரும்பி வந்தாலும் அவரை தம் சர்ச்சுகளுக்குள் அவர்கள் அனுமதிக்க மாட்டார்கள்.(ஆனால் இந்த கிறிஸ்தவர்கள் இருக்கும்போது அவரும் வரமாட்டார் என்றே நான் நினைக்கிறேன்).

என்னைச் சுற்றிலும்கூட இதுவே நடக்கமுடியும். நான் போனதுமே இறுகிய மனிதர்கள் ஆபத்தானவர்களாக ஆகிறார்கள். அவர்கள் உரிமை எடுத்துக்கொள்ள முடியும். ஏனெனில் பொருள்களை உடைமை கொள்ளும் தேடலிலேயே எப்போதும் அவர்கள் இருக்கிறார்கள். எனக்குப் பின் அவர்கள் பொறுப்புக்கு வரக்கூடும். அந்நிலையில் அவர்கள் அழித்து விடுவார்கள். எனவே இதை நினைவில் கொள்ளுங்கள். ஒன்றும் தெரியாத மனிதர்கூட எனக்குப் பின் பொறுப்புக்கு வரலாம்; ஆனால் அவர் சிரிக்கவும் கொண்டாடவும் முடியக்கூடியவராக இருந்தாக வேண்டும். எவராவது ஒருவர் தான் ஞானமடைந்துவிட்டதாக

உரிமைகொண்டாடினால் கூட அவர் முகத்தை மட்டும் பாருங்கள்: அது இறுக்கமாக இருந்தால் எனக்குப் பின் அவர் பொறுப்பேற்பவராகக் கூடாது. இதுவே அளவுகோலாக இருக்கட்டும். ஒரு முட்டாள்கூட வரலாம் — ஆனால் அவர் சிரிக்கவும் களிக்கவும் வாழ்வை கொண்டாடவும் கூடியவராக இருக்கவேண்டும். ஆனால் இறுக்கமான மனிதர்கள் தான் எப்போதும் அதிகாரத்தை நாடுபவர்களாக இருக்கிறார்கள் — அது தான் சிக்கல். வாழ்க்கையே மிக நன்றாகத்தான் உள்ளது. இதில் போப்பானவர் ஆவதற்கு யார் அலட்டிக்கொள்வார்? எளிய மக்கள், தம் எளிய வழிகளில் மகிழும் மக்கள், அரசியல் மீது ஆவல் கொள்வதில்லை.

ஞானமடைந்த ஒருவர் உடலில் இருந்து மறைந்ததுமே, உடனடியாகவே, அவருடைய இடத்தைப்பிடிக்க இறுகிய மனிதர்கள் சண்டைபிடிக்கிறார்கள். மேலும் எப்போதும் அவர்கள் அழித்தே இருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் தவறான மனிதர்கள். ஆனால் தவறான மனிதர்கள்தான் எப்போதும் பேராசை பிடித்தவர்களாக இருக்கிறார்கள். சரியான மனிதர்கள் மட்டுமே பேராசைக்காரர்களாக இருப்பதில்லை. ஏனெனில் இருத்தலே அபரிமிதமாக வழங்கிக் கொண்டிருக்கிறது. எனவே அரசியல் தலைவராக சமயத் தலைவராக - அல்லது வேறு ஏதாவதாக ஆவதற்கான பேராசை கொள்வதற்கு எந்த தேவையும் இல்லை. வாழ்வே மிகவும் அழகாக உள்ளது. அதற்குமேல் எதுவும் வேண்டியதில்லை. ஆனால் மகிழ்ச்சியை அனுபவித்திராத மக்கள் அதிகாரத்தில் மகிழ்கிறார்கள். அன்பை தவறவிடும் மக்கள் கவுரவத்தில் இன்பம் காண்கிறார்கள். வாழ்வின் ஆட்டத்தையும் கொண்டாட்டத்தையும் எவ்வாறோ தவறவிடும் மனிதர்கள்தான் போப்புகளாக ஆக விரும்புகிறார்கள் - உயிர் அதிகாரத்தை வென்று மக்களை கட்டுப்படுத்த ஆசைப்படுகிறார்கள். அப்படிப்பட்டவர்களைக் குறித்து எச்சரிக்கையாய் இருங்கள். எப்போதுமே அவர்கள் அழித்துவிடுகிறவர்களாகவே - நஞ்சு வைக்கிறவர்களாகவே இருந்து வந்திருக்கிறார்கள். புத்தரை அவர்கள் அழித்தார்கள். கிறிஸ்துவை அவர்கள் அழித்தார்கள். முகமதுவை அவர்கள் அழித்தார்கள். இவர்களே எப்போதும் சூழ்ந்திருக்கிறார்கள். இவர்களை விலக்குவது கடினம். மிகமிக கடினம். ஏனெனில் அவர்கள் மிகவும் இறுக்கமானவர்களாக இருப்பதால்....அவர்களை நீங்கள் விலக்கிவிட முடிவதில்லை.

ஆனால் நான் எப்போதும் மகிழ்ச்சியையே, ஆனந்தத்தையே, ஆட்டபாட்டமான வாழ்வையே, இன்பம் அனுபவிப்பதையே ஆதரிக்கிறேன் என்று உங்களுக்கு நான் உறுதி கூறுகிறேன். ஏனெனில் என்னைப் பொறுத்தவரை அதுமட்டுமே ஒரே வழிபாடு. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது, மகிழ்ச்சியால் நிரம்பி வழியும்போது அதுவே வழிபாடாக இருக்கிறது. அதைத்தவிர வேறு ஒரு வழிபாடு இல்லை. உங்கள்

வாழ்க்கைச் செயல்பாட்டை மட்டுமே இருத்தல் கவனிக்கிறது, உங்கள் வார்த்தை வெளிப்பாட்டை அல்ல. நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பது முக்கியமில்லை; நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள்.... கடவுள் உள்ளது என உண்மையாகவே நீங்கள் உணர்ந்தால், கொண்டாடுங்கள். அதன்பின் ஒரு கணத்தைக்கூட இழப்பதில் எந்த பொருளுமில்லை. கடவுள் இருப்பதாக நீங்கள் உணர்ந்தால் நடனமாடுங்கள், முழு மூச்சாக நடனமாடுங்கள். ஏனென்றால் நீங்கள் ஆடிப்பாடி மகிழ்ந்திருக்கும் போது மட்டுமே - அல்லது அமைதியாகவே நீங்கள் அமர்ந்திருந்தாலும் கூட - உங்கள் உயிரின்சூழ்நிலையே, எவ்வளவோ நிறைந்த சமா தானத்தை, வாழ்க்கை பற்றிய ஆழமான நிறைவை அளிக்கிறது. அது தான் வழிபாடு. நீங்கள் நன்றி தெரிவித்துக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களின் நன்றியறிதலே உங்களின் வழிபாடாகும். சீரிய மனத்தவர்? சீரிய மனத்தவர் எந்த காலத்திலாவது பரலோகம் சென்றாக ஒரு போதும் நான் கேள்விப்பட்டதில்லை; அவர்களால் முடியாது.

ஒருமுறை இப்படி நடந்தது - ஒரு பாவி இறந்து சொர்க்கத்தை அடைந்தான். அதே நாளில் ஒரு புனிதரும் இறந்தார். அவரை தேவதூதர் கள் நரகத்தை நோக்கி அழைத்துச் செல்ல தொடங்கினார்கள். புனிதர் சொன்னார், ''பொறுங்கள்! எங்கோ ஏதோ பிழை நேர்ந்திருக்க வேண்டும். அந்த பாவியை நீங்கள் சொர்க்கத்துக்கு எடுத்துச் சென்றீர்கள். அவனை நான் நன்றாக அறிவேன்! இருபத்து நான்கு மணி நேரமும் நான் கடவுளை நோக்கி தியானித்துக் கொண்டும் செபித்துக்கொண்டும் இருந்தேன். என்னைப் போய் நரகத்துக்கு கூட்டிச் செல்வதா? கடவுளிடமே இதைப்பற்றி நேரில் கேட்க விரும்புகிறேன். என்ன இது, இதுதான் உன் நீதியா என்று கேட்க விரும்புகிறேன்.'' எனவே அவரை கடவுளிடம் அழைத்துச் சென்றார்கள். அவர் புலம்பினார், ''சிறிது கூட நம்ப முடியாததாக இருக்கிறது இது — அந்த பாவி.... அவனை எனக்கு நன்றாக தெரியும். என் இடத்துக்கு பக்கத்தில்தான் அவன் இருந்தான். ஒருநாள்கூட அவன் செபித்ததில்லை. தன் வாழ்நாளில் ஒரே ஒரு தடவையாவது உமது பெயரை அவன் உச்சரித்ததில்லை. நானோ இருபத்து நான்கு மணி நேரமும் செபித்துக்கொண்டு இருந்திருக்கிறேன்... என் தூக்கத்தில் கூட விடாமல் நான் ராம் - ராம் - ராம் என்று செபித்து வந்திருக்கிறேன். ஆனால் இப்போது நடப்பது என்ன?''

இதற்கு கடவுள் சொன்னாராம்: ''இடைவிடாத உன் ராமநாமத்தால் நீ என்னை சலிப்பினாலேயே சாகுமளவுக்கு செய்தவிட்டாய். ஏறக்குறைய நீ என்னை கொன்றே போட்டாய். என் அருகில் எங்கும் நீ இருப்ப தையே நான் விரும்பவில்லை. நினைத்துப்பார் - இருபத்து நான்கு மணி நேரமும்! ஒரே ஒரு நொடி நேர நிம்மதியைக்கூட நீ எனக்கு தரவில்லை. இந்த மனிதன் நல்லவன். குறைந்தது அவன் என்னை தொந்தரவு

செய்யவில்லை. ஒருபோதும் அவன் செபித்ததில்லை என்பதை நான் அறிவேன். ஏனென்றால் அவனுடைய வாழ்க்கை முழுவதுமே ஒரு வழிபாடாகவே இருந்தது. உன் கண்களுக்கு அவன் ஒரு பாவிபோல் தோன்றுகிறான். ஏனென்றால் செபிப்பதுவும் வார்த்தைகளால் உளறுவதுமே புண்ணியம் என்று நீ நினைக்கிறாய். அவன் வாழ்ந்தான் - மகிழ்ச்சியாக வாழ்ந்தான். எப்போதுமே நல்லவனாக அவன் இல்லாதிருக்கலாம்; ஆனால் எப்போதுமே மகிழ்ச்சியானவனாக அவன் இருந்தான், எப்போதுமே ஆனந்தமாக அவன் இருந்தான். அங்கொன்றும் இங்கொன்றுமாக சில தவறுகள் அவன் செய்திருக்கலாம். ஆனால் தவறுவது மனித குணம்தான். ஆனால் அவனிடம் 'தான்' என்ற ஆணவம் இருக்கவில்லை. ஒருநாளும் அவன் வழிபாடு செய்ததில்லை. ஆனால் அவனது உயிரின் உள்ஆழத்தில் எப்போதும் ஒரு நன்றியறிதல் இருந்தது. வாழ்வில் அவன் இன்பம் கண்டான் — அதனிடம் அவன் நன்றி உணர்வுடன் இருந்தான்.''

நினைவில் கொள்ளுங்கள்; இறுக்கமான மனிதர்கள் எல்லாரும் நரகத்திலேயே இருக்கிறார்கள். இறுக்க குணத்தை சாத்தான் வெகுவாக விரும்புகிறான். சொர்க்கம் மாதா கோயிலைப்போல் இருக்காது. அப்படி அது இருந்தால் அறிவுள்ள எவரும் ஒருபோதும் சொர்க்கத்துக்கு போகமாட்டார்கள். அந்நிலையில் நரகத்துக்கு போவதே மேல். சொர்க்கம் என்பது வாழ்வு - கோடி மடங்கு வாழ்வு.

''என்னிடம் வாருங்கள், நான் உங்களுக்கு அளவற்ற வாழ்வை அளிப்பேன்'' என்று தன் சீடர்களிடம் கூறுகிறார் யேசு. சொர்க்கம் ஒரு கவிதை; முடிவடையாத ஒரு பாடல்; பாய்ந்து கொண்டே இருக்கும் ஒரு ஆறு; இடைவிடாத ஒரு கொண்டாட்டம். இங்கே நீங்கள் என்னுடன் இருக்கும்போது இறுக்கமானவர்களாக இருந்தால் என்னை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில் அந்நிலையில் தொடர்பு ஏற்படாது. நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் மட்டுமே என் பக்கத்தில் நீங்கள் இருக்க முடியும். மகிழ்ச்சியின் வழியாக பாலம் உருவாகிறது இறுக்கத் தன்மையின் வழியாக எல்லா பாலங்களும் உடைபடுகின்றன. ஒரு தீவாக - நெருங்கமுடியாதவராக நீங்கள் ஆகிறீர்கள்.

**நான்காம் கேள்வி:**

**சில நேரங்களில் நான் விழிப்பாக உணர்கிறேன். சில நேரங்களில் அப்படி இல்லை. விழிப்புணர்வு துடிப்பதாக தோன்றுகிறது. இந்த துடிப்பு மெதுவாக மறைகிறதா அல்லது திடீரென போய்விடுகிறதா?**

வாழ்க்கையில் ஒவ்வொன்றுமே ஒரு இயக்க ஒழுங்குடன்தான் இருக்கிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள் - அதைத் தொடர்ந்து வருத்தம் வருகிறது. இரவை பகல் தொடர்கிறது. கோடையை குளிர்

தொடர்கிறது. இரண்டு எதிர் நிலைகளுக்கு இடையிலான இயக்க ஒழுங்கே வாழ்க்கை. விழிப்பானவர் ஆவதற்கு நீங்கள் முயலும் போதும் அதே ஒழுங்கு இருக்கும்; சில நேரங்களில் நீங்கள் விழிப் பாக இருக்கிறீர்கள்; சில நேரங்களில் இருப்பதில்லை.

எனவே இதை ஒரு சிக்கலாக ஆக்காதீர்கள். ஏனெனில் சிக்கல்களை உருவாக்குவதில் நீங்கள் எப்பேர்ப்பட்ட விற்பன்னர்கள் என்றால், சிக்கலுக்கே இடமற்ற இடத்தில் இருந்துகூட ஒரு சிக்கலை உருவாக்க உங்களால் முடிகிறது! மேலும் ஒருதடவை ஒரு சிக்கலை நீங்கள் உரு வாக்கி விட்டபின் அதை நீங்கள் தீர்க்க விரும்புகிறீர்கள். உடனே உங்களுக்கு தீர்வுகளை வழங்கும் ஆள்கள் வருவார்கள். தவறான சிக்கலுக்கு எப்போதும் ஒரு தவறான தீர்வுதான் கிடைக்கிறது. அதன்பிறகு அப்படியே அது முடிவின்றி தொடர முடியும். பின் தவறான ஒரு தீர்வு மறுபடியும் சிக்கல்களை உருவாக்குகிறது. தவறான சிக்கல்களை உருவாக்கிவிடாதபடி தொடக்கத்தில் இருந்தே ஒருவர் விழிப்பாக இருக்க வேண்டி இருக்கிறது. இல்லாவிட்டால் வாழ்க்கை முழுவதும் மேலும் மேலும் தவறான திசையிலேயே போகிறது. சிக்கலை உருவாக்கிவிடக் கூடாது என்பதை புரிந்துகொள்ள எப்போதும் முயலுங்கள். ஒவ்வொன்றும் ஒரு இயக்க ஒழுங்கில் துடிக்கிறது. மேலும் 'ஒவ்வொன்றும்' என நான் கூறும்போது ஒவ்வொன்றையுமே நான் குறிக்கிறேன்: அன்பு - பின்பு வெறுப்பு; விழிப்புத்தன்மை - பின் விழிப்பற்ற தன்மை. எந்த சிக்கலையும் உருவாக்காதீர்கள்; இரண்டையும் அனுபவியுங்கள்.

விழிப்பாக இருக்கும்போது விழிப்புத்தன்மையை அனுபவியுங்கள். விழிப்பற்று இருக்கும்போது விழிப்பற்ற தன்மையை அனுபவியுங்கள். எதுவுமே தவறானதல்ல. ஏனெனில் விழிப்பற்ற தன்மை என்பது ஓய்வெடுப்பதைப்போல. இல்லாவிட்டால் விழிப்புத்தன்மை ஒரு இறுக்கமாக மாறிவிடும். இருபத்து நான்கு மணி நேரமும் நீங்கள் விழித்திருந்தால் எத்தனை நாள்களுக்கு நீங்கள் உயிரோடு இருக்க முடியும் என்று நினைக்கிறீர்கள்? உணவில்லாமல் மூன்று மாதங்கள் வரை ஒருவர் உயிர்பிழைத்திருக்கமுடியும். உறக்கமில்லாதிருந்தால் மூன்று வாரத்துக்குள் ஒருவர் பைத்தியமாகி விடுவார்; தற்கொலை செய்துகொள்ள அவர் முயல்வார். பகலில் நீங்கள் கண்காணிப்பாக இருக்கிறீர்கள். இரவில் நீங்கள் இளைப்பாறுகிறீர்கள். அந்த ஓய்வானது மறுபடியும் பகலில் நீங்கள் அதிக கண்காணிப்பாக - சுறுசுறுப்பாக இருக்க உங்களுக்கு உதவுகிறது. ஓய்வு நேரத்தின் வழியாக ஆற்றல்கள் வந்து சேர்ந்து கொள்கின்றன. காலையில் மீண்டும் அதிக உயிர்த்துடிப்புடன் நீங்கள் இருக்கிறீர்கள்.

தியானத்திலும் இதுவே நிகழும்: சில கணங்களுக்கு நீங்கள் முற்றி லும் விழிப்பாக உச்சத்தில் இருக்கிறீர்கள். சில கணங்களுக்கு நீங்கள் முற்றிலும் இளைப்பாறியபடி பள்ளத்தில் இருக்கிறீர்கள் - விழிப்புத்

தன்மை மறைந்திருக்கிறது. அதை நீங்கள் மறந்திருக்கிறீர்கள் - இதுவே திரும்பத் திரும்ப நிகழ்கிறது. இரண்டிலும் நீங்கள் இன்பம் காண முடிந்தால் மூன்றாவதான ஒன்றாக நீங்கள் ஆகிறீர்கள். அதுவே விளங்கிக் கொள்ள வேண்டிய விசயம். இரண்டையுமே மகிழ்ச்சியுடன் அனுபவிக்க உங்களால் முடிந்தால் அதன் பொருள் நீங்கள் அந்த இரண்டுமல்ல என்பதாகும் நீங்கள் விழிப்புத் தன்மையும் அல்ல, விழிப்பற்ற தன்மையும் அல்ல; அந்த இரண்டையும் அனுபவிக்கும் ஒன்றே நீங்கள். வெளியிலிருந்து ஒன்று உள்ளே வந்திருக்கிறது. உண்மையில் இதுதான் நிசமான வளர்ச்சியாகும். மகிழ்ச்சியை அனுபவியுங்கள். மகிழ்ச்சி போனபின் நீங்கள் வருத்தமாக இருந்தால் அதில் என்ன தவறு? வருத்தமாக இருப்பதில் என்ன பிழை? அதையும் அனுபவியுங்கள். வருத்தத்தில் மகிழ்ச்சி காண முடிபவராக நீங்கள் ஆனதுமே இரண்டுமாகவும் நீங்கள் இருப்பதில்லை.

மேலும், நான் உங்களுக்கு சொல்லுகிறேன்: உங்களால் அனுபவிக்க முடிந்தால், சோகத்திலும் அதற்கே உரிய அழகுகள் உள்ளன. மகிழ்ச்சி என்பது ஓரளவு ஆழமற்றதுதான். வருத்தமோ அதிக ஆழமானது. ஒருபோதும் வருத்தப்பட்டிராத மனிதர் ஆழமற்றவராகவே இருப்பார், மேம்போக்கானவராகவே இருப்பார். வருத்தம் காரிருள் போன்றது - மிகவும் ஆழமானது. இருளுக்கு ஒரு அமைதி தன்மை இருக்கிறது - வருத்தத்திலும் அது இருக்கிறது. மகிழ்ச்சியோ கொப்பளிக்கிறது. அதில் ஒரு ஓசை எழுகிறது. மலைகளில் பாயும் ஆறு போன்றது அது. சலசலப்பு உண்டாகிறது. ஆனால் மலைகளில் ஆறு ஒருபோதும் அதிக ஆழமாக இருக்க முடியாது. எப்போதும் அது ஆழமற்றதாகவே இருக்கிறது. ஆறு சமவெளிக்கு வரும்போது அது அதிக ஆழமாக ஆகிறது, அதன் ஆரவாரம் அடங்குகிறது. அது நகராதது போல் நகர்கிறது. சோகத்தில் ஓர் ஆழம் உள்ளது.

ஏன் தொல்லையை உருவாக்குகிறீர்கள்? மகிழ்ச்சி ஏற்படும்போது மகிழ்ச்சியாக இருங்கள். அதில் இன்பம் காணுங்கள். அதனுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். மகிழ்ச்சியாக இருங்கள் எனநான் கூறும்போது அதில் இன்பம் காணுங்கள் என்றே கூறுகிறேன். இயங்கவும் மாறவும் கூடிய ஒரு சூழலாக அது இருக்கட்டும். காலை மதியமாக மாறுகிறது. மதியம் மாலையாக மாறுகிறது. பிறகு வருகிறது இரவு. மகிழ்ச்சித்தன்மை உங்களைச் சூழ்ந்துள்ள ஒரு சூழ்நிலையாக அமையட்டும். அதில் இன்பம் காணுங்கள். பின் வருகிறது வருத்தம்... அதிலும் இன்பம் காணுங்கள். சூழ்நிலைமை எதுவானாலும் அதில் இன்பம் காண்பதையே உங்களுக்கு நான் போதிக்கிறேன். அமைதியாக அமர்ந்து வருத்தத்தை அனுபவியுங்கள். திடீரென வருத்தம் வருத்தமாக இல்லாமல் போகிறது. அமைதியான - சமாதானம் நிரம்பிய ஒரு கணமாக,

தன்னிலேயே அழகான ஒரு கணமாக, எந்த குறையுமற்றதாக ஆகியிருக்கிறது.

அதன்பின் நடப்பதுதான் அறுதிநிலை ரசவாதம். அந்த நிலையில் தான் திடீரென நீங்கள் இரண்டுமில்லை — மகிழ்ச்சியுமில்லை, வருத்தமு மில்லை - என்பதை உணர்கிறீர்கள். இரண்டையும் கவனித்திருப்பவரே நீங்கள். சிரகங்களை நீங்கள் கவனிக்கிறீர்கள். பள்ளத்தாக்குகளை நீங்கள் கவனிக்கிறீர்கள். ஆனால் அந்த இரண்டும் அல்ல நீங்கள்.

இந்த நிலை அடையப்பட்டதுமே ஒவ்வொன்றையும் நீங்கள் கொண்டாட முடிகிறது. வாழ்வை நீங்கள் கொண்டாடுகிறீர்கள், சாவைக் கொண்டாடுகிறீர்கள். மகிழ்ச்சியைக் கொண்டாடுகிறீர்கள், வருத்தத்தைக் கொண்டாடுகிறீர்கள். ஒவ்வொன்றையும் நீங்கள் கொண்டாடுகிறீர்கள். அதன்பின் எந்த துருவத்துடனும் உங்களை நீங்கள் அடையாளப்படுத்திக் கொள்வதில்லை. ஒரே நேரத்தில் இருதுருவங்களும் உங்களுக்கு இயல் பாக கிடைப்பனவாக ஆகியுள்ளன. ஒன்றிலிருந்து மற்றதற்கு எளிதாக நீங்கள் இயங்க முடிகிறது. நீர்மம்போல் நீங்கள் ஆகியிருக்கிறீர்கள்; பாய்கிறீர்கள். அந்நிலையில் இரண்டையும் நீங்கள் பயன்படுத்த முடியும். உங்கள் வளர்ச்சிக்கு இரண்டும் ஒரு உதவியாக ஆகமுடியும்.

இதை நினைவில் கொள்ளுங்கள்: சிக்கல்களை உருவாக்காதீர்கள். சூழ்நிலையை புரிந்துகொள்ள முயலுங்கள். வாழ்வின் துருவத் தன்மையை புரிந்துகொள்ள முயலுங்கள். கோடைகாலம் வெப்பமாக இருக்கிறது. குளிர்காலத்தில் குளிராக இருக்கிறது - இதில் சிக்கல் எங்கே இருக்கிறது? குளிர்காலத்தில் குளிரில் இன்பம் காணுங்கள். வெயில்காலத்தில் சூட்டில் இன்பம் காணுங்கள். கோடையில் சூரியனில் இன்பம் காணுங்கள். இரவில் விண்மீன்களிலும் இருட்டிலும் இன்பம் காணுங்கள். பகலில் சூரியனிலும் வெளிச்சத்திலும் இன்பம் காணுங்கள். என்ன நடந்தாலும் மகிழ்ச்சியாக இருப்பதையே உங்களின் தொடர்ச்சியான தன்மையாக ஆக்குங்கள். எது எப்படி இருந்தாலும் எப்போதும் நீங்கள் மகிழ்வாகவே இருங்கள். இதை முயன்று பாருங்கள். திடீரென ஒவ்வொன்றும் உருமாறுகிறது - நிலைமாறுகிறது.

**ஐந்தாவது கேள்வி:**

**ஒருவரால் அன்பு செய்ய முடியாவிட்டால் தியானம் அவரை அன்புக்கு இட்டுச் செல்லும் என்றும் ஒருவரால் தியானம் செய்ய முடியாவிட்டால் அன்பு அவரை தியானத்துக்கு இட்டு செல்லும் என்று சமீபத்தில் தான் நீங்கள் சொன்னீர்கள். உங்கள் மனத்தை நீங்கள் மாற்றிக் கொண்டுவிட்டீர்கள் போல் தோன்றுகிறது.**

மாற்றிக்கொள்வதற்கு என்னிடம் ஒன்றுமில்லை. உங்களிடம் ஒன்று இருந்தால்தான் அதை நீங்கள் மாற்றிக்கொள்ள முடியும். உங்களில் ஒன்றும் இல்லாதபோது எப்படி அதை உங்களால் மாற்றிக் கொள்ள முடியும்?

மேலும் எந்த இரண்டு கணங்களையும் ஒப்பிட்டுப் பார்க்க ஒரு போதும் முயலாதீர்கள். ஏனெனில் ஒவ்வொரு கணமும் அதனளவில் தனிச்சிறப்பானது. ஆம். சில நாள்களில் நான் பனிக்காலம்போல் இருக்கிறேன். சில நாள்களில் நான் வெயில்காலம்போல் இருக்கிறேன். ஆனால் என் மனதை நான் மாற்றிக் கொள்வதில்லை - ஏனெனில் என்னிடம் அப்படி எதுவுமில்லை.

இப்படித்தான் இது நிகழ்கிறது: நீங்கள் ஒரு கேள்வி கேட்கிறீர்கள். முன்பே ஆயத்தம் செய்த பதில்கள் ஏதும் என்னிடம் இல்லை. நீங்கள் கேள்வி கேட்கிறீர்கள். நான் பதிலளிக்கிறேன். என் கடந்தகால வாசகங்களுடன் நான் பொருந்திப்போகிறேனா இல்லையா என்பதை நான் நினைப்பதில்லை. கடந்த காலத்தில் நான் வாழ்வதில்லை. வருங் காலத்தையும் நான் நினைப்பதில்லை - அதாவது எதை நான் சொன்னாலும், வருங்காலத்திலும் அதையே என்னால் திரும்பவும் சொல்ல முடியுமா என நான் யோசிப்பதில்லை. எனக்கு கடந்த காலமும் இல்லை, வருங்காலமும் இல்லை.

இந்த கணத்தில் நீங்கள் ஒரு கேள்வி கேட்கிறீர்கள். அப்போது எது வேண்டுமானாலும் நடக்கிறது; நான் பதிலளிக்கிறேன். அது வெறும் ஒரு பதில்தான், விடை அல்ல. மறுநாள் மறுபடியும் நீங்கள் அதே கேள்வியைக் கேட்கிறீர்கள். ஆனால் நான் அதே விதத்தில் பதிலளிக்க மாட்டேன். அதற்கு என்னால் எதுவும் செய்ய முடியாது. முன்பே தயாரித்த கேள்வி பதில்கள் என்னிடம் இல்லை. நான் ஒரு கண்ணாடி போல. எந்த விதமான முகத்தை நீங்கள் கொண்டு வந்தாலும் அது எதிரொளிக்கிறது. நீங்கள் கோபமாக இருந்தால் கோபத்தை அது எதிரொளிக்கிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் மகிழ்ச்சியை அது எதிரொளிக்கிறது. கண்ணா டியிடம் நீங்கள் இப்படி கேட்க முடியாது: ''என்ன ஆயிற்று உனக்கு? நேற்றுதானே உன்முன்னே நான் வந்தபோது ஒரு கோபமான முகத்தை பிரதிபலித்தாய். ஆனால் இன்று உன்முன் நான் வரும்போதோ மிகவும் மகிழ்ச்சியான ஒரு முகத்தை பிரதிபலிக்கிறாய். உனக்கு என்ன ஆயிற்று? உன் மனத்தை நீ மாற்றிக்கொண்டு விட்டாயா?'' என்று நீங்கள் கேட்கமுடியாது. கண்ணாடிக்கு மனம் கிடையாது. கண்ணாடி உங்களை உள்ளவாறே பிரதிபலிக்கிறது - அவ்வளவுதான்.

என் பதிலைவிட உங்கள் கேள்விதான் அதிக முக்கியமானது. உண்மையில் உங்கள் கேள்விதான் அதற்கான பதிலை எனக்குள் உருவாக்குகிறது. ஒரு பாதியை வழங்குபவர் நீங்கள்தான். மறுபாதியோ வெறும் எதிரொளி மட்டும். ஆகவே அது ஒன்றை பொறுத்துள்ளது – உங்களைப் பொறுத்துள்ளது அது. உங்களை சூழ்ந்திருக்கும் மரங்களைப் பொறுத்திருக்கும் அது. இங்குள்ள சூழலைப் பொறுத்திருக்கும். முழு

இருத்தலையும் பொறுத்திருக்கும். ஒரு கேள்வியை நீங்கள் கேட்கிறீர்கள். இதில் நான் ஒன்றுமில்லை - ஒரு வாயில் மட்டுமே. என் வாயிலாக முழுமையே உங்களுக்கு பதிலளிக்கிறது எனலாம். உங்களின் தேவை எதுவாக இருந்தாலும் உங்களுக்கு பதில் வருகிறது. எனவே ஒப்பிட முனையாதீர்கள். முனைந்தால் குழப்பத்தில் மாட்டிக் கொள்வீர்கள்.

ஒரு போதும் ஒப்பிட முயலாதீர்கள். ஒன்று உங்களுக்கு பொருந்தி வருகிறது என நீங்கள் உணரும் போதெல்லாம் பேசாமல் அதை பின்தொடருங்கள், அதை பின்பற்றுங்கள். அதை நீங்கள் செய்தால் அதற்கு பிறகு வருவது எதுவானாலும் அதை உங்களால் புரிந்துகொள்ள முடியும். உங்கள் செயல் உதவும், ஒப்பீடு உதவாது. ஒப்பிட்டுக்கொண்டே போனால் நீங்கள் முழு பைத்தியமாகவே ஆவீர்கள். ஒவ்வொரு கணமும் பல விசயங்களை உங்களுக்கு நான் சொல்லிக்கொண்டே போகிறேன்.

என் வாழ்நாள் முழுவதும் நான் பேசிய பிறகு, பிற்காலத்தில் அவற்றை ஆய்வு செய்பவர்கள் - நான் என்ன சொல்ல வந்தேன் என்பதை பகுத்தறிய முயல்பவர்கள் - முற்றிலும் குழம்பித்தான் போவார்கள். அவர்களால் முடியாமல் போகும். ஏனென்றால் இப்போதே அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது.. அவர்கள் தத்துவர்கள். நான் தத்துவன் அல்ல. உங்கள்மேல் திணிக்க ஒரு குறிப்பிட்ட கருத்து அவர்களிடம் இருக்கிறது. அந்த கருத்தையே திரும்பத்திரும்ப அவர்கள் வலியுறுத்திக் கொண்டு போகிறார்கள். உங்களுக்குள் அவர்கள் புகுத்த விரும்பும் ஏதாவது ஒரு கோட்பாடு அவர்களிடம் இருக்கிறது. குறிப்பிட்ட ஒரு தத்துவத்தால் உங்கள் மனத்தை தளைப்படுத்த அவர்கள் விரும்புகிறார்கள். ஏதோ ஒன்றை உங்களுக்கு அவர்கள் கற்பித்துக்கொண்டு இருக்கிறார்கள்.

நான் ஒரு ஆசிரியன் அல்ல: உங்களுக்கு எதையும் நான் கற்பித்துக்கொண்டு இல்லை. மாறாக - நேர்மாறாக - உங்கள் கற்பிதங்களை களைவதில் உங்களுக்கு உதவவே நான் முயன்று கொண்டிருக்கிறேன்.

எது உங்களுக்கு சரியாக இருக்கிறதோ அதையே பின்பற்றுங்கள். அது மாறாமல் இருக்கிறதா இல்லையா என்பதை நினைக்காதீர்கள். உங்களுக்கு அது ஒத்து வந்தால் உங்களுக்கு அது நல்லதுதான். அதை நீங்கள் கடைப்பிடித்தால் விரைவிலேயே (எனது) மாறுபாடுகள் எல்லாவற்றுக்கும் உள்ளே இருக்கும் என் மாறாமையை உங்களால் உணர்ந்துகொள்ள முடியும். என் வாசகங்கள் மாறிக் கொண்டிருக்கலாம்; ஆனால் நானோ மாறாமலே இருக்கிறேன். மேலும் என் வாசகங்கள் GÀ»Ö J÷µ– »zvÀ C ¸ ¢÷u – அதாவது என்னிடமிருந்தே வருவதால் அவையும் மாறாதவையாகத்தான் இருக்கவேண்டும். ஒரே மூலத்திலிருந்தே அவை வருகின்றன என்னும்போது வேறு எப்படி அது இருக்கமுடியும்? அவற்றின் வடிவங்கள் மாறுபடலாம், வார்த்தைகள்

மாறுபடலாம்; அடி ஆழத்திலோ ஒரு மாறாத்தன்மை தொடர்ச்சியாக இருந்தாக வேண்டும். ஆனால் அதை நீங்கள் அறிந்து கொள்ள, உங்களுக்குள் நீங்கள் ஆழ்ந்து சென்றால் மட்டுமே முடியும்.

எனவே உங்களுக்கு ஒன்று சரியாக இருந்தால் பின் அதற்கு எதிராக எதையாவது நான் சொல்லி இருக்கிறேனா இல்லையா என்பதைப்பற்றி சிறிதும் கவலைப்படாதீர்கள். உங்கள் பாட்டுக்கு முன்னேறுங்கள், அதில் ஈடுபடுங்கள். அதை நீங்கள் செய்தால் என் மாறாத் தன்மையை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். சும்மா யோசித்துக் கொண்டே இருந்தால் ஒருபோதும் எந்த செயலிலும் உங்களால் ஈடுபட முடியாது. ஏனென்றால் ஒவ்வொரு நாளும் நான் மாறுபட்டுக்கொண்டே போவேன். இதற்கு நான் ஒன்றும் செய்ய முடியாது. ஏனென்றால் ஒருபோதும் மாறாதிருக்கும் கல்மனம், பாறைபோன்ற மனம் என்னிடம் இல்லை.

வானிலை போன்றவன் நான்; கன்மலை போன்றவன் அல்ல. ஆனாலும் நான் முதலில் ஒருமாதிரி சொன்னேன், பிறகு வேறுமாதிரி சொன்னேன் - அவற்றில் எது சரி என்று திரும்பத்திரும்ப உங்கள் மனம் கேட்கவே செய்யும். எது உங்களுக்கு எளிதாக வருகிறதோ அதுதான் உங்களுக்கு சரியானது. எளிதானதே சரியானது. எது உங்களுக்கு பொருத்தமாக இருக்கிறதோ அதுவே உங்களுக்கு சரியானது — எப்போதும் இதுதான் அளவுகோல்.

உங்கள் இருத்தலும் எனது வாசகங்களும் ஒன்றுக்கொன்று ஒத்துவருகிறதா என்ற ரீதியிலேயே எப்போதும் சிந்திக்க முயலுங்கள். அவை ஒத்துப்போகாவிட்டால் கவலைப்படாதீர்கள். அவற்றைப்பற்றி நினைத்து நேரத்தை கடத்தாதீர்கள். மேல்கொண்டு ஆகவேண்டியதை பாருங்கள்; உங்களுக்கு ஒத்துவரும் ஒன்று உங்களிடம் வரும்.

மேலும் நீங்கள் பலராக இருக்கிறீர்கள். எனவே பலருக்காகவும் நான் பேசவேண்டி உள்ளது. அவர்களின் தேவைகள் வெவ்வேறானவை. அவர்களின் ஆளுமைகள் வெவ்வேறானவை. அவர்களின் முன்வினைகள் வெவ்வேறானவை. எல்லாருக்காகவும் நான் பேசியாக வேண்டும். நான் பேசிக்கொண்டிருப்பது உங்களுக்காக மட்டும் அல்ல. நீங்கள் ஒரு சாக்குபோக்கு மட்டுமே. உங்களைச் சாக்கிட்டு முழு உலகத்திடமும் நான் பேசிக் கொண்டிருக்கிறேன். எனவே பல வண்ணங்களில் நான் பேசுவேன், பல வண்ணங்களை நான் பூசுவேன்; பல்வேறு ராகங்களிலும் நான் பாடுவேன். நீங்கள் பேசாமல் உங்களைப்பற்றி மட்டுமே சிந்தியுங்கள் - உங்களுக்கு ஒத்துவரும் ராகத்தில் பாடுங்கள். மற்றவற்றை மறந்து விடுங்கள். அந்த பாடலை இசைப்பதன் வழியாக பையப்பைய உங்களுக்குள் ஒன்று படிமானமாகும்; ஒரு ஒத்திசைவு எழும். அந்த ஒத்திசைவின் வழியாக, அனைத்து மாறுபாடுகளின் அடியிலும்

இருக்கும் என் மாறாத்தன்மையை நீங்கள் விளங்கிக் கொள்ள முடியும்.

மாறுபாடுகள் என்பவை மேல்பரப்பில் மட்டுமே இருக்கமுடியும். ஆனால் என் மாறாத்தன்மையோ வேறுவிதமானது. தத்துவர் ஒருவர் வெளிப்பரப்பில் மாறுபடாமல் இருக்கிறார். எதை எவர் சொன்னாலும் கடந்த காலத்துக்குள் அவர் பார்க்கிறார், தன் கடந்தகால வசனங்களுடன் அதை பொருத்துகிறார். வருங்காலத்துக்குள் பார்க்கிறார். வருங்காலத்துடன் அதை தொடர்புபடுத்துகிறார். வெளிப்பரப்பில் ஒரு சங்கிலித் தொடர்ச்சியை அவர் உருவாக்குகிறார். அவ்விதமான மாறுபடாத தன்மையை என் னில் நீங்கள் காணமுடியாது. நீங்களே வாழ்ந்து பார்க்காத வரை உங்களுக்கு விளங்க கடினமான வேறுவிதமான ஒரு மாறுபடா தன்மை அது...

மாறுபடும் அலைகள் பின்பு மெல்ல மெல்ல மறைகின்றன; அதன் பின் மேல்பரப்பில் புயல் வீசினாலும் வீசாவிட்டாலும் பேரலைகள் குமுறினாலும் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டாலும், அல்லது அலைகளே இல்லாமல் ஒரு சலனம்கூட தோன்றாமல் அமைதியாக இருந்தாலும் எப்போதும் மாறுபடாதிருக்கும் ஒரு பெருங்கடலின் அமைதி தவழும் அடியாழத்துக்கு நீங்கள் வருகிறீர்கள். மேல்பரப்பில் அலை எழுந்தாலும் விழுந்தாலும் எந்த வேறுபாடும் இல்லாமல் அடி ஆழத்தில் பெருங்கடல் மாறுபாடில்லாமல் இருக்கிறது.

எனது மாறாத்தன்மை இருத்தலின் மாறாத்தன்மை; சொற்களின் மாறாத்தன்மை அல்ல. ஆனால் உள்ளே இருக்கும் உங்கள் சொந்த பெரும் கடலுக்குள் நீங்கள் இறங்கும்போதுதான் இதை உங்களால் புரிந்துகொள்ள முடியும். தற்போது இதுபற்றி நீங்கள் அலட்டிக் கொள்ள வேண்டியதில்லை.

ஒருவகை செருப்பு உங்களுக்கு சரியாக இருந்தால் அதை வாங்கி அணிந்துகொள்ளுங்கள். கடையில் இருக்கும் மற்ற வகை செருப்பு களைப்பற்றி கவலைவேண்டாம். அவை உங்களுக்கானவை அல்ல. அவற்றைப்பற்றி அலட்டிக்கொள்ள தேவையில்லை. உங்களுக்காக செய்யப்பட்டவை அல்ல அவை. ஆனால் பல்வேறு வகையான மக்கள் இருக்கிறார்களே. அவர்களைப்பற்றியும் தயவு செய்து நினைத்துப் பாருங்கள். வேறு ஒருவருக்கு அந்த செருப்புகள் சரியாக இருக்கலாம். உங்கள் சொந்த கால்களையும் உங்களுக்கான செருப்பையும் மட்டும் நீங்கள் பாருங்கள். மற்றும் உணருங்கள். ஏனெனில் இது உணர்வு தொடர் பானதுதான், அறிவு தொடர்பானது அல்ல.

நீங்கள் செருப்புக் கடைக்கு போனால் என்ன செய்வீர்கள்? இரண்டு வழிகள் உள்ளன. உங்கள் பாதத்தையும் செருப்பையும் நீங்கள் அளவிட

முடியும் - அது அறிவு வகைப்பட்ட ஒரு முயற்சியாக இருக்கும். சரியாக உள்ளதா இல்லையா என்பதை காண்பதற்கான கணித வகைப்பட்ட முயற்சியாக அது இருக்கும். இரண்டாவது வழி: வெறுமனே செருப்பை காலில் போட்டுப் பார்க்கிறீர்கள். அது சரியாக உள்ளதா இல்லையா என்பதை உணர நடந்து பார்க்கிறீர்கள். சரியாக இருந்தால் நல்லது; சரியான செருப்பு. அதை நீங்கள் மறந்துவிட முடியும். கணக்குப்படி அளவு மிகவும் சரியாக இருக்கலாம், ஆனால் காலுக்கு செருப்பு பொருந்தாமல் போகலாம். ஏனெனில் செருப்புகளுக்கு கணக்கு தெரியாது. அவற்றுக்கு சுத்தமாக படிப்பறிவு கிடையாது. அதைக் குறித்து அலட்டிக்கொள்ள வேண்டாம்.

ஒரு கதை நினைவுக்கு வருகிறது: சராசரியின் விதியை கண்டுபிடித்த ஒரு மாபெரும் கணித மேதை இருந்தார். அவர் ஒரு கிரேக்கர். தன் சொந்த கண்டுபிடிப்பான சராசரியின் விதியை எல்லாவற்றிலும் அவர் பயன் படுத்தினார். ஒருநாள் அவர் ஒரு சுற்றுலா போய்க் கொண்டிருந்தார்... அவருடைய மனைவியும் ஏழு குழந்தைகளும் உடன்போனார்கள். ஒரு ஆற்றை அவர்கள் கடக்க வேண்டி இருந்தது. உடனே அவர் ''பொறுங்கள்'' என்றார். ஆற்றுக்குள் இறங்கினார். நான்கு ஐந்து இடங்களில் ஆற்றின் ஆழத்தை அளந்தார். ஓரிடத்தில் ஆழம் ஒரு அடியாக இருந்தது. ஓரிடத்தில் மூன்று அடியாக இருந்தது. ஓரிடத்தில் அரை அடி மட்டுமே இருந்தது. உங்கள் கணக்குக்கு ஏற்ப ஆறுகள் மாறுவதில்லை. கரைக்கு வந்து கணக்குப் போட்டார். சராசரியை கண்டு பிடித்தார். ஒன்றரை அடி வந்தது. தன் குழந்தைகளை எல்லாம் அளந்தார். சராசரியைக் கண்டு பிடித்தார். இரண்டு அடி வந்தது. ''கவலைப்படாதீர்கள். இறங்கி நடங்கள். ஆற்றின் சராசரி ஆழம் ஒன்றரை அடி. குழந்தைகளின் உயரமோ இரண்டு அடி.'' கணக்கைப் பொறுத்தவரை மிக செம்மை யான கணக்கு. ஆனால் குழந்தைகளும் சரி, ஆறும் சரி, யாரும் கணக்கை கண்டுகொள்வதில்லை.

மனைவி சற்று பயந்தாள். ஏனெனில் பெண்கள் ஒருபோதும் கணக்கு போடுபவர்கள் அல்லர். மேலும், அவர்கள் அப்படி இருப்பதும் நல்லதுதான். ஏனெனில் அவர்கள் ஒரு சமநிலையை பேணிக் கொண்டிருக்கிறார்கள். இல்லாவிட்டால் ஆண் கிறுக்கனாகி விடுவான். அவள் கொஞ்சம் கலக்கமாக காணப்பட்டாள். ''உங்கள் சராசரி விதி எல்லாம் எனக்கு புரியாது. ஆனால் என்னைப் பொறுத்தவரை சில குழந்தைகள் மிகவும் சிறியவர்களாக தெரிகிறார்கள்; ஆறோ அதிக ஆழமாக தெரிகிறது'' என்றாள் அவள். அவர் சொன்னார், ''நீ கவலைப் படாதே. பெரிய பெரிய கணித மேதைகளிடமே நான் என் சராசரி விதியை மெய்ப்பித்து காட்டிவிட்டேன். அதைப்பற்றி ஒரு ஐயத்தை கிளப்ப - சந்தேகப்பட நீ யார்? அது எப்படி வேலை செய்கிறது என்பதை

பேசாமல் பார்.''

கணித மேதை முன்னால் நடந்தார். பயத்தினால் பெண் கடைசியில் வந்தாள். ஏனெனில் அவளுக்கு கலக்கமாக இருந்ததால், குழந்தைகளுக்கு என்ன நேருமோ என்று பார்க்க முடிவதற்காக பின்னால் நடந்தாள்... சில குழந்தைகள், சிறியவை, நீருக்குள் மூழ்கத் தொடங்கின. அவள் கதறினாள், ''பாருங்கள், குழந்தை மூழ்கிக் கொண்டிருக்கிறது!'' ஆனால் கணிதமேதை மறுகரைக்கு ஓடினார். ''அப்படியானால் என் கணக்கில் ஏதோ தவறு நேர்ந்திருக்க வேண்டும்.'' மூழ்கிக் கொண்டிருந்த குழந்தைகளுக்கு அல்ல... அவள் மறுகரைக்கு ஓடினாள்: ''உங்கள் கணக்கை வைத்து என்னிடம் விளையாடாதீர்கள்! நான் ஒரு கணக்குப் புலியும் அல்ல; எந்த சராசரி விதியிலும் எனக்கு நம்பிக்கையும் இல்லை.''

ஒவ்வொரு தனியாளும் ஒரு தனியாள்தான். சராசரி ஆள் என்று யாரும் இல்லை. நானோ பலருக்காகவும் பேசிக் கொண்டிருக்கிறேன். உங்கள் வழியாக கோடிக்கணக்கானவர்களிடம் நான் பேசிக் கொண்டிருக்கிறேன். இரண்டு விதமான செயல்களை நான் செய்ய முடியும்: சராசரி விதி என்ற ஒன்றை நான் கண்டுபிடிக்க முடியும், அப்போது நான் எப்போதும் மாறுபடாமல் இருப்பேன். எப்போதும் அந்த இரண்டு அடியைப்பற்றியே பேசுவேன். ஆனால் சிலர் ஏழு அடியாக இருப்பதையும் சிலர் நாலு அடியாக மட்டுமே இருப்பதையும் நான் பார்க்கிறேன். பலவகை செருப்புகளையும் பலவித உத்திகளையும் நான் கைவசம் வைத்திருக்க வேண்டி உள்ளது. நீங்கள் பேசாமல் உங்கள் சொந்த பாதங்களை மட்டும் பாருங்கள். அதற்கு பொருத்தமான செருப்பை தேர்ந்தெடுங்கள். மீத கடை முழுவதையும் மறந்துவிடுங்கள். அப்போதுதான் எனக்குள் இருக்கும் மாறாத்தன்மையை என்றாவது ஒருநாள் நீங்களும் புரிந்துகொள்ள முடியும். மற்றபடி, இந்த புவியிலேயே மிகவும் மாறுபடும் மனிதன் நான்தான்.

கடைசி கேள்வி:

**தேவைப்பட்டால் மேலும் ஒரு பிறவி எடுப்பதாக முன்பு ஒரு தடவை சொன்னீர்கள். ஆனால் விதையற்ற சமாதி நிலையை ஏற்கனவே நீங்கள் அடைந்திருந்தால் மேலும் ஒரு பிறவி எடுக்க எப்படி உங்களால் முடியும்? இது எனக்கு தேவையான ஒரு கேள்வி அல்ல என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் என் ஆன்மிக வளர்ச்சி போய்க் கொண்டிருப்பதாக தோன்றும் வேகத்துக்கு தேவையான கேள்விதான் இது!**

ஆம். தேவைப்பட்டால் திரும்பவும் வருவேன் என்று முன்பு ஒருதடவை நான் சொன்னேன். ஆனால் இப்போது சொல்கிறேன் - அதற்கு வாய்ப்பே இல்லை. எனவே தயவுசெய்து உங்கள் வேகத்தை கொஞ்சம் அதிகப்படுத்துங்கள். நான் மறுபடியும் வருவேன் என்று காத்திருக்காதீர்கள்.

மேலும் இன்னும் கொஞ்ச காலம் வரைதான் இங்கு நான் இருப்பேன். உண்மையாகவே நீங்கள் நேர்மையாக இருந்தால் வேகத்தை அதிகப் படுத்துங்கள்; தாமதம் செய்யாதீர்கள். முன்பு ஒருமுறை நான் சொன்னேன்... அந்த நேரத்தில் ஆயத்தமாகி இராதவர்களிடம் அப்படி நான் சொன்னேன். எப்போதுமே நான் பதில் அளித்துக்கொண்டே இருக்கிறேன். தயாராகாத மக்களிடம் அதை நான் சொன்னேன். நான் வரப்போவதில்லை என்று அவர்களிடம் நான் தெரிவித்து இருந்தால், மொத்த திட்டத்தையும் அப்படியே அவர்கள் கைவிட்டிருப்பார்கள். ''அப்படியானால் இது நடக்கக் கூடியதல்ல'' என்று நினைத்திருப்பார்கள். ஒரு பிறவியில் தம்மால் அதை சாதித்துவிட முடியாது. நானோ மறுபடியும் வரப் போவதில்லை. எனவே அதை தொடங்காதிருப்பதே மேல். ஏனெனில் ஒரே பிறவியில் அடைய முடியக்கூடிய அளவுக்கு சின்ன விசயம் அல்ல இது என்று எண்ணியிருப்பார்கள். ஆனால் இப்போது உங்களிடம், இனி நான் திரும்பவும் வருவதில்லை என்பதை சொல்கிறேன் - ஏனென்றால் அதற்கு வாய்ப்பில்லை. மேலும், இப்போது இதை நீங்கள் புரிந்துகொள்ள தகுதியானவர்களாகி இருக்கிறீர்கள் - விரைவுபடுத்துவீர்கள் என்ற நம்பிக்கையில் இதை சொல்கிறேன்.

பயணத்தை ஏற்கனவே நீங்கள் தொடங்கி இருக்கிறீர்கள். இப்போதுதான் நீங்கள்... வேகத்தை அதிகரித்தால் எந்த கணத்திலும் நீங்கள் அறுதி நிலையை அடைய முடியும். எந்த கணத்திலும் அது நிகழக் கூடும். இந்நிலையில் தள்ளிப் போடுவது ஆபத்தானதாகும். மீண்டும் நான் வருவேன் என்று நினைத்துக் கொண்டு உங்கள் மன மானது ஓய்வெடுக்கவும் தள்ளிப் போடவும் முடியும். இப்போது கூறுகிறேன்: நான் வரப் போவதில்லை.

உங்களுக்கு ஒரு கதை சொல்வேன்: ஒரு முறை முல்லாநசுருதீன் தன் மகனிடம் ''காட்டுக்கு நான் வேட்டையாடப் போயிருந்தேன். அப்போது ஒன்றல்ல, பத்து சிங்கங்கள் திடீரென என்மேல் பாய்ந்தன'' என்று சொல்லத் தொடங்கினார். ''நிறுத்துங்கப்பா'' என்றான் பையன். ''போன வருசம்தான் நீங்கள் ஐந்து சிங்கம் என்றீர்கள். இப்போது பத்து சிங்கம் என்கிறீர்களே'' என்றான் அவன். முல்லா நசுருதீன் சொன்னார், ''ஆமாம், போன வருசம் நீ சின்ன பையனாக இருந்தாய். பத்து சிங்கம் என்பதை அப்போது சொல்லியிருந்தால் நீ ரொம்பவே பயந்து போயிருப்பாய். இப்போது உன்னிடம் நான் உண்மையை சொல்கிறேன். இப்போது நீ வளர்ந்துவிட்டாய். அதனால்தான் இப்போது இதை சொல்கிறேன்.''

மீண்டும் நான் திரும்பி வருவேன் என்று முன்பு உங்களிடம் நான் சொன்னேன் - அப்போது நீங்கள் போதிய அளவு வளர்ந்திருக்கவில்லை ஆனால் இப்போது நீங்கள் ஓரளவு வளர்ச்சி பெற்றிருக்கிறீர்கள். எனவே

உங்களிடம் நான் உண்மை சொல்ல முடியும். பல தடவைகள் நான் பொய் சொல்ல வேண்டியிருந்தது உங்களுக்காகத்தான். ஏனென்றால் உண்மையை நீங்கள் விளங்கிக்கொள்வதில்லை. அதிகமதிகம் நீங்கள் வளரவளர அதிகமதிகமாய் நான் பொய்களை விட்டுவிட முடியும்; அதிகமதிகமாய் நான் மெய் சொல்ல முடியும். நிசமாகவே நீங்கள் வளர்ந்து விட்டால் அப்போது நான் உண்மையை மட்டுமே உங்களிடம் சொல்வேன்; (பொய்) அப்போது தேவைப்படாது. நீங்கள் வளர்ந்திராத நிலையில் உண்மையை தெரிவிப்பது என்பது அழிவுபயப்பதாகி விடும்.

குழந்தைகளுக்கு பொம்மைகள் தேவைப்படுவது போலத்தான் உங்களுக்கு பொய்மைகள் தேவைப்படுகின்றன. பொம்மைகள் பொய்மைகளே. நீங்கள் வளர்ந்திராத போது உங்களுக்கு பொய்மைகள் தேவைப்படுகின்றன. மேலும், கருணை என்பது இருந்தால், அப்போது கருணைமிக்க மனிதர் தான் சொல்வது மெய்யா பொய்யா என்பதைப் பற்றி கவலை கொள்வதில்லை. அவரது முழு இருத்தலும் உங்களுக்கு உதவுவதற்காகவே - உங்களுக்கு நலம் செய்வதாகவே - அருள் வழங்குவதாகவே இருக்கிறது. எல்லா புத்தர்களும் பொய் சொல்லி இருக்கிறார்கள்; சொல்லத்தான் வேண்டியிருந்தது. ஏனென்றால் அந்த அளவுக்கு கருணை உள்ளவர்களாக அவர்கள் இருக்கிறார்கள். மேலும் எந்த புத்தரும் முழு உண்மையை சொல்ல முடிவதில்லை. ஏனென்றால் யாரிடம் அதை அவர் சொல்வார்? இன்னொரு புத்தரிடம் மட்டுமே அவரால் அதை சொல்ல முடியும். ஆனால் இன்னொரு புத்தருக்கோ அது தேவையில்லை.

பொய்களின் வழியாக ஒரு குரு உங்களை ஒளியை நோக்கி, பையப் பைய கொண்டு வருகிறார். ஒளியை நோக்கி படிப்படியாக நீங்கள் செல்வதற்கு உங்கள் கையைப் பிடித்து அவர் கூட்டிச் செல்ல வேண்டி உள்ளது. முழு உண்மை தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கும் - அப்படியே நீங்கள் அதிர்ந்து நொறுங்கிப் போகக் கூடும். முழு உண்மை உங்களால் உட்கொள்ள முடியாததாக இருக்கும் - அது அழிவுபயக்கக் கூடும். எனவே பொய்களின் மூலமாக மட்டுமே மெய்மையின் வாசலுக்கு உங்களை கொண்டுவர வேண்டி உள்ளது. கோயிலின் வாயிலில் வைத்தே உங்களுக்கு முழு உண்மையை வழங்க முடியும். ஆனால் அந்நிலையில் அதை நீங்களே புரிந்து கொள்வீர்கள். பொய்கள் எதற்காக என்பதையும் அந்நிலையில் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். அவற்றை நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என்பதுமட்டுமல்ல, அவற்றுக்காக நன்றிஉள்ளவர்களாகவும் இருப்பீர்கள்.

O